"எல்லாச் சரீரங்களிலும் நானே ஜீவனாக இருக்கிறேன்" என்று கண்ணன் கீதையால் உணர்த்திய உண்மையையும், "எல்லா உயிர்களினிடத்தும் தன்னையும் தன்னிடத்தே எல்லா உயிர்களையும் காண்பவனே காட்சியுடையவன்" என்று கண்ணபிரான் அதே கீதையில் சொல்லிய கொள்கையையும் வேதோபநிஷத்துக்களின் முடிவான தீர்மானம் என்று தெரிந்த ஹிந்துக்கள், உலகத்திலுள்ள மற்றெல்லா ஜனங்களைக் காட்டிலும், ஜாதிவேற்றுமை பாராட்டுவதில் அதிகக் கொடுமை செலுத்துகிறார்கள்.

**"இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ**
**வன்சொல் வழங்குவது"**

என்ற குறளின்படி, 'இனிய சொற்கள் சொல்வதினின்றும் நன்மைகள் விளைவது கண்டும் மானிடர் ஒருவருக்கு ஒருவர் கொடுஞ் சொற்கள் வழங்குவது மடைமை' என்பது உலகத்தில் சாதாரண அநுபவமுடையவர்களுக்கெல்லாம் தெரியும். அங்ஙனம் தெரிந்தும், கொடுஞ் சொற்களும் கோபச்செயல்களும் நீங்கியவர்களை உலகத்தில் தேடிப்பார்த்தாலும் காண்பது அரிதாக இருக்கிறது.

"மரணம் பாவத்தின் கூலி" என்று கிருஸ்தவ வேதம் சொல்வது எல்லாக் கிருஸ்தவர்களுக்கும் தெரியும். அப்படி இருந்தும், பாவத்தை அறவே ஒழித்த கிருஸ்தவர்கள் எவரையும் காணவில்லை. 'நாமெல்லோரும் பாவிகள்' என்பதைப் பல்லவி போலே சொல்லிக்கொண்டு காலங் கடத்துகிறார்கள்.

இதென்ன கொடுமை! இதென்ன கொடுமை! இதென்ன கொடுமை! ஸாதாரணமாக வியாபாரம் விவசாயம் முதலிய காரியங்களிலேகூட மனிதர் நிச்சயமாக லாபங் கிடைக்கும் என்று தெரிந்த வழிகளை அநுசரிக்க முடியாமல் கஷ்டப்படுகிறார்கள். இந்தப் பெரிய சக்தி ஹீனத்திற்கு மாற்றுக் கண்டுபிடிக்காமல் நாம் சும்மா இருப்பது நியாயமன்று.

கண்ணைத் திறந்துகொண்டு படுகுழியில் விழுவது போல, மனித ஜாதி நன்மையை நன்றாய் உணர்ந்தும் தீமையை உதற வலிமையின்றித் தத்தளிக்கிறது.

இதற்கு என்ன நிவாரணம் செய்வோம்? தைரியந் தான் மருந்து. தற்கால அஸௌகர்யங்களையும் கஷ்ட நஷ்டங்களையும் பொருட்படுத்தாமல் மனிதர் உண்மை என்று கண்டதை நடத்தித் தீர்த்துவிடவேண்டும். அங்ஙனம் தைரியத்துடன் உண்மை நெறி பற்றி நடப்போரை மற்றவர்கள் புகழ்ச்சியாலும் ஸம்மானங்களாலும் ஊக்கப்படுத்த வேண்டும். கலி போதும்; வீண் துன்பங்களும் அநாவசியக் கஷ்டங்களும் பட்டுப் பட்டு உலகம் அலுத்துப் போய் விட்டது.

வாருங்கள், மக்களே! வாருங்கள், அண்ணன் தம்பிமார்களே! ஒருவரிருவர் நேர்மைவழியில் செல்ல முயல்வதில் பல இடர்கள் ஏற்படுகின்றன. அதனால் நேர்மை வழியில் செல்ல விரும்புவோர்க்கெல்லாம் அதைரியம் ஏற்படுகிறது. வாருங்கள், உலகத்தீரே! கூட்டங் கூட்டமாக நேர்மை வழியில் புகுவோம்.

ஆண் பெண் ஸமத்வமே தர்மமென்று தெரிகிறதா? அப்படியானால், வாருங்கள்; மாதர்களை லக்ஷக்கணக்காக விடுதலை செய்வோம். ஜாதி பேதங்கள் பிரயோஜனம் இல்லை என்று தெரிந்ததா? நிற வேற்றுமைகளும் தேச வேற்றுமைகளும் உபயோகம் இல்லாதன என்று தெரிந்ததா? நல்லது, வாருங்கள் கோடிக்கணக்காக. ஸமத்வ நெறியிலே பாய்ந்துவிடுவோம். பழைய கட்டுகளை லக்ஷக்கணக்கான மக்கள் கூடி நின்று தகர்ப்போம்.

'அன்பே இன்பம் தரும். பகைமை அழிக்கும்' என்று தெரிந்தோமோ? நல்லது, எழுங்கள், கோடிக் கணக்கான மானிடர் எங்கும், எப்போதும், எல்லா உயிர்களிடத்திலும் அன்பு செலுத்தத் தொடங்குவோம். கலியை அழிப்போம். ஸத்யத்தை நாட்டுவோம்.

## அமிர்தம் தேடுதல்

"காக்க நின்னருட் காட்சியல்லாலொரு போக்குமில்லை"
—தாயுமானவர்.

பல வருஷங்களின் முன்னே தெரு வழியாக ஒரு பிச்சைக்காரன் பாடிக்கொண்டு வந்தான்.

"தூங்கையிலே வாங்குகிற மூச்சு—அது
சுழிமாறிப் போனாலும் போச்சு"

இந்தப் பாட்டைக் கேட்டவுடனே எனக்கு நீண்ட யோசனை உண்டாய்விட்டது. என்னடா இது! இந்த உடல் இத்தனை சந்தேகமாக இருக்கும்போது இவ்வுலகத்தில் நான் என்ன பெருஞ்செய்கை தொடங்கி நிறை

வேற்ற முடியும்? ஈசன் நம்மிடத்தில் அறிவை விளங்கச் செய்கிறான். அறிவே நமது வடிவமாக அமைத்திருக்கிறான். அறிவு இன்பத்தை விரும்புகிறது. அளவில்லாத அழகும் இன்பமும் கொண்ட உலகமொன்று நம்மோடு இருக்கிறது. எப்போதும் இவ்வுலகம் இன்பம். இந்த உலகம் கவலையற்றதாகும்; இதிலே அணுவிலும் அணுவொக்கும் சிறிய பூமண்டலத்தின்மீதுதான் நம்மால் ஸஞ்சரிக்க முடிகிறது. இதுபோல் கணக்கில்லாத மண்டலங்கள் வானவெளியிலே சுழல்கின்றன. அவற்றின் இயல்பையும் நாம் அறிவினாலே காண்கிறோம். அவற்றிலே ஒரு பகுதியின் வடிவங்களைக் கண்ணாலே தூரத்திலிருந்தே பார்க்கிறோம். இவ்வளவில் எங்கே பார்த்தாலும் ஒரே அழகுமயமாக இருக்கிறது. நமது பூமண்டலத்திற்கு வான் முழுதும் ஒரு மேற்கட்டிபோலத் தோன்றுகிறது. இடையெல்லாம் ஒரே தெளிவான வெளி; ஸூர்யன் செய்கிற ஆயிரவிதமான ஒளியினங்கள், மலை, காடு, நதி, கடல்—அழகு.

தவிரவும், எதைத் தொட்டாலும் இன்பமும் துன்பமும் இருக்கத்தான் செய்கின்றன. ஆனால் நாம் அறிவினாலே பொருள்களின் துன்பத்தைத் தள்ளி இன்பத்தை எடுத்துக்கொள்ளலாம். தண்ணீர், குளித்தால் இன்பம்; குடித்தால் இன்பம்; தீ, குளிர் காய்ந்தால் இன்பம்; பார்த்தாலே இன்பம்; மண், இதன் விளைவுகளிலே பெரும்பான்மை இன்பம், இதன் தாங்குதல் இன்பம்; காற்று, இதைத் தீண்டினால் இன்பம்; மூச்சிலே கொண்டால் இன்பம்; உயிர்களுடனே பழகினால் இன்பம்; மனிதரின்

உறவிலே அன்பு இருந்தால் இன்பக் கட்டி. பின்னும் இவ்வுலகத்தில், உண்ணுதல் இன்பம், உழைத்தல் இன்பம், உறங்கல் இன்பம்; ஆடுதல் இன்பம்; கற்றல், கேட்டல், பாடுதல், எண்ணுதல், அறிதல்—எல்லாம் இன்பந்தான்.

## துன்பத்தை நீக்குதல் விரைவிலே ஈடேறவில்லை

ஆனால் இவ்வின்பங்களெல்லாம் துன்பங்களுடனே கலந்திருக்கின்றன. துன்பங்களை அறிவினால் வெட்டி எறிந்துவிட்டு இன்பங்களை மாத்திரம் சுவைகொள்ள வேண்டுமென்று ஜீவன் விரும்புகிறது. துன்பங்களை வெட்டி எறியத் திறமைகொண்ட அறிவும் உறுதியும் வேண்டுமானால், அது எளிதில் முடிகிற காரியமாகத் தோன்றவில்லை. பெரிய பெரிய கஷ்டங்கள் பட்ட பிறகுதான், சிறிய உண்மைகள் புலப்படுகின்றன. நம்மைச் சுற்றி இன்பக் கோட்டைகள் கட்டிக்கொள்ள வேண்டும் என்கிற ஆசை ஒவ்வொருவனுக்கும் இருக்கிறது. மஹத்தான அறிவு வேண்டும். அழியாத நெஞ்சுறுதி வேண்டும். கல்விகள் வேண்டும். கீர்த்திகள் வேண்டும். செல்வங்கள் வேண்டும். சூழ்ந்திருக்கும் ஊரார் தேசத்தார் உலகத்தார் எல்லாரும் இன்பத்துடன் வாழும்படி நாம் செய்ய வேண்டும். நல்லாசைகள் பெரிது பெரிதாக வைத்துக்கொண்டிருக்கிறோம். இந்த ஆசைகள் நிறைவேற வேண்டுமானால், பலமான அடிப்படை போட்டு மெல்ல மெல்லக் கட்டிக்கொண்டு வரவேண்டும். நிலைகொண்ட இன்பங்களை விரைவிலே உண்டாக்குதல் சாத்தியமில்லை. ஏழையாக

இருப்பவன் பெரிய செல்வவானாக வேண்டுமானால், பல வருஷங்கள் ஆகின்றன. கல்வியில்லாதவர் கற்றுத் தேறப் பல வருஷங்கள் ஆகின்றன. உலகத் தொழில்களிலே தேர்ச்சி அடைய வேண்டுமானால் அதற்குக் காலம் வேண்டும். ஆத்ம ஞானம் பெறுவதற்குக் காலம் வேண்டும். "பொறுத்தவன் பூமியாள்வான்." "பதறின காரியம் சிதறும்." இடையே குறுக்கிடும் மரணம். இங்ஙனம் இன்பங்களின் தேட்டத்தில் நம்மால் இயன்ற வரையில் இடைவிடாமல் முயற்சி செய்துகொண்டு நாம் காலத்தின் பக்குவத்துக்காகக் காத்திருக்கும்படி நேரிடுகிறது. இதனிடையே, மேற்படி பிச்சைக்காரன் பாட்டு வாஸ்தவமாய் விட்டால் என்ன செய்வது? தூங்கையிலே வாங்குகிற மூச்சு, அது சுழிமாறிப் போனாலும் போச்சு. என்ன ஹிம்ஸை இது? நூறு வயதுண்டு என்பதேனும் நல்ல நிச்சயமாக இருந்தால் குற்றமில்லை. நூறு வருஷங்களில் எவ்வளவோ காரியம் முடித்துவிடலாம். 'அடுத்த நிமிஷம் நிச்சயமில்லை' என்று தீர்ந்துவிட்டால் எதைக் கொண்டாடுவது? இது கட்டிவராது. எப்படியேனும், தேகத்தை உறுதிசெய்து கொள்ளவேண்டும். நமது காரியம் முடிந்த பிறகுதான் சாவோம்; அதுவரை நாம் சாக மாட்டோம். நம் இச்சைகள், நம்முடைய தர்மங்கள் நிறைவேறும் வரை நமக்கு மரணமில்லை.

## தர்மம்

"ஹிந்துஸ்தான் ரெவ்யூ" என்று அலஹாபாத்தில் பிரசுரமாகும் மாதப் பத்திரிகையில் ஸ்ரீ வாடியா என்பவர்

“ஒழுக்கம்” என்பதைப்பற்றி மிகவும் நேர்த்தியான விகிதம் எழுதியிருக்கிறார். அதில் அவர் சில ரஸமான கேள்விகள் கேட்கிறார். அவருடைய வசனங்களை முழுதும் மொழி பெயர்க்காமல் அந்தக் கேள்விகளின் ஸாரத்தை இங்கே சொல்லுகிறேன்:—

“தர்மத்திற்கும் அதர்மத்திற்கும் போரென்று ஸாமான்யர் சொல்லுகிறார்கள். சில சமயங்களில் தர்மங்களே ஒன்றுக்கொன்று முட்டுகின்றன. ஒரு தந்தை தன் மகனைக் கொலைத் தண்டனையிலிருந்து மீட்கும் பொருட்டாய்ச் சாட்சி சொல்வதாக வைத்துக்கொள்வோம். அவனுடைய செய்கையை எவ்விதமாகத் தீர்மானஞ் செய்வோம்? மகனைக் காப்பது தந்தையின்கடமை. ராஜ்யத்தில் நீதி பரிபாலனத்திற்குத் தான் துணை புரிவதும் கடமை. இரண்டும் தர்மம். ஆனால் ஒன்றற்கொன்று முட்டுகின்றன. தவிரவும், பூர்வ சரித்திரங்களை ஆராய்ச்சி செய்யுமிடத்தில், யூனியுஸ் புருத்தஸ் என்ற ரோம தேசத்தான் தேசபக்தியின் மிகுதியால் தன் சொந்த மகனைக் கொன்றான். மார்க்குஸ் புருத்தஸ் அதே காரணத்தைச் சொல்லி யூலியுஸ் கேஸரைக் கொன்றான். பதிவிரதை நோன்பு பெரிதென்று கருதி லூக்ரெஷியா தற்கொலைசெய்து கொண்டாள். ஸீதை ராமனுடைய ஸந்தேக நிவிர்த்திக்காக நெருப்பிலே விழத் துணிந்தாள். ஹிந்துமதத்தைப் புதுப்பிக்க வேண்டுமென்ற அவாவினால் சிவாஜி அப்ஜல்கானைக் கொலை செய்தான். தர்மங்களுக்குள்ளே பரஸ்பர முட்டுப்பாடு அவசியம் ஏற்படத்தான்

செய்கிறது. தர்ம சாஸ்திரத்தைப் பிரமாணமாகக் கொண்டால் இரண்டு பக்கமும் பேசுகிறது. இதற்குத் தீர்ப்பு என்ன?"

மேலும், "ஒழுக்கம் என்ற சொல்லுக்கே பொருள் சில இடங்களில் சரியாக வழங்கவில்லை" என்று அவர் சொல்லுகிறார். ஒழுக்கத்திற்குப் பணிவு, கீழ்ப்படிதல் அவசியமென்று சிலர் சொல்லுகிறார்கள். சரித்திரத்தில் மேன்மைகொண்ட பெரியோர்களைக்கருதுவோம், புராதன உலகத்தில் அலெக்ஸாந்தர், யூலியுஸ் கேஸர், ஹானிபால் என்பாரும், இங்கிலாந்தில் க்ராம்வெல், சேதாம் என்பாரும், நெப்போலியன், பிஸ்மார்க், அக்பர், சிவாஜி, ஹைதர் அலி முதலிய சக்திமான்களும், இலக்கியத்தில் மில்டனும், கெத்தேயும் மிகுந்த கீழ்ப்படிவுள்ள குணத்துடன் இருக்கவில்லை, தன்னம்பிக்கை அவர்களிடம் பரிபூரணமாக இருந்தது. "நமது காலத்தில் நாம் மஹத்தான கார்யங்கள் செய்வோம்; இளைக்க மாட்டோம்; பின்வாங்க மாட்டோம்" என்று தீரமாக வேலை செய்தார்கள்; சரித்திரத்தின் நாயகராயினர். நீதி சாஸ்திரம் இன்னும் நேரே வகுத்தாகவில்லை.

"அட போ, பழமொழிகளை நம்பி ஒழுக்கத்தை நடத்துவோமென்று நினைப்பதும் பயனில்லை" என்று மேற்படி வாடியா சொல்கிறார். "பதறின காரியம் சிதறும்" என்பதாக ஒரு பழமொழி சொல்லுகிறது. "சோற்றுக்கு முந்திக்கொள்" என்று மற்றொரு

பழமொழி சொல்லுகிறது. எந்தப் பழமொழியை நம்பலாம்? "ஒழுக்கமாவது மனோதைரியம்; இஷ்டத்தைக் கைவிடாத மேன்மைக் கொள்கை; மற்றதெல்லாம் அதற்கிணங்க வைத்துக்கொண்டால் அதுவே சரியான தீர்ப்பு" என்று ஸ்ரீ வாடியா சொல்கிறார்.

கடைசியாகத் தம்முடைய முடிவை ஒருவிதமாக மேற்படி லிகிதகர்த்தா காட்டுகிறார்:—

"ஆரம்பத்தில் சொல்லியபடி பொய்ச் சாக்ஷி கூறி மகனுயிரை நீதி வஞ்சனையால் மீட்கக் கருதிய பிதாவினுடைய திருஷ்டாந்தத்தை எடுப்போம். அவன் கேவலம் தன்னுடைய குடும்ப தர்மமே உயர்வென்று நினைக்காமல் லோகதர்மம் மேலென்றும் நினைத்து அதன்படி உண்மை கூறியிருந்தால், மகனுயிர் போய்விடலாம், நெஞ்சு தகராம், மானம் அழியாமலும் தர்ம ஸம்பத்துக்கு வழியாகவும் இருக்கும்" என்பது மேற்படி லிகித ஸாரம்.

## உண்மை

### ரத்தினக் களஞ்சியம்

பூமண்டலத்தில் வெவ்வேறு தேசங்களில் வெவ்வேறு காலங்களிலே பிறந்து, மனுஷ்ய ஜாதியாருக்கு ஞானதானம் செய்த சில பெரியோரின் வசனங்களை இங்கே கோத்தெழுதுகிறேன். தயவுசெய்து சிரத்தையுடன் படிக்கும்படி தமிழ்நாட்டு மஹாஜனங்களை வேண்டுகிறேன்.

தெலுங்கு தேசத்து ஞானியாகிய **வேமன்ன** கவி சொல்லுகிறார்:—

"கல்லைக் குவித்துப் பெரிய கோயில்கள் ஏன் கட்டு கிறீர்கள்? தெய்வம் உள்ளுக்குள்ளே இருப்பதை அறியா மல், வீணாக ஏன் தொல்லைப்படுத்துகிறீர்கள்?"

ஸ்வாமி **விவேகாநந்தர்** :— "ஒவ்வொரு மனித னுடைய அறிவிலும் பரமாத்மா மறைந்து நிற்கிறது. வெளியுலகத்தையும் உள்ளுலகத்தையும் வசப்படுத்தி உள்ளே மறைந்திருக்கும்தெய்வத்தைவெளிப்படுத்துவதே நாம் செய்யவேண்டிய காரியம். செய்கை, அன்பு, யோகம் ஞானம் இவற்றினால் அந்தப் பொருளை அடைந்து விடுதலைபெற்று நில்லுங்கள். தர்மம்முழுதும் இஃதேயாம். மற்றப்படி மதங்கள், கொள்கைகள், கிரியைகள், சாஸ்திரங் கள், கோயில்கள், ஆசாரங்கள் எல்லாம் இரண்டாம் பக்ஷமாகக்கருதத் தக்க உபகரணங்களேயன்றி வேறில்லை.'

அமெரிக்கா தேசத்து மஹா வித்வானும் ஞானியு மாகிய **எமெர்ஸன்** சொல்லுகிறார் :—

'எவன்வந்தாலும்சரி, அவனிடமுள்ள தெய்வத்தை நான் பார்ப்பதற்குத் தடை உண்டாகிறது. ஒவ் வொருவனும் தன்னுள்ளே இருக்கும் திருக்கோயிலின் கதவுகளை மூடி வைத்துவிட்டு மற்றொருவனுடைய தெய்வத்தையும், மற்றொருவனுக்கு வேறொருவன் சொல்லிய தெய்வத்தையும் பற்றிப் பொய்க்கதைகளை என்னிடம் சொல்ல வருகிறான்.'

**த்ஸென் - தாஸே - த்ஸுங்** என்ற சீன தேசத்து ஞானி சொல்கிறார் :—

"பழைய காலத்திலிருந்து வந்ததென்று கருதி ஒரு மதம் உண்மை என்பதாக நிச்சயித்து விடலாகாது. உண்மை இதற்கு நேர் மாறுனது. மனித ஜாதி நாளாக நாளாக வாழ்க்கையின் உண்மை விதிகளை நன்ருகத் தெரிந்துகொள்ளுகிறது. நம் பாட்டன்மாரும் பூட்டன் மாரும் நம்பிய விஷயங்களையே நாமும் நம்பவேண்டு மென்ற விஷயமானது குழந்தையாக இருக்கும்போது தைத்த உடுப்புகளையே பெரியவனுனபோதும் போட்டுக் கொள்ளவேண்டும் என்பதற்கு ஒப்பாகும்."

மேற்கூறிய எமெர்ஸன் பண்டிதரின் சிஷ்யரும் நல்ல ஞானியுமான **தோரோ** சொல்லுகிருர் —

"என்ன ஆச்சரியம்! உண்மையின் பிரகாசங்களில் நமது காலத்துக்குப் பயன்படாத பழையனவற்றை உலகம் ஒப்புக்கொள்ளுகிறது. இப்போது புதிய ஞானிகள் கண்டுசொல்லும் உண்மைகளை வீணுக மதிக்கிறது; சிற்சில சமயங்களில் பகைக்கவும் செய்கிறது. என்ன ஆச்சரியம்!"

**ராமகிருஷ்ண பரமஹம்ஸர் :—**

"ஆச்சரிய சித்திகள் காட்டுவதாகச் சொல்லும் மனிதர் இருக்குமிடத்துக்குப் போகவேண்டாம். அவர்கள் உண்மை நெறியினின்றும் தவறிவிட்டார்கள்."

ருஷியா தேசத்து ஞானியாகிய **டால்ஸ்டாய் (தோல்ஸ்தோய்):—**

"நமது மதக் கொள்கைகளில் பயனில்லாதது, ஜடமாவது, புறவடிவமாவது, தெளிவில்லாதது, நிச்சய

மில்லாதது-இவற்றை நாம் பயமில்லாமல் தள்ளிவிட வேண்டும். அதன் ஸாரத்தை மாத்திரம் கொள்ள வேண்டும். எத்தனைக்கு எத்தனை இந்த ஸாரத்தை நாம் சுத்தப்படுத்துகிறோமோ, அத்தனைக்கு அத்தனை ஜகத்தின் உண்மைவிதி நமக்குத் தென்படும்."

எது தெய்வம்?

'ஹெர்மெஸ்' என்ற புராதன மிசிர (ஈஜிப்டு) தேசத்து ஞானி சொல்லுகிறார்:—

"உடலில்லாதது, தோற்றமில்லாதது, வடிவமற்றது, ஜடமில்லாதது, நமது புலன்களுக்கு எட்டாதது—இது தெய்வம்."

ராமகிருஷ்ண பரமஹம்ஸர்:—"ஈசன் ஒளி; எல்லாப் பொருள்களிலும் திரைக்குள் மறைந்தது போல் மறைந்து நிற்கும் ஒளியே தெய்வம்."

**பட்டினத்துப்பிள்ளை:**—" எட்டுத் திசையும் பதினாறு கோணமும் எங்குமொன்றாய் முட்டித் ததும்பி முளைத் தோங்கும் ஜோதி."

**தாயுமானவர்:**—"சுத்த அறிவே சிவம்."

ரிக்வேதம்:—"உண்மைப்பொருள் ஒன்று. அதனைப் புலவோர் பலவாறு சொல்லுகிறார்கள்."

**நம்மாழ்வார்:**—" திடவிசும்பு, எரி, வளி, நீர், நிலம், இவை மிசைப் படர் பொருள் முழுவதும் ஆய், அவை யவைதோறும் உடல்மிசை உயிரெனக் கரந்துளன்."

ஹெர்மெஸ்:-"தெய்வம் எது? ஜகத்தின் உயிர்".

## முடிவுரை

எனவே, எல்லா மதங்களும் உண்மை தான்; ஒரு மதமும் முழு உண்மையன்று. ஆதலால் மதப்பிரிவுகளைக் கருதி மனிதர் பிரிந்துவிடக்கூடாது. எல்லா மதஸ்தரும் ஒரே தெய்வத்தைத்தான் வணங்குகிறார்கள். லௌகிக விஷயங்களைப் போலவே மதவிஷயங்களிலும் ஒப்பு, உடன்பிறப்பு, விடுதலை மூன்றும் பாராட்ட வேண்டும்.

## நம்பிக்கை

மயிலாப்பூரில் ஸ்ரீ கலவல கண்ணன் செட்டியார் ஏற்படுத்திய புதிய ஸம்ஸ்க்ருத கலாசாலையின் க்ருஹப் பிரவேசத்தை ஒட்டி நீதிப்ரவீண ஸ்ரீ சுப்பிரமணிய ஐயர் செய்த ஆசி வசனங்களிடையே ராமானுஜாசார்யருடைய மகிமையைப்பற்றி சில வார்த்தைகள் சொன்னார். ஸ்ரீமான் நீதிமணி ஐயர் பிரம்ம வேதாந்தியாகையால் இவருக்குத் துவைதம், விசிஷ்டாத்துவைதம், அத்வைதம் என்ற மூன்று கட்சியும் ஸம்மதம். ஸத்யம் ஒன்று; அதனை ஆராதனை செய்யும் வழிகள் பல; அத்வைத ஸ்தாபனம் செய்த சங்கராசார்யரே ஷண்மத ஸ்தாபனமும் செய்ததாக அவருடைய சரித்திரம் சொல்லுகிறது.

பக்தியின் பெருமையை உலகத்துக்கு விளங்கக் காட்டிய மஹான்களிலே ராமானுஜாசாரியார் ஒருவர்; பக்தியாவது தெய்வத்தை நம்புதல்; குழந்தை தாயை

நம்புவது போலவும், பத்தினி கணவனை நம்புவது போலவும், பார்த்த பொருளைக் கண் நம்புவது போலவும், தான் தன்னை நம்புவது போலவும் தெய்வத்தை நம்பவேண்டும். இரவிலும் பகலிலும், இன்பத்திலும் துன்பத்திலும், தொழிலிலும் ஆட்டத்திலும், எப்போதும் இடைவிடாமல் நெஞ்சம் தெய்வ அருளைப்பற்றி நினைக்கவேண்டும். நோய் வந்தால், அதனைத் தீர்க்கும்படி தெய்வத்தைப் பணிய வேண்டும். செல்வம் வேண்டுமானால், தெய்வத்தினிடம் கேட்கவேண்டும். கல்வி, அறிவு, புகழ், ஆயுள் முதலிய எல்லா மங்களங்களையும் தெய்வத்தினிடம் உண்மையுடன் கேட்டால் அது கொடுக்கும். தெய்வம் கொடுக்காவிட்டாலும் அதை நம்பவேண்டும். கேட்டவுடனே கொடுப்பது தெய்வத்திற்கு வழக்கமில்லை. பக்தி பக்குவமடைந்த பிறகுதான் கேட்ட வரம் உடனே கிடைக்கும். அதுவரை தாமஸங்கள் உண்டாகும். இது கர்மவிதி. 'அடுத்து முயன்றாலும் ஆகுநாளன்றி எடுத்த கருமங்கள் ஆகா.' எனவே, நாம் தெய்வத்தினிடம் கேட்ட பயன் கைகூடுவதற்கு எத்தனை காலமான போதிலும், அதைரியப்படாமல், தெய்வ பக்தியையும் அதனாலுண்டாகும் ஊக்கத்தையும் முயற்சியையும் துணையாகக்கொண்டு நடக்க வேண்டும். விதியின் முடிவுகளைத் தெய்வபக்தி வெல்லும். இந்த உலக முழுமைக்கும் ஈசனே தலைவன். அவனும் பக்தர்களுக்கு வசப்பட்டவன். பக்தன் எது கேட்டாலும் கைகூடும். நம்பு; கேள். ஓயாமல் தொழில் செய்துகொண்டிரு. பயனுக்கு அவசரப்படாதே. தெய்வம் நிச்சயமாக வரம் கொடுக்கும். தெய்வம் பிரஹ்லாதனை

ஹிரண்யனிடமிருந்து காத்தது. முதலை வாயிலிருந்து யானையை விடுவித்தது. பாஞ்சாலியின் மானத்தைக் காத்தது. தெய்வம் விக்கிரமாதித்யனுக்கும், காளிதாஸனுக்கும், சிவாஜி ராஜாவுக்கும், நிகரில்லாத வெற்றியும் தீராத புகழும் கொடுத்தது. இவ்விதமான தெய்வ பக்தியை ராமாநுஜர் மனிதருடைய இஹபரவாழ்வுக்கு முதல் ஸ்தானமாகச் சொன்னார். ஆழ்வார்களுடைய பாட்டில் விடுதலையொளி நிற்பது கண்டு, அவற்றை வேதம் போல் கருதவேண்டுமென்று போதனை செய்தார்.

ஆழ்வார்களுடைய குலம் நானாவிதம்; அப்படி இருந்தும் அவர்களைக் கோயிலில் வைத்துப் பூஜை செய்யலாமென்று ராமானுஜர் நியமித்தார். முற்காலத்தில் பிராமணர் இதர ஜாதியாரை இழிவாக வைத்துக் கெடுத்தார்களென்றும், ஞானத்துக்குத் தகாதவரென்று சொல்லி அடிமைப்படுத்தினார்களென்றும் பொய்க் கதைகள் சொல்லி ஹிந்து தர்மத்தை அழிக்க விரும்புகிற கிருஸ்துவப் பாதிரிகளும் அவ்விடத்துச்சிஷ்யர்களும் ராமானுஜாசாரியார் பிராமணர் என்பதை அறியமாட்டார் போலும். சூத்திரராகிய திருக்கச்சி நம்பியை ராமானுஜர் குருவாகக் கொண்டு அவருடைய உச்சிஷ்டத்தை உண்ணத்திருவுளங் கொண்டார். திருநாராயணபுரத்தில் பறையர் ஒரு சமயம் கோயிலுக்குள் வரலாமென்று ஸ்ரீராமானுஜர் நியமித்தருளிய முறை இன்றைக்கும் நடந்துவருகிறது.

இப்படிப்பட்ட மனுஷ்யர்களுடைய தர்மத்தை இக்காலத்தில் வளரும்படி செய்யவேண்டுமென்ற நோக்கத்

துடன் ஸ்ரீ கண்ணன் செட்டியார் ஏற்படுத்தியிருக்கும் கலாசாலையில், பிற மதங்களும் உண்மை என்ற சமரஸ ஞானத்தை ஊட்டத் தவறலாகாது. இந்த ஸமரஸ ஞானம் இல்லாவிட்டால் எந்தச் சித்தாந்தமும் நாளடைவில் பொய்யாகவும், குருட்டு நம்பிக்கையாகவும், வீண் அலங்காரமாகவும் முடிந்து ஜனங்களை மிருகங்களைப்போல் ஆக்கிவிடும். வேத தர்மம் ஒன்று. அதில் ராமாநுஜர் தர்மம் ஒரு கிளை. பாஷ்ய விசாரணை நல்லது. உண்மையான பக்தியே அமிர்தம். எல்லா உயிர்களிடத்திலும் நாராயணன் விளங்குவது கண்டு, அந்த ஞானத்தாலே கலியை வென்று தர்ம ஸ்தாபனம் செய்வதற்குள்ள பயிற்சி மேற்படி கண்ணன் செட்டியார் கலாசாலையிலும், அதுபோன்று எல்லாப் பாடசாலைகளிலும் பிள்ளைகளுக்குக் கற்றுக்கொடுத்தால், தேசம் மறுபடி மேன்மையடையும், இது கைகூடும் வண்ணம் பராசக்தி அருள் செய்க.

## தைரியம்

நம் முன்னோர்களும் அவர்களைப் பின்பற்றி நாமுங் கூடப் புண்ணிய பாஷையாகக் கொண்டாடி வரும் ஸமஸ்கிருத பாஷை மிகவும் அற்புதமானது. அதைத் தெய்வ பாஷை என்று சொல்வது விளையாட்டன்று. மற்ற ஸாதாரண பாஷைகளை யெல்லாம் மனித பாஷையென்று சொல்லுவோமானால், இவை அனைத்திலும் சிறப்புடைய பாஷைக்குத் தனிப்பெயர் ஒன்று வேண்டுமல்லவா? அதன் பொருட்டே அதைத் தெய்வ பாஷை என்கிறோம்.

அந்தப் பாஷையில் தைரியம் என்பதோர் சொல் உண்டு. தீரனுடைய இயற்கை தைரியம். தீரன் என்ற வார்த்தையின் தாதுப் பொருளைக் கவனிப்போமானால் அறிவுடையவன் என்ற அர்த்தமாகும். துணிவுடையவனுக்கும் அந்தப் பாஷையிலே அதுவே பெயராக வழங்கப்படுகிறது. எனவே 'தைர்யம்' என்ற சொல் அறிவு உடைமை என்றும் துணிவு உடைமை என்றும் இருவித அர்த்தங்கள் உடையது. இங்ஙனம் இவ்விரண்டு கருத்துக்களுக்கும் ஒரே சொல்லை வழங்குவது அந்தப் பாஷையின் பெருமைக்குள்ள சின்னங்களிலே ஒன்றாகும்.

உலகத்தில் வேறு எந்தப் பாஷையிலும் மேற்கூறிய இரண்டு கருத்துக்களையும் சேர்த்துக் குறிப்பிடக்கூடிய ஒரே பதம் கிடையாது. எந்த நாட்டினரைக் காட்டிலும் அதிகமாக யதார்த்தங்களைப் பரிசோதனை செய்துபார்த்த மஹான்கள் வழங்கிய பாஷையாதலால், அந்தப் பாஷையிலே இவ்விரண்டு பொருள்களுக்கும் ஒரே பதம் அமைக்கப்பட்டிருக்கிறது.

இதிலிருந்து தெரியக்கூடியது யாதென்றால், துணிவுள்ளவனையே அறிவுள்ளவனென்பதாக நம் முன்னோர்கள் மதிக்கிறார்கள். எடுத்ததற்கெல்லாம் அஞ்சும் இயல்புடைய கோழையொருவன் தன்னைப் பல சாஸ்திரங்கள் கற்றவன் என்றும் அறிவாளி என்றும் சொல்வானானால், அவனை நம்பாதே; அவன் முகத்தை நோக்கிக் காறி உமிழ்ந்து விட்டு, அவனிடம் பின்வருமாறு சொல்:— 'அப்பா, நீ ஏட்டைத் துளைக்கும் ராமபாணப் பூச்சியைப்போல், பல

நூல்களைத் துளைத்துப் பார்த்து ஒருவேளை வாழ்நாளை வீணாக்கி யிருக்கக்கூடும். ஆனால் அச்சம் இருக்கும் வரை நீ அறிவாளி யாகமாட்டாய். அஞ்சாமைக்கும் அறிவுக்கும் நம் முன்னோர்கள் ஒரே சொல்லை உபயோகப் படுத்தி யிருக்கிறார்கள். அதை நீ கேள்விப்பட்டதில்லை போலும்!"

ஆம், அச்சமே மடமை. அச்சமில்லாமையே அறிவு. விபத்துக்கள் வரும்போது நடுங்குபவன் மூடன். அவன் எத்தனை சாஸ்திரம் படித்திருந்தாலும் மூடன்தான். விபத்துக்கள் வரும்போது எவன் உள்ளம் நடுங்காமலும் துணிவுடன் அவற்றை யெல்லாம் போக்க முயற்சி செய்கிறானோ. அவனே ஞானி 'ஹரி: ஓம்' என்று எழுதத் தெரியாதபோதிலும் அவன் ஞானிதான்.

சிவாஜி மஹாராஜா தமது சொந்தப் பிரயத்தனத்தினாலும், துணிவாலும், புத்திகூர்மையாலும் அவுரங்கசீப்பின் கொடுங்கோன்மையை அழித்து மகாராஷ்டிரம் ஏற்படுத்தி, தர்மஸ்தாபனம் செய்தார். அவர் எட்டுப் படிப்பில் தேர்ந்தவர் அல்லர். இந்தக் காலத்தில் இங்கிலீஷ் பள்ளிக்கூடங்களில் படித்துப் பரீக்ஷைகள் தேறி, பதினைந்து ரூபாயைக் கொண்டு பிழைப்பதற்காகத் தமது தர்மத்தையும் ஆத்மாவையும் விலைப்படுத்தக்கூடிய மனிதர்கள் ஆயிரக்கணக்கான சுவடிகள் படித்துக் கண்களைக் கெடுத்துக் கொண்டிருக்கிறார்கள். சிவாஜிக்கு மகாராட்டிர ராஜ்யம் லாபம். இவ்விருவரிலே யார் சிறந்தவர், இவ்விருவரிலே யார் அறிஞர்?

பாரதவாசிகளாகிய நாம் இப்போது புனருத்தாரணம் பெறுவதற்குக் கல்வி வேண்டும் என்று சிலர் சொல்லு

கிறார்கள். நாம் 'துணிவு வேண்டும்' என்கிறோம். துணிவே தாய்; அதிலிருந்துதான் கல்வி முதலிய மற்றெல்லா நன்மைகளும் பிறக்கின்றன.

## உயிரின் ஒலி

சில தினங்களுக்கு முன்பு கல்கத்தாவில் ஸ்ரீ ஜகதீச சந்திர வஸு தமது "வஸு மந்திரம்" என்ற கூடத்தைப் பாரத மாதாவுக்குச் சமர்ப்பணம் செய்கையில், "உயிரின் ஒலி" என்ற மகுடமிட்டு ஒரு பிரசங்கம் செய்தார்.

அவருடைய கொள்கை எப்படியென்றால்: நாம் ஜட பதார்த்தமாக நினைக்கும் உலோகாதிகளில் உயிர் நிறைந்திருக்கிறது. ஜந்துக்களைப் போலவே விருக்ஷாதிகளுக்கும் உணர்ச்சி இருக்கிறது. ஆகவே, மண், செடி, ஜந்து, மனுஷ்யன்—அத்தனைக்குள்ளும் ஒரே விதமான ப்ராணசக்தி இருக்கிறது. 'இந்த உலகமே உயிர்க்கடல்' என்பது அவரது சித்தாந்தம். அவர் பல நுட்பமான கருவிகள் செய்திருக்கிறார். ஹிந்து தேசத்துத் தொழிலாளிகளைக் கொண்டு அந்த ஸூக்ஷ்மக் கருவிகளை எல்லாம் செய்துகொண்டார். அந்தக் கருவிகளின் நேர்த்தியைப் பார்த்து ஐரோப்பிய சாஸ்திரிகளும் யந்திரிகளும் ஆச்சரியப்படுகிறார்கள். அந்தக் கருவிகளின் உதவியால், ஒரு பூண்டின் கையில் ஒரு ஊசி எழுதுகோல் கொடுக்கிறார். ஒரு புகைப்பட்ட கண்ணாடியின்மேல் அந்த ஊசி எழுதுகிறது ; அதாவது கோடுகள் கீறுகிறது. அந்தக் கோடுகளினால், மேற்படி செடியின் உள்ள நிலையை அதன் நாடியின் அசைவு தெரிவிக்கிறது.

செடிக்கு விஷத்தைக் கொடுத்தால் மூர்ச்சை போடுகிறது. மறுபடி, தெளிய மருந்து கொடுத்தால் தெளிகிறது. மதுபானம் செய்வித்தால் உண்டாட்டுக் கேளிகள் நடத்துகிறது. செடியின் சந்தோஷம், சோர்வு, வளர்ச்சி, சாவு ஆகிய எல்லா நிலைமைகளையும் கண்ணாடியிலே கீறிக் காட்டுவதைப் பார்க்கும்போது, 'செடியின் நாடியுணர்ச்சி இதர மனுஷ்ய மிருகாதி ஜந்துக்களின் நாடியுணர்ச்சிகளுக்கும் பேதமில்லை' என்பது ருஜுவாகிறது.

இவ்விதமான அற்புத பரீக்ஷைகளினால் உலகத்தின் உயிரொலியை நமக்குத் தெரியும்படி செய்த மஹானாகிய மேற்படி ஜகதீசசந்திரவஸு நம்முடைய ஹிந்து மதத்தில் ஆழ்ந்த பக்தியுடையவர் என்பது சொல்லாமலே விளங்கும். ஹிந்துக்களின் மேன்மையைப்பற்றி அவர் வார்த்தை சொல்லும்போது, அந்த வார்த்தைகளிலே மிகச் சிறந்ததொரு ஜீவநாதம் உண்டாகிறது. அந்த வார்த்தைகளைப் படிக்கும்போதே படிப்போரின் ஜீவசக்தி மிகுதிப்படுகிறது.

அவர் சொல்லுகிறார்:—"ஸாதாரணக் கருவிகளால் மஹத்தான காரியங்களை நிறைவேற்றிய மஹான்களின் ஸந்ததியிலே நாம் பிறந்திருக்கிறோம். ......ஒருவன் ஒரு பெருங்காரியத்தில் முழுதும் தன்னை ஈடுபடுத்தினால், அடைத்திருந்த கதவுகள் திறக்கும். அஸாத்யமாகத் தோன்றுவது அவனுக்கு ஸாத்யமாகும்; உண்மை தேடுவதையே தொழிலாகக் கொண்ட ஒருவன் சிற்றின்பங்களை விரும்பலாகாது. லாபநஷ்டங்களையும் வெற்றிதோல்விகளை

யும் ஒன்று போலக் கருதி அவன் தனது ஜீவனை உண்மைக்கு நைவேத்யமாக விடவேண்டும். பாரததேசம் இப்போது வென்று காப்பாற்ற வேண்டிய வஸ்து யாது? சிறியதும் வரம்புற்றதுமாகிய ஒரு பொருளினால் பாரத மாதா திருப்தியடைவாளா? இவளுடைய அற்புதமான பூர்வ சரித்திரத்தையும் பூர்வ சாஸ்திரங்களையும் செயல்களையும் யோசிக்கும்போது, தாழ்ந்த தரமுள்ளதும் சிலநாள் நிற்கிறதுமான லாபமொன்றை இவள் விரும்ப மாட்டாளென்பது தெரியும்.

"இப்போது நம்முடைய கண் முன்னே இரண்டு விதமான தர்மங்கள் காணப்படுகின்றன.

"முதலாவது (ஐரோப்பியரைப் போல நாமும்) படிப்பின் பரவுதலாலும், நகரத்தானுக்குரிய கடமைகளையும் பொறுப்புகளையும் நிறைவேற்றுவதாலும் கைத்தொழில், வியாபார சம்பந்தமான பலவித முயற்சிகளாலும், பாரதநாட்டை வலிமையுடைய நாடாகச் செய்ய வேண்டும். இவையெல்லாம் தேசக் கடமையின் முக்கியாம்சங்கள். இவற்றைப் புறக்கணித்தால் நமது ஜீவனுக்கே ஆபத்து நேரிடும். வாழ்க்கையிலே ஜயமும் அவனவன் தன் தன் அவாவைத் திருப்தி செய்து கொள்ளும் வழியும் வேண்டிப் பாடுபட்டால், அதிலிருந்தே மேற்கூறிய லௌகிகதர்மத்திற்குத் தூண்டுதல் உண்டாகும். இரண்டாவது, ஆத்ம தர்மம். க்ஷணமாயிருக்கும் இன்பங்களை மாத்திரம் கருதாமல், மனுஷ்ய வாழ்க்கையின் அத்யுந்தமான நோக்கத்தை நாடி

உழைத்தவர்கள் நமது நாட்டில் எக்காலத்திலும் மாருமல் இருந்துவருகிருர்கள்."

ஆத்ம தர்மமாவது யாதென்ருல், ஸ்ரீ. வஸு சொல்கிருர்:— "மனுஷ்ய ஜாதியின் பரம க்ஷேமத்திற்காக ஒருவன் தன்னைத் துறந்து விடுதல்" என்று. வந்தே மாதரம். இந்தத் தர்மத்தை எக்காலத்திலும் இடைவிடாமல் ஒரு சிலரேனும் ஆதரவு செய்து வந்தமையாலேதான் – அஸ்ஸிரியா தேசத்திலும் நீல நதிக்கரையிலும் தலைதூக்கி நின்ற பெரிய ஜாதிகள் அழிந்துபோயின—நாம் அழியாமல் என்றும் இளமை கொண்டிருக்கிருேம். கால வெள்ளத்தில் வரும் மாறுதல்களுக்கெல்லாம் மாருமல், தான் அவற்றைத் தனதாக்கிக்கொண்டு வாழும் திறமை நமது நாட்டிற்கு இருக்கிறது.

வந்தே மாதரம்.

இதுவே உயிரின் ஒலி. ஹிந்துஸ்தானத்தை வணங்குகிறேன், ஹிந்து தர்மத்தைப் போற்றுகிறேன். லோக நன்மைக்காக என்னை மறந்து என்னை இரை கொடுப்பேன்.

இதுதான் ஜீவசக்தியின் சாந்தி வசனம். தர்மம் ஐரோப்பியருக்குத் தெரியாது. அதை நாம் ஐரோப்பியருக்குக் கற்றுக்கொடுக்க வேண்டும். அவர்களுடைய முயற்சிகளை நாம் கற்றுக்கொண்டு, பிறகுதான் அவர்களுக்கு நாம் உபாத்தியாயராகலாம்.

ஐரோப்பாவின் தொழில் நுட்பங்களை நாம் பயிற்சி செய்தல் எளிதென்பது ஸ்ரீமான் வஸுவின் சரிதையிலே நன்கு விளங்கும். நம்முடைய சாந்தி தர்மத்தை ஐரோப்பியர் தெரிந்துகொள்வதால், அவர்களுக்கு விளையக்கூடிய நன்மையோ மிக மிகப் பெரியது.

ஸ்ரீமான் ஜகதீச சந்திர வஸு சொல்லுகிறார்:— "தன்னை அடக்கியாளும் சக்தியில்லாமையால் மனுஷ்ய நாகரிகமானது சேதப் படுகுழியின் கரையில் நடுங்கிக் கொண்டு நிற்கிறது. ஸர்வ நாசத்திலே கொண்டு சேர்ப்பதாகிய இந்த வெறி கொண்ட வேகத்திலிருந்து மனிதனைக் காப்பாற்ற மற்றொரு தர்மம் வேண்டும்." அதாவது, நம்முடைய ஹிந்து தர்மம். ஏனென்றால், "ஆத்ம த்யாகம் தனக்குத் தனக்கென்ற அவாவினால் உண்டாகாது. எல்லாச் சிறுமைகளையும் அழித்துப் பிறர் நஷ்டமெல்லாம் தனக்கு லாபமென்று கருதும் அஞ்ஞானத்தை வேரறுப்பதால் விளையும்" என்கிறார்.

முன்னொரு முறை சில வருஷங்களின் முன்பு ஜகதீச சந்திரர் சொல்லிய வாக்கியமொன்றையும் இங்கு மொழி பெயர்த்துக் காட்டுதல் பொருந்தும்: லண்டன் நகரத்தில் "ராயல் ஸொஸைடி" என்ற பெரிய சாஸ்திர சங்கத்தார் முன்பு செய்த பிரசங்க மொன்றிலே அவர் சொன்னார்:— "ஸஜீவ கீதங்களின் பேசாத ஸாக்ஷ்யத்தை நான் பார்த்தேன். எல்லாப் பொருளையும் தன்னுள்ளே கொண்ட ஏகவஸ்துவின் கலை ஒன்றை அங்கே கண்டேன். ஒளியின் சிறு திரைகளுக்கிடையே தத்தளிக்கிற துரும்பும், பூமியின்

மேலே பொதிந்து கிடக்கும் உயிர்களும், நமது தலைமேலே சுடர் வீசும் ஞாயிறும் – எல்லாம் ஒன்று. இதைக் கண்ட பொழுதே, மூவாயிரம் வருஷங்களுக்கு முன்பு என் முன்னோர் கங்கைக் கரையில் முழங்கின வாக்கியத்திற்குச் சற்றே பொருள் விளங்கலாயிற்று. 'இந்த ஜகத்தின் பேத ரூபங்களில் ஒன்று காண்பார் எவரோ அவரே உண்மை காண்பார்.' பிறர் அல்லர், பிறர் அல்லர்; இதுதான் ஜீவ ஒலி. வாயு பகவானுடைய ஸ்ரீமுக வாக்யம். எல்லாவற்றிலும் ஒருயிரே அசைகிறது. அதை அறிந்தால் பயமில்லை; பயம் தீர்ந்தால் சாவில்லை. அமிர்தம் ஸதா."

## புனர் ஜன்மம் - 1

புனர் ஜன்மம் உண்டு.

மதுரையிலே ஒரு சாஸ்திரியார் நேற்று மாலை இறந்து போனதாக வைத்துக் கொள்ளுவோம். அவர் திரும்பவும் பிறப்பாரா? தெரு வழியாக ஒருவன் நடந்து போகும் போது காலிலே ஒரு சிற்றெறும்பு மிதிபட்டு இறந்து போவதாக வைத்துக் கொள்ளுவோம். அது திரும்பவும் பிறக்குமா? இதையெல்லாம் பற்றிச் சாஸ்திரங்கள் மிகவும் விஸ்தாரமாகப் பேசியிருக்கின்றன. அவற்றிலே படித்துக் கொள்ளலாம். ஆனால், நான் இப்போது சொல்ல வந்த கதை இதுவன்று. நான் சொல்ல வந்த விஷயம் ஹிந்து ஸ்தானத்தின் புனர் ஜன்மம்.

'ஹிந்துஸ்தானம்' என்பது ஹிந்துக்களின் ஸ்தானம். இது நமது தேசத்திற்கும், தேசத்திலுள்ள ஜனக்

கூட்டத்திற்கும் பெயர். இந்த ஜனக் கூட்டத்திற்கு 'பாரத ஜாதி' என்றும் பெயர் சொல்வதுண்டு.

### பாரத ஜாதி

பாரதம் பரதன் நிலைநாட்டியது. இந்தப் பரதன் துஷ்யந்த ராஜாவின் மகன். இமயமலை முதல் கன்யாகுமரி முனை வரையிலுள்ள நமது நாட்டை இவன் ஒன்று சேர்த்து அதன் மிசை முதலாவது சக்ராதிபத்யம் ஏற்படுத்தியபடியால், இந்த நாட்டிற்கு 'பாரத தேசம்' என்று பெயர் உண்டாயிற்று. கங்கையிலே வந்து சேறும் வாய்க்கால்களெல்லாம் கங்கையாகவே மாறிவிடும். பாரத தேசத்தில் வந்து குடியேறித் தலைமுறை தலைமுறையாக இங்கு வாழ்பவர்களெல்லாம் நமது ஜனக் கூட்டத்தைச் சேர்ந்தவராகின்றனர்.

கிருஸ்துவர்களாயினும், பார்ஸிகளாயினும், மகம்மதியராயினும், எங்கிருந்து வந்து எந்த இஷ்ட தெய்வத்தைக் கொண்டாடிய போதிலும், பாரத பூமியிலே பிறந்து வளர்ந்து இதையே சரணாகக் கொண்ட மனிதர்களை யெல்லாம் பாரத ஜாதியிலே சேர்த்துக் கணக்கிட வேண்டும். இது ஒரே ஜாதி; பிரிக்க முடியாதது; அழி வில்லாதது. இதற்கு ஆதாரமும் மூலபலமுமாவது யாதெனில், ஆரிய ஸம்பத்து. அதாவது ஆரியரின் அறிவும், அந்த அறிவின் பலன்களும்.

### ஆரிய ஸம்பத்து

ஸம்பத்து என்பது ஸம்ஸ்கிருதச் சொல். இதன் பொருள் செல்வம். ஆனால் இங்கே செல்வம் என்பது

திரவியத்தையும், பூஸ்திதியையும், ஆடு மாடுகளையும் மாத்திரமே குறிப்பிடுவதன்று. (1) அறிவுச் செல்வம், (2) ஒழுக்கச் செல்வம், (3) பொருட் செல்வம் ஆகிய மூன்றையும் குறிப்பிடும். 'ஆர்ய ஸம்பத்து' என்பது ஹிந்துக்களுடைய அறிவு வளர்ச்சி.

நமது வேதம், நமது சாஸ்திரம், நமது ஜனக்கட்டு, நமது பாஷைகள், நமது கவிதை, நமது சிற்பம், நமது ஸங்கீதம், நமது நாட்டியம், நமது தொழில் முறைகள், நமது கோபுரங்கள், நமது மண்டபங்கள், நமது குடிசைகள்—இவை அனைத்துக்கும் பொதுப்பெயர் 'ஆர்ய ஸம்பத்து'. காளிதாஸன் செய்த சாகுந்தல நாடகம், ஹிந்தி பாஷையிலே துளஸீதாஸர் செய்திருக்கும் ராமாயணம், கம்பராமாயணம், சிலப்பதிகாரம், திருக்குறள், ஆண்டாள் திருமொழி—இவையனைத்துக்கும் பொதுப் பெயராவது ஆர்ய ஸம்பத்து. தஞ்சாவூர்க்கோயில், திருமலை நாய்க்கர் மஹல், தியாகையர் கீர்த்தனங்கள், எல்லோராவிலுள்ள குகைக் கோயில், ஆக்ராவிலுள்ள தாஜ் மஹல், சரப சாஸ்திரியின் புல்லாங்குழல்—இவை அனைத்துக்கும் பொதுப்பெயர் ஆர்யஸம்பத்து. எனவே, ஆர்ய ஸம்பத்தாவது ஹிந்துஸ்தானத்தின் நாகரிகம். இந்த ஸம்பத்தைப் பாதுகாக்கும் வரையில் இந்த ஜாதிக்கு உயிருண்டு. இந்த ஸம்பத்திலே துருப்பிடிக்க இடம் கொடுத்தால், இந்த ஜாதியைச் செல் அரித்து விடும்.

இந்த ஆர்யஸம்பத்தை உலகம் உள்ளவரை ஸம்ரக்ஷணம் செய்து, மேன்மேலும் ஒளியும் சிறப்பும் உண்

டாகும்படி செய்யும் கடமை தேவர்களால் பாரத ஜாதிக்கு ஏற்படுத்தப்பட்ட கடமையாகும்.

## இடையில் நமக்கு நேர்ந்த கேடு

இந்த ஆர்ய ஸம்பத்தை நாம் பல பல நூற்றாண்டுகளாக ஆதரித்துக்கொண்டு வந்தோம். சென்ற சில நூற்றாண்டுகளாக இதில் துருப் பிடிக்க இடங்கொடுத்து விட்டோம். தேவர்கள் நமக்குக் கொடுத்த கடமையைக் கர்வத்தாலும், சோம்பராலும், சிறுமையாலும் உல்லங்கனம் செய்யத் தொடங்கினோம். தேவர்கள் 'இந்த பாரத ஜாதியைக் கொஞ்சம் செல் அரிக்கக் கடவது' என்று ஆசீர்வாதம் பண்ணினார்கள்.

மலைப் பாம்புக் கதை கேட்டிருக்கிறீர்கள் அல்லவா? அதன் வாலிலே தீப்பற்றி எரியுமாம். மலைப்பாம்பு சுகமாகக் குறட்டுவிட்டுத் தூங்குமாம். செல்லரித்துக் கொண்டு போனது நமது ஸ்மரணையிலே தட்டவில்லை. அத்தனை கர்வம், அத்தனை கொழுப்பு, அத்தனை சோம்பர்.

நமது கவிதையிலே ஆனந்தம் குறையத் தொடங்கிற்று, ருசி குறைந்தது. கரடு முரடான கல்லும் கள்ளி முள்ளும் போன்ற பாதை நம் கவிகளுக்கு நல்ல பாதையாகத் தோன்றலாயிற்று. கவிராயர் 'கண்' என்பதைச் 'சக்கு' என்று சொல்லத் தொடங்கினார். ரஸம் குறைந்தது; சக்கை அதிகப்பட்டது. உண்மை குறைந்தது; பின்னல் திறமைகள் அதிகப்பட்டன.

**சவியுறத்தெளிந்து தண்ணென் றொழுக்கமும் தழுவிச்**
**சான்றோர்**
**கவியெனக் கிடந்தகோதா வரியினை வீரர் கண்டார்**

என்று கம்பன் பாடி யிருக்கின்றான்.

'சவி' என்பது ஒளி; இது வடசொல்; கம்பன் காலத்தில் அதிக வழக்கத்திலிருந்தது போலும். "ஒளி பொருந்தும்படி தெளிவுகொண்டதாகி, தண்ணென்ற (குளிர்ந்த) நடையுடையதாகி, மேலோர் கவிதையைப் போலக் கிடந்தது கோதாவரி நதி" என்று கம்பன் வர்ணனை செய்கிறான். எனவே, கவிதைகளில் ஒளி, தெளிவு, குளிர்ந்த நடை மூன்றும் இருக்கவேண்டு மென்பது கம்பனுடைய மதமாகும். இதுவே நியாயமான கொள்கை.

மேலும், நெடுங்காலத்துக்கு முன்னே எழுதப்பட்ட நூல்கள் அக்காலத்துப் பாஷையைத் தழுவினவை. காலம் மாற மாற, பாஷை மாறிக்கொண்டு போகிறது; பழைய பதங்கள் மாறிப் புதிய பதங்கள் உண்டாகின்றன. புலவர் அந்த அந்தக் காலத்து ஜனங்களுக்குத் தெளிவாகத் தெரியக்கூடிய பதங்களையே வழங்கவேண்டும். அருமை யான உள்ளக்காட்சிகளை எளிமைகொண்ட நடையிலே எழுதுவது நல்ல கவிதை. ஆனால் சென்ற சில நூற்றாண்டு களாக, புலவர்களும் சாமியார்களும் சேர்ந்து வெகு ஸாதாரண விஷயங்களை அஸாதாரண அலௌகிக அந்த கார நடையில் எழுதுவதுதான் உயர்ந்த கல்வித் திறமை என்று தீர்மானஞ் செய்துகொண்டார்கள்.

## இடைக்காலத்து ஸங்கீதம்

பாரத தேசத்து ஸங்கீதம் பூமியிலுள்ள எல்லா தேசத்து ஸங்கீதத்தைக் காட்டிலும் மேலானது. கவிதையைப்போலவே ஸங்கீதத்திலும் நவரஸங்களின் தொழில் இருக்கவேண்டும். நவரஸங்களைப் பற்றி இந்தப் பத்திரிகையிலே * தனியாக ஒரு வியாஸம் பின்னெழுதப்படும். இன்ன இன்ன ராகங்களிலே இன்ன இன்ன சமயங்களில் இன்ன இன்ன ரஸங்கள் தோன்றப் பாடவேண்டுமென்ற விதிகள் எல்லாம் பூர்வ காலத்து நூல்களிலே காணப்படுகின்றன. கீர்த்தனத்திலுள்ள சொற்களின் அர்த்தமும் ராகத்தின் ஒளியும் ரஸத்திலே ஒன்றுபட்டிருக்க வேண்டும். தியாகையர் காலம்வரை நமது தேசத்து ஸங்கீதம் ஒலியுடன் இருந்தது. பிறகு இதிலும் இருள் சேரத் தொடங்கிவிட்டது. பாட்டிலே ரஸச் சேர்க்கை கிடையாது. அப்படியே சேர்த்தாலும் சோக ரஸம் (கருணை ரஸம்) தான் சேர்ப்பார்கள். மற்றவை மடிந்து போயின. பாட்டுக்கு இசைந்தபடி தாளம் என்பது மாறிப் போய், தாளத்துக்கு இசைந்தபடி பாட்டாகிவிட்டது. 'இன்பத்தைக் காட்டிலும் கணக்கே பிரதானம்' என்று முடிவு செய்து கொண்டார்கள். இன்பமும் கணக்கும் சேர்ந்திருக்க வேண்டும். இன்பமில்லாமல் கணக்கு மாத்திரம் இருந்தால், அது பாட்டாகாது.

## மறு பிறப்பு

இடைக் காலத்தே நமக்குச் சேர்ந்த கேட்டிற்கு ஸங்கீதத்தையும் கவிதையையும் திருஷ்டாந்தங் காட்டி

* சுதேசமித்திரன் பத்திரிகை

ளோம். ஆனால், இந்தக் கேடு அவை இரண்டையும் மாத்திரமே தொட்டு நிற்கவில்லை. நமது சித்திரத் தொழில், நமது சிற்பம், நமது ஜனக்கட்சி, ஜன நீதி, நமது சாஸ்திரம், தலை, கால்—எல்லாவற்றிலும் இந்தக் கேடு பாய்ந்துவிட்டது. நோய் முற்றிப்போயிருந்தது. பராசக்தி நல்ல வேளையில் நமக்குள் உயர்ந்த வைத்தியர் பலரை அனுப்பினாள். அவளுக்கு நம்மீது கிருபை வந்து விட்டது. எனவே, பிழைத்தோம். ஆனாலும், இம்முறை பிழைத்தது புனர்ஜன்மம். இந்தப் புனர் ஜன்மத்தின் குறிகளை எல்லாவற்றிலும் காண்கிறோம். பாரதஜாதி புதிதாய்விட்டது. தற்காலத்திலே பூமண்டலத்து மஹா கவிகளில் நம் ரவீந்த்ரநாதர் ஒருவர் என்று உலகம் ஒப்புக்கொள்ளுகிறது. இதுவரை ஐரோப்பிய பண்டிதர்கள் இயற்கை நூல் (ப்ரகிருதி சாஸ்திரம்) தமது விசேஷ உடைமை என்று கருதி வந்தார்கள். இப்போது நம் ஜகதீச சந்திர வஸு அந்த வழியில் நிகரற்ற திறமை பெற்றவர் என்பதை மேல் நாட்டு வித்துவான்களில் ஒப்புக்கொள்ளாதார் யாருமில்லை. தமிழ் நாட்டிலே புதிய கவிதையும் சாஸ்திர ஒளியும் விரைவிலே தோன்றும். உலகம் பார்த்து வியப்படையும்.

செத்துப் பிழைத்தோம். ஆனால் உறுதியாக நல்ல வயிரம் போலே பிழைத்துவிட்டோம். புதிய ஜன்மம் நமக்கு மிகவும் அழகான ஜன்மமாகும்படி தேவர்கள் அருள் புரிந்திருக்கிறார்கள். அதன் பொருட்டு அவர்களை இடைவிடாமல் வாழ்த்துகின்றோம்.

## ஜன வகுப்பு

இனிமேல் யாரேனும் ஒரு மஹான் வந்து மனுஷ்யனைச் சாகாமல் நூருண்டேனும் பயமில்லாது வாழக்கூடிய மருந்தும் உபாயமும் உலகத்துக்குக் காண்பிக்கலாம். மனுஷ்யன் பாபத்தை விட்டால் அமரத் தன்மையை அடையலாம். 'பாபத்திற்கு மரணம் சம்பளம்' என்று கிருஸ்துவ வேதம் சொல்லுகிறது. பாபத்தை நீக்கி மனிதர் மரணத்தை வெல்லக்கூடிய காலம் வரலாம்.

ஆனால், இப்போதுள்ள நிலைமையில் மனிதன் இந்த உலகத்தில் வாழ்வது சதமில்லை. 'இன்றைக் கிருப்பாரை நாளைக்கிருப்பார் என்று எண்ணவோ திடமில்லையே' என்று தாயுமானவர் சொன்னார்.

எங்கிருந்தோ வந்து இவ்வுலகத்தில் சில நாள் வாழ்கிறோம். செத்த பிறகு நம்முடைய கதி என்ன ஆகுமோ? கடவுளுக்குத்தான் தெரியும். மூன்றேமுக்கால் நாழிகை உயிர் வாழ்வது சந்தோஷத்துடன் இருந்து விட்டுப் போகக் கூடாதா? அடடா! இந்த பூமியில் மனித உயிர்க்கு எத்தனை கஷ்டம், எத்தனை பயம், எத்தனை இடையூறு, எத்தனை கொலை, எத்தனை துரோகம், எத்தனை பொய், எத்தனை கொடுமை, எத்தனை அநியாயம். ஐயோ பாவம்!

அடா, மனிதர்களே. எத்தனை சாஸ்திரங்களுக்கும், ஆக்கினைகளுக்கும், கட்டுப்பாடுகளுக்கும், நம் மனிதர் உட்பட்டிருக்கவில்லையா? ஒரு புதுக் கட்டுப்பாடு செய்து

கொள்வோமே. அந்தக் கட்டுப்பாடு யாதெனில்:— "ஒருவர்க்கொருவர் மனத்தாலும் தீங்கு நினைப்பதில்லை. ஒருவர்க்கொருவர் பயப்படல் இல்லை." மானிடரே, இந்த விரதம் எடுத்துக்கொள்ளுங்கள். இது பிழைக்கும் வழி. தெருவில் நடக்கும்போதே முன்பின் தெரியாத மனிதர் கூட ஒருவர்க்கொருவர் கோபம் அல்லது அவமதிப்பு அல்லது பயத்தோடு பார்த்துக் கொள்கிறார்கள். மனிதனுக்கு மனிதன் இயற்கையில் விரோதம் என்ற நிலையில் உங்களுடைய மூடத்தனமான மனுஷ்ய நாகரிகம் வந்து சேர்ந்து இருக்கிறது. இதை மாற்றி, அன்பை மூலாதாரமாக்கவேண்டும்.

முதலாவது, சிலருக்குச் சோறு மிதமிஞ்சி இருக்க, பலர் தின்னச் சோறில்லாமல் மடியும் கொடுமையைத் தீர்த்துவிடவேண்டும். இது இலக்கம் ஒன்று. பூமியின் மீதுள்ள நன்செய், புன்செய், தோப்பு, துரவு, சுரங்கம், நதி, அருவி, குப்பை, செத்தை, தரை — கடவுளுடைய சொத்தில் நாம் வேலி கட்டக்கூடிய பாகத்தையெல்லாம்— சிலர் தங்களுக்குச் சொந்தமென்று வேலி கட்டிக்கொண்டனர். பலருக்கு ஆகாசமே உடைமை. வாயு ஆகாரம். இதற்கு மருந்து என்னவென்றால் 'எல்லோரும் சமானம், அண்ணன் தம்பிபோல' என்ற புத்தி உண்டாய் ஏழைகள் வயிறு பசிக்காமல் செல்வர்கள் காப்பாற்றவேண்டும்.

அது முடியாவிட்டால்,ஐரோப்பாவில் 'சோஷலிஸ்ட்' கட்சியார் சொல்வதுபோல நிலத்தை ஸகலருக்கும் பொதுவென்று ராஜ்யவிதி ஏற்பாடு செய்துகொள்ளவேண்டும்.

மனிதர் அத்தனை பேருக்கும் போதுமான ஆகாரம் பூமிதேவி கொடுக்கும். பூமிதேவியின் பயனை நேரே கையாளத் தெரியாமல் பொறுமையாலும், அறியாமையாலும், தாறுமாறாக விழல்படுத்தி, சோறு தேடும் இடத்தில் சோறு தேடாமல், ஒருவர்க்கொருவர் கொல்ல வழி தேடி, பலர் வயிறு வாடச் சிலர் வயிறு ஜீர்ண சக்தியில்லாமல் போக, மனிதர் பரிதாபகரமாகக் காக்கையிலும் கடைப்பட்ட வாழ்வு வாழ்ந்து வீணே நசித்துப்போகிறோம். 'ஏழைகள் வருந்தினால் நமக்கென்ன' என்று நினைப்பவர் பரம மூடர். பலர் சௌகரியப் படும்வரை சிலர் சௌகரியம் அடைதல் இந்த உலகத்தில் சாத்தியமில்லை. பொருளாளி நல்ல உடுப்புகள் அணிந்துகொண்டு தெருவில் உலாவப் போவதையும், அவனுடைய கன்னத்தில் சதை உப்பி யிருப்பதையும், அவனுடைய ஏவலாட்களின் தொகையும் சிறுமையும், மேற்படி பொருளாளி பிறரை அவமரியாதை செய்வதையும் கண்டு மயங்கிப் போய் அவன் பரமானந்த நிலையிலிருப்பதாக ஏழை நினைக்கிறான். அது தவறு. அவன் மனத்தில் ஒளிந்து கிடந்து அவன் உயிருக்கு நரகவேதனை செய்யும் துயரங்களை ஏழை அறியமாட்டான், ஒரு வகுப்பின் மனம் மற்றொரு வகுப்புக்குத் தெரியாமலும் ஒருவனுடைய உள்ளம் மற்றொருவனுக்குத் தெரிய இடமில்லாமலும், மனுஷ்ய நாகரிகம் அவ்வளவு மூடத்தனமான நிலைக்கு வந்து சேர்ந்திருக்கிறது.

### வறுமையின் பயன்

ஏழையின் அழுக்குத் துணியையும், அழுக்குடம்பையும், சிரைக்காத முகத்தையும் பார்த்து, பொரு

ளாளியின் குழந்தைகள் மேற்படி ஏழை தமது மனுஷ்ய பதவிக்குத் தாழ்ந்த பன்றி, நாய், மாடு, வகுப்பைச் சேர்ந்தவன் என்று நினைக்கிறார்கள். ஐரோப்பாவில் ஏழைக்கும் பொருளாளிக்கும் விரோதம் முற்றிப்போய், உள்நாட்டுச் சண்டைகள் நேரிட்டும், அப்படி நேரிடாத படி தடுக்கவேண்டுமென்ற நோக்கத்துடன் ஜனங்களை ஒன்று சேர்க்கும்பொருட்டாக வெளிநாடுகளின் மீது சில ராஜாக்கள் போர் தொடங்க, கண்டங்களில் போர் பரவியும், பூமண்டலம் தூள் தூளாகிறது. கிழக்குத் தேசங்களிலும், யுத்தமில்லாமல் சமாதானத்துடன் இருக்கும் இடங்களிலும்—திருஷ்டாந்தமாக நமது தமிழ் நாட்டுப் பறையர்கூட—கண்விழித்துத் தாங்கள் மனிதர் என்பதைத் தெரிந்துகொண்டு மற்ற ஜாதியாருக்குத் தாங்கள் சமானமென்று சபை கூட்டித் தீர்மானம் செய்கிறார்கள். மந்திரி மாண்டேகுவிடம் முறையிட்டார்கள். கிழக்குத் தேசங்களில் சமாதான எல்லைகளிலே கூட ஏழைகள் கண் திறந்து பொருளாளிகளை எதிர்க்கத் தொடங்கியிருக்கிறார்கள்.

சுருங்கக் கூறுமிடத்து, சோற்றுக்காக மனிதர் ஒருவர்க்கொருவர் செய்துகொள்ளும் அநியாயம் நாய்களும் பன்றிகளும் தமது ஜாதிக்குள்ளே செய்யும் வழக்கமில்லை என்பது உலகப் பிரசித்தமான விஷயம். ஆங்கில பாஷையில் Lord Byron என்ற மகாகவி ஒரு சமயத்தில் மனிதரை 'நாய்களே' என்று கூறினார். பிறகு, உண்மையில் மனிதரைக் காட்டிலும் நாய் ஜாதி மேம்பட்டதாகையால், மனிதரை நாய்களே என்று சொல்லியதி

லிருந்து நாய் ஜாதிக்கு அவமரியாதை செய்வதாக ஏற்படு மாகையால், அதை மாற்றி 'ஏ மனிதரே' என்று கூப் பிட்டார்.

## தீர்ப்பு

அன்புதான் இதற்கெல்லாம் தீர்ப்பு. எல்லாமனித ருக்குப், ஆணுக்குப், பெண்ணுக்கும், குழந்தைக்கும், வெள்ளைக்கும், மஞ்சளுக்குப், செம்புக்கும், கருநிறத்து நீக்ரோவருக்கும்—சகலருக்கும் உள்ளே பரமாத்மா பரம புருஷனாகிய நாராயணனே அந்தர்யாமியாக நின்று வெளித்தொழில்களை நிகழ்த்துகிறான். ஆதலால் மானிடரே, சகோதர உணர்ச்சியே தீர்ப்பு. சகோதர உணர்ச்சியைப்பற்றிக் கவிதைகள் பாடுவதும் நீதி நூல்கள் புகழ்வதும் வர்த்தமான பத்திரிகைகள் கர்ஜனை செய்வதும் இவ்வுலகத்தில் சாதாரணமாக இருக்கிறது. நடையில், எந்தக் கண்டத்திலும் எந்த மூலையிலும் அந்த முயற்சி காணப்படவில்லை. அது நடைக்கு வரவேண்டும். கண் ணில்லாதவன் வான சாஸ்திரம் படிக்கமுடியாது. இன்ப மோ அன்புலகத்தைச் சேர்ந்த பதார்த்தம். ஆதலால் அன்பில்லாவிடின் இன்பமில்லை. இன்பத்தைத் தேடித் தேடி, எங்கும் எப்பொழுதும் எதனிலும் காணமல் வருந்துகிற மானிடரே, கேளுங்கள்.

அன்புண்டானால் இன்பமுண்டு என்பதை புத்த பகவான் கண்டுபிடித்துச் சொன்னார். அந்த யுக்தியின் மகிமையை நேரே மனிதர் தெரிந்துகொள்ளாமல், அவர் காட்டிய பயனை அடையாமலே இருந்து வருகிறார்கள்.

அன்பு கொள்கையில் இருந்தால் போதாது; செய்கையில் இருக்கவேண்டும். உன்னிடம் ஒருகோடி ரூபாய் இருந்தால் தேச நன்மைக்காகக் கொடுத்துவிட்டு நீ ஏழையாகி விடத் துணிவாயானால், நீ உன் தேசத்தின் மீது அன்புடையவனாகக் கருதப்படுவாய். உன்னுடைய குழந்தையின் உயிரைக்காக்கும் பொருட்டாகப் புலியின் வாயில் நீ போய் முதலாவது கையிடத் துணிவாயானால், நீ குழந்தையிடம் அன்புடையவனாகக் கருதப் படுவாய். பறையனுக்கும் போஜனம் செய்வித்துப் பக்கத்தில் வைத்துக்கொண்டு சாப்பிட்டால், நீ மனுஷ்யனிடம் அன்புடையவனாக விளங்குவாய்.

## ஏசு கிருஸ்துவின் வார்த்தை

யேசுவினிடம் ஒருநாள் ஒரு மனிதன் வந்து, "ஸ்வாமி! எனக்கு நித்தியவாழ்வு வேண்டும். அதற்கு உபாயம் என்ன?" என்று கேட்டான்.

அதற்கு யேசு சொன்னார்:—"ஈசன் கட்டளைகள் பத்து. அவற்றின்படி நட. விபசாரம் பண்ணாதே; கொல்லாதே, திருடாதே, பொய்ச்சாட்சி சொல்லாதே, வஞ்சனை பண்ணாதே, தாய் தந்தையரைப் போற்று" என்று. வந்தமனிதன்:—"நான் இந்த விதிகளை எல்லாம் தவறாமல் நடத்தி வருகிறேன்" என்றான். அப்போது யேசு கிருஸ்து:—"ஒரு குறை இன்னும் உன்னிடத்திலே இருக்கிறது. வீட்டுக்குப்போய் உன்னுடைய சொத்தை எல்லாம் விற்றுப் பணத்தை ஏழைகளுக்குக் கொடுத்து விடு, உனக்கு மோக்ஷச் செல்வம் உண்டாகும்.

சிலுவையை (அதாவது வேள்வி விரதத்தை)க் கைக் கொண்டு என்னுடனே வா" என்றார்.

வந்த மனிதன் இந்த வார்த்தையைக் கேட்டு மிகவும் துயரத்துடன் திரும்பிப் போனான். அவன் பெரிய பணக்காரன். அவ்வளவையும் ஏழைகளிடம் கொடுத்துவிட்டு சிலுவையைத் தூக்கிக்கொண்டு யேசுவின் பின்னே போவதில் அவன்மனதிற்கு இன்பம்தோன்றவில்லை. அப்போது யேசுகிருஸ்து பக்கத்திலிருந்த தம் சீடரை நோக்கிச் "செல்வமுடையர் மோஷராஜ்யத்தில் புகுதல் மிகவும் அரிது" என்றார்: சீடரெல்லாம் இதைக்கேட்டு வியப்பெய்தினர். ஸஹஜந்தானே? பணம் நிரம்ப வைத்திருப்போர் யார்? ராஜா, மந்திரி, ஸேனாதிபதி, வியாபாரி, ஜமீன்தார், கோயிலதிகாரிகள், மடாதிகாரிகள்—இத்தனை பேருக்கும் மோக்ஷம் ஸந்தேஹமென்று சொன்னால் கேட்போருக்கு வியப்புண்டாவது ஸகஜந்தானே? குருக்கள்கூட நரகத்துக்குத்தான் போகவேண்டும்.

யேசுகிருஸ்து பின்னும்சொல்லுகிறார்:—"மக்களிலே செல்வமுடையோர் ஈசனுலகத்திற்குள்ளே புகுதல்மிகவும் அரிது. ஊசித்தொளையில் ஒட்டகை நுழைவதைக்காட்டிலும், செல்வன் மோக்ஷத்துக்குள் நுழைவது கடினம்" என்றார். அப்போது பேதுரு என்ற சீடன் சொன்னான்:—"நாங்கள் அனைத்தையும் விட்டு உம்முடன் வந்திருக்கிறோம்" என்று. அப்போது, "என் பொருட்டாகவும் வேதத்தின் பொருட்டாகவும் எவனொருவன் வீட்டையேனும், உடன் பிறந்தாரையேனும், தாய்தந்தையரை

வேனும் விட்டுவருகிறானே, அவனுக்கு அவையனைத்தும் நூறு பங்கு பெருகிவரும். இஹத்தில் உடன்பிறந்தார், தாய் தந்தையர், பெண்டுபிள்ளைகள், பூமி—எல்லாம் திரும்பக்கிடைக்கும்; ஆனால் கொடுமை அனுபவிக்கவேண்டும். பரத்தில் நித்யவாழ்வு கிடைக்கும்; ஆனால் இப்போது முதற்பட்டிருப்போர் கடைப்படுவார்கள்" என்று யேசு சொன்னார்.

இக் கதையை ஸ்ரீ காந்தி எடுத்துக் காட்டிச் சில தினங்களின் முன்பு பிரயாகையிலே ஒரு அர்த்த சாஸ்திர சபையின் முன்பு செய்த பிரசங்கத்தின் கருத்து என்னவென்றால்:—"ஐரோப்பியர் செல்வம் தேடுவதையே ஒரு பெரிய தர்மமாக நினைத்து விட்டார்கள். அப்படி நினைத்த படியால், அவர்களுக்குப் பல வித அஸௌகர்யங்கள் நேரிட்டன. நாம் செல்வத்தைப் பெரிதாக வைக்கக் கடவாது" என்பதேயாம்.

ஸ்ரீமான் காந்தி சொல்லுகிறார்:—

"இதுகொண்டே முற்காலத்திலும் பணந்தேடும் காரியங்களுக்கு ஒரு வரம்பு ஏற்படுத்தினார்கள். லௌகிக ஆசையெல்லாம் நிறுத்திவிட வேண்டுமென்று நான் சொல்லவில்லை. பொருள் தேடுவதையே நோக்கமாகக் கொண்ட கூட்டமொன்று நம்முள்ளே இருக்கலாம். ஆனால், அந்த நோக்கம் ஸர்வ உன்னதமன்று.

"மேற்குத் தேசத்தார் தங்களுடைய அபிவிருத்தியைப் பற்றியும், ஸின்கிங் பண்ட், கணக்குப் போட்டுப்

பார்க்கிறார்கள். அமெரிக்காவின் செல்வத்தை அளவெடையாக வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

"அங்கே எல்லாத் தேசத்தாருக்கும் அமெரிக்காவைக் கண்டால் பொறாமை. நமது தேசத்தில் சிலர் அமெரிக்காவைப் போல நாமும் செல்வம் தேடுவதே சரியென்றும் ஆனால் அந்த மாதிரி நாம் வேலை செய்ய வேண்டாமென்றும் சொல்லுகிறார்கள். இந்த முயற்சி ஈடேறாது. ஒரு மனிதன் ஏககாலத்தில் உத்தமம், மத்திமம், அதமம் என்று மூன்று நிலைமையிலும் இருக்க முடியாது......... யந்திரசாலை, ஆலை இவற்றால் என்ஜின் புகையேறிய நாட்டிலே தேவர்கள் இரார். நவீன யந்திர தந்திரங்களினாலும் அவற்றால் விளையும் செல்வத்தினாலும் இன்பம் உண்டாகாது."

இங்ஙனம் ஸ்ரீமான் காந்தி யேசுநாதரை மாத்திரமேயல்லாமல் முஹம்மது, நானக், கபீர், சைதன்யர், சங்கராசார்யார், தயாநந்தர், ராமகிருஷ்ணர் என்ற ஞானிகளை எல்லாம் காட்டி, இவ்வனைவரும் வறுமையை விரதமாகக் கொண்டு மேன்மை பெற்றதையும், உலகத்துக்கு நல்வழி காட்டியதையும் ஞாபகப்படுத்துகிறார். ஆதலால் வறுமை விரதமே உயர்வு என்கிறாரா? ஒரே அடியாக அப்படியும் சொல்லவில்லை. "பொன்னைக் காட்டிலும் அதிக உண்மை காட்ட வேண்டும்; அதிகாரத்தைக் காட்டிலும் அதிக தீரம், சுயநலத்தைக் காட்டிலும் அதிக ஈகை – இவை வேண்டும். நமது வீடுகளையும், அரண்மனைகளையும், கோவில்களையும் பணக்கோலம் குறைவாகவும்

குணக்கோலம் அதிகமாகவும் விளங்கச் செய்வோமானால், நம்மிடத்தில் பாரமான சைன்யமில்லாமலே எதிர்த்து வரும் சேனைக் கூட்டங்களைத் தடுக்கலாம்" என்று ஸ்ரீமான் காந்தி சொல்லிவருவதில் எனக்குப் பெரும்பாலும் உண்மை இருப்பதாகவே தோன்றுகிறது. தெய்வமில்லை என்று எந்தத் தவறு செய்தாவது பணம் தேடுவோர் பணத்தையே தெய்வமென்று கொண்டோர். இவ்வினத்தார் எல்லாத் தேசங்களிலும் இருக்கிறார்கள். இவர்கள் மனத்திலே தம்மை மேதாவிகளாக நினைத்திருக்கிறார்கள். இவர்களுடைய மேதாவித்தனம் மடத்தனம். 'தெய்வத்தை நம்பி, எப்போதும் உண்மை சொல்ல வேண்டும்; பயப்படக்கூடாது. எது நியாயமென்று தோன்றுகிறதோ அதை அச்சமில்லாமல் செய்துமுடிக்க வேண்டும்' என்று காந்தி சொல்வதை நான் வேதவாக்காக ஒப்புக்கொள்ளுகிறேன். 'தெய்வத்தின் அருள் பெற்றால் மற்றச் செல்வங்களெல்லாம் கூடி வரும்' என்று யேசு கிருஸ்து சொல்லியதைக் காந்தி எடுத்துக் காட்டுகிறார். அதுவும் வேதவாக்கியமாம். ஆனால் அவர் சொல்வது துறவுநெறி. அது சிலருக்குச் சில காலங்களில் பயன்படலாம். இக்காலத்தில் பலருக்கு அது தீமை உண்டாக்கும். தெய்வத்தை எதிர்த்துச் செல்வம் தேடுதல் தீமை என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால், தெய்வத்தை நம்பி உடனே செல்வம் சேர்க்க வேண்டும். இது என்னுடைய கொள்கை. எனக்குத் தெரிந்தவரை, ருக்வேதம் இதுபோலவே சொல்லுகிறது.

# இஸ்லாம் மார்க்கத்தின் மஹிமை

[20—6—20, ஞாயிற்றுக்கிழமை மாலையில், பொட்டல் புதூரிலே தெற்குப் புதுமனைத் தெருவில் எல்லா வகைகளிலும் பெருமை பொருந்திய ஒரு முஸ்லீம் ஸபையின் முன்னே, "இஸ்லாம் மார்க்கத்தின் மஹிமை" என்ற விஷயத்தைக் குறித்து ஸ்ரீமான் சி. சுப்பிரமணிய பாரதியார் செய்த பிரசங்கத்தின் ஸாரம்.]

இன்று மாலை எடுத்துக்கொண்ட விஷயத்தைப் பற்றிப் பேசு முன்பு, நான் அல்லாவின் மீது பாடிக் கொணர்ந்திருக்கும் தமிழ்பாட்டை இங்கு வாசித்துக் காட்ட அனுமதி தரும்படி வேண்டுகிறேன். ஏற்கெனவே அரபி பாஷையில் 'பாத்திஹா' (ஜபம்) ஓதி முடிந்து விட்டது. அதற்கு அனுஸரணையாக இந்தத் தமிழ்ப் பாட்டைப் பாடுகிறேன்.

பல்லவி

**அல்லா, அல்லா, அல்லா!**

*சரணங்கள்*

1. பல்லாயிரம் பலலாயிரம் கோடி கோடி அண்டங்கள்
எல்லாத் திசையிலுமோ ரெல்லை யில்லா வெளி வானிலே
நில்லாது சுழன்றோட நியமஞ் செய்தருள் நாயகன்,
சொல்லாலு மனத்தாலுந் தொடரொணாத பெருஞ் ஜோதி
(அல்லா, அல்லா, அல்லா!)

2. கல்லாதவ ராயினும் உண்மை சொல்லாதவராயினும்
பொல்லாதவ ராயினும் தவமில்லாதவ ராயினும்
நல்லாரை நீதியின்படி நில்லாதவ ராயினும்
எல்லாரும் வந்தேத்து மளவில் யமபயங் கெடச்செய்
[பவன்
(அல்லா, அல்லா, அல்லா !)

எனக்கு முதல் முதல் இஸ்லாம் மார்க்கத்தில் அன்பு உண்டானதன் காரணம் பின்வருமாறு:—

பல வருஷங்களின் முன்பு நான் ஒரு ஆங்கிலேய பண்டிதர் எழுதிய புஸ்தகமொன்றைப் படித்துக் கொண்டிருந்தேன். அதில் முஹம்மது நபியின் சரித்திரத்தைக் குறித்த சில விஷயங்கள் காணப்பட்டன. அவற்றைப் படித்துப் பார்த்தபோது, நான் அற்புதமுண்டாய்ப் பரவசமடைந்தேன்.

மக்கா நகரத்தில், பூஜாரிகளின் ஸபை கூடியிருக்கிறது. பிரம்மாண்டமான ஸபை. நாட்டிலுள்ள பூஜாரிகள் அத்தனை பேரும் சேர்ந்து கூடும் வருஷாந்தக் கூட்டம் திருவிழாக் காலத்தை ஒட்டி நடந்தது. முஹம்மது நபி மேற்படி பூஜாரிகளின் வம்சத்தில் பிறந்தவர். அரபி தேசத்து ஜனங்கள் அந்தக் காலத்தில் விக்கிரஹாராதனையிலும் பல தேவ உபாஸனையிலும் தற்காலத்தில் தணிந்த ஜாதி ஹிந்துக்கள் எத்தனை மூழ்கிக் கிடக்கிறார்களோ, அத்தனை மூழ்கிக் கிடந்தார்கள். அவர்களிடையே முஹம்மது நபியின் குடும்பத்தார் கோவிற் குருக்களையும் பட்டர்களையும் ஒத்திருந்தனர். இவர்களுடைய வைதிக கோஷ்டியின்

ஸபைக்கு நடுவே முஹம்மது நபி எழுந்து நின்று சொல்லு கிறார் :—“ நான் அல்லாவை நேரே பார்த்திருக்கிறேன். அவர் என்னைத் தமது முக்கிய பக்தராகவும் பிரதிநிதியாக வும் நியமனம் செய்திருக்கிறார். நீங்கள் இனிமேல் அவரைத் தொழுங்கள். அவரை மாத்திரம் தொழுதால் போதும். கடவுள் ஒருவர்தான் இருக்கிறார். பல ஈசுவரர் இல்லை. ஈசனைத் தவிர ஈசன் வேறில்லை. லா இலாஹா இல் அல்லா. அல்லாவைத் தவிர வேறு அல்லா கிடையாது. (அரபி பாஷையில் அல்லா என்ற பதத்திற்குக் கடவுள் என்று அர்த்தம்.) அவர் நம்மைப்போல் தோலுடம்பும் கை கால் முதலிய உறுப்புக்களும் உடையவரல்லர். அவரைச் சிலை கள் வைத்துத் தொழுவதிலும் அவருக்கு உங்களுடைய ஆகாரங்களை நைவேத்தியம் பண்ணுவதிலும் பயனில்லை. அவர் எல்லாவற்றையும் படைத்து எல்லாவற்றையும் இயக்கிக் காத்து எல்லாவற்றையும் வடிவு மாற்றிக் கொண்டிருக்கிறார். அவர் எல்லாவற்றையும் தம்முடைய உடம்புகளாகவும் தம்முடைய ரூபங்களாகவும் உடையவர். அறிவு வடிவமாக நிற்பவர். அருள் வடிவமாக நிற்பவர். அவரை மனமாகிய கோயிலில் நிறுத்தி, வீரியம் பக்தி என்ற பூக்களால் அர்ச்சிப்பதே சரியான பூஜை, இடை விடாமல் அசையாமல் அவரிடம் தீராத மாறாத பக்தி செலுத்துங்கள். அவ்விதமான பக்தி “இஸ்லாம்” என்று சொல்லப்படும். இந்த இஸ்லாமைத் தரித்திருப்போர் நித்தியானந்த வாழ்க்கையாகிய முக்தி வாழ்க்கையை எய்து வார்கள். ஆதலால், நீங்கள் இந்தப் புராதனக் கிரியை களையும் கொள்கைகளையும் விட்டுவிட்டு என் மதத்தில்

சேர்ந்து அல்லாவின் திருவடி நிழலை அடைந்துவாழ முதற்பட்டு வாருங்கள்" என்று முஹம்மது நபியாண்டவர் திருவாய் மலர்ந்தருளினார்.

இதைக்கேட்ட மாத்திரத்தில் அங்கிருந்த பெருச் சாளிக் குருக்களெல்லோரும் தங்கள் சிஷ்யர் ஸஹிதமாக முகம்மது நபியைப் பரிஹாஸம் பண்ணினார்கள். அந்தச் சமயத்தில் முஹம்மது நபி (ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்) அவர்களின் மருமகனாகிய அலி என்பவர் எழுந்து, "மாமா, உங்கள் கொள்கையை யார் நம்பினாலும் சரி, நம்பாவிட்டாலும் சரி, நான் நம்புகிறேன். லா இலாஹா இல் அல்லா, முஹம்மதர் ரஜூல் உல்லாஹ் அல்லாவைத் தவிர வேறு கடவுள் இல்லை. அவருக்குச் சிறந்த நபி முஹம்மது" என்று பிரதிக்கினை செய்து கொடுத்தார். இது ஒரு செய்தி.

இரண்டாவது செய்தி, முஹம்மது நபியைத் தம் குமாஸ்தாவாகப் பல வருஷம் வைத்திருந்து பிறகு அவருக்கே மாலையிட்டவராகிய கதீஜா பீவியம்மை அவருடைய மதத்தில் சேர்ந்துகொண்டது. ஒருவன் தான் நேரே கடவுளைப் பார்த்ததாகவும் அதினின்றும் தெய்வங்கள் தன்னிடத்தில் விளங்குவதாகவும் வெளியூராரிடம் சொல்லி, அவர்களை நம்பும்படி செய்தல் எளிது. இரவு பகல் கூடவே இருந்து, நீ நோய் வேதனை பொறுக்க மாட்டாமல் அழுவதையும், இன்னும் உன்னுடைய பலஹீனங்கள், அதைர்யங்கள், அச்சங்கள், அநீதிகள், குரூரங்கள், பொறாமைகள், அதர்மங்கள், குறைகள்

எல்லாவற்றையும் ஸஹிப்போராகிய உன் சுற்றத்தாரும், அத்யந்த நண்பர்களும், பக்கத்து வீட்டாரும் உன்னைக் கடவுளின் அருளும் அம்சமும் அடைந்த மஹானென்று நம்ப வேண்டுமானால், நீ உண்மையிலேயே தெய்வத்தைக் கண்டால்தான் முடியும். மற்றப்படி ஏமாற்றினாலும், வேஷங்களாலும், நடிப்புக்களாலும் இவர்களை நம்பும்படி செய்தல் சாத்தியமில்லை. இதுபற்றியே, இங்கிலீஷில், "எந்த மனிதனும் தன் சொந்த ஊரில் தீர்க்கதரிசியாக மாட்டான்" என்றொரு வசனம் சொல்லுகிறார்கள்.

முஹம்மது நபியை முதல்முதல் அலியும், அதைக் காட்டிலும் ஆச்சர்யம் தோன்றும்படி கதீஜாபீவியும் கடவுளின் முக்கிய பக்தரென்றும், தெய்வ அருள் பெற்றவரென்றும், பூமண்டலத்தில் கடவுளுடைய பிரதிநிதியாக அவதரித்த மஹானென்றும் அங்கீகாரம் செய்து கொண்டதைக் கவனிக்குமிடத்தே, அவர் நிகரில்லாத ஞானி என்பதும், பக்த குல சிரோமணி என்பதும் மிகத் தெளிவாக விளங்குகின்றன.

மக்கத்தில் முஹம்மது நபிக்கு அநேகர் சீடராகச் சேர்ந்து விட்டார்கள். அவருடைய மதம் நாளுக்கு நாள் பிரபலமாகத் தொடங்கிவிட்டது. இதைக் கண்டு பழைய விக்கிரகாராதனைக்காரருக்குப் பொறாமையும் அச்சமும் மிகுதிப்படலாயின. மக்கத்து அதிபதி, நபியவர்களையும் அவருடைய முக்கிய நண்பர்களையும் சீடரையும் பிடித்துச் சிறையிலிடும்படி, தன் சேவகரிடம் கட்டளையிட்டான். இந்தச் செய்தி நபி ஆண்டவனுடைய செவிக்கு எட்டி

விட்டது. இது 622 கி. பி. வருஷத்தில் நடந்தது. அப்பால், சில நண்பரின் வேண்டுகோளுக்கும் அல்லாவின் உத்தரவுக்கும் இணைந்த முஹம்மது ஒரே ஒரு சீடருடன் மதினாவுக்குப் புறப்பட்டார். போகிற வழியில் காடு; இவ் விருவரும் தனியே சென்று கொண்டிருந்தனர். இவர்கள் ஊரை விட்டுத் தப்பிய செய்தியறிந்து, மக்கத்து அதிபதி இவர்களின் பின்னே ஒரு குதிரைப் படையை அனுப்பினான். இவ்விருவரும் காட்டுவழியே போகையில், பின்னே குதிரைப் படை வரும் சத்தம் இவர்களுடைய காதிற்பட்டது. அங்கொரு புதருக்குள்ளே போய்ப் பதுங்கிக் கொண்டார்கள். குதிரைப்படையின் பாத ஒலி மிகவும் சமீபத்தில் கேட்டது. அப்போது நபியுடன் இருந்த சீடர்:—'ஐயோ, இனி என்ன செய்யப் போகிறோம்? ஏது, நாம் தப்புவது கிடையாது. நம்மை இவர்கள் பார்த்துத்தான்போடுவார்கள். மக்கத்திற்குப் போனால் நம்மை வெட்டிக் கொல்வார்களோ, தூக்குத்தான் போடுவார்களோ" என்று சொல்லிப் பலவாறு பரிதபிக்கலானான். அப்போது முஹம்மது நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர் சொல்லுகிறார்:—

"கேளாய், நண்பனே; நான் இந்த உலகத்தில் அல்லாவின் காரியஸ்தனாக வேலை செய்து வருகிறேன். அல்லாவினால் எனக்கு மானுஷலோகத்தில்நிறைவேற்றும் படிவிதிக்கப்பட்டிருக்கும் காரியங்களெல்லாம் நிறைவேறி முடியும்வரை, என்னை உலகத்து மன்னர்களெல்லோரும் ஒன்று கூடிக் கொல்லவிரும்பினாலும் எனக்கு ஒருதீங்கும் வரமாட்டாது. என் தலையில் ஆயிரம் இடிகள் சேர்ந்து

விழுந்தபோதிலும் எனக்கு மரணம் நேரிடாது. அல்லா ஸர்வ வல்லமையுடையவர். அவருடைய சக்திக்குமேற்பட்ட சக்தி இந்த ஜகத்தில்வேறில்லே. ஆதலால் எனக்குப் பயமில்லே. என்னுடன் இருப்பதனுல் உனக்கும் ஆபத்து வராது. நீயும்பயப்படவேண்டிய அவசியமில்லே" என்ருர்.

அப்பால் அந்தக் குதிரைப்படை அவர்களேப் பாராமலே போய்விட்டது.

இந்த ஸமாசாரத்தை நான் வாசித்துப் பார்த்தவுடனே, என்மனதில் முஹம்மது நபியிடமிருந்த மதிப்பு ஆயிரமடங்கு மிகுதியாயிற்று. ஸாதாரண காலங்களில் தைர்யத்துடன் இருப்பது ஸுலபம். ஆபத்து நேரே தலேயைநோக்கி வரும்போது, "கடவுள் துணே செய்வார், எனக்குப் பயமில்லே" என்று மனத்துடன் சொல்வோன் உண்மையான தெய்வ பக்தன். தெய்வபக்தி ஒன்றைத் தவிர வேறெந்தச் சக்தியும் மனிதக் குண்டின் முன்னே தைர்யம்கொடுக்காது. சீறிவரும் பாம்பைநோக்கி அஞ்சாமல் நகைக்கவல்ல தீரர் கடவுளின் கருணே பெற்றோரே யாவர். மற்றப்படி வேறெந்தப் பலமும் அவ்விதமான தைர்யத்தைத் தராது. "பாம்பென்ருல் படையும் நடுங்கும்." இன்னும், மதிருவுக்கு நபி சென்றபிறகு இதுவரை பலதடவைகளில் மக்கத்தாரின் கொரேஷ்படைகள் எதிர்த்து வந்தன. முஹம்மதுநபியிடம் சேர்ந்தவர்கள் தக்க ஸைன்யப்பயிற்சி பெறவில்லே. பயிற்சி பெற்றுவந்த படைகளேப் பயிற்சியற்ற மனிதர்களேத் துணே கொண்டு முஹமதுநபி வென்ருர். 'கலங்காத நெஞ்சுடைய ஞான

தீரமும் அழியாத நம்பிக்கையும்' அவரிடத்தே இருந்தன. ஆதலால் அவருக்கு,

எடுத்த காரியம் யாவினும் வெற்றி
எங்கும் வெற்றி எதெனிலும் வெற்றி
விடுத்ததாய் மொழிக் கெங்கணும் வெற்றி
வேண்டு முன்னர் அருளினர் அல்லா.

இடையிடையே நான் என் மனதிற்குள் முஹம்மது நபி (ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்) அவர்களைபற்றி சித்திரம் போட்டுப் பார்ப்பது வழக்கம். நடுப்பாலைவனத்தில், நள்ளிரவிலே தனிமணல் வெளியிலே, ஒட்டகையின் மீது தனியாக ஏறிக்கொண்டு போகிறார். அல்லது, அங்கொரு குன்றின்மேல் ஏறி நிற்கிறார். கேள்வியாலும் நெடுங்காலத்து பக்தியாலும், நிகரற்ற அன்பினாலும், ஞானத்தாலும் பக்குவப்பட்ட இவருடைய ஹ்ருதயம் அப்படிப்பட்ட இடத்தில் அல்லாவை நாடுகிறது. வேறு நினைப்புக்கு இடமில்லை. அப்போது அங்கு ஞான ஒளி வீசிற்று; நபி அல்லாவைக் கண்டார். சுகப் பிரம்ம ரிஷிக்கு நேர்ந்த அனுபவமும் முஹம்மது நபிக்கு எய்திற்று.

அங்கமே நின் வடிவமான சுகர் கூப்பிட நீ
எங்கும் ஏன் ஏன் என்ற தென்னே, பராபரமே

என்று தாயுமானவர் பாடியிருக்கிறார்.

இந்தக் கதை எப்படியென்றால், சுகப் பிரம்ம ரிஷி காட்டுவழியாகப் போய்க்கொண்டிருக்கையில் கடவுளைப்

பார்க்கவேண்டுமென்ற தாகமேலீட்டால், "கடவுளே கடவுளே" என்று கதறிக்கொண்டு போனாராம். அப்போது காட்டிலிருந்த கல், மண், மணல், நீர், புல், செடி, மரம், இலை, பூ, காய், காற்று, ஜந்துக்கள் எல்லாவற்றினின்றும், 'ஏன், ஏன்' என்ற மறுமொழி உண்டாயிற்று. அதாவது, கடவுள் ஞானமயமாய் எல்லாப் பொருள்களிலும் நிரம்பிக் கிடப்பதைச் சுக முனிவர் கண்டார் என்பது இக்கதையின் பொருள். முஹம்மது நபி மஹா ஸுந்தர புருஷர், மஹா சூரர், மஹா ஞானி, மஹா பண்டிதர், மஹா பக்தர், மஹா லௌகிக தந்திரி. வியாபாரமானாலும் யுத்தமானாலும் முஹம்மது நபி கவனித்தால், அந்த விஷயத்தில் வெற்றி மிகவும் உறுதி. ஆதலால் அவர் மிகவும் அபிமானிக்கப்பட்டார்.

எனினும், புதிய மதமொன்று கொண்டு வந்ததினின்றும் அவர் சுற்றத்தாரும் அத்யந்த நண்பர்களும் பகைமை செலுத்தலாயினர். ஆனால், நபி பொருட்டாக்கவில்லை, முஹம்மது நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள், உலகத்தின் பொது நன்மைக்கும் தர்மத்திற்கும் நீதிக்கும் ஸத்யத்திற்கும் அல்லாவிற்கும் முன்னே, தம்முடைய சொந்த ஸுகங்களையும், ஸௌகர்யங்களையும், வாழ்வையும், செல்வத்தையும், அதனால் விளையும் பெருமைகளையும், இன்பங்களையும், ரக்ஷணைகளையும், உயிரின் பாதுகாப்பையுங்கூடச் சிறிய பொருளாகக் கருதினர்.

இவரிடத்தில் இத்தனை உறுதியான பக்தியிருப்பதை நோக்கியே, அல்லா இவரைத் தமக்கு மிகவும் பிரியமான

நபியாகத் தெரிந்தெடுத்தார்.

அரபியா தேசத்தில் மக்கா நகரத்தில் அப்துல்லா என்ற மஹானுக்கும் அவருடைய தர்ம பத்தினியாகிய ஆமீனாவுக்கும் குமாரராக கி. பி. 570-ஆம் ஆண்டில் நம் நபி ஜனித்தார். புஸ்தகப்படிப்பு இல்லை. கேள்வியால் மஹா பண்டிதரானார்; ஸஹவாஸத்தால் உயர்ந்த ஞானியானார்; நிகரில்லாத பக்தியால் அரசனும், கலீபும் தீர்க்க தரிசியுமானார். மக்கத்தில் பெருஞ் செல்வியாகிய கதீஜா பீவியையும் வேறு எட்டு ஸ்திரீகளையும் மணம் புரிந்தார். தம்முடைய ஒன்பது பத்தினிகளிலே அபூ பக்கரின் குமாரியான ஆயிஷா பீவியைப் பிரதான நாயகியாகக் கொண்டிருந்தார். நாற்பதாம் ஆண்டில் தம்மை ஈசன் நபியாக்கிவிட்டதாக உலகத்துக்குத் தெரிவித்தார். கி. பி. 632-இல் இந்த மண்ணுலகை விட்டு முஹம்மது நபி வானுலகம் புகுந்தார்.

மக்கத்தை விட்டு, இளமையிலேயே இவர் வியாபாரத்துக்காக வெளி நாடுகளில் ஸஞ்சரிக்கும்படி நேர்ந்த ஸமயங்களில், யூத கிருஸ்தவ பண்டிதர்களைக்கண்டு அவர்களுடைய மதக்கொள்கையைப்பற்றி விசாரணை செய்வது வழக்கம். அதனின்றும் விக்கிர ஹாராதனை விஷயத்திலும் பல தேவர் வணக்கத்திலும் இவருக்குப் பற்றுதலில்லாமற் போக ஹேது உண்டாயிற்று. ஏகேசுவர மதத்தைக் கைக்கொண்டார். யூதருக்கும் கிருஸ்தவருக்கும் பொதுவாகிய "பழைய ஏற்பாடு" என்ற பைபிளின் பூர்வ பாகத்தை இவர் உண்மையாகவே அங்கீ

சாரம் செய்துகொண்டார். கிருஸ்துவ நாதனையும் இவர் ஒரு சிறந்த நபியாகக் கொண்டார்; கடவுளின் அவதாரமாக ஒப்புக்கொள்ளவில்லை. விக்கிரஹங்களிடத்தே கடவுளைக்காட்டி வணங்குதல் பொருந்தாத கார்யமென்று யூதருக்கும் கிருஸ்தவருக்கும் தோன்றியது போலவே, ஒரு மனிதன் பக்திஞானங்களில் எவ்வளவு சிறப்பெய்திய போதிலும், அவன் கடவுளை நேருக்கு நேரே கண்டறிந்த வரையிலும் அதுபற்றி அவனை மிக உயர்ந்த பக்தனென்றும் முக்தனென்றும் போற்றலாமேயல்லது, மனித வடிவத்தில் ஸாக்ஷாத் கடவுளையே சார்த்துதல் பொருந்தாதென்று முஹம்மது நபி எண்ணினார் போலும். இந்த அம்சத்தில் என்னுடைய சொந்தக் கருத்து பின்வருமாறு:—

இந்த உலகம் முக்காலத்திலும் உள்ளது; இது அசைகிறது; அண்டங்களாக இருந்து சுழன்றோடுகிறது; காற்றாகத் தோன்றி விரைகின்றது; மனமாக நின்று சலிக்கிறது; ஸ்தூல அணுக்களும் ஸூக்ஷ்ம அணுக்களும் ஸதா மஹா வேகத்துடன், மஹா மஹா மஹா மஹா வேகத்துடன், இயங்கிய வண்ணமாகவே இருக்கின்றன. இந்த உலகத்தில் இருந்துகொண்டு இதனை அசைக்கிற சக்தியையே கடவுளென்கிறோம். எல்லாம் அவன். உலகத்தின் செயல்களெல்லாம் கடவுளுடைய செயல்கள்.

அவனுடைய நிஜ வடிவம் அதாவது, பூர்வ வடிவம் யாது? சைதன்யம் அல்லது சுத்தமான அறிவே கடவு

ளின் மூல ரூபம். மனிதருடைய ஸாதாரணச் செயல்கள் யாவுமே கடவுளின் செய்கைகளே யன்றி வேறில்லை. எனினும், ஜகத்தில் ஞான மயமான கடவுள் எங்கும் நிரம்பிக் கிடப்பதை நேரே ஒருவன் கண்டபிறகு, அந்த மனிதனுடைய செயல்களிற் பல, கடவுளின் நேரான கட்டளையின்படி செய்யப்படுகின்றன. அப்படிப்பட்ட நிலைமையை எய்தின மனிதனை நபி அல்லது தீர்க்கதரிசி என்கிறோம். அப்பால் அல்லா, எப்போதுமே ஒருவனுடைய ஹ்ருதயத்தில் அந்தக்கரணத்துக்கு நன்றாக விளங்கும் வண்ணம் குடி புகுந்து, கற்றறிந்தவனுடைய அறிவு முழுவதையும் தாம் விலை கொடுத்து வாங்கிய கருவிபோலே ஆக்கிக்கொண்டு, புறச்செயல்களும் உலகத்தாருக்கு வழிகாட்டிகளாகும்படி பரிபூரண சைதன்ய நிலையிலே நடத்திக்கொண்டு வரத் திருவுளம் பற்றுவராயின், அப்படிப்பட்ட மனிதனைக் கடவுளின் அவதாரமென்று சொல்லலாம். ஆனால், கிருஸ்து நாதர் இந்நிலை அடைந்ததாக முஹம்மது நபி நம்பவில்லை போலும். இக நிற்க.

இஸ்லாம் மார்க்கத்தின் முதலாவது கலீபாவாக முஹம்மது நபி அரசாண்டார். அவருக்குப்பின்: அபுபகர் அந்த ஸ்தானத்தை ஐந்து வருஷம் வகித்தார் அப்பால் ஏழு வருஷம் உமர் கலீபாவாக ஆண்டார். அந்தக் காலத்திற்குப் பின்பு முஸல்மான்களிலே, ஷியா ஸுன்னி என்ற இரண்டு பிரிவுகள் உண்டாயின.

குரான் இஸ்லாம் மார்க்கத்திற்கு வேதம். இதை முஹம்மது நபி தம்முடைய வாக்காகச் சொல்லவில்லை

கடவுளுடைய வாக்கு தேவதூதரின் மூலமாகத் தமக்கு எட்டியதென்றும் தாம் அதை ஒரு கருவிபோலே நின்று உலகத்தாருக்கு வெளியிடுவதாக சொன்னார்.

## லோக குரு

சென்ற ஜூன் மாதம் பன்னிரண்டாம் தேதி ஜப்பான் ராஜதானியாகிய டோக்கியோ நகரத்தில் ஸாம் ராஜ்ய ஸர்வகலா சங்கத்தாரின் முன்பு, ரவீந்திரநாதர் செய்த பிரசங்கம் பூமண்டலத்தின் 'சரித்திரத்திலே ஒரு புதிய நெறியைக் காட்டுவது. விவேகானந்தர் செய்து விட்டுப்போன தொழிலை வளர்ப்போரில் ரவீந்திரர் ஒருவர்.

விவேகானந்தர் ஆத்மாவின் பயிற்சியை மாத்திரம் காட்டினார். ரவீந்திரர், உலக வாழ்க்கையும், உண்மையான கவிதையும், ஆத்ம ஞானமும் ஒரே தர்மத்தில் நிற்பன' என்பதை வெளி நாடுகளுக்குச் சொல்லும் பொருட்டாக, பாரத மாதாவினால் அனுப்பப்பட்டிருக்கிறார்.

'பாரத தேசமே லோக குரு' என்ற செய்தி ஏற்கனவே பல ஜப்பானியப் பண்டிதருக்குத் தெரியும். எனினும், நம்மவர் ஒருவர் நேரே போய் அந்த ஸ்தானத்தை நிலைநிறுத்துவதற்கு இதுவரை அவகாசப் படாமல் இருந்தது. வங்காளத்து மஹாகவியாகிய ரவீந்திரநாத தாகூர் போய் அந்தக் குறையைத் தீர்த்து வைத்தார். இந்தத் தொழிலுக்கு அவர் மிகவும் தகுதியுடையவர்.

அவருடைய கவிதையின் கீர்த்தி பூமண்டல முழுதும் ஏற்கனவே பரவியிருக்கிறது. உலகத்து மஹா கவிகளின் தொகையில் அவரைச் சேர்த்தாய்விட்டது.

'கீதாஞ்சலி' முதலாவதாக, அவர் இங்கிலீஷ் பாஷையில் மொழி பெயர்த்து வெளியிட்டிருக்கும் நூல்கள் மிகவும் சிறியன; பார காவியங்களல்ல, பெரிய நாடகங்களல்ல; தனிப் பாடல்கள் சில காண்பித்தார். உலகம் வியப்படைந்தது, நல்வயிர மணிகள் பத்துப் பன்னிரண்டு விற்றால், லக்ஷக்கணக்கான பணம் சேர்ந்துவிடாதோ? தெய்விகக் கதையிலே பத்துப்பக்கம் காட்டினால் உலகத்துப் புலவரெல்லாம் வசப்படமாட்டாரோ?

கோபோ நகரத்தில் உயேனோ என்றதோர் பூஞ்சோலை இருக்கிறது. அதனிடையே அழகான பௌத்தக் கோயில் ஒன்று இருக்கிறது. அந்தச் சோலையிலே குளிர்ந்த மரங்களின் நிழலில் பல ஜப்பானிய வித்வான்கள் கூடி அவருக்கு நல்வரவுப் பத்திரிகை படித்தார்கள். ஜப்பானிய ஸாம்ராஜ்யத்தில் முதல் மந்திரியாகிய ஓகூமாப் பிரபு என்பவரும், வியாபார மந்திரியாகிய ஸ்ரீமான் கோனோவும் கல்வி மந்திரியாகிய பண்டித தகாத்தாவும் வேறு பல பெரிய காரியஸ்தர்களும் அந்தச் சபைக்கு வந்திருந்தார்கள். நல்வரவுப் பத்திரிகை வாசித்து முடிந்தவுடனே, ரவீந்திர நாதர் பின்வருமாறு வங்காளி பாஷையில் பேசலானார்:—
"என்க்கு ஜப்பானிய பாஷை தெரியாது. இங்கிலீஷ் தெரியும்; ஆனால் அது உங்களுடைய பாஷையன்று.

உங்களிடம் அந்தப்பாஷை பேச எனக்கு ஸம்மதமில்லே. மேலும், எனக்கே அது இரவல் பாஷை; ஆனபடியால் ஸரளமாக வராது. ஆதலால் வங்காளியிலே உங்களிடம் பேசுகிறேன்" என்ருர். பண்டித கிமுரா என்ற ஜப்பனிய வித்வான் ஒருவர் வங்கத்து மொழி தெரிந்தவராதலால் ரவீந்திர நாதரின் வார்த்தைகளேச் சபையாருக்கு ஜப்பானிய பாஷையில் மொழிபெயர்த்துச் சொன்னர்.

பின்பு, ரவீந்திரநாதர் பேசுகிருர்:—"கோபோ நகரத்தில் வந்து இறங்கியவுடனே எனக்கு ஜப்பான்விஷயத்தில் அதிருப்தி உண்டாய்விட்டது. எதைப்பார்த்தாலும் மேற்குத் தேசங்களின் மாதிரியாகவே இருக்கிறது. ஜப்பானியர் தமது ஸ்வயமான தர்ம ஸம்பத்தை இழந்துவிடலாகாது" என்ருர். இந்தக்கருத்தின் விவரத்தைப் பின்னே நாம் படிக்கப்போகிற டோக்கியோ ஸர்வகலாஸங்க உபந்யாஸத்திலே விஸ்தாரமாகக் காணலாம். அப்போது மஹா மேதாவியாகிய முதல்மந்திரி ஒகூமா எழுந்திருந்து ரவீந்திரருக்கு நன்றி கூறினர். ஸ்ரீமான் ஒகூமா கூறியது:—"எனக்கு இங்கிலீஷ் நேரே தெரியாது. இவர் வங்காளிபாஷை பேசியதை நான் இங்கிலீஷ் என்று நினைத்தேன். நல்லதருணத்திலே இவர் நமது தேசத்துக்கு வந்தார். நியாயமான எச்சரிக்கை கொடுத்தார். நமது தேசத்தின் சித்தநிலே இப்போது இரண்டுபட்ட பாதைகளின்முன்பு வந்திருக்கிறது. நமதறிவு எந்த வழியிலே திரும்புதல் தகும் என்பதை இப்போது நிச்சயிக்க வேண்டும். இத்தருணத்தில் நமக்கு நல்வழி காட்டும் பொருட்டாக இந்த மஹான் தோன்றினர்" என்ருர்.

டோக்கியோ உபந்யாஸத்தைப்பற்றி ஒரு தனிப்பகுதி எழுதவேண்டும்.

அதன் ஸாராம்சம்:— "உறங்கின ஆசியாவை ஜப்பான் எழுப்பிவிட்டது. அதன்பொருட்டு நாமெல்லோரும் ஜப்பானுக்கு நன்றி செலுத்த வேண்டும். உறங்கும் பூமண்டலத்தைப் பாரத நாடு தலைமையாக ஆசியா எழுப்பிவிடப் போகிறது." இந்தக் கருத்தை ஜப்பானிய பண்டிதர் அந்நாட்டுப் பத்திரிகைகளில் அங்கீகாரம் செய்துகொண்டு மிகவும் அழகாக நன்றி வார்த்தைகள் சொல்லியிருக்கிறார்கள்.

டோக்யோ ஸாம்ராஜ்யக் கலா சங்கத்தில் பாரதகவி ரவீந்திரர் செய்த ஆச்சரியமான பிரசங்கத்திலே அவர் சொன்னதாவது:—"முதலாவது, உங்களுக்கு நன்றி சொல்லுகிறேன். ஆசியா கண்டத்தில் பிறந்த எல்லா ஜனங்களும் உங்களுக்கு நன்றி செலுத்தக் கடன்பட்டிருக்கிறோம். எல்லாப் பந்தங்களைக் காட்டிலும் இழிவான பந்தம் உள்ளச் சோர்வு. இதனால் கட்டுண்டவர் தன்னம்பிக்கை இல்லாதவர். கேட்டீர்களா, சிலர் சொல்லுவதை:—"ஆசியாக் கண்டம் பழமையிருளில் மூழ்கிக் கிடக்கிறது; அதன் முகம் பின்னே முதுகுப் புறமாக திருப்பிவைக்கப்பட்டிருக்கிறது". என்று இப்படி வார்த்தை சொல்வோரின் பேச்சை நாமும் நம்பினோம். சிலர் இதையே ஒரு தற்புகழ்ச்சி யாக்கி "அப்படித்தான்; நாங்கள் பழமையிலே தான் இருப்போம். அது தான் எங்களுக்குப் பெருமை" என்றார்கள்.

"விஷயங்கள் இந்த ஸ்திதியில் இருக்கும்பொழுது நாமெல்லாம் ஒரு மோஹ நித்திரையில் வீழ்ந்திருந்த காலத்திலே, ஜப்பான் தனது கனவு நிலைமை நீங்கி எழுந்தது; நடக்கத் தொடங்கிற்று; பூதாகாரமான அடியெடுத்து வைத்தது; நிகழ்காலத்தை அதன் முடியிலே போய்ப் பற்றிக்கொண்டது. எல்லோரும் தட்டி எழுப்புண்டோம். 'பூமியின் மேலே, சில எல்லைக்குள்ளிருக்கும் சில தேசத்தார்க்கு மாத்திரம் முன்னேற்றம் வசப்படாது" என்ற மாயை போய்விட்டது. ஆசியா கண்டத்தில் பெரிய ராஜ்யங்கள் ஸ்தாபனம் செய்திருக்கிறோம். பெரிய சாஸ்திரம், கலை, காரியம்—எல்லாம் இங்கே தழைத்தன. உலகத்திலுள்ள பெரிய மதங்களெல்லாம் இங்கே பிறந்தன. 'இந்த மனிதனுடைய சுபாவமே மதிச் சோர்வும் வளர்ச்சிக் குறையும் உண்டாகும்' என்று சந்தேகப்படவேண்டாம். பல நூற்றாண்டு நாம் நாகரிக விளக்கைத் தூக்கி நிறுத்தினோம். அப்போது மேற்கு உலகம் இருளில் தூங்கிக்கொண்டிருந்தது. நமக்குப் புத்தி உண்டு. நம்முடைய புத்தி ஒரு நத்தைப் பூச்சி இல்லை. நம்முடைய கண் மாலைக்கண்ணில்லை.

"ஆசியா ஜப்பானுக்குக் கொடுத்தது அந்தப் பயிற்சி, அந்தப் பயிற்சி.

"ஜப்பான் இக்காலத்திலே புதியவனும் பழையவனுமாக விளக்குகிறான். குலஉரிமையால் கீழ்த்திசையில் நமது பழைய பயிற்சி அவனுக்குக் கிடைத்திருக்கிறது. மெய்யான செல்வமும் மெய்யான வலிமையும் வேண்டுமானால்,

ஆத்மாவுக்குள்ளே நோக்கத்தைச் செலுத்தவேண்டும்" என்று கற்பித்த பயிற்சி, ஆபத்து வரும்போது பிரார்த்தனை தவறாதபடி காப்பாற்றும் பயிற்சி, மரணத்தை இகழச்சொல்லிய பயிற்சி, 'உடன் வாழும் மனிதனுக்கு நாம் எண்ணற்ற கடமைகள் செலுத்தவேண்டும்' என்று தெளிவித்த பயிற்சி, 'கண்ட வஸ்துக்களிலே, அகண்ட வஸ்துவைப் பார்' என்று காட்டிய பயிற்சி. 'இவ்வுலகம் ஒரு மூட யந்திரமன்று. இதற்குள்ளே தெய்வம் இருக்கிறது; இது யதேச்சையாக நிற்பதன்று. கண்ணுக்கு எட்டாத தொல்லையில் வானத்தில் இருக்கவில்லை; இங்கே இருக்கிறது அந்தத் தெய்வம்.' இந்த ஞானத்தை உயர்த்திய பயிற்சி. அநாதியாகிய கிழக்குத் திசையில் புதிய ஜப்பான் தாமரைப் பூவைப்போல் எளிது தோன்றிவிட்டாள். பழைய மூடாசாரங்களை ஜப்பான் உதறித் தள்ளிவிட்டாள்; சோம்பர் மனதிலே தோன்றிய வீண்பொய்களை மறந்துவிட்டாள்; நவீன யுகத்தின் ஸம்மானங்களை நிர்ப்பயமாகக் கேட்டாள்; நவீன நாகரிகப் பொறுப்புகளைத் தீவிரமாகவும் தகுதியாகவும் தரித்து வருகிறார்கள்.

"ஜப்பான் ஆசியாவுக்குத் தைரியம் கொடுத்தது. 'உள்ளே உயிர் இருக்கிறது. நமக்குள் வலிமை இருக்கிறது. மேல் தோல்தான் காய்ந்து போயிருக்கிறது. அதைக் கழற்றி எறிந்துவிட்டு, அதற்கு அப்பால், ஓடுகிற கால நதியிலே முழுகி ஸ்நானத்தைப் பண்ணி எழவேண்டும். தற்காலத்துக்குப் பயந்து, முற்காலத்திலே போய்த் தலையை நுழைத்துக் கொள்ளுவோன் உயிர் இருந்து

போதிலும் செத்தவனுக்கு ஸமானமே." இது ஜப்பான் சொல்லிக்கொடுத்த விஷயம். 'பழைய விதையிலே உயிர் ஸத்து நீங்கவில்லை. புதிய காலமாகிய வயலிலே நட வேண்டும்.' இது ஜப்பான் சொல்லிக்கொடுத்த விஷயம்.

"ஜப்பான் பிறரைப்போல் வெளியபிநயம் காட்டி இந்தப் பெரிய ஸ்தானத்தை அடையவில்லை. பிறரைப் பார்த்து நாமும் அவர்களைப்போல் ஆகவேண்டுமென்று பாவனைகள் காட்டினால், வலிமை உண்டாகாது. பிறரிடம் சாஸ்திர ஞானம் வாங்கிக்கொள்ளுதல் வெளியபிநயம் அன்று. பிறர் கல்வியை நாம் வாங்கலாம்.; கோணல்களை வாங்கக்கூடாது. தேசத்தாருக்கென்று பிரிவுபட்ட தனித் தனிக்குணங்கள் பல உண்டு. எல்லா தேசத்தாருக்கும் பொதுவான மானுஷிகக்குணங்கள் பல உண்டு. பிறரிடம் ஒன்றை வாங்கிக்கொள்ளும்போது, ஸாவதானமாக வாங்கிக்கொள்ளவேண்டும்."

ரவீந்திர கவியின் உபந்யாஸத்தை ஜப்பான் தேசத்தார் மிகவும் பக்தியுடன் கொண்டாடுகிறார்கள். பத்திரிகைகள் உயர்ந்த புகழ்ச்சி பேசுகின்றன. நல்ல காரியம் செய்தார். இப்படியே, இங்கிலாந்து முதலிய எல்லாத் தேசங்களிலும் போய், பாரத தேசத்தின் அறிவு மஹிமையை மற்றொரு முறை விளக்கி வரும்படி புறப்பட்டிருக்கிறார் போலும்.

'டோக்கியோ மானிச்சி' என்ற ஜப்பானியப் பத்திரிகை சொல்லுகிறது:— "அறிவில் ஜப்பான் பாரத தேசத்

திற்குக் கடன் பட்டிருக்கிறது. ஜப்பான் நாகரிகம் பெரு திருந்த காலத்தில், பாரத தேசம் அதில் உயர்ந்திருந்தது. பாரத ஞானம் பூமண்டலம் முழுதையும் தீண்டியிருக் கிறன்து. 'ப்லாத்தோ'வுக்கு உபதேசம் பாரத தேசத்தி லிருந்து கிடைத்தது. ஸ்வேதன்போர்க், ஷாபன்ஹோவர் என்ற பிற்காலத்து ஞானிகளும் பாரத தேசத்தின் அறி வுக்கு வசப்பட்டார்கள். பாரத நர்கரிகம் நமக்குச் சீனு, கொரியா வழியாக வந்தது. நாம் இந்தியாவின் கடனைத் திரும்பக் கொடுக்கவேண்டும். ரவீந்திர நாதரை நாம் மிகவும் கௌரவப்படுத்தவேண்டும்."

"யோர்த்ரை" என்ற ஜப்பானியப் பத்திரிகை சொல்லுகிறது:—"'உலக வாழ்க்கையும் கவிதையும் சுதி சேர்ந்து நிற்கவேண்டும்' என்பது ரவீந்திரர் கொள்கை. ஜப்பான் பாரத நாட்டுக்கு மிகவும் அறிவுக்கடன் பட் டிருக்கிறது."

இவ்வாறு ரவீந்திரருடைய பேச்சு வரும்போது, ஜப்பானியப் பத்திரிகைகள் தம் துநாடுபாரதபூமிக்குஅறிவுக் கடன்பட்டிருப்பதை நினைத்துக்கொள்ளுகின்றன. ரவீந் திரருடைய கீர்த்தி உலகத்தில் அதிகமாகப் பரவி ஏறக் குறைய நான்கு வருஷங்கள் ஆகவில்லை. இந்த நான்கு வருஷங்களுக்குள், ஜப்பான் தேசத்தில் ஸம்ஸ்கிருத இலக் கணப் புஸ்தகங்கள் எப்போதைக் காட்டிலும் அதிகமாக விலையாகின்றனவாம். 'பாரத தேசமே லோக குரு' என்பதை உலகத்தார் அங்கீகாரம் செய்வார்கள். நாம் போய் நினைப்பூட்டவேண்டும்.

பாரத பூமி உலகத்தாருக்கு எவ்விதமான ஞானத்தைக் கொடுத்துப் புகழைக் கொள்ளுமென்பதை விளக்குவதற்கு முன்பாக, சாஸ்திர (ஸயின்ஸ்) வார்த்தை ஓரிரண்டு சொல்லி முடித்துவிடுகிறேன். 'செடியின் நாடி மண்டலம் மனிதனுடைய நாடி மண்டலத்தைப் போலவே உணர்ச்சித் தொழில் செய்கிறது' என்பதை உலகத்தில் சாஸ்திர நிரூபணத்தால் ஸ்தாபனம் செய்தவர் நம் ஜகதீச சந்திர வஸு. உலோகங்களிலும் இவர் பல புதிய சோதனைகள் செய்திருக்கிறார். ஒளி நூலில் மஹா வித்வான். தந்தியில்லாத தூரபாஷைக் கருவியை 'மார்கோனி' பண்டிதர் உலகத்துக்கு வழக்கப்படுத்து முன்பே, ஜகதீச சந்திரர் அந்த விஷயத்தைப் பற்றித் துல்யமான ஆராய்ச்சிகள் செய்துமுடித்திருந்தார். செடிகளுடைய ப்ராணனில் நாடியுணர்ச்சி எங்ஙனமெல்லாம் தொழில் செய்கிறது என்பதைக் கண்டுபிடித்ததே, இவர் மனித சாஸ்திரத்துக்கு இதுவரை செய்திருக்கும் உபகாரங்களில் பெரிது. இப்போது சில வருஷங்களாக ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலுமுள்ள பண்டிதக் கூட்டத்தார் ஜகதீச வஸுவினிடம் மிகுந்த மதிப்புப் பாராட்டிவருகின்றனர்; நல்ல புகழ்ச்சி கூறுகின்றனர். நவீன சாஸ்திர ஆராய்ச்சிக்கு மிகவும் நுட்பமான கருவிகள் வேண்டும். ஜகதீச வஸுவின் ஆராய்ச்சிக் கருவிகள் கல்கத்தாவில் நமது தேசத் தொழிலாளிகளாலே செய்யப்படுவன. ஐரோப்பிய ராஜதானிகளிலே இத்தனை நேர்த்தியாக அந்தக் கருவிகளைச் செய்யத்தக்க தொழிலாளிகள் இல்லை. ஆகையால், அங்குள்ள பண்டிதர்கள் புதிய வழியில் செடியா

ராய்ச்சிக்கு வேண்டிய கருவிகளையெல்லாம் கல்கத்தாவி லிருந்து வரவழைத்துக்கொள்ளுகிறார்கள்.

சாஸ்திரம் பெரிது. சாஸ்திரம் வலியது. அஷ்ட மஹா சித்திகளும் சாஸ்திரத்தினால் ஒருவேளை மனித னுக்கு வசப்படலாம். பூர்வ காலத்தில் பலவகைக் கணித சாஸ்திரங்களும் இயற்கை நூல்களும் பாரத நாட்டிலே தான் பிறந்து பின்பு உலகத்தில் பரவியிருப்பதாகச் சரித்திர ஆராய்ச்சியிலே தெரிகிறது. இப்போது "ஸயின்ஸ்" பயிற்சியில் இவ்வளவு தீவிரமாக மேன்மை பெற்றுவரு கிறோம்; காலக்கிரமத்தில் தலைமை பெறுவோம்.

இனிமேல், கதையைச் சுருக்கிவிடவேண்டும்; வருங் காலத்தில் உலகத்துக்குப் பாரத தேசம் என்ன பாடம் கற்பிக்கும்? எதனால் இந்நாடு 'லோககுரு' ஆகும்? உலகத் திற்கு நாம் கற்றுக்கொடுக்கப்போவது கர்மயோகம். கடமையைச் செய்து, தவறாதபடி செய்து, இன்பத் தோடு இருக்க வழி எப்படி? யோகமே வழி. "யோக மாவது செய்கைத் திறமை" என்று பகவான் கீதையிலே சொல்லுகிறார். பூமண்டலத்துக்கு யோகம் நாட்டுவோம்.

சென்னைக் கிருஸ்துவ கலாசாலையில் டாக்டர் மில்லர் என்று ஒரு பாதிரி இருந்தார். அவர் நல்ல புத்திசாலி என்று பெயரெடுத்தவர். அவர் ஹிந்துமதத்தைப்பற்றிப் பேசும்போது, கடவுளின் அந்தர்யாமித் தன்மையை மற்ற எல்லா மதங்களைக் காட்டிலும் ஹிந்து மதத்திலே தான் தெளிவாகக் காட்டியிருக்கிறார்கள் என்று சொல்லி

யிருக்கிறார். சாதாரணப் பாதிரி கொஞ்சம் புத்திசாலி யாகையால் இதைத் தெரிந்துகொண்டார். கடவுள் சர்வாந்தர்யாமி என்பது எல்லா மதத்திலும் உண்டு. ஆனால் இங்கேதான் அதைத் தெளிவாகச் சொல்லு கிறோம். பிற மதங்களில் தெளிவில்லை.

'அந்தர்யாமி'—'உள்ளே செல்வோன்' 'உள்ளே நிற்போன்.' 'உள்ளே செல்வோன்' என்பது தாதுப் பொருள், 'உள்ளே நிற்போன்' என்பது வழக்கப்பொருள்.

"தெய்வம் எதற்குள்ளேயும் நிற்கிறது" என்று சாதாரணமாக எல்லோரும் சொல்லுகிறார்கள். இதன் அர்த்தத்தை அவர்கள் நன்றாக மதியினாலே பற்றிக் கொள்ளவில்லை. "தூணிலும் இருப்பான், துரும்பிலும் இருப்பான்."

ஆம், அதன் பொருள் முழுதையும் கண்டாயா? சாத்தன் எழுதுகிறான், கொற்றன் எழுதச் சொல்லு கிறான். எழுதுவோன், எழுதுவிப்போன் — இரண்டும் தெய்வம். பன்றி சாகிறது; பன்றியாக இருந்து சாவது தெய்வம். 'எதனினும் உள்ளே நிரம்பிக்கிடக்கிறது' என்றால், செய்கையெல்லாம் அதனுடையது என்று அர்த்தம்.

"இயற்கையின் குணங்களால் செய்கையெல்லாம் நடப்பன. அகங்காரம் கொண்ட மூடன் 'நான் செய் கிறேன்' என்று நினைத்துக்கொள்ளுகிறான்" என்று பகவத் கீதையிலே பகவான் சொல்லுகிறான். செய்கைகள்

'அவனன்றி ஓர் அணுவும் அசையாது.' எல்லாம் பரமாத்மாவின் செய்கைகள் 'என்செயலாலாவது யாதொன்றும் இல்லை.'

நமக்குப் பொறுப்பு இல்லை, தொல்லை இல்லை, செய்கை இல்லை; கடமை மாத்திரம் உண்டு.

'கடமையில் உனக்கு அதிகாரம், பயனிலே இல்லை என்பது கீதை. 'செய்கையில்லாது நீங்கிவிடுவது என்றால், சோம்பேறியாய்விடுதல் என்று அர்த்தமில்லை. பகவத் கீதை மூன்றாம் அத்தியாயத்தை ஒவ்வோர் ஆர்யனும் தினம் மூன்று வேளை வாசிக்க வேண்டும்.

முதலாவது விஷயம்:—'ஒருவிதமான செய்கையும் இல்லாமல் சும்மா இருப்பது இவ்வுலகத்தில் எப்பொழுதும் சாத்தியப்படாது. நீ விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், உன்னை எப்போதும் பிரகிருதி செய்கையிலே புகுத்தி ஆட்டிக்கொண்டிருக்கிறாள். உன் இஷ்டப்படியெல்லாம் நடக்கவில்லை. நீ இஷ்டப்படுவதே மழை பெய்வதைப் போல் இயற்கையிலேயே விளையும் செய்கை. சித்தமே ஜடம்.'

இரண்டாவது விஷயம்:—'நான் பிரிவில்லை என்று கண்டு, தெய்வமே உள்ளதாகையால் அதற்குச் சேவகமாக உலகத் தொழில்களைப் பிழையில்லாமல் செய்துகொண்டு வரவேண்டும். கடமையைத் தவிருவோன் விடுதலை பெற்றவன் அன்று. விடுதலையின் தலைமேலே ஒரு கடமை நிற்கிறது. தெய்வத்துக்கே கடமை உண்டு. பகவான்

கர்மயோகி. ஸந்நியாஸம் அவசியமில்லை. பெண்டு பிள்ளைகள் பொய் இல்லை. மற்ற மனிதர்கள் மண்கட்டிகள் அல்லர்; அவர்களுக்கு நாம் செலுத்த வேண்டிய கடமைகள் உண்டு.'

'கடமை செய்யாதவன் வயிறு பிழைப்பதே நடக்காது' என்று கிருஷ்ணன் அழுத்திச் சொல்லுகிறார்.

'இவ்வுலகத்துச் செய்கைகளுக்கு நாம் பொறுப்பில்லை' என்று எல்லாச் செயல்களையும் ஈசனுக்கு அர்ப்பணம் செய்துவிட்டோர் சோம்பேறிகளாய், பிறருக்கு எவ்விதப் பயனும் இல்லாமல் வெறுமே பிறர் போடும் தண்டச்சோறு தின்றுகொண்டிருக்கும் துறவு நிலையிலே போய்ச் சேரும்படி நேரிடும்' என்று சில புத்திமான்கள் பயப்படுகிறார்கள். 'அப்படிப்பயப்பட இடம் இல்லை' என்பதை வற்புறுத்திக் காட்டும் பொருட்டாகவே, நான் இந்த வார்த்தையை இத்தனை விஸ்தாரப் படுத்துகிறேன்.

'தெய்வமே துணை' என்று இருப்போர் ஓயாமல் தொழில் செய்துகொண்டிருப்பார்கள். தெய்வ பக்தி உண்மையானால், பரோபகாரம் அங்கே இருக்கும். பரோபகாரம் இல்லாத இடத்தில், தெய்வ பக்தி வேஷத்தைத் தவிர வேறொன்றுமில்லை.

ஆங்கிலேயர், பிராஞ்சியர், ருஷியர், பெல்ஜியர், செர்வியர், யுனைடெட் ஸ்டேட்ஸ்காரர், இத்தாலியர், ஜப்பானியர், மாண்டிநீக்ரோவர், அல்பானியர், போர்ச்சுகேசியர், ருமானியர், க்யூபா நாட்டார், பனமர், கிரேக்கர், சீய நாட்டார் ஆகிய பதினாறு தேசத்தாரும் ஜர்மனிக்கும் அதனுடன் சேர்ந்த ஆஸ்திரியா, துருக்கி, பல்கேரியா

தேசத்தாருக்கும் விரோதமாகப் போர் புரிந்து வருகிருர்கள். மேன்மேலும் நம்முடைய நேசக் கட்சியாருக்குத் தான் துணை சேருகிறதே ஒழிய, ஜெர்மனிக்குப் புதிய துணை கிடையாது. மேற்கூறிய பதினுறு தேசங்களைத் தவிர, சீனு, ப்ரஜீல், பொலீவியா, க்வாடிமாலா, ஹொண்டூராஜ், நிகராகுவா, லிப்ரியா, ஹைதி, ஸான்டோமிங்கோ முதலிய நாட்டார் மேற்படி ஜர்மனியருடன் தூது சம்பந்தங்களை நீக்கித் தமது விரோதத்தை உணர்த்தியிருக்கிருர்கள்.

இத்தனைக்கும் பயப்படாமல் அந்த மானங்கெட்ட ஜர்மனிக்காரப் பயல்கள் நேசக்கட்சியாருடைய நியாயங்களைக் காட்டிலும் தங்களுடைய இரும்பு வலிமையே பெரிய வலிமை என்று எண்ணி வீண் இறுமாப்புக் கொண்டு சண்டை நடத்திக்கொண்டு வருகிருர்கள்.

'இன்றைக்கானாலும், நாளைக்கானாலும், நாளன்றைக்கானாலும், ஒரு மாசம் சென்ருலும், ஒரு வருஷம் சென்ருலும், என்றைக்கானாலும், ஜர்மனியை நம்மால் தோற்கடிக்க முடியுமாதலால், ருஷ்யாவில் கோன்ஸ்கியை நீக்கி அதிகாரம் பெற்றிருக்கும் மாக்ஸிமிஸ்த் கட்சியார் ஜர்மனியுடன் தனிச் சமாதானமும் பேசத்தொடக்கியிருப்பது பெரிய காரியமில்லை. நாம் கடைசி ஆள், கடைசி ரூபாய் மிஞ்சும்வரை போரை நிறுத்த மாட்டோம்' என்ற ஒரே உறுதியுடன் மின்டர் லாயிட் ஜார்ஜ் முதலிய நேசக் கட்சி மந்திரிகள் பேசுகிருர்கள்.

இதனிடையே, 'நேசக்கட்சியார் இந்தப் போரை நடத்திவரும் நோக்கந்தான் யாதோ?' என்று கேட்டால்,

"ஒரு ஜாதியாரை மற்றொரு ஜாதியார் தம் இஷ்டப்படி அந்த அந்தத் தேசத்தாரால் ஆளப்பட வேண்டுமென்ற கொள்கையை நிலைநிறுத்தும் பொருட்டாகவும் சண்டை போடுகிறோம்' என்று நேசக்கட்சி மந்திரிகளும் ப்ரசிடென்ட்மார்களும், பத்திராதிபர்களும், சென்ற மூன்று வருஷங்களாகத் தினம் மூன்று முறை ஓதிக் கொண்டிருக்கிறார்கள்.

இந்த வார்த்தையைக் கேட்டவுடன் பாரத புத்திராகிய ஹிந்து முஹமதியர்கள் மிகுந்த மகிழ்ச்சி கொண்டு "சபாஷ்! நேசக் கட்சியாருக்கும் நமக்கும் ஒரே நோக்கம் நம்முடைய தேசத்தில் ஆங்கிலேயர் தம் இஷ்டப்படி அரசு செலுத்தும் முறைமையை மாற்றவேண்டும் என்றே நாமும் முயற்சி செய்து வருகிறோம். ஏற்கனவே, இங்கிலாந்தும் நம்முடைய கொள்கையைத் தழுவிவிட்டதாகச் சொல்லுகிறபடியால், இங்கிலாந்து கஷ்ட தசையில் இருக்கும் இத் தருணத்தில் நாம் இங்கிலாந்துக்கு இடையூறு செய்யாமல் இங்கிலாந்துக்கு நம்மால் இயன்ற உதவி செய்யவேண்டும்" என்று தீர்மானம் செய்து கொண்டார்கள்.

பாரத தேசத்தாரில் லட்ச லட்சமான ஜனங்கள் இந்தப் போரில் மடிந்து ஆங்கிலேயருக்கு உதவிபுரிந்தோம். கோடானுகோடி திரவியத்தைக் கொடுத்து வருகிறோம் இன்னும் சேனையில் ஆள் சேர்த்துக் கொண்டிருக்கிறோம். எனவே, நாம் வாய் திறந்து கேட்டால், இங்கிலாந்து நமக்கு இப்போது சுயராஜ்யம் கொடுக்கும். நம்மை

ஏமாற்றுது. இந்தச் சமயத்தில், நாம் இத்தனை உதவி செய்யும்போது, காங்கிரஸ் முஸ்லீம் சபையார் சொல்வதை நாம் சரி என்று நினைக்கவில்லை. சண்டை முடியும் முன்பாக இப்பொழுதே கைமேலே சுயராஜ்யம் வேண்டும் என்று நம்மவர் கேட்கவேண்டும் என்று நான் சொல்லு கிறேன். சண்டை முடிந்த பிறகு சுயராஜ்யம் போது மென்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தால், அது கிடைப் பது அரிதாகும், இப்பொழுதே ஏன் கொடுக்கும்படி கேட்கக் கூடாது? அயர்லாந்து தேசத்தில் சண்டை முடியுமுன்பாகவே ஸ்வராஜ்யம் கொடுப்பதற்குரிய முறை மைகளைப்பற்றி ஆலோசனை செய்வதற்காக ஒரு சபை நடந்துவருகிறது. அதில் ஸகல கட்சியாரும் சேர்ந்திருக் கிறார்கள். அதுபோலவே, இந்த தேசத்திற்கும் ஒரு சபை ஏற்படுத்த வேண்டும்; அதில் இங்கிலீஷ்ப் பிரதிநிதிகள் பாதித்தொகை, பாரதப் பிரதிநிதிகள் பாதித்தொகையாக இருந்து நடத்த வேண்டும். அவ்விதமான சபையை மந்திரி மாண்டேகு இந்தத் தேசத்தில் இருக்கும்போதே நியமிக்கவேண்டுமென்று நம்மவர் கிராமந்தோறும் சபைகள் கூடி, 'கூ! கூ!' என்று பெரிய சப்தம் போட வேண்டும். திராவிடக் கட்சியார் என்றும், இஸ்லாமியக் கட்சியார் என்றும் யாரோ சிலர் செய்யும் பொய் மேளக் கச்சேரியை நாம் இகழ்ந்து நகைத்து, 'காங்கிரஸ் முஸ்லீம் சங்கங்களே தேசத்துக்குப் பொது' என்பதை ஒரே வார்த்தையாக எங்கும் நிலைநிறுத்தவேண்டும். காங்கிரஸ் முஸ்லீம் சபைகளை எதிர்த்து, நமக்குச் சுயராஜ்யம் வேண்டாம் என்று சொல்லும் ஸ்வதேச விரோதிகளை அடக்கிவிட்டு, நாம் இப்போதே ஸ்வராஜ்யம் கேட்கும்படி

நம் பிரதிநிதிகளாகிய காங்கிரஸ் மூஸ்லிம் சபையாரைத் தூண்டவேண்டும்.

மந்திரி மாண்டேகு சென்னைக்கு வந்திருப்பதால், இந்தச் சத்தம் கிராமங்களில் இடி முழக்கம் போலே நடைபெற்று வரவேண்டும்.

ஜனங்களே! உடனே சுயராஜ்ய ஸ்தாபன சபை கூட்டும்படி இரைச்சல் போடுங்கள். அழுத பிள்ளை பால் குடிக்கும்.

## அடங்கி நட

(வங்க பாஷையில் ஸ்ரீமான் ஸர். ரவீந்திரநாத் தாகூர் அவர்களால் எழுதப்பெற்று, 'மாடர்ன் ரிவியூ' பத்திரிகையில் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டு, அதனின்றும் ஸ்ரீமான் சி. சுப்பிரமணிய பாரதியால் மொழி பெயர்க்கப்பட்டது.)

மழை கொஞ்சம் தூற ஆரம்பித்தால், எங்கள் சந்திலும், அதுபோய்ச் சேரும் சித்பூர் ரஸ்தாவிலும் நீர் வெள்ளமாய் விடுகிறது. நான் தலைநரைத்த கிழவனும் விட்டேன். சிறுபிராய முதல் இதுவரை, ஒருமுறை கூடத் தவறாமல், வருஷந்தோறும் இப்படி நடப்பதைப் பார்க்கும்போது, இவ்வுலக வாழ்க்கையில் நீரில் பாதி, நிலத்தில் பாதி குடியிருக்கும் ஜந்துகளுக்குள்ள யோக்யதையைத்தான் நமக்கும் இருக்கிறது என்ற எண்ணம் என் மனத்தில் அடிக்கடி உதிப்பது உண்டு.

இவ்வணம் அறுபது வருஷங்கள் ஆய்விட்டன. இதற்கிடையே உலகத்தில் நடந்த மாறுதல்கள் பல. கலியுகத்தின் குதிரையாக இருந்த நீராவியை இப்போது மின்சார சக்தி கண்டு நகைக்கிறது. கண்ணுக்கு எட்டாதிருந்தது பரமாணு. இப்போது மனத்துக்கு எட்டாதிருந்த சித்தாந்தம் உண்டாயிருக்கிறது. சாகட்போகிற எறும்பைப் போல் மனிதன் சிறகு முளைத்துப் பறக்கிறான். 'வானத்தில் இடம், உனக்கா எனக்கா?' என்று நீதிஸ்தலத்திற்கு வியாஜ்யங்கள் விரைவாக வரக்கூடிய காலத்தை வக்கீல்கள் எதிர்பார்க்கிறார்கள். ஒரே நாள் இரவில் சீனர் எல்லோரும் 'பன்றிக குடுமி'யை நறுக்கி எறிந்தனர். ஐந்நூறு வருஷத் தாவுதலை ஜப்பான் ஐம்பது வருஷத்தில் தாவிவிட்டது. ஆனால், இந்தச் சித்பூர் ரஸ்தாவில் மழை பெய்தால் சேறு உண்டாகாமற் செய்ய வழியில்லை. அதன் ஸ்திதிக்கு மாறுதல் இல்லை. காங்கிரஸ் என்ற பெயர் உண்டாவதற்கு முன்பு நமது ஜாதிப்பாட்டு எத்தனை சோகமாயிருந்ததோ, அத்தனை சோகமாகத்தான் இப்போது ஸ்வராஜ்யம் நெருங்கிவரும் தருணத்திலும் இருக்கிறது.

குழந்தைப் பிராயமுதலாகவே நாம் பழகிவிட்டபடியால், இதெல்லாம் நமக்கு ஆச்சரியமாகத் தோன்றவில்லை. ஆகவே, கவலை ஏற்படவில்லை. தண்ணீர் தங்கி, ஓயாமல் செப்பனிட்ட ட்ராம் தண்டவாளத்தில் என்னுடைய வண்டிச்சக்கரம் போகும்போது, எனக்கு மறதிதெளிந்து, இனங்களின் போக்குக்கும் நீரோட்டத்துக்கும் சண்டை உண்டாய் அதிலிருந்து அழுக்குத் தண்ணீர் என்மேல்

வந்து . தெறிக்கும் செய்தியிலே புத்தி செல்லுகிறது. 'இதை நாம் ஏன் பொறுக்கிறோம்?' என்று சிறிது கால மாக எனக்கு ஒரு யோசனை உண்டாய் வருகிறது.

இதைப் பொறுக்க வேண்டுமென்று கட்டாயமில்லை. பொறுக்கக் கூடாதென்று தீர்மானிப்பதால் அனுகூல முண்டு. அதற்கு ஐரோப்பியர்கள் வாஸம் செய்கிற 'சௌரிங்கி' ரஸ்தா சாக்ஷி. அந்த ரஸ்தாவில் முக்கால் பங்குக்குமேலே ட்ராம் தண்டவாளத்தைப் போட்டு, அதில் முடிவில்லாமல் 'யானைநடை'யில், செப்பனிட்டுக் கொண்டிருந்தால் அந்த வீதியார் ட்ராம்வே அதிகாரி களுக்கு ஊணுறக்கம் இல்லாதபடி செய்துவிடுவார்கள். நாமோ, கீழ்ப்படிதலாகிய குணமே வடிவெடுத்து வந் திருப்பதால், எதையும் திருத்த முடியும் என்பதை நம்மால் நம்பமுடியவில்லை. இதனால் நமது கன்னத்தில் கண்ணீர்ப் பெருக்கும் நமது வீதியில் ஜலதாரைப் பெருக் கும் தீர இடமில்லை. இது ஸாமான்ய விஷயமன்று. எதிலுமே 'நமக்கு நாம் நாயகர்' என்ற எண்ணம் நமக்கு ஏற்படவில்லை

கண்ணாடி மூடிக்குள்ளே தண்ணீர் விட்டு அதில் வளர்க்கப்பட்ட பொன்னிற மீன்கள், கண்ணாடியைத் தண்ணீர் என்று நினைத்து அதில் வந்து மோதிக்கொள்ளு மாம்; பிறகு பெரிய தொட்டியில் கொண்டு போட்டாலும் தண்ணீரைக் கண்ணாடி என்று நினைத்துப் பயந்து பழைய எல்லைக்குள்ளே சுற்றுமாம். 'அதுபோலத் தலை உடைந்து போமோ' என்கிற பயம் நம்முடைய எலும்புக்குள் ஊறிக் கிடக்கிறது.

மஹாபாரதத்தில், அபிமன்யு பகைவரின் வ்யூகத்துக்குள் நுழையக் கற்று, மீளுவதைக் கற்காமல் மாண்டது போலே, நாமும் பிறவி முதல் கட்டுப்படக்கற்று அவிழ்க்கக் கல்லாமல், நமக்கு நேரிடும் சகல விபரீதங்களுக்கும் தலை குனிகிறோம்.

மனிதருக்கும், நூல்களுக்கும், திசைகளுக்கும், எல்லைகளுக்கும் கற்பனைத் தடைகளுக்கும் தலை குனிந்து பல தலைமுறையாய் வழக்கமாய் விட்டபடியால், எந்தத் துறையிலும் 'நாமாக ஒன்று செய்யமுடியும்' என்கிற உண்மை நம் முகத்தின் முன்னே நின்றாலும், கண்ணுக்குத்தெரியாமல் போகிறது. ஐரோப்பிய மூக்குக்கண்ணாடி போட்டுக்கொண்டாலும் நமக்குத் தெளிவு உண்டாகவில்லை.

தனக்குத் தானே நாயகனாயிருக்கும் உரிமை எல்லா மனித உரிமைகளிலும் பெரிது. ஆனால் இந் நாட்டிலே இவ்வுரிமை நூல் வசனங்களாலும், பழமொழிகளாலும், கிரியை சடக்குகளாலும் மறுக்கப்பட்டிருக்கிறது. இந்தத் தேசத்தில் மனிதனுடைய புத்தி வழி தவறிப்போகாமலிருக்க, கிரியைகளாலும் சாஸ்திரங்களாலும் கையையும் காலையும் கட்டிப்போட்டிருக்கிறார்கள். அடிகோணாமற் காக்குமாறு, பாதைகளை அழித்துவிட்டார்கள். தெய்வத்தின் பெயர் சொல்லி மனிதனை மனிதன் கீழ்ப்படுத்தி அவமதிக்கும்படி செய்துவிட்டார்கள். இப்படிப்பட்ட தேசம் அடிமைகளைச் செய்வதற்கு நல்ல தொழிற்சாலையாயிற்று.

லர்க்கார் அதிகாரிகளும் அப்படியே சொல்லுகிறார்கள்:—“நீங்கள் பிழை செய்யக்கூடும். ஆதலால் சுய சிந்தையும், சுயகாரியமும் உங்களுக்குத் தகாது” என்கிறார்கள். இங்ஙனம், மனுபராசராதிகளுடைய பல்லவியை இங்கிலீஷ்காரர் பாடும்போது நமக்குச் செவிகூசுகிறது. இங்கிலீஷ்காரரிடம் அவர்களுடைய கொள்கைக்கிணங்கப் பின்வரும் மறுமொழிசொல்லுகிறோம்: “பிழை செய்தால் பெரிய ஆபத்தில்லை. தனக்குத்தானே நாயகனாயில்லாதிருத்தல் பெரிய ஆபத்து. நம் இஷ்டப்படி இடறி நடந்து பழகினாலொழிய நாம் உண்மைக்கு வந்து நிலை பெறமுடியாது” என்கிறோம். பின்னும் சொல்லுகிறோம்: நம்மை ஆளுவோர் இப்போது ‘ஜனாதிகாரம்’ என்ற மோட்டார் வண்டியில் ஏறிப்போகிறார்கள். ஆனால் இவர்களுடைய பழைய பார்லிமெண்ட் சபையாகிய வண்டி இரவில் பயணந் தொடங்கிய காலத்தில் ஒரு வழக்கத்திலிருந்து மற்றொரு வழக்கத்திற்கு மாறினபோது அதன் இரைச்சல் வெற்றித் தேர்போலே கேட்கவில்லை. ஒரு வேளை ராஜாவின் சார்பு; பின்பு கோயிற்கக்ஷி; பின் ஜமீன்தார் கக்ஷி, பிறகு சாராயம் வடிப்போர் கக்ஷி; இங்ஙனம் கக்ஷிபேதமும், லஞ்சம் வாங்குதலும், கூச்சலும், சக்திஹீனமும் உடையதாய், அந்த வண்டி பக்கத்துக்குப் பக்கம் சரிந்து சரிந்து நடந்தது. ஒரு காலத்தில் அந்தச் சபை ‘மெம்பர்கள்’ கூட்டத்துக்கு வராவிட்டால் தண்டனை உண்டென்று பயமுறுத்தி அழைக்க நேரிட்டதன்றோ? பிழைகளைக் குறித்துப் பேசுமிடத்தில், ‘பார்லிமெண்ட் சபைகளின் தாய்’ என்று சொல்லப்படும்

பிரிட்டிஷ் பார்லிமெண்ட் சபை முன்பு அமெரிக்காவிலும், ஐர்லாந்திலும் செய்த பிழைகள் முதலாக, நேற்று 'டார்டனெல்ஸ்,' 'மெஸொபொட்டோமியா' விஷயமாக எத்தனையோ பிழைகள் செய்யவில்லையா? இந்தியாவில் செய்திருக்கும் பிழைகள் கொஞ்சமா? மேலும் அமெரிக்கா ராஜ்யத்தில் பொருளாளிகள் நுழைந்து செய்யும் அக்கிரமங்கள் கொஞ்சமில்லை. 'த்ரெய்புஸ்' என்றவர்மேல் ஏற்பட்ட விசாரணையிலே பிரான்ஸ் தேசத்து ராணுவ ஊழல்கள் வெளிப்பட்டன. ஆயினும், ஸ்வராஜ்யமென்கிற ஜீவநதியானது எந்த வேகத்தால் பிழையாகிற குழியிற் போய் விழுகிறதோ, அதே வேகத்தால் அங்கிருந்து கிளம்பித் தனக்கு ஏற்படும் இடறுகளைத் தானே நீக்கிக்கொள்ளும்' என்ற விஷயத்திலும் அத்தேசங்களிலேயுள்ள ஜனங்கள் சந்தேகப்படவில்லை."

நாம் வற்புறுத்தி மேலும் சொல்லத்தக்கதொன்று உண்டு; "ஸ்வராஜ்யத்திலிருந்து ஸாமர்த்தியமும், பாரபுத்தியும் உண்டாவதுடன் உயிருக்கே அதிக பலம் உண்டாகும். ஒரு கிராமம் அல்லது வகுப்பின் எல்லைக்குள் புத்தியைக்கட்டுப்படுத்தியிருப்போர் அங்ஙனம் இல்லாமல் பெரிய ராஜ்ய சிந்தனையும் அதற்குத் தக்க செய்கையும் பெறுவாரானல், மானுஷிகத்தைப் பற்றி அவர்களுக்கு விரிந்த உணர்ச்சி உண்டாகிறது. இந்த ஸௌகரியம் இல்லாமையால் இந்நாட்டில் ஒவ்வொருவனும் அரை மனிதனாகவே இருக்கிறன். அவனுடைய யோசனைகளும், சக்திகளும், ஆசைகளும், முயற்சிகளும் அற்பமாகவே இருக்கின்றன. இங்ஙனம் வலிய வந்திருக்கும் உள்ளச்

சிறுமை உயிர்ச்சேதத்திலும் பெரிய கேடாகும். ஆதலால், தவறுதல் நேரிடக்கூடும் என்பதைப் பொருட்டாக்காமல் நாம் சுயராஜ்யம் பெறக் கடவோம். பாதையில் இடறுதல்களை மாத்திரம் கருதி, எங்கள் முன்னேற்றத்தைத் தடுக்கலாகாது. இதுவே உண்மையான உத்தரம்.”

இந்த மறுமொழியை ஒருவன் அதிகாரிகளிடம் சோர்வில்லாமல், மீட்டுமீட்டும் சொல்லித் தொல்லைப் படுத்தினால், அவனை அதிகாரிகள் ‘பந்தோபஸ்த்’ பண்ணி வைக்கிறார்கள். ஆனால் அவனுக்கு ஸ்வதேசத்தாரின் மதிப்பு உண்டாகிறது. ஆயினும் இதேமாதிரி ஜவாப்பை ஜாதிப் புரோஹிதரிடம் சொல்லப்போய், “ஐயரே, இது கலியுகமென்றும், மனிதனுடைய எளிய புத்தியை சுயேச்சைப்படி விட்டால் கெட்டுப்போகும் என்றும், ஆதலால் மூளையை உழைப்பதிலும் தலையைச் சாஸ்திரங்களுக்கு வணங்குதலே சிறந்ததென்றும் சொல்லுகிறீர். இந்த அவமான வார்த்தைக்கு நாங்கள் அடங்கமாட்டோம்” என்று சொன்னால், அவர்களுடைய கண் சிவந்துபோய் உடனே ஜாதியை விட்டுத் தள்ளும்படி உத்திரவு போடுகிறார்கள். ராஜாங்க விஷயமானால் வானத்தில் பறக்கும்படியாகவும் ஜாதி ஆசாரமானால் கட்டையில் காலைக் கட்டிப்போடும்படியாகவும் இவர்கள் விரும்புகின்றனர். வலப்புறம் திருப்பவும் இடப்புறம் திருப்பவும் தோணியிலே சுக்கான் ஒன்றுதான் உண்டு. அதுபோலே, மனிதன் ராஜ்ய விஷயத்திலும் ஜாதியாசார விஷயத்திலும்—இரண்டிலும் உண்மை நிலைபெற வேண்டுமானால், அதற்கு ஒரே வழிதான் உண்டு. இந்த விதியின் அனுசரணையிலே

தான் சித்பூர் ரஸ்தாவுக்கும் சௌரிங்கி ரஸ்தாவிற்கும் உள்ள பேதம் தோன்றுகிறது. "எல்லாம் அதிகாரி கையில் இருக்கிறது. நம்முடைய கையைக் கட்டிக் கொண்டு நடப்பதே சரி" என்கிறது சித்பூர் ரஸ்தா. சௌரிங்கி ரஸ்தாவோ, 'எமது கைக்குள் காரியங்கள் அடங்கி நடக்காவிட்டால், நமக்குக் கையிருந்து பயன் என்ன?" என்று கேட்கிறது. தனது கைக்கும் தெய்வத்தின் கைக்கும் சம்பந்தம் உண்டென்று தெரிந்து கொண்டபடியால், 'சௌரிங்கி' உலக முழுதையும் வசப் படுத்திக்கொண்டது. இந்த நம்பிக்கையை இழந்துவிட்ட படியால், 'சித்பூர்' உலகத்தை இழந்துவிட்டது; அரைக் கண் மூடி மவுனியாய், நிஷ்டை யின்பங்களை நாடுகிறது.

கண்ணை மூடிக்கொண்டால் ஒழிய, நம்முடைய அற்புதமான ஆசாரங்களைத் தவருமல் அனுசரிப்பது ஸாத்ய மில்லை. கண்ணைத் திறந்தாலோ, உலக முழுதையும் ஆளுகிற பொதுவான லோகவிதி நமக்குத் தென்படாமல் இராது. ஒரு கூட்டத்தாரேனும், ஒரு மனிதனேனும், இந்தப் பெருவிதியை வசப்படுத்திஞல், அதிலிருந்து அதிகாரம், செல்வம், விடுதலை என்ற பரிசுகள் கிடைக்கும். இந்த விதியை உறுதியான அஸ்திவாரமாகக் கொண்டு ஐரோப்பிய நவீன நாகரிகம் நிலைபெற்றிருக்கிறது. இதில் நம்பிக்கை இருப்பதனல், அது பெரிய விடுதலை பெற்று நிற்கிறது. நாமோ கையைப் பிசைந்து கொண்டு, யஜமான ஆக்கினைக்குக் காத்திருக்கிறோம். வீட்டிலே மூத்தவன், போலீஸ், தலையாரி, கோயில் குருக்கள் முதலியவர்களில் ஏதேனும் ஒன்றைப் பூஜை

பண்ணி நம்முடைய சொந்த யோசனையையும், சொந்தச் செய்கையின் திறமையையும் ஆயிரம் தூளாக உடைத்து நான்கு பக்கத்துக் காற்றிலும் வீசி எறிந்துவிடுகிறோம்.

இதற்கு ஒரு காலேஜ் மாணாக்கன், "நாங்கள் இந்தக் கதையை எல்லாம் நம்புவது கிடையாது. வைசூரிக்குப் பால் குத்திக்கொள்கிறோம். பேதிக்கு உப்புக் கொடுக்கிறோம். விஷ ஜ்வரம், கொசு வாயில் சுமந்து வரும் கண்ணுக்குத் தெரியாத பூச்சியால் உண்டாவதை அறிவோம். இவற்றை எல்லாம் தெய்வங்களின் கூட்டத்திற் சேர்க்கவில்லை" என்று சொல்லக்கூடும். கொள்கை மாறக்கூடும். ஆனால் நாம் நமக்கு நாயகராகாமல், புறத்தே ஓரதிகாரத்தை எப்போதும் குருட்டுத்தனமாக நம்பித் தொங்கும் குணம் நம்முடைய ஊக்கத்தை வேரறுக்கிறது. இப்படி எங்கும் சூழ்ந்த பயமானது நம் அறிவையும் உள்ளத்தையும் வசப்படுத்தியிருப்பதால், நமது மனம் கோழைப்பட்டிருக்கிறது இதன் காரணம் என்னவென்றால், உலக் முழுதும் தழுவிய மாறுற்ற ஸர்வவிதியை நாம் நம்புவதில்லை. ஐயப்படுதலும், 'எது வந்துவிடுமோ, நாம் எப்படி ஒன்றைத் துணிவாகச் செய்யலாம்' என்று திகைப்பதும் பயத்தின் குணங்களாகும். நமது ராஜாங்காத்தாரிடத்திலே இந்தக் குணம் சில சமயங்களில் காணப்படுகிறது. ராஜாங்க யந்திரத்திலே எப்போதேனும் ஓட்டை உண்டாகி, அதன் வழியே பயம் நுழைந்து அதனால் அவர்கள் தமக்கு இனியவாகிய ஸ்வதர்மங்களை மறந்து தம் ஆட்சியை உறுதியாகத் தாங்கும் வேர்க்கொள்கையைக் கோடரியால் வெட்டுகிறார்கள். அப்போது தர்மமும் நீதியும் ஒதுங்கிப்போய், கௌரவத்

தைக் காப்பாற்ற வேண்டுமென்கிற எண்ணம் முன்னே நிற்கிறது. 'தெய்வ விதியை மீறி, அழுகைக் கண்ணீரை அந்தமான் தீவில் மறைத்துவிட்டால் கசப்பு இனிப்பாய் விடும்' என்று நினைக்கிறார்கள். 'ஸகல ரோக நிவாரணி' என்று தான் ஒரு மருந்தைப் பாவனை செய்துகொண்டு, உலகப் பொதுவிதியைச் சிலர் உல்லங்கனம் செய்வதற்கு இஃதொரு திருஷ்டாந்தம். இதற்கெல்லாம் உட்காரணம் அற்பத்தனமான பயமும் தன்னலம் வேண்டலும்; அல்லது, அற்பத்தனமான சூதினால் நேர்வழியை விட்டு விலக முயலுதல். இங்ஙனம் நாம் எண்ணத் தொலையாத அதிகாரிகளுக்குப் பூஜை நைவேத்தியம் பண்ணிக் குருட்டு அச்சத்தால், மானுஷிக உரிமைகளைப் புறக் கணிக்கிறோம். பௌதிக சாஸ்திரத்திலும், ராஜ்ய சாஸ் திரத்திலும் நாம் எத்தனை உயர்வாகப் பரீக்ஷை தேறிய போதிலும், பிறர் உத்தரவுக்குக் காத்திருப்பதாகிய ஊறின வழக்கத்தை நம்மால் விட முடியவில்லை. தற்கால வழியை அனுசரித்து நாம் ஜனாதிகார சபைகள் ஏற்படுத்தினால், அவற்றிலும் எவனாவது ஒருவன் நாயகனாகி மற்றவர்களை மேய்க்கும் தன்மை உண்டாகிறது. இதன் காரணம் யாதெனில், பொதுஜனங்கள் தன்னை மறந்திருத்தல், தூங்குதல், உண்ணுதல், குடித்தல், கலியாணம் பண்ணு தல், பாடையேறுதல் முதலிய ஸகல காரியங்களையும் பிறருடைய ஆணைப்படியே செய்து வழக்கப்பட்டிருக் கிறார்கள்.

பிராமணன் ஒருவன் குடத்தில் கொண்டுவரும் ஜலம் அழுக்காக இருப்பதால் குடிக்கத்தகாதென்றும், சண்டாளன் ஒருவன் சுத்தமாகக் காய்ச்சி வடிகட்டிக்

கொண்டுவந்த நீர் சுத்தமாக இருப்பதால் குடிக்கத் தகும் என்றும் நாம் சொன்னால் வெறுமே குயுக்தி பேசுகிறான் என்று சொல்லி என்னைக் கண்டிப்பார்கள். ஏனெனில், எனது கொள்கை 'யஜமான் உத்தர'வுடன் ஒட்டவில்லை.

'ஒட்டாவிட்டால் என்ன குடி கெட்டுப்போயிற்று?' என்று நான் கேட்டால் உடனே என்னை ஜாதியிலிருந்து தள்ளிவிடுவார்கள். என்னை விருந்துக்குக் கூப்பிடமாட்டார்கள். நான் செத்துப்போனால் சாவுக் கிரியைகளுக்குக் கூட வரமாட்டார்கள்.

இப்படி உலக வாழ்க்கையின் ஒவ்வோர் அம்சத்திலும் குரூரமான கொடுங்கோன்மை நடப்பதனால் ஜனங்களுக்கு நன்மையென்று நம்புவோர் ராஜாங்கத்தில் கூசாமல் பரிபூர்ண விடுதலை கேட்பது மிகுந்த வியப்புக்கு இடமாகிறது.

முன்பு, நமது தேசத்திலே, உபநிஷத்துக்காரர் தெய்வத்தின் விதியைக் குறித்துப் பேசும்போது சொல்லுகிறார்: 'தெய்வத்தின் விதியை மாற்றமுடியாது. அது எங்கும் எப்போதும் இசையும்' என்று. இதை நமது முன்னோர் கண்டிருந்தனர். அந்த விதி நித்யமானது, க்ஷணிகம் அன்று. ஆதலால் அதை நாம் அறிந்துகொண்டு செய்கையில் பயன்படுத்தவில்லை. எத்தனைக்கு எத்தனை அவ் விதியை நாம் ஸ்வீகரிக்கிறோமோ, அத்தனைக்கு அத்தனை நமது பாதையில் உள்ள தடைகள் விலகும். இந்த விதியின் ஞானமே இயற்கை நூல் (ஸயின்ஸ்) என்று சொல்லப்படும். இந்த 'ஸயின்ஸ்' வலிமையாலன்றோ

ஐரோப்பா தற்காலத்தில், "பூமியில் விஷக்காய்ச்சல் இல்லாமல் செய்துவிடுவேன். மனிதரின் வீடுகளில் சோற்றுப் பஞ்சமும் கல்விப் பஞ்சமும் இல்லாமல் செய்து விடுவேன். ராஜ்யத்தின் பொதுநன்மைக்கும் மனுஷ்யனுடைய ஸ்வதந்திரத்திற்கும் முரண்படாமல் செய்வேன்" என்று துணிவுடன் கூறுகிறது.

'அறியாமையால் கட்டும், அறிவினால் விடுதலையும் கைகூடும்' என்பதை முன்னோர் அறிவார். பொய் எது? தன்னை ஸர்வத்திலிருந்து பிரிவாகக் காணுதல். உலகமும் தானும் ஒன்றெனக் காண்பதே உண்மையறிவு. இத்தனை பெரிய உண்மையை அக்காலத்தில் எப்படிக் கண்டுபிடித்தார்கள்' என்பதை இப்போது நினைக்க வியப்பு உண்டாகிறது. பிறகு ஆரண்ய ரிஷிகளின் காலம் மாறி, பௌத்த சந்நியாசிகளின் காலம் வந்தது. மேற்கூறிய மகத்தான ஞானத்தை உலகத்திலிருந்து பிரித்து 'உலகத்தைத் துறப்பதே முக்தி' என்று சொல்லத் தொடங்கி விட்டார்கள். இங்ஙனம் உண்மைக்கும் பொய்க்கும் ஒப்பந்தம் உண்டாய் இடையே பாகச்சுவர் போடப்பட்டது. ஆகவே, இக்காலத்தில் ஜாதியாசாரங்களில் எத்தனை திருகுதலும் அநாகரீகமும் மடமையும் இருந்தபோதிலும், உண்மைகண்டவரின் சார்பிலிருந்து யாதோர் ஆட்சேபமும் பிறக்கவில்லை. உண்மைப் பக்கத்தார் இதற்கெல்லாம் இடங்கொடுத்தே பேசுகிறார்கள். மரத்தின்கீழ் இருந்து சந்நியாசி சொல்லுகிறான்:—'தன்னிடம் உலகத்தையும் உலகத்தினிடம் தன்னையும் காண்பவனே உண்மை காண்பான்' என்று. அதுகேட்ட சம்சாரி தன்னிடம் உள்ள சிறந்த வஸ்துக்

களைச் சந்நியாசியின் திருவீட்டுக்குள்ளே போட்டுவிடு கிறான். ஆனால், தெய்வத்தின் பொதுவிதிக்கு அடங்கி நடப்போருடைய வீட்டிற்கு வண்ணான் அம்பட்டன் போகக்கூடாதென்று சம்சாரி விதி போடும்போது, சந்நியாசி அதனை முகமலர்ச்சியுடன் ஏற்றுத் தன்னது த்ருஷ்டி மண்சாத்தி ஆசிர்வதிக்கிறான். இப்படித்தான் நமது ஜாதி வழக்கே கெட்டுப்போயிற்று. உண்மைக்குப் பரிந்துபேசுவோர் யாரும் இல்லாமலே போய்விட்டது. இதனால் பல நூற்றாண்டு நேர்ந்த அவமானத்தையெல்லாம் நாம் பொறுத்துக்கொண்டு அழுது கொண்டிருக்கும்படி நேரிட்டது.

ஐரோப்பாவில் அப்படி இல்லை. அங்கே உண்மையை மனதிற்குள் மறைக்காமல் வழக்கத்திற் காட்டுகிறார்கள். ஜனக்கட்டிலும் ராஜ்யத்திலும் ஏதேனும் குற்றம் வெளிப் பட்டால், அதைப் பொது ஜனங்கள் உண்மை வழக்கால் சோதித்துத் திருத்த வழியுண்டு. இதனால் கிடைக்கும் சக்தியும் விடுதலையும் எல்லாருக்கும் பயன்பட்டு நம்பிக்கையையும் தைரியத்தையும் உண்டாக்குகின்றன. இந்த உண்மை மாயமந்திர இருளில் மறைந்து கிடக்க வில்லை. திறந்த வெளியில், எல்லாரும் காணும்படி தானும் வளர்ந்து பிறரும் வளரும்படி செய்கிறது.

பல நூற்றாண்டு நாம் வாயை மூடிக்கொண்டு அவமானப்பட்டதெல்லாம் ஒன்று சேர்ந்து கடைசியில் அந்நிய ராஜ்யமாகப் பரிணமித்தது. கை எப்போதும் உடம்பில் நோயுள்ள இடத்தைப் போய்த் தீண்டுவது போலவே நம்முடைய கருத்து முழுதும் நம்மை ஆளும்

மேற்குத் திசையாருடைய ராஜ்ய நெறியில் செல்லுகிறது. மற்றதை எல்லாம் மறந்து, 'எங்களுடைய இஷ்டத்தைச் சற்றே கவனித்து எங்கள் ஆட்சி நடக்கவிட வேண்டும். வேண்டினாலும் வேண்டாவிடினும், புறத்திலிருந்து விதி நியமங்கள் எங்கள் தலைமேல் பொழியாது இருக்கவேண்டும். ராஜ்ய பாரம் முழுதும் எங்களுக்குச் சுமையாகாதபடி, சக்கரங்கள் போட்ட யந்திரமாக்கி அதை உங்களுடன் நாங்களும் சேர்ந்து தள்ள இடம் கொடுக்கவேண்டும். பொறுப்பில்லாத அந்நியரின் ஆட்சியிலிருந்து விடுதலை பெறவேண்டும்' என்ற பிரார்த்தனை இப்போதும் உலகத்தில் எல்லாத் திசைகளிலும் எழுகிறது. கால சக்தியின் தூண்டுதலால், இந்தப் பிரார்த்தனையில் நம்முடைய வாக்கையும் சேர்த்தது நன்றாயிற்று. அப்படியன்றி இப்போதும் வழக்கம்போல் 'யஜமானன் உத்தரவை' ஒப்புக்கொண்டு நடந்தால், அது நமக்குத் தீராத அவமானமாக முடிந்திருக்கும். இதனால் நம்முள் உண்மையின் ஒரு கிரணம் நுழையக்கூடிய துணை இன்னும் ஏதோ மிஞ்சி இருப்பதாகத் தெரிகிறது. நாம் பார்த்தது உண்மையின் கிரணம். ஆனபடியாலேதான், நம்மை அசையாதபடி பலி மிருகம் போலே கட்டிப்போட்டிருந்த வீண் தற்புகழ்ச்சியை நான் நம்பிக்கையுடன் பழிக்கின்றேன். ராஜாங்கத்தாரை நோக்கி, 'ஸாம்ராஜ்ய சபைகளில் எங்களுக்கு ஸ்தானம் வேண்டும்' என்று கேட்பதும், ஜனங்களை நோக்கி, 'ஆசாரங்களிலும் சொந்தக் காரியங்களிலுங்கூட யஜமான் போட்ட கோட்டை மீறி நடக்காதே' என்று சொல்வதும் ஒரே விதியின் வசத்தால் உண்டாவது விநோதமன்றோ?

இதற்குப் பெயர் 'ஸநாதன தர்ம புனர் உத்தாரணம்' என்கிறோம். ஸநாதனக் கக்ஷித்தலைவர் நாம் ஒரு கண்ணால் உறங்கி மற்றொரு கண்ணால் விழித்திருக்கும்படி அஸாத்ய உத்தரவு போடுகிறார்கள்.

கடவுளுடைய கோபமாகிய கழி நம் முதுகின்மேல் அடிக்கும்போதும், தேசாபிமானத்தால் மனம் புண்ணாகி, "மூங்கிற் காடுகளை எல்லாம் வெட்டிப் போடுவோம்" என்று கூவலானோம். நாம் எத்தனை வெட்டினாலும் மூங்கிற்காடு உலகத்தில் மிஞ்சி இருக்கத்தான் செய்யும். காடு என்ன செய்யும்? குற்றம் நமது. அது யாதெனில்:- 'நாம் உண்மையைவிட அதிகாரம்மேல்' என்று மதிக்கிறோம். 'கண்ணைக் காட்டிலும் தோல் முகப்படாம் மேல்' என்று நினைக்கிறோம். நாம் இந்தக்குணத்தை நீக்கும்வரை ஏதேனும் ஒரு காட்டில் நம்மை அடிக்க யாதேனும் ஒரு கழி மிஞ்சி இருக்கத்தான் செய்யும். ஐரோப்பாவிலும் முன் ஒரு காலத்தில் எல்லா விவகாரங்களிலும் பாதிரிகளுடைய அதிகாரம் மூர்த்தண்யமாய் நடந்தது. எங்கும் வீசி இருந்த பாதிரி வலையை அறுத்தபிறகுதான், ஐரோப்பிய ஜனங்கள் ஸ்வராஜ்யப்பாதையிலே கால்வைக்க இடம் உண்டாயிற்று. இங்கிலாந்து மாத்திரம் தீவானபடியாலும் கோயிலின் ராஜதானியாகிய ரோமாபுரியிலிருந்து மிகத் தூரம் ஆனபடியாலும் பிழைத்தது. இங்கிலாந்திலும் கோயில் (சர்ச்) அதிகாரம் முற்றிலும் நசித்துவிடவில்லை. 'இங்கிலீஷ் கோயில்' பார்ட்டியைப்போல் முன் நடத்திய ஸர்வாதிகாரம் நீங்கி, இப்போது இரக்கத்தால் அதுவும் இருந்து போகட்டும் என்று விடப்பட்டிருக்கிறது.

இங்ஙனம் 'மாமூல் கிழவி'யை இங்கிலாந்து தேசத்தார் அசைத்தது போலவே, ஸ்பெயின் தேசத்தார் செய்யக்கூடவில்லை. முன்னொரு காலத்தில் ஸ்பெயின் தேசத்தார் பாடு மிகக் கொண்டாட்டமாக இருந்தது. அந்த அநுகூலத்தை அவர்கள் ஏன் இழந்தார்? 'மாமூல் கிழவி'க்கு மணியம் கொடுத்தமையாலேதான்.

ஸ்பெயின் தேசத்து பிலிப் ராஜா இங்கிலாந்தின் மீது சண்டை தொடுத்த காலத்தில், ஸ்பெயின் தேசத்துக் கப்பற்படை விவகாரங்களும் கோயில் விவகாரங்களைப் போலே வலிய தளைகளுக்கு உட்பட்டிருந்தமை வெளியாயிற்று. இங்கிலீஷ் கப்பற் படையோ மிகச் சிறந்த சேனாதிபதிகளின் கீழே, தான் மிதக்கும் கடலலைகள் எப்படி விடுதலைகொண்டு வீசும் காற்றுக்கு ஒத்துச் செல்லுமோ அதுபோலத் தானும் சென்றது. ஸ்பானியக் கப்பற்படையில் ஜாதிமரபுப்படி அதிகாரம் வகுத்திருந்தது. அது அசையாத மாமூலின் இரும்புப்பிடியினின்று விலக வழியில்லாமல் போயிற்று. இங்ஙனம் ஐரோப்பாவில் கோயிற்கட்டுக்குக் குருட்டுத்தனமாகக் கீழ்ப்பட்டிருந்த தளையை வெட்டித் தன் மதிப்பைக் காக்கக் கற்ற ஜாதியாரே தலை தூக்குவது இயல்பாயிற்று. ருஷ்யாவில் அவ்வாறு செய்யாதபடியால், அங்கே உத்தியோகஸ்தர் காடாகப் பரந்து, ஜனங்கள் மிகச் சிறிய சர்க்கார் அதிகாரிக்கும் மிகவும் அற்பமான பழஞ் சாஸ்திரக் கட்டளைக்கும் முழந்தாள் படியிட்டு ஆண்மை இழந்து போகின்றனர்.

௪௨. சமயம் (மதம்) வேறு; குருக்கள் கட்டுப்பாடு வேறு

என்பதை மறக்கலாகாது. அவை ஒன்றுக்கு ஒன்று தீயும் சாம்பரும் போலாம். மதத்தை மீறிக் கட்டுப்பாடு செல்லும்போது நதியை மணல் மூடுவது போல் ஆகிறது. அங்கு நீர் கெட்டுப் பாலைவனம் போல் தோன்றும். இந்த நிலையைக் கண்டு மகிழ்ச்சி அடைவோர் மிகக் கேடு கெட்டவர்கள்' என்பது வெளிப்படை.

ஒருவன் மற்றொருவனைக் கஷ்டப்படுத்தினால், இருவருக்கும் கெடுதி என்று (சமயம்) மதம் சொல்லுகிறது

மகள் விதவையாகிப் பட்டினி கிடக்கும்போது, 'இன்ன திதியில் அவளுக்குத் தாகத்துக்கு ஜலம் கொடுத்தால் பெற்றோர்களுக்குப் பாவம்' என்று குருக்களின் கட்டுப்பாடு சொல்லுகிறது. 'பச்சாத்தாபத்தாலும் ஒருவன் பாவத்தைக் கழுவலாம்' என்று ஸமயம் சொல்லுகிறது. 'கிரகணத்தன்று ஒருவன் இன்ன நீரில் முழுகினால் தான் பாவம் தீர்வதுடன் பதினொன்கு தலைமுறை பிதிர்கள் செய்த பாவமும் தீரும்' என்று கட்டுப்பாடு சொல்லுகிறது. 'மலைகளையும் கடல்களையும் கடந்துபோய், இவ்வழகிய உலகத்தின் வியப்புகளைக் கண்டு களிக்கவேண்டும்' என்று ஸமயம் சொல்லுகிறது. 'கடலைக் கடந்தவன் மண்ணிற் புரண்டு பிராயச்சித்தம் பண்ணவேண்டும்' என்று கட்டுப்பாடு சொல்லுகிறது. 'எக்குடிப் பிறந்தாலும், உண்மையுடையவன் தொழத் தக்கவன்' என்று ஸமயம் சொல்லுகிறது. 'பிராமணனாகப் பிறந்தவன் அயோக்கியனாக இருந்தபோதிலும் அவன் பாததூளைப் பிறர் சிரத்தில் தரிக்கலாம்' என்று கட்டுப்பாடு சொல்லு

இறது. சுருக்கிச் சொன்னால், ஸமயம் விடுதலை போதிக் கிறது; குருக்கள் கட்டுப்பாடு அடிமை நிலையைப் புகழ்ந்து கீர்த்தனம் பாடுகிறது.

பக்தி குருட்டு பக்தியாக இருந்தாலும் அதிலொரு வெளியழகுண்டு. இவ்வழகை நமது நாட்டில் யாத்திரை செய்யும் அன்னியர் சிலர் கண்டு மெச்சுகிறார்கள்; சித்தி ரங்கிகாரன் ஒருவன் இடிந்த வீட்டின் புராதன அழகு களைப் பார்த்து மயங்கி, 'அதில் குடி இருக்க யோக்யதை இல்லை' என்பதை மறந்துவிடுவதுபோலே, கங்கா ஸ்நா னத்துக்குத் திருவிழாக்காலத்தில் பாரிஸால் நகரத்தி லிருந்து ஆயிரக்கணக்கான யாத்திரைக்காரர்—பெரும் பகுதி ஸ்திரீகள்–வருவதைப் பார்த்திருக்கிறேன். அடடா! புகைத் தோணியிலிருந்து புகை வண்டிக்கும் புகை வண்டியிலிருந்து புகைத்தோணிக்கும் மாறுகிற கூட்டங் களில் எல்லாம் அவர்கள் படும் கஷ்டத்துக்கும் அவமானத் துக்கும் ஓய்வில்லை அவர்களுடைய பரிதாபத்துக்கிடமான பொறுமையிலும் ஒருவித அழகு இருக்கத்தான் செய் கிறது. அவர்களுடைய துயரங்கள் எப்போதும் அழகு பெறுகின்றன. வீண்கிரியை சடங்குகளுக்கு இடையே அவர்கள் வளர்க்கும் பிள்ளைகள் இவ்வுலக இன்பங் களுக்குப் பல்லைக்காட்டியிருந்து பரலோக நிழல்களைக் கண்டு நடுங்குகிறார்கள். தாம் நடக்கும் பாதையில் வளைவு தோறும் தாமே தடைகள் கட்டுவது அவர்களுடைய வாழ்க்கையின் ஒரே தொழிலாகக் காணப்படுகிறது.

அத்தடை உயர்வதையே அபிவிருத்தி என்று கருது கிறார்கள்.

இப்படி அவர்கள் தண்டனை அடையும் காரணம் யாதெனில்:—ஈசனால் மனிதனுக்குக் கிடைத்த பேறுகளில் சிறந்த பேறாகிய தியாக சக்தியை இவர்கள் துர்விநியோகம் செய்கிறார்கள். கணக்குக் காட்டும் காலம் வரும்போது இவர்களால் நஷ்டக் கணக்குத்தான் காட்டமுடியும். இன்னும் ஓர் இடத்தில் லக்ஷக்கணக்கான ஜனங்கள், ஆணும் பெண்ணுமாக ஸ்தல தரிசனம் செய்து புண்ணியம் தேடப் போயினர். பாதையோரத்தில் ஒருவன் சாகக் கிடந்தான். அவனுடைய ஜாதி இன்னதென்று தெரியாத காரணத்தால், அவனுக்கு யாரும் தாகத்துக்கு ஜலம் கொடுப்பாரில்லை. பெருஞ் செலவு செய்து புண்ணியம் தேடப்போகும் இவர்களுடைய குருட்டுப் பக்தி எத்தனை அழகாகத் தோன்றிய போதிலும் இவர்களுடைய காருண்யம் எத்தனை பயங்கரமானது பார்த்தீர்களா? ஒரு தண்ணீரில் அனைவரும் சேர்ந்து விழும்படி தூண்டுகிற குருட்டுத் தன்மைதான் இனம் தெரியாத மனிதர் கஷ்டப்படும் போதும் இரக்கமுண்டாகாமல் செய்து விடுகிறது. தான் கொடுத்த சிறந்த வரத்தை இவர்கள் இங்ஙனம் துர்விநியோகம் செய்வதில் ஈசனுக்குத் திருப்தியில்லை.

படிப்பு, பக்தி, ஒழுக்கம் மூன்றும் இல்லாத கோயிற் குருக்களுடைய காலில், ஸ்திரீகள் பணத்தைக் கொட்டுவதை நான் பார்த்திருக்கிறேன். இங்ஙனம் செய்யும்

வன்மையால் இவர்கள் உண்மைக்கும் கருணைக்கும் அருகே ஓர் அடியளவேனும் நெருங்கி வந்தனரா? இல்லை.

இங்கு ஓராக்ஷேபம் சொல்லலாம்:—"குரு புண்ணிய ஆத்மா என்று நம்பித்தானே பணம் கொடுத்தார்கள்? இந்த நம்பிக்கை அவர்களுக்கு இல்லாவிட்டால் அப் பணத்தைச் செலவின்றி வைத்திருப்பார்கள். அல்லது சொந்தச் செலவுக்குச் செலவிட்டிருப்பார்கள். குருவின் கையில் கொடுத்தது விசேஷந்தானே?" என்று கேட்கலாம். தனக்காகச் செலவிட்டால் பணத்தின் பயனாவது கண்டிருப்பார்கள். தெய்வ பக்தியினால் செய்தோமென்ற பொய் மயக்கத்துக்கு அடிமைப்பட்டிருக்க மாட்டார்கள்.

வெளியே ஒரு நாயகனுடைய ஆக்கினைக்கு அஞ்சித் தன் உயிரை இழக்கத் துணிபவன் தனக்குத் தானே நாயகனாகும்போது, தர்மத்துக்காக உயிர் கொடுக்காமல் போகிறான்.

இங்ஙனம் நமது கிராமங்களில், ஆரோக்கியம், கல்வி, உயிரின்பம்—யாவும் வற்றிப் போய்விட்டன. 'கிராமத்தார் தம்முடைய சக்திகளைத் தாம் அறியும்படி செய்தாலொழிய அவர்களைக் காப்பாற்ற வேறு வழி இல்லை' என்று கருதி நான் ஒரு கிராமத்தில் பிரயத்தனம் செய்தேன். அந்தக் கிராமத்தில் ஒரு பக்கத்துக்கு ஜலம் ஒரு துளிக்கூடக் கிடையாது. தீப்பிடித்தெரிந்தது. தழல் வீசி எரிகையிலே, கிராமத்தார் கூடியழுவதையொழிய வேறொன்றும் செய்யமாட்டாமற் போயினர். நான் அவர்களிடம் சொன்னேன்:— "நீங்கள் பிரயாசை கொண்டு கிணறு தோண்ட இணங்

கினால் கல் சுண்ணாம்புக் கிரயம் நான் கொடுக்கிறேன்" என்றேன். கஷ்டத்தில் பாதி அவர்களுடையதாகவும் புண்ணியம் முழுவதையும் நான் கொள்ளையிட விரும்பிய தந்திரத்தை மெச்சித் தங்களால் முடியாதென்று சொல்லி விட்டார்கள். அந்தக் கிணறு இன்னும் தோண்டியாக வில்லை. தண்ணீர்ப் பஞ்சம் அங்கே தீராமலேதான் இருக்கிறது. அக்கினி உத்ஸவம் அடிக்கடி நடந்து வருகிறது.

ஆகவே நமது கிராமக் கஷ்டங்கள் தீராமல் இருப்பதன் காரணம் யாதெனில், ஒரு காரியம் செய்வதற்கு மோக்ஷ புண்ணியத்தை விரும்பிச் செய்தாலொழிய வேறு வழியில்லை. ஆகவே, ஒவ்வொரு குறையும் தெய்வம் தானே வந்து தீர்க்க வேண்டும்; அல்லது மோக்ஷத்தை வேண்டி யாராவது செய்தாலுண்டு. மற்றப்படி தாகத்துக்கு ஜலம் இல்லாமல் செத்தாலும் சாவார்களேயன்றி, கிராமத்தார் தாமாக ஒரு கிணறு தோண்டிக்கொள்ள மாட்டார்கள். இதற்குக் கிராமத்தாரைக் குறை கூறுவதிற் பயனில்லை. 'மாமூல் கிழவி' அபினி கொடுத்து அவர்களைப் பாதி தூக்கத்தில் வைத்திருக்கிறாள். ஆனால், படித்த பிள்ளைகள் அந்தக் கிழவியின் ஸ்துதியைப் பாடக் கேட்கும்போது, எனக்கு ஆச்சர்ய மிகுதியால் பேச முடியாமல் போகிறது. "ஆஹா! இந்தக் கிழவி எத்தனை நல்ல மருத்துவச்சி! இவள் கைக்குள் நமது தேசம் இருப்பது மஹிமையன்றோ! இவள் மடியிலிருந்தபடியே நமக்கு ஸ்வராஜ்யச் செங்கோலும் கிடைத்துவிட்டால், எத்தனை நன்றாக இருக்கும்!" என்கிறார்கள்.

பட்டினி, தொத்து வியாதி, பஞ்சம், இவை தலை தூக்கி ஆடுகின்றன. நம்மைப் புலியும் திருடரும் அடிக்காமற் காத்துத் துப்பாக்கி வைத்துக்கொள்ளும்படி ராஜாங்கத்தார் அனுமதி கொடுக்காமல் இருப்பதுபோலவே, மேற்கூறிய துன்பங்களைத் தடுப்பதற்குரிய உபாயங்களைத் தேடவொட்டாமல் ஜாதியாசாரத் தலைவர் தடுக்கிறார்கள். ஆனால் இவர்கள் நம்மிடம், "தற்காப்புக்கு நீங்கள் கருவிகள் தேடலாமே. நீங்கள் ஸயின்ஸ் படித்து அதைத் தற்காப்புக்கு உபயோகப்படுத்தக் கூடாதென்று யாவரும் தடுப்பாரில்லையே" என்று கூறலாம். உண்மைதான்.

'தற்காப்புக்குரிய ஆயுதங்கள் நமக்குக் கிடைக்கவொட்டாமல் செய்துவிட்டார்கள்' எனில் அதிசயோக்தியாகும். ஆனால் அவற்றில் பயிற்சிபெற இடமில்லாமல் செய்வதற்கு வேண்டிய முன் ஜாக்ரதை எத்தனை உண்டோ அத்தனையும் பண்ணி வைத்திருக்கிறார்கள். நமது தேசத்தார் ஒரு பக்கம், ராஜாங்கத்தார் ஒரு பக்கமாக, நம்மைச்சூழ ஏற்படுத்தி இருக்கும் எண்ணற்ற விதிகளைக் கடக்கக்கூடாதென்ற பயத்தினால் நாம் சக்தி இழந்து, நம்மிடம் துப்பாக்கி இருந்தால், திருடரால் ஏற்படும் விபத்தைக் காட்டிலும் துப்பாக்கியால் அதிக விபத்து நமக்கே உண்டாகும்போல் இருக்கிறது.

இந்தக் கஷ்ட தசையில் நாம் இருப்பதற்கு ஆங்கியர் அரசாட்சியே காரணம் என்று சொல்லும் கக்ஷியை இப்போது ஆராய்ச்சி செய்வோம். பிரிட்டிஷ் ராஜ்யத்தின் வேர்க்கொள்கை யாதெனில், 'ஜனங்கள் ஆட்சியில் கலக்க

வேண்டும்' என்பதேயாம். அந்நியர் யாரும் பொறுப்பின்றி அரசு செய்யும் முறைமையை அக்கொள்கை கண்டிக்கிறது. நம்மிடம் இந்த விஷயத்தை அவர்கள் மறைக்கவில்லை. ஸர்க்கார் பள்ளிக்கூடங்களில் இதை நமக்குப் பஹிரங்கமாகக் கற்றுக் கொடுக்கிறார்கள். இதைப் பரீக்ஷைக்கு உருப் போடுகிறோம். இந்த அறிவை இனி நம்மிடமிருந்து பறிக்க இடமில்லை. நம்முடைய காங்கிரஸ் சபைகளும் சங்கங்களும் இந்தக் கொள்கையை ஆதாரமாக உடையன. ஐரோப்பிய ஸயின்ஸ் தன் இயற்கையாலேயே எல்லாருக்கும் கிடைக்கத்தக்கதாக இருப்பதுபோல், மேற்படி பிரிட்டிஷ் ராஜ்யக் கொள்கையும் தன் இயற்கையாலேயே பாரததேசத்து ஜனங்களின் அங்கீகாரத்தை வேண்டுகிறது. ஹிந்து தேசத்துப் பிள்ளைகளுக்கு ஐரோப்பிய ஸயின்ஸ் கற்றுக் கொடுக்கக் கூடாதென்று சொல்லும் ஆங்கிலேயர், ஒன்று, அல்லது பத்து, அல்லது ஐந்நூறு பேர் இருக்கக்கூடும். ஆனால், அந்த ஸயின்ஸ் (சாஸ்திரமோ) பிறப்பிடத்தையும் நிறத்தையும் பொருட்டாக்காமல் எல்லோரும் வந்து தன்னைப் படித்துப் பயன் பெறும்படி கூவியழைத்து அவ்வாங்கிலேயரை அவமானப் படுத்தும். அதுபோல், ஐந்நூறு அல்லது ஐயாயிரம் ஆங்கிலேயர் பிரசங்கங்களிலும் பத்திரிகைகளிலும் ஹிந்து தேசத்தார் ஸ்வராஜ்யம் பெறுவதைத் தடுக்க வேண்டுமென்று உபந்யஸித்தாலும், பிரிட்டிஷ் ராஜ்யக் கொள்கையானது பிறப்பிடத்தையும் நிறத்தையும் பொருட்டாக்காமல் எல்லோரும் தன்பக்கம் சேரும்படி கூவி அவ்வாயிரக் கணக்கான ஆங்கிலேயர் சொல்லும் வார்த்தையை இகழ்ச்சிக்கு இடமாக்குகிறது. "பிரிட்டிஷ்கொள்கை

கள் நம் போல்வார்க்குத் தகுதியில்லை" என்ற அநாகரீகமான மறுமொழி சொல்லக்கூடும். பிரம்ம ஞானமும் விரிந்த வாழ்வும் சூத்திரனுக்குக் கிடையாதென்று முன்பு பிராமணர் விதிபோட்டது போலேதான்.

ஆனால், பிராமணன் தனது ஸ்தானத்தை முன் ஜாக்கிரதையாலே கெட்டிப்படுத்திக் கொண்டான். புறத்தை ஒடுக்கு முன்பு ஜனங்களின் அறிவை ஒடுக்கி விட்டான். அறிவின் வேர்களைச் சூத்திரனிடமிருந்து பறித்துவிட்டபடியால் இவன் ஸ்வதந்தர காரியம் செய்ய ஸாத்யப்படவில்லை. பிறகு சூத்திரனுடைய தலை பிராமணனுடைய பாத தூளியிலே ஈடுபட்டிருப்பதை ஸாவதானமாகக் காக்க வேறு சிரமம் வேண்டியதில்லை ஆயிற்று. ஆனால் நம்முடைய பிரிட்டிஷ் ராஜாங்கத்தார் விடுதலைக்கு வழி காட்டும் அறிவுக் கதவை முற்றிலும் அடைத்து விடவில்லை. அதிகாரிகளுக்குப் பச்சாத்தாபம் உண்டாய், இங்கொரு கதவை அங்கொரு கதவை அடைப்பதாகிய முயற்சியை மிகத் தாமஸமாகக் கைக்கொண்டிருக்கிறார்கள். இருந்தாலும், 'சுகத்தை உத்தேசித்துத் தர்மத்தைக் கைவிடுதல் ஆத்ம சக்திக்கு வழியில்லை' என்பதை அவர்களாலேகூட மறக்கலாவதில்லை.

பிரிட்டிஷாருடைய உட்குணத்தில் நம் ஸ்வதந்திரங்கள் புதைந்து கிடக்கின்றன. இந்த ஸந்தோஷகரமான உண்மையை நமது முழுவலிமையுடன் புத்தியில் நிறுத்திக் கொண்டோமானால், அது நிறைவேறுவதற்காக, நாம் கஷ்ட நஷ்டங்களுக்கு உட்படுதல் எளிதாகும். பழைய

சாஸ்திரப்படி "அடங்கி நடப்பதை"க் கைப்பிடித்தோமானால், நமக்கு மகத்தான ஆசாபங்கம் நேரிடும். இரண்டு வகைகளில் ஏற்கனவே இது வெளிப்பட்டு நிற்கிறது. ரஹஸ்யக் கூட்டத்தாரின் கொடுஞ் செயல்கள் ஒருவகை. நம்முடைய கூட்டத்து ராஜ தந்திரிகள் தர்க்கம் பண்ணுகிற வியர்த்தம் மற்றொரு வகை. "இந்த வைஸ்ராய் நல்லவரா? அந்த வைஸ்ராய் நல்லவரா? 'மார்லி' வந்தால் நமக்கு நிறையச் சீர்திருத்தம் கிடைக்குமா, கிடைக்காதா? வீட்டுப் பூனை காட்டுக்குப் போனால், காட்டுப் பூனைபோலே காட்டுத் தனமாய்விடுமா, ஆய்விடாதா?"

இருந்தபோதினும், நாம் மனுஷ்ய ஜாதியினிடம் அவநம்பிக்கை கொள்ளக்கூடாது. பிரிட்டிஷ் ராஜ்யத்தில் அதன் வலிமை ஒன்று மாத்திரமே, பெரிதன்று. அதன் அஸ்திவாரக் கொள்கைகள் அதனிலும் பெரியன என்பதை நாம் மன்தார ஒப்புக்கொள்ளுகிறோம். அடிக்கடி இதற்கு விரோதமாக நடக்கக்கூடும், 'லோபம் அதிகார விருப்பம், கோபம், பயம், கர்வம் இவை எல்லாம் தொழில் செய்வதை நாம் பார்க்கலாம்' என்பது மெய்தான். மஹிமையும், தீரமும், விரதமும், பக்தி விசுவாசங்களும் உடையவராகிய ராஜ ஜாதியாரிடத்தில் உள்ள நல்ல அமிசங்களுடன் நாம் ஒட்டலாம். அங்கே சத்துருக்கள் நம்மை எங்ஙனம் தாக்கியபோதிலும், நாம் வெற்றிபெறுவோம். நினைத்த பொழுதெல்லாம், புற வெற்றி கிடைக்காவிடினும், அகவெற்றி நிச்சயம். நாம் அற்பர்களாய்ப் பயம் கொண்டிருந்தால், நம்மை ஆளுவோரின் பெரிய கொள்கைகளையெல்லாம் நமது மட்டம் ஆக்கிவிடுவோம்.

அவர்களுடைய கெட்ட குணங்களே தலை தூக்க இடங் கொடுப்போம். பிராமணன் தன்னைக் கீழ் ஜாதி என்றதைச் சூத்திரன் எப்பொழுது ஒப்புக்கொண்டானே, அப்போதே பிராமணனுக்குப் பள்ளம் தோண்டியாய் விட்டது. எளியவன் வலியவனுக்குச் செய்யும் தீமை வலியவன் எளியவனுக்குச் செய்யும் பகைமைக்கு நிகராகக்கூடும்.

ஒருமுறை ஒரு உயர்ந்த ஸர்க்கார் உத்தியோகஸ்தர் என்னிடம், "போலீஸ் கொடுமையைப்பற்றி எப்போதும் முறையிடுகிறீர். என் மட்டில், நீங்கள் சொல்வதை நம்பக்கூடாதென்ற எண்ணமில்லை. ஆனால் பெயர்வழி, விஷயம், எல்லாம் கொண்டுவந்து ருஜுப்படுத்தும்" என்றார். உண்மை தான். எல்லா அநியாயங்களையும் பஹிரங்கமாகத் தூற்றி, உலகறிய மீட்டும் மீட்டும் முறையிடத்தக்க தைரியரிவான்கள் சிலரேனும் நமது தேகத்துக்கு வேண்டும். ஆனால் அற்ப போலீஸ் சேவகனுக இருந்தபோதிலும் அவன் பின்னே பூதாகாரமகன ராஜ்யாதிகாரம் ஒன்று இருக்கிறது. அவன்மேல் குற்றஞ் சாராதபடி காபாற்றுவதற்காகப் பொதுப் பணத்திலிருந்து ஆயிரக் கணக்காகச் செலவு செய்யக்கூடுமென்ற பீதியை மறுக்கமுடியாது. நம்மை நசுக்கினால் பொறுத்துக் கொண்டிருப்பதே நம் உடம்புக்கு நல்லதென்று சில அதிகாரிகள் சொல்வது மாதிரிதானே? இல்லாவிட்டால் அதிகாரிகளுடைய "பிரெஸ்டிஜ்" (கௌரவம்) குறைந்து போகாதோ? "பிரெஸ்டிஜ்" நம்மைப் பயமுறுத்தின

பழம் பூச்சாண்டி; எப்போதும் நம்முடைய செவியைப் பிடித்துக்கொண்டிருக்கும் நாயகன்; பேஷ்லா காவியத் திற்குத்குரிய மாஸா; கவி சங்கனுடைய சண்டி; அதன் பூஜைக்குப் போகையில் தர்ம நியாயங்களை அவமதித்து இடறிக்கொண்டு போகவேண்டும்; இல்லாவிட்டால் அது நம்மை இடறும். எனவே, "ப்ரெஸ்டிஜ்" தேவதைக்கு நமஸ்காரம் போடு.

யா தேவீ ராஜ்யசாஸனே
'ப்ரெஸ்டிஜ்' ரூபேண ஸம்ஸ்திதா
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை
நமஸ்தஸ்யை நமோ நம:

ஆனால் இது வெறும் அவித்தை; மாயை தவிர வேறொன்றும் இல்லை. நம்முடைய புறக்கண்ணுக்குத் தோன்றிய போதிலும் நாம் அதை நம்பக்கூடாது. உண்மை அதன் பின்னே நிற்கிறது. அது யாதெனில், "நம்முடைய ஆட்சி, நம்முடைய விவகாரம்." இந்த உண்மையிலே தான் பிரிட்டிஷ் ராஜ்யத்துக்கு வலிமை உண்டாகிறது. இதுவே நமக்குப் பலம். பிரிட்டிஷ் கொள்கைகளை நாம் தைரியமாக நம்பாவிட்டால், போலீஸ் நம்மை நசுக்கிக்கொண்டே தான் இருக்கும். மாஜிஸ்ட்ரேட்டால் நம்மைக் காக்க முடியாது; "ப்ரெஸ்டிஜ்" தேவதை மனுஷ்ய பலி கேட்டுக்கொண்டே இருக்கும். இங்குச் சிலர்:—"பலத்தைக் காட்டிலும் தர்மம் பெரிதன்று; பாரமார்த்திகமாகப் பேசலாமே யொழிய, நடையில் வெளியிட்டால் ஆபத்து வரும்" என்று கூறி ஆக்ஷேபிக்கலாம். ஸங்கடம் வரக்கூடும். இருந்தாலும்,

நாம் நம்பிக்கைப்படி செய்யவேண்டும். 'ஸ்வதேசத்தாரே லஞ்சம் வாங்கிக்கொண்டும் பயந்தும் உமக்கு விரோதமாக ஸாக்ஷி சொல்வார்களே!' என்று சொல்லக்கூடும். இருந்தாலும், உண்மை என்று கண்டுகொண்டதை வெளியிட்டுச் சொல்ல வேண்டும். 'ஸ்வதேசத்தாரே உம்மை மறந்து நின்று தலையில் அடிப்பார்களே.' லஞ்சத்தையும் ஸ்துதியையும் வேண்டிச் செய்யலாம்; எனினும், நாம் உண்மையை நம்பவேண்டும். "அவ்வளவு தூரம் நம்பலாமா?" சரியாக, அவ்வளவும் நம்பியாக வேண்டும்; துளி குறைந்தாலும் போதாது.

ராஜாங்கத்தாரிடம் பெரிய விஷயங்கள் கேட்கிறோம். ஜனங்களுக்குப் பெரிய வரங்கள் தரவேண்டும். இல்லாவிட்டால், ராஜாங்கத்தாரிடம் செய்யும் பிரார்த்தனை பயன்படாது.

'எல்லோருமே வீரர் அல்லர்; பயந்தவர்கள் உலகத்தில் உண்டு' என்பதை நான் அறிவேன். இருந்தாலும் எல்லாத்தேசங்களிலும், எல்லாக் காலங்களிலும் சிலர் தமது ஜாதியின் இயற்கைப் பிரதிநிதிகளாகப் பிறந்து, தேசத்தின் கஷ்டங்களைத் தாம் பொறுக்கிறார்கள். எதிர்ப்பை எல்லாம் வெட்டிப் பாதை போட்டு, மற்றவர் பின் வருவதை எளிதாக்குகிறார்கள்; மனுஷ்ய ஜாதிகளின் வெளி நடைகளில் எத்தனை விபரீதங்கள் இருப்பினும், அவற்றைப் பொருட்டாக்காமல் அதனிடம் நம்பிக்கை செலுத்துகிறார்கள்; நிஜாந்தகாரத்தினிடையே கண் விழித்து உதயம் வருமென்று காத்திருக்கிறார்கள். கோழைகளின் பயத்தை நகைத்து,

ஸ்வல்ப மப்யஸ்ய தர்மஸ்ய
த்ராயதே மஹதோ பயாத்

அதாவது, 'இந்தத் தர்மத்தில் சிறிதளவு பெரிய பயத்தினின்றும் காப்பாற்றுகிறது' என்ற வாக்யத்தை உரைக்கிறார்கள். ராஜ்யத்தில் உண்மை அம்சம் உண்டானால் அதை வணங்குவோம்; பாபத்தை வணங்கோம், பயத்தை வணங்கோம்.

ஒருவனுடைய குழந்தைக்கு உடம்பு சௌஸ்தமில்லை; ஐரோப்பிய டாக்டருக்குப் பெரிய தொகை கொடுத்து வரவழைத்தான்; டாக்டரும் நாட்டு மந்திர வாதியைப் போல உச்சாடனங்கள் செய்யத் தொடங்கினான். "சிகிச்சை செய்யும்; இந்தக் காரியத்துக்கு உம்மை அழைக்கவில்லை" என்று இவன் சொன்னான்; டாக்டர் கோபத்துடன், 'உனக்கென்ன தெரியும்? நான் வைத்தியன்; நான் எது செய்தாலும் அதுவே வைத்தியம்' என்றான். அப்போது இவன், 'உன்னைக் காட்டிலும் உன் தொழிலே பெரிது; நான் பணம் கொடுத்தது தொழிலைக் கருதி' என்கிறான். டாக்டர் இவனை அடித்துக் கீழே தள்ளிப் பணத்தை இடுப்பில் செருகிக்கொண்டு போவதாகப் பாவனை செய்துகொள்வோம். அவன் வண்டி ஸவாரி செய்து கொண்டு வீட்டுக்குப் போகையில் அவன் மனமே அவனைச் சீயென்று சொல்லாதா? அதுபோல, இப்போது பிரிட்டிஷ் அதிகாரிகளின் உத்தரவுகளுக்கு உட்படாமல், பிரிட்டிஷ ஜாதியின் ராஜ்யக் கொள்கைகளை நான் அங்கீகாரம் செய்வதை உத்தேசித்து, ஒருவேளை இன்று என்னை

அதிகாரிகள் கஷ்டப்படுத்தலாகும்; ஆனாலும், எனக்கு நாளை வெற்றியுண்டாகும்.

நூற்றைம்பது வருஷம் பிரிட்டிஷ் ஆட்சி நடந்த பிறகு, இன்று சென்னை மாகாணத்தாரின் கஷ்டங்களுக்கு வங்காளத்தார் இரக்கப்படக்கூடாதென்று கட்டளை போடுகிறார்கள். பிரிட்டிஷ் ராஜ்யத்தின் முதலாவது நன்மை என்னவென்றால், 'அதனால் பம்பாயும், சென்னைப் பட்டணமும், வங்காளமும், பஞ்சாபும் ஐக்கியப்பட்டு வருகின்றன' என்று சொல்லக் கேள்வியுண்டு. மேற்குக் கண்டத்தில் பிரிட்டிஷார் பெல்ஜியத்துக்காகவும் பிரான்ஸுக்காகவும் இரத்தத்தைச் சிந்தி யமனை எதிர்க்கிறார்கள் என்றும் வதந்தி. அதே மூச்சிலே, சென்னைப் பட்டணத்தாரின் சுகதுக்கங்களை வங்காளத்தார் கவனிக்கக்கூடாதென்று சொல்லலாமா? அதை எத்தனை உரக்கக் கூறியபோதிலும் மனதிற்குள்ளே வெட்கம் உண்டாகாதோ;

அதிகாரிகளின் ரஹஸ்ய லஜ்ஜைக்கும் நம்முடைய பஹிரங்க உல்லங்கனத்துக்கும் இடையே ஒரு பாலம் போடவேண்டும். இங்கிலீஷ்காரர் இந்தியாவிற்குக் கொடுத்த வாக்கினால் கட்டுப்பட்டிருக்கிறார்கள். ஐரோப்பிய நகரத்தின் பிரதிநிதியாகிய இங்கிலாந்து இந்தியாவிற்கு வந்தது. பிரதிநிதியாகிய இங்கிலாந்து கொடுத்த வாக்குறுதியே மேற்படி ஐரோப்பிய நாகரிகத்தின் ஞான மந்திரம் இதுவே. அவர்களுடைய ராஜ்யத்துக்குப் பலம். இதை மஹிமைப் படுத்துவோம். 'இந்தியாவை

கச்க்கும் பொருட்டு ஆங்கிலேயர் இங்கு வரவில்லை' என்பதை அவர்கள் மறக்க நாம் இடம் கொடுக்கமாட்டோம்.

ஏதேனும் ஒரு பெரிய ஜாதியாருக்குப் பெரிய அனுபூதி உண்டாயின், அது பிறர்க்கும் கொடுக்கத்தக்கது. லோபத்தினால் தனக்கே நஷ்டம் உண்டாகும். ஸயன்ஸும் மனுஷ்ய உரிமைகளும் ஐரோப்பாவின் அனுபவப் பயன். இந்தச் செல்வத்தை நமக்குக் கொடுக்கும் பொருட்டாகத் தெய்வம் இங்கிலாந்தை நம்முடைய கரைகளில் கொண்டுவந்து சேர்த்தது. இந்தக் கடமையை நிறைவேற்றும்படி அவர்களை வற்புறுத்துவது நம்முடைய கடமை. ஒருபாலார் தம்முடைய கடமையைச் செய்யாவிட்டால், இருபாலாருக்கும் மறதியும் வீழ்ச்சியும் உண்டாகும்.

இங்கிலீஷ்காரர் தம்முடைய தேச சரித்திரத்தைத் திருஷ்டாந்தமாகக் காட்டி, "நாங்கள் நெடுங்காலம் போராடி உழைத்ததன் பயனாக மிகவும் தாமஸமாகவே எங்களுக்கு ஸ்வராஜ்யம் கிடைத்தது" என்று சொல்லக் கூடும். இருக்கலாம்! வழிகாட்டுகிற ஜாதிக்குக் கஷ்டம். பின்னே வருகிற ஜாதிக்குச் சுலபம். திருஷ்டாந்தமாக, அமெரிக்காவில் வங்காளி மாணாக்கர்கள் தாமே யந்திரங்கள் செய்கிறார்கள். இதற்காக ஆதிகாலத்தில் அடுப்புச் சட்டியிலிருந்து நீராவிக்கருவி தோன்றிய நாள் முதல் இன்று வரையில் படிப் படியாக வந்த நூறு ஆண்டு காலம் இவனும் படித்துக்கொண்டுவர வில்லை. ஐரோப்பாவில் பலகாலம் வளர்த்த பயிரை ஜப்பான் ஒரு க்ஷணத்தில்

கொண்டு போய் வைத்து நேரே பயிரிட்டுவருகிறது. ஸாமர்த்தியம் குறைவென்றால், அதற்கு விரைவாகவே ஸ்வராஜ்ய வழக்கத்தைக் கைக்கொள்ளவேண்டும். 'ஒருவனிடம் ஒரு திறமை இல்லை' என்று நாம் முன்னதாகவே தீர்மானம் செய்தால் அப்படியே இல்லாமல் போகும். அவன் திறமை நம்முடைய கண்ணுக்குத் தெரியாமலே போகும். நம்மவரை நாமே இகழ்ந்து அவர்களிடம் நன்மை பிறப்பதை நாம் தடுத்து, அவர்களை உலகம் இகழ வைத்தால், அதைவிடப் பெரிய குற்றம் வேறொன்றும் இல்லை.

சரித்திரத்தில் ஸூர்யோதயம் ஆகிறபோது கிழக்கே ஒளி ஊர்ந்தூர்ந்து வராது; பாய்ந்து வரும். எட்டுத் திசையையும் உடனே நிரம்பச் செய்யும். 'உலகத்து ஜாதியார் அங்குலத்தின்மேல் அங்குலமாக மேன்மைக்கு நகர்ந்துதான் செல்லவேண்டும்' என்று விதிபோட்டால் எந்த ஜாதிக்கும் மேன்மை நேரிடாது. தகுதி உண்டான பின்புதான் விடுதலையை விரும்பலாமென்று விதி போட்டால், எந்த ஜாதிக்கும் விடுதலை உண்டாயிராது.

ஐரோப்பியர் தம்முன் ஜனாதிகாரம் உண்டென்று புகழ்ச்சி சொல்லிக் கொள்ளுகிறார்கள். ஐரோப்பியர் அமெரிக்கர் வெளி டம்பத்துக்குள் மறைந்து கிடக்கும் அழுகற் சேற்றைக் கீற விருப்பமில்லை. இவர்களுக்குத் தலை அதிகாரமாக ஒன்றை நாட்டி, மேற்படி சேறு முழுதும் கழுவின பிறகுதான், ஜனாதிகாரம் நடத்தலாமென்று விதி போட்டால், சேறும் நீங்காது; நீங்குமென்ற நம்பிக்கைக்கும் இடம் இராது.

இப்படி நமது ஜாதியாசாரங்களிலும், தனி நாட்டங்களிலும், பிழைகள் இருக்கத்தான் செய்கின்றன. அவற்றை நான் மறைக்க விரும்பினாலும் என்னால் முடியாது. எப்படிக்கும் நம்மை நாமே ஆளவேண்டும். ஒரு விளக்கு மங்கினதைக் குறித்து, மற்றொரு விளக்கை ஏற்றாமல் தவிர்க்கவிடலாகாது. மனுஷ்ய ஜாதி மொத்தத்துக்கே பெரிய திருவிழா நடக்கிறது. எல்லா நாட்டு விளக்குகளும் எல்லா விஷயங்களிலும் ஒரே மாதிரியாக இருந்தாலும், ஊர்கோலம் முன்னே செல்லுகிறது. நம்முடைய விளக்குச் சற்றே அவிந்தால் இங்கிலாந்தின் விளக்கிலே சற்றுப் பற்றவைத்துக் கொள்ளலாகாதோ? இதற்கு ஏன் கோபம்? இதனால் பிரிட்டிஷ் ஒளி குறையாது. உலகத்தின் ஒளி அதிகப்படும்.

திருவிழாவில் தெய்வம் நம்மைக் கூப்பிடுகிறது. பூசாரி தடுக்க நாம் இடம் கொடுக்கலாமா? சிறு பணக்காரர் வந்தால் பூசாரி பல்லைக் காட்டுவான். ஆஸ்திரேலியாவும், கனடாவும் வந்தால் எதிர்கொண்டழைத்து நல்வரவு சொல்வான். திருவிழாக் கடவுளுக்குக் கண் குருடில்லை. இப்படிப்பட்ட வேற்றுமைகளை அவர் பொறுக்கமாட்டார். உள்ளத்திலே பாவம் வெட்கமாக வந்து சுடாவிட்டால், வெளியே தெய்வக்கோலமாக வந்து சுடுகின்றது.

பிரிட்டிஷாரும் நாமும் கலந்து இக்காரியம் செய்ய வேண்டும். வங்காளிகளிடம் எனக்கு நம்பிக்கைதான். ஹார்லிபார் கிழவேஷம் போட்டுக்கொண்டு கீழ்ப்பார்வை பார்க்கக்கூடாது. ஆங்கிலேயருக்குள் சில மஹாத்மாக்கள்

தோன்றி இங்கிலாந்தின் சரித்திரப் பயனை நாமும் அனுபவிக்கும்படி பேசி சில ஜனங்களிடம் அவமானப் படுகிறார்கள்.

இந்தியாவிலும் பிறர் சினத்தையும் தமர் நகைப்பை யுங் கருதாமல், தோல்விக்கு அஞ்சாமல், ஆண்மை காட் டும் ஆண்மக்கள் வேண்டும்.

நமது தேசத்தின் குலதெய்வம், என்றும் விழித் திருக்கும் நித்யதேவன், நம்முடைய ஜீவன் இப்பொழுது வெளியதிகாரிகளுக்குப் பயந்து குருட்டாசாரம் என்ற தளை பூண்டு புழுதியில் கிடப்பதை நீக்கி, அதன் ஸஹஜ நிராகார நித்ய ஜயாமிர்த ரூபமான ஆத்ம ரூபத்தில் சேரும்படி அந்த ஈசன் கூறுகிறான். அடிமேல் அடி யடித்து 'ஆத்மானம் வித்தி', 'தன்னை அறி' என்கிறான்.

காலத்துக்கு முந்தியே கிழவனாகி, குருட்டு நம்பிக் கை என்ற மூடச்சுமையால் முதுகு வளைந்துபோய், தன்னைத்தான் நம்பாத கோழையே; கேள்!

நமக்குள்ளே சில்லறைச் சண்டை, அற்பப்பகை, அற்பப் பொறாமைகளுக்கெல்லாம் இதுவன்று காலம். கஞ்சிக்குப் பிச்சைக்காரர் சண்டையிடுவது போலே, சிறு தயவுகளை விரும்பி நமக்குள்ளே சண்டை போடும் காலம் சென்றது. இருட்டு மூலைக்குள் உட்கார்ந்துகொண்டு, நம்மை 'நாமே மஹான்கள்' என்று பாவனை செய்வதில் பயனில்லை. உலகத்தாரின் சபைகளில் நம்முடைய கர்வம் சிறுமைப்படுகிறது. சக்தி ஹீனர் போலே நாம் பிறரைக்

குற்றங் கூறுதல் கூடாது. பல நூற்றாண்டு செய்த பாவம் பெருஞ் சுமையாய், நமதாண்மையை நசுக்கி நம் அறிவை மயக்கிவிட்டது. அவற்றின் பெருஞ் சுமையைத் தள்ளி எறிய ஒரு பெரிய முயற்சி செய்யக் காலம் இதுவே யாம். நாம் முன்னே போகவொட்டாமல் இந்தச்சுமை பின்னே இழுக்கிறது. சென்றது வருவதை வசியவித்தை போலே கலங்கச் செய்கிறது. சென்ற காலப் புழுதியுஞ் சருகும் புதிய உதயத்தை மறைக்கின்றன நம்முடைய புதிய இளமைத் தொழிலே அவை மூடுபனி போலே மறைக் கின்றன. நிஷ்பிரயோஜனம் என்ற அவமானத்திலிருந்து தப்ப விரும்பினால், இந்தச் சுமையைக் கூசாமல் வீசி எறிந்துவிடவேண்டும். மனுஷ்ய ஜாதி எப்போதும் முன்னே நோக்கிச் செல்லுகிறது; எப்போதும் விழிப் புடன் புது நிலங்களைத் தேடி மரணத்தை வெல்லுகிறது. ஜகத்தின் பெரிய சிற்பிக்கு வலக்கை போன்றது. உண் மையைக் கெஞ்சி அறிவுச் சுடர் கொளுத்திய வீதி வழியே செல்லும்பொழுது, யுகத்துக்கு யுகம் வெற்றி கொண்டு முன்னேறும்போது, உலகம் முழுவதும் எதி ரொலி கேட்கத் தனி ஆரவாரம் உண்டாகிறது. இந்த முதுகுச் சுமையைக் கூச்சப்படாமல் வீசி எறிந்துவிட வேண்டும்.

புறத்திலிருந்து நம்மீது இடைவிடாமல் அவமான மும் கஷ்டமும் பட்டுப்பட்டுத் தீண்டலாயிருப்பதைச் சுத்தி பண்ணித் தீர்க்கவேண்டும். 'தானாக விரும்பித் தான் உழைத்தல்' என்னும் ஹோமத்தைச் செய்து, சுத்தி பண்ணவேண்டும். அந்த யாகத் தீயில் நம்முடைய

பாவங்கள் வெந்துபோம். அஞ்ஞானப் புகை விலகும்; சோம்பற் குணம் சாம்பராகும்.

பெரிய தீ தேவா! நீ தீரன், தேவன்; நம்மிடத்தே மஹத்தாயும், துக்கரஹிதமாயும், நாசரஹிதமாயும், நாயகமாயும், அமரமாயும் உள்ள அம்சத்துக்கு நீ நாதன்.

அதனை உனது ராஜ ஸிம்ஹாஸனத்துக்கு வலக்கையாக அழைக்கிறாய். நம்முடைய சோர்வும், அறியாமையும் பழியுற்று, நமதடிமைக் குணம் தண்டனைப் பட்டு நம்மினின்றும் பிரிந்து செல்க; நன்மை விளைக.

## புனர்ஜன்மம் - 2

பாப புண்ணியங்களுக்கு இணங்க மானிடரின் கர்மத்தினுடைய பலனாக அடுத்த ஜன்மத்தில் உயர்ந்த பிறப்பேனும் தாழ்ந்த பிறப்பேனும் கிடைக்கும் என்பது நமது தேசத்துப் பொது நம்பிக்கை. பாவம் செய்யும் ஒருவனை 'நீ அடுத்த ஜன்மம் மிருகமாகப் பிறப்பாய்' என்றால் அவனுடைய மனம் பதைக்கிறது. ஆனால், இந்த ஜன்மத்திலேயே மனிதர்கள் தாம் மிருகங்களைப்போலிருப்பதைக் கவனிப்பது கிடையாது. ஒவ்வொரு நிமிஷத்திலேயும் ஒருவன் நினைக்கும் நினைப்புகளும் செய்யும் செய்கைகளும் அவன் பலவிதப் பிறவிகளை அடைவதற்குக் காரணமாகின்றன. இந்த உலகத்திலேயே, இப்பொழுதே, ஒரே சரீரத்திலுள்ள ஒருவன் ஆயிரம் பிறவிகள் பிறந்து மடிகின்றான். 'ஒவ்வொரு க்ஷணமும் ஒவ்வொருவனும் பிறந்து பிறந்து பிறந்து மடிகின்றான்; ஒவ்வொரு க்ஷணமும் ஒவ்வொருவனும் பிறந்து பிறந்து

மாய்கிறான்' என்று கூறத்தகும். மிருகங்களைப்போன்ற மனிதர்களை நாம் பார்த்ததில்லையா? நம்மை நாம் கவனிக்குமிடத்து, எத்தனை விதமான மிருகங்களாக இருந்திருக்கிறோம் என்பது தெரியும். வஞ்சனையாலும், சூத்திரத்தாலும், சமயத்திற்கேற்பப் பலவித கபடங்கள் செய்து ஜீவிப்பவன் நரிதானே? ஊக்கமில்லாமல் ஏதேனுமொன்றை நினைத்துக்கொண்டு மனஞ்சோர்ந்து தலை கவிழ்ந்து உட்கார்ந்திருப்பவன் தேவாங்கு. மறைந்திருந்து பிறருக்குத் தீங்கு செய்பவன் பாம்பு. தாமதத்திலும் புகழிலும் விருப்பமில்லாமல், அற்ப சுகத்திலே மூழ்கிக் கிடப்பவன் பன்றி. சுயாதீனத்திலே இச்சையில்லாமல், பிறர்களுக்குப் பிரியமாக நடந்துகொண்டு, அவர்கள் கொடுத்ததை வாங்கி வயிறு வளர்ப்பவன் நாய். கண்ட விஷயங்களிலெல்லாம் திடீர் திடீர் என்று கோபமடைகிறவன் வேட்டை நாய். காங்கிரஸ் சபையிலேயும் சேர்ந்துகொண்டு, ஆங்கிலேய அதிகாரிகளுக்கும் ஹிதமாக நடக்க வேண்டுமென்ற விருப்பமுடைய 'மேத்தா' கட்சியைச் சேர்ந்தவன் வௌவால். அறிவுத்துணிவால் பெரும் பொருள்களைத் தேர்ந்து கொள்ளாமல், முன்னோர் சாஸ்திரங்களைத் திரும்பத் திரும்ப வாயினால் சொல்லிக்கொண்டிருப்பவன் கிளிப்பிள்ளை. பிறர் தன்னை எவ்வளவு அவமதிப்பாக நடத்தியபோதிலும், அவன் அக்கிரமத்தை நிறுத்த முயலாமல் தனது மந்த குணத்தால் பொறுத்துக்கொண்டிருப்பவன் கழுதை. வீண் மினுக்கு மினுக்கிட்டும்பம் பாராட்டுகிறவன் வான்கோழி. கல்வி யறிவில்லாதவனை மிருகக் கூட்டத்திலேயும் சேர்க்கலாகாது.

அவன் தூண். தான் சிரமப்படாமல் பிறர் சொத்தை அபகரித்து உண்ணுபவன் கழுகு. ஓர் நவீன உண்மை வரும்போது, அதை ஆவலோடு அங்கீகரித்துக் கொள்ளாமல் வெறுப்படைகிறவன் (வெளிச்சத்தைக் கொண்டு அஞ்சும்) ஆந்தை.

ஒவ்வொரு நிமிஷமும் சத்தியமே பேசித் தர்மத்தை ஆசரித்துப் பரமார்த்தத்தை அறிய முயலுகிறவனே மனிதனென்றும் தேவனென்றும் சொல்வதற்கு உரியவனாவான். மிருக ஜன்மங்களை நாம் ஒவ்வொருவரும் க்ஷணந்தோறும் நீக்க முயலவேண்டும்.

## உலக வாழ்க்கையின் பயன்

உலக வாழ்க்கையில் மானிடராலும் மற்ற உயிர்களாலும் விரும்பப்படும் மிகச் சிறந்த பயன் யாது? எப்போதும் மாறாத, எப்போதும் குறையாத இன்பமெய்தி வாழ்தல்.

இவ் வகையான இன்பத்தை எய்தும்பொருட்டாகவே மானிடர் கல்வி கற்பதும், பொருள் சேர்ப்பதும், தவங்கள் செய்தலும், அரசாள்வதும், களவு செய்தலும், கொலை செய்வதும், பேசுதலும், சிரித்தலும், ஆடுதலும், பாடுதலும், அழுதலும், உழுதலும் — எல்லாத் தொழிலும் செய்கிறார்கள். மனிதர் மட்டுமே யன்றி மற்ற எல்லா உயிர்களும் தாம் செய்யும் எல்லாத் தொழில்களையும் மேற்கூறிய ஒரே நோக்கத்தோடுதான் செய்கின்றன.

ஆயினும், இதுவரை மேற்படி நித்யானந்த நிலையை எந்த உயிரும் எய்தவில்லையென்பது தெளிவு. உலகத்தில்

தவிர்க்க முடியாத துக்கம் நிறைந்திருப்பதே, புத்தர் கண்ட தாகக் கூறப்படும் நான்கு உண்மைகளில் முதலாவது. இங்ஙனம் தீராத துன்பம் இருப்பதற்குக் காரணம் ஒவ்வோர் உயிரும் தன்னையேனும் பிற உயிர்களையேனும் பார்த்தும் கருதியும் ஓயாமல் அருவருப்பும் பயமும் அடைகின்றனவாதலே யாம்.

இங்ஙனம் ஒவ்வொரு உயிர்க்கும் தன்னிடத்தும் பிற உயிர்களிடத்தும் பொருள்களிடத்தும் தீராத சகிப்பின்மையும், பயமும், வெறுப்பும் கவலையும் ஏற்படுவதற்குக் காரணம், அநாதி காலந்தொட்டு ஜீவர்களுக்குள்ளே நிகழ்ந்துவரும் ஓயாத போராட்டத்தால் ஏற்பட்ட பழக்கந் தவிர வேறொன்றுமில்லை.

எல்லா வஸ்துக்களும், எல்லாக் குணங்களும் ஒன்றென்னும் வேதாந்த ஞானத்தால் இந்த அஞ்ஞானப் பழக்கத்தை நீக்கவேண்டும். மேற்படி ஞானம், உலகம் தோன்றிய கால முதலாக, எத்தனையோ பண்டிதர்களின் மனத்திலும் கவிகளின் மனத்திலும் உதித்திருக்கிறது; எத்தனையோ கோடிக்கணக்கான பாமரர் மனத்திலும் உதித்திருக்கிறது; எத்தனையோ கோடிக்கணக்கான பாமரர் மனத்துள் அவை அழுத்தாமல், வாயினால் பிதற்றிக் கொண்டு வந்திருக்கிறார்கள்.

ஆயினும் பண்டிதர்களுக்கும் பாமரர்களுக்கும் ஒருங்கே அந்த ஞானத்தை நித்ய அநுபவத்தில் கொண்டு வர முடியாதபடி, பழைய அஞ்ஞானம் தடுக்கிறது.

'அஞ்ஞானத்தை வென்றால், தீராத இன்பநிலையெய்தி வாழலாம்' என்று சாஸ்திரம், யுக்தி, அநுபவம்—மூன்று பிரமாணங்களாலும் விளங்குகிறது. எனினும், அந்த அஞ்ஞானப் பிசாசையும் அதன் குட்டிகளாகிய காமம், குரோதம், மோஹம், லோபம், மதம், மாத்ஸர்யம் என்ற ஆறு யமதூதர்களையும் வெல்ல மனிதனுடைய சித்தம் இடங்கொடுக்க மாட்டேன் என்கிறது. நாயைக் குளிப்பாட்டி நல்ல உணவளித்து நடு வீட்டில் வைத்தால், அது மறு படியும் அசுத்த உணவை விரும்பி வாலைக் குழைத்துக்கொண்டு ஓடத்தான் செய்கிறது. எத்தனை புதிய இன்பங்களைக் காட்டியபோதிலும், மனம் அவற்றில் நிலைபெறாமல், மீண்டும் ஏதேனும் ஒரு துன்பக்குழியிலே கண்ணைத் திறந்து கொண்டு போய்விழுந்து தத்தளிக்கத் தொடங்குகிறது.

மனம் கலங்கிய மாத்திரத்தில் புத்தி கலங்கிப்போய் விடுகிறது. ஆகையால், புத்தியை நம்பி எவனும் மனத்தைக் கலங்க விடாதிருக்கக் கடவன். மனத்தைக் கலங்க விடாமல் பயிற்சி செய்வதே எல்லாவித யோகங்களிலும் சிறந்த யோகமாகும். மனம் தவறி ஒரு துன்பக் குழியில் போய் விழுங்காலத்தில், புத்தி சும்மா பார்த்துக்கொண்டு நிற்கிறது. ஒரு வேளை புத்தி தடுத்தபோதிலும், அதை மனம் கவனிப்பதில்லை. புத்தியை மீறி உழலும் சக்தி மனத்துக்கு இருக்கிறது.

ஆதலால், மனம் துன்பத்தில் நழுவி விழத்தொடங்கும்போது, அதை உறுதி அல்லது தைர்யம் என்ற கடிவாளத்தால் பிடித்து நிறுத்திப் பழகுவதே சரியான

யோகப் பயிற்சியாம். இந்தப் பயிற்சி ஏற்படுத்திக்கொள்ளு மாறு சிலர் உலகத்தை விட்டு நீங்கித் தனியிடங்களி லிருந்து கண்ணை மூடிக்கொண்டு பழகுகிறார்கள். வேறு சிலர் மூச்சைப் பலஇடங்களில் கட்டியும் அவயவங்களைப் பலவாறு திருப்பியும் பழகுகிறார்கள்; தனியே இருந்து ஜபம் பண்ணிப் பார்க்கிறார்கள்.

இதிலெல்லாம் இது வேகாது. உலகத்தாருடன் கூடி எல்லா வகைகளிலும் மற்ற உலகத்தாரைப் போலவே தொழில் செய்துகொண்டு உலக விவகாரங்களை நடத்திய வண்ணமாகவே சஞ்சலத்துக்கு இடங்கொடாதபடித் தன் மனத்தைக் கட்டக்கூடிய திறமையே பயன்தரக்கூடியது. மற்ற முயற்சிகளெல்லாம் வீண்.

நீதி, ஸமாதானம், ஸமத்துவம், அன்பு இவற்றா லேயே இவ்வுலகத்தில் தீராத தைரியமும், அதனாலே தீராத இன்பமும் எய்தலாம். வேறு வழியில்லை

## உழைப்பு

ராமகிருஷ்ணர் 'நீயுண்டு, நீயுண்டு, நீயுண்டு, நானில்லை, நானில்லை, நானில்லை' என்று ஜபம் பண்ணி னார். அவர் சோம்பேறியா? ஆஹா! ராமகிருஷ்ணர் விவேகானந்தரை உண்டாக்கினார். விவேகானந்தரோ புதிய பாரத தேசத்தை உண்டாக்கினவர்களிலே முதல் வகுப்பைச் சேர்ந்தவர்.

'உழைப்பு எப்போதும் உண்டு. தெய்வமே சர ணென்றிருப்போர்' உள்ளத்திலே தாபமில்லாமல் உழைப்

பார்கள்; ஆனபடியால், அவர்களுடைய செய்கைக்கு வலிமை அதிகம், வேகம் அதிகம், உயர்வு அதிகம், அழகு அதிகம், பயன் அதிகம்' என்பது சொல்லாமலே விளங்கும்.

உழைப்பு எப்போதுமுண்டு. தெய்வத்தின் தலையிலே சுமையைப் போட்டுவிட்டு, நாம் கவலை, பயம் என்ற இரண்டு நாய்களுக்கும் உள்ளத்தை இரையாக்காமல், ஸந்தோஷமாகப் பாட்டுப் பாடிக்கொண்டு நிலத்தை உழுவது நல்லது. அழுதுகொண்டே உழுதால் உழவுக்குக் கெடுதி; மனத்துக்கு ஸந்தோஷமில்லை; மடத்தன்மை தவிர வேறொன்றுமில்லை.

உழைப்பு எப்போதும் உண்டு. இதிலே நான் என்ற பாரத்தை நீக்கிவிட்டு உழைத்தால், வேலை கிறு கிறு வென்று வேகமாகவும் பிழையில்லாமலும் நடக்கும். தன்னைத் தூக்கித் தலையிலே வைத்துக்கொண்டு வேலை செய்தால் வேலை குழம்பும்.

தன்னை மறந்து, வித்தையின் இன்பத்திலே தன்புத்தி முழுவதையும் செலுத்தி ஆடும் தாசி நன்றாக ஆடுவாள். "நாம் அழகோ அழகில்லையோ? வகுப்பு சரியாயிருக்கிறதோ இல்லையோ? நெற்றிப் பொட்டு நேரே விழுந்திருக்கிறதோ என்னவோ? பாதி ஆட்டத்தில் முன்னொருமுறை வயிற்று வலி வந்ததுபோல் வந்துவிடுமோ என்னவோ?' என்று தன் சித்தம் குழம்பிப் போயிருந்தால் ஆட்டம் நேரே வராது.

தன்னை மறந்து சகல உலகினையும்
மன்னி நிதங்காக்கு மகாசக்தி—அன்னை
அவளே துணையென் றமைவெய்தி நெஞ்சம்
துவளா திருத்தல் சுகம்.

நெஞ்சிற் கவலை நிதமும் பயிராக்கி
அஞ்சிஉயிர் வாழ்தல் அறியாமை—தஞ்சமென்
வையமெலாங் காக்கு மகாசக்தி நல்லருளை
ஐயமறப் பற்றல் அறிவு.

வையகத்துக் கில்லை மனமே நினக்குநலம்
செய்யக் கருதியிவை செப்புவேன்—பொய்யில்லை
எல்லா மளிக்கும் இறைநமையுங் காக்குமெனும்
சொல்லால் அழியும் துயர்.

எண்ணிற் கடங்காமல் எங்கும் பரந்தனவாம்
விண்ணிற் சுடர்கின்ற மீனையெலாம்—பண்ணியதோர்
சக்தியே நம்மைச் சமைத்ததுகாண் நூறாண்டு
பக்தியுடன் வாழும் படிக்கு.

## புராணங்கள்

**வே**தக் கொள்கைகளை எல்லா ஜனங்களுக்கும் தெளிவாக உணர்த்தும் பொருட்டு முன்னோர்களால் புராணங்கள் ஏற்படுத்தப் பட்டன. 'நான்' 'எனது' என்ற அகந்தையாலும் பிறருக்குப் பல விதங்களிலே தீங்கிழைப்பதும், தமக்குத்தாமே பலவிதமான அச்சங்களும் தீங்குகளும் வருவித்துக்கொள்ளுதலும் ஜீவர்களின் இயற்கை. இந்த இழிவு கொண்ட இயற்கையை ஞானத்தீயிலே போட்டுப் பொசுக்கி விடுதல் வேத ரிஷிகளால் ஏற்படுத்தப்பட்ட யக்ஞம் அல்லது வேள்வியின் கருத்து.

எல்லாம் ஈசன் செயல்; எல்லாம் அவனுடைய ரூபம். கம்ப ராமாயணத்தில் ஹிரண்யனுக்கு ப்ரஹ்லாதாழ்வான் உபதேசித்தருளியபடி, அவன்

சாணிலு முளன்;மற் றுங்கோர்
அணுவினைச் சதகூ றிட்ட
கோணிலும் உளன்; மாமேருக்
குன்றிலும் உளன்; இந்நின்ற
தூணிலும் உளன்;யான் சொன்ன
சொல்லிலும் உளன்.

அவனைத் தவிர வேறு பொருளே கிடையாது. 'அவனன்றி ஓர் அணுவு மசையாது.' ஆதலால், இந்த உலக முழுவதும் பரிபூரண அழகுடையது; பரிபூரண மங்களத்தன்மை யுடையது. அந்தக் கடவுள் ஸர்வ சக்தி யுடையவன். ஆதலால், கீதையிலே சொல்லியபடி, எல்லாப் பொறுப்புகளையும் அவன்பாதங்களிலே சுமத்திவிட்டு நாம் எப்போதும் கவலையின்றி ஆனந்தத்துடன் வாழும் படியாக நம் மனத்தைத் திருத்திக் கொள்ளக் கடவோம் என்ற துணிவே ஞானத்தீ என்று சொல்லப்படும். இது வேதாக்கினி.

இங்ஙனம் நிச்சயிக்கப்பட்ட கடவுளிடத்தும், அவனுடைய கலைகளாகிய எல்லா ஜீவர்களிடத்தும் தீராத மாறாத அன்பு செலுத்துதலே பக்தி என்று சொல்லப்படும். இந்தப் பக்திதான் முடிவான ஸாதனம். இதனால் ஈசன் நம்மிடத்தே கருணை பூண்டு நமக்கு மோக்ஷ ஸாம்ராஜ்யத்தைக் கொடுப்பான். இது அமிர்த பானம். இதுதான் நான்கு வேதங்களின் தீர்ப்பு.

இந்தக் கடவுளை முழுமையாக நோக்குமிடத்தே, வேதம் அவனுக்கு "தத்" (அஃது) அதாவது பரப்ரஹ்மம் என்ற பெயரும், "ஸத்" (உண்மைப் பொருள்) முதலிய பெயர்களும் கொடுக்கிறது.

படைத்தல், காத்தல், மாற்றுதல், அருள் செய்தல், வலிமையுடைமை, தெளிவுடைமை, ஒளியுடைமை, எங்கும் பரந்திருக்குந் தன்மை, பலபடத் தோன்றுந் தன்மை, ஆனந்த இயல்பு முதலிய கடவுளின் எண்ணிறந்த குணங்களையும் இயல்புகளையும் பிரிவுபடுத்தி நோக்குமிடத்தே, வேதம் அந்தந்தக் குணங்களுக்கும் இயல்புகளுக்கும் தக்கபடி, அவன் ஒருவனுக்கே பிரமன், விஷ்ணு, சிவன், இந்திரன், வாயு, ஸோமன், ஸூர்யன், வருணன், அக்கினி பகவான் முதலிய பல்வேறு நாமங்களை வழங்குகிறது.

இந்த விஷயத்தை ரிக் வேதம் "ஏகம் ஸத்" என்ற தொடக்கமுடைய மந்திரத்தில் மிகவும் தெளிவாக விளக்கிக் காட்டுகிறது.

எனவே, வேதத்தின் வழிநூல்களாகிய புராணங்களில், இக் கடவுளை உணர்வதற்கு ஸாதனங்களாகிய தவம், பக்தி, யோகம் முதலியனவற்றை அநுஷ்டிக்கும் நெறிகளும், இந்த வழியே செல்ல விரும்புவோனுக்கு இன்றியமையாதனவாகிய திடசித்தம், நேர்மை, ஜீவகாருண்யம் முதலிய குணங்களைப் பழக்கப்படுத்திக் கொள்ளும் நெறிகளும், இந்தக் குணங்கள் ஏற்படாதபடி தடுக்கும் பயம், கர்வம், கோபம், நிஷ்டூரம் முதலிய அசுர குணங்களை

அறுக்கும் நெறிகளும் பல திருஷ்டாந்தங்களாலும், சரித்திரங்களாலும், உவமைக் கதைகளாலும், உபதேசங்களாலும் விஸ்தாரமாகக் காட்டப்பட்டிருக்கின்றன.

உபாஸனை புரிவோன் இயல்புகளுக்கும் வேண்டுதல்களுக்கும் தக்கபடி, அப் புராணங்கள் பரமாத்மாவின் முக்கியமான மூர்த்தி பேதங்கள் அதாவது குணபேதங்களைச் சிறப்பாகக் காட்டவேண்டி, சில இடங்களில் அக்கினியையும், சில இடங்களில் இந்திரனையும், இங்ஙனமே மற்ற மூர்த்திகளையும் முதன்மையாகக் கூறும் வேத வழியை அனுசரித்து, புராணங்களும் சில அக்கினியை மேம்படுத்தியும், சில விஷ்ணுவை மேம்படுத்தியும் காட்டுகின்றன.

ஆயினும், கால நடையிலே இப் புராணங்களை மாத்திரமே ஆதாரமாகக்கொண்ட மத பேதங்கள் நம்முடைய தேசத்தில் ஏற்பட்டுவிட்டன. வேதக் கல்வியும் வேத ஞானமும் குன்றிப்போயின. வேத ஆராய்ச்சி சூன்யமாய் விட்டது. புராணங்களில் வேறு வேறு மூர்த்திகளுக்கு ஆதிக்யம் சொல்லப்பட்டிருப்பதை யொட்டி மதபேதங்கள் கட்சி பேதங்களாக முடிந்தன. இதனால் வைதிக மதமாகிய ஹிந்து மதம் பல பிரிவுகளுடைத்தாய்விட்டது. ஜனத்தொகை, அவ்வக்காலத்து அரசர்களின் கொள்கை—இவற்றுக்குத்தக்கபடி ஹிந்துமத பேதங்களுக்கு மேன்மையும் தாழ்வும் ஏற்படலாயின. பெயரளவில் எல்லா மதங்களும் வேதம் ஒன்றையே பிரமாணமாகப் பேசியபோதிலும், நடையிலே ஹிந்து மதஸ்தர்கள் தம்தம் புராணங்

களையே தலைமையாகக் கொண்டு அவற்றின் கருத்துக்குத் தக்கபடி வேதத்தை மாற்றிப் பொருள் செய்யலாயினர். தத் தம் மூர்த்திகளை உயர்வாகக் கூறுவதின் உண்மைப் பொருளை மறந்து இந்த மதஸ்தர்கள் மிகப்பெரிய அஞ் ஞானத்தில் ஆழ்ந்து வேதத்திற் காட்டிய இந்த மூர்த்தி களை இழிவுபடுத்திப் பேசலாயினர். இந்திரன், அக்கினி, வாயு, வருணன் என்ற மூர்த்திகளே வேதத்தில் முக்கிய மானவை. பின்னிட்டு இந்த மூர்த்திகளைத் தாழ்ந்த தேவதைகளாக மதிக்கத் தொடங்கிவிட்டார்கள். காலக் கிரமத்தில் வைஷ்ணவம், சைவம், சாக்தம் முதலிய சில மதங்களே நாட்டில் மிஞ்சி நின்றன. எனவே, வேதத் தில் முக்கிய மூர்த்திகளாகிய வாயு, வருணன், சூரியன், இந்திரன் முதலியவர்களைப் பிற்காலத்துப் புராணங்கள் தூஷணை செய்யத் தொடங்கிவிட்டன. முற்பகல் செய்தது பிற்பகல் விளையும். பின்னிட்டுச் சைவ வைஷ்ணவ புராணங்களில் அவ்வக் காலத்து ராஜாக்கள் ஜனங்களின் கோட்பாடுகளை உயர்த்தும் பொருட்டாக மேற்படி கட்சி பேதங்கள் பஹிரங்க விரோதங்களாக முடிந்து, சைவ புராணங்களில் விஷ்ணு தூஷணைகளும் வைஷ்ணவ புரா ணங்களில் சிவ தூஷணைகளும் ஏராளமாகச் சேர்க்கப் பட்டன. அதற்கிசையவே புதிய கதைகளும் கற்பிக்கப் பட்டன.

எனவே, இந்நூல்கள் பெரும்பாலும் நம்முடைய தெய்வத்தன்மையையும் வைதிக மாண்பையும் இழந்து போய், வெட்கமற்ற அவைதிக தூஷணைகள் நிரம்பிக் கக்ஷிச் சண்டைகளை மிகுதியாகச் சேர்த்து ஜனங்களுக்

குள்ளே பகைமைத் தீயை மூட்டிவிடலாயின. இங்ஙனம் பரம சத்தியமாகிய ஹிந்து மதம் சிதைவு பெற்றுப் போயிற்று. ஹிந்து ஜாதியார் வீழ்ச்சி யடைந்தனர். வேதம் ஒளி மறைந்து, பிற்காலத்தில் வேதத்துக்கு நாம மாத்திரையாகக் கொடுக்கப்பட்ட உயர்வைக் கூட இந்தக் கக்ஷிக்காரர் சிலர் மறுக்கலாயினர். திருஷ்டாந்த மாகப் பிற்காலத்துச் சைவர்களிலே சிலர் வேதங்களைக் காட்டிலும் சிவாகமங்களே மேலென்று சொல்லத் தலைப் பட்டார்கள். இங்ஙனம் ஏற்பட்ட புராணச் சண்டை களுக்கு வேதமே காரணமாக இருந்ததென்று தவறாகக் கருதி வைதிக ஞானிகளே சிலர் வேதத்தைக் கர்ம காண்ட மென்றும் உபநிஷத்தை ஞானகாண்டமென்றும் சொல்ல லாயினர்.

வஸிஷ்டர் முதலியவர்களைக் 'கர்மி'களென்றும், பிற் காலத்துப் பண்டாரங்களைக் 'ஞானி'களென்றும் ஜனங்கள் மதிக்கலாயினர்.

இந்த அலங்கோலங்களெல்லாம் தீர்ந்து, ஹிந்து மதம் ஒருமை நிலையெய்தி, ஹிந்துக்கள் ஒற்றுமையும் வைதிக ஞானமும் எய்தி, மேம்பாடு பெற்று, பூமண்ட லத்தின் ஆசார்ய பதவிகொண்டு வாழவேண்டுமாயின், அதற்கு நாம் கையாளவேண்டிய உபாயங்கள் பின் வருவன:—

(1) வேதம், உபநிஷத்துக்கள், புராணங்கள் — இவற்றை இக்காலத்தில் வழங்கும் தேச பாஷைகளில் தெளிவாக மொழி பெயர்க்க வேண்டும்.

(2) புராணங்களிலுள்ள தம் தேவர்களை மேன்மைப் படுத்தும் அம்சங்களையும், மேற்படி பொது வேதக் கொள்கைகளாகிய தவம், உபாஸனை, யோகம் முதலியவற்றை விளங்கும் அம்சங்களையும் உலகநீதி, பூர்வ சரித்திரம் இவற்றை விளங்கும் அம்சங்களையும் மாத்திரமே ப்ரமாணமாகக் கொண்டு, இதர தேவ தூஷணை செய்யும் அம்சங்களை ப்ரமாணமில்லாதனவென்று கழித்துவிட வேண்டும்.

(3) வேதத்தின் உண்மைக் கருத்தை உணர்ந்தோரும் ஸமரஸ ஞானிகளுமான பண்டிதர் மூலமாக நாடு முழுதும் புஸ்தகம், பத்திரிகை, உபந்யாஸங்கள் முதலியவற்றால் பிரம்மாண்டமான பிரசாரத்தொழில் நடத்த வேண்டும். ஹிந்துக்களே, பிளவுண்டு மடியாதீர்கள்! வேதத்தின் பொருளை உணர்ந்து மேம்பட்டு வாழ வழி தேடுங்கள்!

## கொள்கைக்கும் செய்கைக்குமுள்ள தூரம்

ஒவ்வொருவரும் ஒவ்வொரு கொள்கையை உடையவராயிருக்கலாம். அதாவது, மற்ற எல்லாரையும்விட ஒரு நியாயம், அல்லது ஒரு தர்மம், அல்லது ஒரு மதம், இவற்றில் ஒன்றில் ஒருவன் விசேஷ மனப் மற்றுடையவனாய் இருக்கலாம். இவை ஒவ்வொன்றும் ஸர்வ ஜன ஸம்மதமாய் நன்மை பயக்கத் தக்கதாய் இருக்கவேண்டும் என்பது அவசியமில்லை. ஒரு கொள்கை தீமையை விளையச் செய்யினும் செய்யும். நன்மையை விளையச் செய்யினும் செய்யும். ஆனால், ஒருவர் ஒரு கொள்கைப் படி கருமங்களைச் செய்யும் பொழுது அது தனக்காவது

பிறருக்காவது நன்மை தருமென்றே செய்வார். ஒருவன் கொடுங்கோல் அரசில் குடித்தனம் செய்தால் வயிற்றுக்குச் சோறில்லாமலும் சர்க்கார் அதிகாரிகளின் ஹிம்சையால் மானமிழந்தும் துன்பமடைய வேண்டியிருக்கிறது; குடியானவனுயிருந்து பயிர்த்தொழில் செய்யவோ அநேக தடங்கல்கள் இருக்கின்றன; பட்டத்தில் மழை பெய்ய வில்லை; அப்படி மழை பெய்தாலும், உழ எருதுகள் இல்லை; உழுதாலும், விதைக்க வித்துக்களில்லை; விதை விதைத்தாலும், களைகளைச் சரியான காலத்தில் எடுத்துப் பயிர் அடித்துக் காவல் காத்து மகசூலை அறுவடை செய்து வீடு கொண்டுவந்து சேர்த்து ஸங்கிக்க ஐவேஜி இல்லை; அப்படி வீடு கொண்டுவந்து சேர்த்துப் பலனை அநுபவிக்கவும் இடமில்லை; ஏனென்ருல், சர்க்கார் தீர்வைக்கே தானிய தவசங்களைக் களத்தில் விற்றுவிட வேண்டியிருக்கிறது. ஆகையால், உழுது உண்ணுவதை விட வேறு என்ன தொழில் செய்தாயினும் பிழைக்கலாமென்று கொள்ளைக் கூட்டத்தோடு சேர்ந்து பிரயாணிகளை வழிப்பறி செய்தோ, கன்னம் வைத்துத் திருடியோ பிழைக்க ஆரம்பிக்கிருன். அவன் செய்யும் தொழில் ஒரு கொள்கையினடியாய் உண்டானதாயினும், அது அவனுக்குத்தான் நன்மை தருமே அல்லாது இதரர்களுக்குத் தீமையே செய்யும். இருந்தாலும் ஆபத் தர்மம் என்ற கொள்கையை அவன் அனுசரிக்கிருன். மனைவி மக்கள் உடுக்க உடையின்றி, உண்ண உணவின்றி, பார்த்தவரெல்லாம் பரிதாபங் கொள்ளும்படியாய், ஒரு புருஷன் குடும்ப

சம்ரக்ஷணை செய்வதால், அவன் மானம் அழிந்து போகிறது. 'பயிர்த் தொழிலில் ஒன்றும் கிடைக்காது' என்ற நிச்சயம் ஏற்பட்டு விட்டது. திருட்டுத் தொழிலில் ஏதேனும் பசியார உண்ணக் கிடைக்கும் என்ற திண்ணம் உண்டு. பிரயாணிகளோ ஆங்கிலேயர் ஆசீர்வாதத்தால் நிராயுதபாணிகளாய் இருக்கிறார்கள். போலீஸ் என்ற உள்நாட்டுக் காவற்காரரோ சம்பளம் சொற்பமானதாலும், அந்நியர் அரசாட்சி தங்கள் தயவின்றி நடவாதென்ற நம்பிக்கையாலும், தாங்களே திருடத் தயாராயிருக்கிறார்கள். கொள்ளைக் கூட்டத்தாரோடு 'எக்கிரிமெண்டு' (உடன்படிக்கை) செய்துகொண்டு அவர் கொள்ளையில் ஒரு பங்கு பெற்றுக் காலத்தைத் தள்ளக் காத்துக் கொண்டிருக்கிறார்கள். இத்தியாதி சவுகரியங்களால் திருட்டுப் பிழைப்பே மேலானதென்று ஒரு குடியானவன் அதைக் கைக்கொள்ளுகிறான். ஆனால் அந்தத் தொழிலில் ஜீவஹிம்ஸை செய்தே நடக்க வேண்டியிருக்கிறது. அப்படிச் செய்வது பாபமாகும். அந்தப்பாபத்தால் பாபத்திற்குரிய மோட்சத் தடை நேரிடும் என்ற பயமோ, சந்தேகமோ அவனுக்கு உண்டாகிறது. அதற்கு ஈடாக அவன் வழிப்பறி செய்யுங்காலத்தில் ஒரு தருமத்தை அனுசரிக்கிறான். அதாவது, சில வகுப்பார்களை அவன் வழிப்பறி செய்யுங் காலத்தில் ஒரு தருமத்தை அனுசரிக்கிறான். அதாவது, சில வகுப்பார்களை அவன் தொடுவதில்லை. ஏழைகள், துணையின்றிச் செல்லும் ஸ்திரீகள், நோயாளிகள், தூரஸ்தலங்களிலிருந்து வரும் யாத்திரைக்காரர்கள் ஆகிய இவர்களையும் இவர்களைப்போன்ற மற்ற

வர்களையும் ஹிம்ஸிப்பதில்லை. அதோடு நில்லாமல், தான் கொள்ளையடித்து ஈட்டிய பொருளில் ஒரு பாகத்தைக் கொண்டு தான தருமங்களும் செய்கிறான். தன்னைப் பகலில் கொள்ளையடித்த சாவுகாரனையும், லேவாதேவி செய்யும் நிஷ்கண்டகனையும், ஏன் இரவிற் கொள்ளை யடிக்கக் கூடாதென்று தன்னைத் தானே கேட்கலாகிறான். குனிந்தால் வரி, நிமிர்ந்தால் வரி, நின்றால் வரி, உட்கார்ந்தால் வரி, நில வரி, நீர் வரி, பாசி வரி, ரோட்டு வரி, காட்டு வரி, வீட்டு வரி, மோட்டு வரி, கொடுக்கல் வரி, வாங்கல் வரி, வருமான வரி, தொழில் வரி, டோல்கேட்டு வரி, ரயில் வரி, சாக்கடை வரி, சாராயக்கடை வரி, மாட்டு வரி, ஆட்டு வரி, நாய் வரி, பூனை வரி, இறக்குமதி வரி, ஏற்றுமதி வரி, இன்னும் எண்ண முடியாத வரிகளைப் போட்டு, வீடு வாசல், நிலம் கரை, ஆடு மாடு, சட்டி பெட்டி இவைகளை ஜப்தி செய்து ஏலங்கூறிக் கொள்ளை யடித்துப் போகும் சர்க்கார்ப் பணத்தை நாம் ஏன் திரும்பக் கொள்ளை யடிக்கப் படாது? என்ற கேள்வியும் அவனுக்கு உண்டாகிறது. இவ்விதமாக ஆட்சேபனை ஸமாதானங்களால் தன் மனதில் கொள்ளையடித்துப் பிழைப்பதே நல்லதென்று ஒரு தீர்மானம் செய்துகொள்ளுகிறான். இந்தத் தீர்மானம் அவன் பிறவிக் குணத்துக்கு விரோதமாய் இருப்பினும், தர்ம சாஸ்திரத்திற்கு முற்றும் ஒவ்வாததாய் இருப்பினும், காலசுபாவம் என்ற அவசியத்தால் ஆபத் தர்மமாக அவன் சித்தத்தில் நிலைத்துவிடுகிறது. இதை ஒரு கொள்கையாக வைத்துக்கொண்டு அவன் காரியங்களை ஆரம்பிக்கிறான். சிலர் இதை நல்லதென்று

சொல்லுவார்கள். எவர் எதைச் சொல்லினும், எவர் எதைச் செய்யினும், தான் கொண்டதே கொள்கை யென்று அவன் காலத்தைக் கழித்து வருகிறான். அவன் கொள்கைக்கும் செய்கைக்கும் ஒற்றுமை இருக்கிறது. இரண்டும் ஒன்றையொன்று அடுத்துத் தொடர்ந்தே வரு கிறது. அவன் மனோதிடம் வாய்ந்த புருஷன் என்றே சொல்லலாம்.

ஒரு கொள்கை என்பதென்ன? இதை நாம் ஆராய்ந்து அறிவது அவசியம். ஏனெனில், கொள்கை யின்றிக் காரியங்களைச் செய்து திரியும் சில மனிதர்கள் இருக்கிறார்கள். பகுத்தறியும் சக்தி இல்லாத எவனுக்கும் கொள்கையென்று ஒன்று இருக்காது. ஒரு கொள்கையை யுடையவன் பகுத்தறியும் சக்தியுடையவனாகவே இருக்க வேண்டும். ஒரு கிராமம் இருக்கிறது. அதில் வசிப்பவர்கள் ஒரே ஜாதி அல்லது வகுப்பைச் சேர்ந்தவர்களாயிருக் கிறார்கள். எல்லாரும் கள்ளர்கள். தலைமுறை தலைமுறை யாக அவர்களுக்குக் கொள்ளையே ஜீவனோபாயம். அந்த ஊரில் ஒருவனை எடுத்துக்கொள்ளுவோம். அவன் அப்பன் திருடன், பாட்டன் திருடன், முப்பாட்டன் திருடன், அண்டை வீட்டுக்காரன் திருடன், மாமன் திருடன், மைத்துனன் திருடன், ஆகையால் அவனும் திருடன். அம்மாதிரியான ஒருவன் தன் கருமங்களை ஒரு கொள்கை வசமாய்ச் செய்தான் என்று சொல்லக் கூடாது. அவனுக் குப் பகுத்தறிவு இருக்கலாம், அல்லது இல்லாதிருக்கலாம். ஆனால், அவ்வறிவின் துணையால் ஒரு கொள்கையை ஒப்புக்கொண்டு அதின் சாயலாகவே தன் கருமங்களைச்

செய்து வருபவனல்ல. எத்தனையோ ஜீவப்பிரேதங்கள், ஜீவியத்தின் நோக்கம் இன்னதென்றே அறியாமல், கேவலம் இந்திரிய பாதைகளைக் கழித்துக்கொண்டு, உண்டு உடுத்தி, வாழ்ந்து, இறந்து போகின்றனர். அவர்களெல்லாம் ஏதோ நல்லதோ கெட்டதோ கொள்கைகளைக் கடைப்பிடித்துக் கருமங்களை அவற்றவற்றிற்கு உரியபடி செய்து ஜீவிக்கும் மனிதர்களல்ல. ஆகையால் கொள்கை என்பதென்ன ?

ஒரு கொள்கையாவது, 'பகுத்தறிவின் துணையால் செய்யத்தக்கது இது, செய்யத்தகாதது இது' என்று ஒருவன் அறிந்து முன்பின் யோசித்துத் தன் வாழ்நாளில் நீடித்துச் செய்ய மனத்தால் ஒப்புக்கொள்ளும் கருமத் தொடரின் அஸ்திவாரமாகிய ஒரு கருத்தாம். நம் நாட்டில் இவ்வாறு கொள்கைகளைத் தேர்ந்து எடுத்துக்கொள்ளும் சக்தி வாய்ந்த மனிதர்கள் பலர் இருக்கிறார்கள். ஆனால், கொள்கைகளை அவாவோடு மனத்தால் கிரகித்தல் வேறு, அவற்றின்படி நடத்தல் வேறு. யாதேனும் ஒரு கொள்கையை ஒருவன் அங்கீகரித்துக்கொண்டு அதன்படி நடக்க முடியாதவனாய் இருந்தால், அவனும் ஜீவப் பிரேதந்தான்'

இதிலிருந்து, 'கொள்கையற்ற மானிடப் பதர்கள்' 'கொள்கை இருந்தும் அதன்படி நடக்க இயலாத மானிடப் பதர்கள்' என்ற இரண்டு ஜாதிகள் உண்டு என்று ஏற்படுகிறது. இவ்விரண்டு வகுப்பாரால் ஜன சமூகத்திற்கு அவ்வளவு கெடுதல் நேரிடாது. அவர்கள் இருக்கும்வரை சோற்றிற்குக் கேடாகவும் நிலத்திற்குப் பளுவாகவும் இருந்து போவார்கள்.

ஆனால், தாங்கள் வசிக்கும் நாட்டிற்குக் குடலைத் தின்னும் அரிபூச்சிகள் போல ஒரு வகுப்பார் தலையெடுத்திருக்கிறார்கள். அவர்கள் தங்கள் தலைநிறையத் திவ்வியமான கொள்கைகளை அடைத்து வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அக் கொள்கைகளை விற்றும் ஜீவிக்கிறார்கள். பொதுப் பீடங்களினின்றும் உலகறிய அவற்றை ஸாங்கோ

பாங்கமாகப் போதிக்கிறார்கள். பொது ஜனங்கள் அக் கொள்கைகளைக் கேட்டுப் பிரமித்து, 'இவ்வரிய கருத்துக் களுக்கு ஆலயமாக இருக்கும் இவர்கள் மனமே மனம். இம் மஹான்கள் அவதார புருஷர்களே' என்று தம்மைப் போற்றும் பொழுது, அப் பூஜிதையையும் ஏற்றுக்கொண்டு மகிழ்ந்து வெறியடைகிறார்கள். ஆனால், அவர்களைப் பின் தொடர்ந்து அவர்களின் வீட்டிற்குச் செல்வோமானால், அங்கே எலும்பும் தோலும் குப்பையும் சகலவிதமான அழுக்குகளும் நிறைந்து கிடக்கின்றன. இம் மஹான் களின் செய்கைகள் அவர்கொண்ட கொள்கைகளுக்கு முற்றிலும் விரோதமாய் இருக்கின்றன. 'தட்டிச் சொல்ல ஆள் இல்லாவிட்டால் தம்பி சண்டப் பிரசண்டம்' என்ற படி பேசிவிட்டு, ஆபத்து வந்த காலத்தில் 'நான் சொன்ன படி நீங்கள் செய்யவேண்டும், நான் செய்கிறபடி நீங்கள் செய்யப்படாது' என்று ஜனங்களை ஏமாற்றுகிறார்கள். அதிலும் கேடாய், தங்களுடைய கொள்கைகளை ஜாலவித் தைக்காரன் போல் மாற்றிவிடுகிறார்கள்.

இம் மஹா பாதகர்களால் நம் தேசத்திற்கு விளையும் தீமைகள் கணக்கில் அடங்கா. ஏனெனில், இவர்களைப் பார்த்து அநேகம் அறிவில்லாத மனிதர்கள் செல்லக் கூடாத மார்க்கங்களிற் சென்றுவிடுகிறார்கள். நமக்குக் கொள்கை வேண்டுமே யல்லாது ஆள்வேண்டியது அவசிய மில்லை. ஒருவன் தான் பறையறையும் நல்லதோர் கொள் கையை விட்டுவிட்டு விலகி நடப்பானானால், அப்பொழு தும் நாம் அவனைக் கொண்டாடுவது மதியீனம். அவனை எவ்வகையாலும் நாம் இகழ்ச்சி செய்தே நடத்த வேண்டும்.

தான் குடிக்கும் காப்பிக்காகவும், தான் தின்னும் சோற்றிற்காகவும், தான் உடுக்கும் ஆடைக்காகவும் ஒரு வன் தன்னுடைய அருமையான கொள்கைகளைக் கைவிடு வானானால், அவனை மானிடரில் எந்த வகுப்பில் நாம் சேர்க்கலாம்? அவனிலும் பதரான மனிதன் ஒருவனும்

இருக்க முடியாது. அவன் சம்பந்தப்பட்ட மட்டில், கொள்கைக்கும் செய்கைக்கும் வெகு தூரம் உண்டு.

பாரத தேசத்தாராகிய நாம் சகலவிதமான சுதந்தரங்களையும் இழந்து எங்கேயோ இருந்துவந்த ஒரு வெள்ளை நிற ஜாதியாருக்கு அடிமைப்பட்டிருக்கிறோம். நாம் முப்பதுகோடி ஜனங்கள். அவர்கள் இரண்டும் லக்ஷங் கூட இல்லை. உலகத்தோர் எல்லோரும் இதை எங்கும் எக்காலத்திலுமில்லாத அற்புதம் என்று நினைக்கிறார்கள். இதனால் உலகத்திலுள்ள மற்ற ஜாதியார்கள் நம்மை (முப்பதுகோடி அல்லது மூவாயிரம் லக்ஷம் ஜனங்களையும்) அடக்கி ஆளும் ஆங்கிலேயர்களை மகா வீரசூரர்களென்றும், ஒப்பற்ற பலிஷ்டர்களென்றும் ஒப்புக்கொள்வதில்லை. ஆனால், அதற்குப் பதிலாய், நம்மிடத்தில் அவர்களுக்கு அவ்வளவுக்கு அவ்வளவு வெறுப்பும் மதிப்புக் குறைவும் ஏற்பட்டுவிடுகின்றன. இந்தியன் எங்கே போனாலும் நிந்திக்கப்படுகிறான். யாரும் நம்மீது காறித் துப்புகிறார்கள். உலகத்தோர் 'இந்த இந்தியர் என்ற ஆடுகளை ஆங்கிலேயர் மட்டுமல்ல, வேறே எந்த ஜாதியாரும் இலேசாக ஆளலாம்' என்று நம்பியிருக்கிறார்கள். அப்படியிருக்க, நாம் மிகுந்த அந்தஸ்துக்களைப் பாராட்டினால் அது ஒவ்வா ஒழுக்கம். நாம் சுயாதீனம் அடைந்த பிறகு மீசை முறுக்கலாம். இப்பொழுது வீண் டம்பங்கள் செய்தால் எல்லோரும் நகைப்பார்கள்.

நம்மில் ஒவ்வொரு புருஷனும் ஒவ்வொரு ஸ்திரீயும் ஏற்றுக்கொள்ள வேண்டிய கொள்கை ஒன்றேதான் உண்டு. அதாவது, நம்முடைய அருமை நாட்டில் சுயாதீனத்தை நாட்டிப் பிறர் அஞ்சி மதிக்கும்படியாக நாம் ஜீவிக்கவேண்டியது. இந்தக் கொள்கைப்படி நடக்க என்ன இடையூறுகள் வந்தாலும் அவற்றை நாம் விலக்கிக் கொண்டு போகவேண்டும். இந்தக் கொள்கையைக் கடைப்பிடித்து நடப்பதில் எவ்விதமான சுகத்தையும், மரியாதையையும், அந்தஸ்தையும் இச்சிக்கப்படாது. வீடு, வாசல்,

மனைவி மக்கள், எல்லோரையும் இழக்கும்படி நேர்ந்தாலும் இழந்தே தீரவேண்டும்.

மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
எவ்வெவர் தீமையு மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்பும் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார்

என்ற மூதுரைக்கு இணங்கியே நாம் நடக்கவேண்டும். இவ்வாறு நடக்க முடியாதவன் தான் பேடியென்று ஒப்புக்கொண்டு பின்னடையவேண்டும். நானும் ஸ்வராஜ்யக் கொள்கையுள்ளவன் என்று முன் வந்து நிற்கவேண்டாம். சுதந்தரக் கொள்கையை உடையவன் தன் ஆத்மாவைத் தவிர்த்து மற்ற எல்லாவற்றையும் இழந்துவிடச் சித்தமாயிருக்க வேண்டும். ஹே, பாரதா! சோம்பருள்ளவனுக்கு எவ்விதக் கொள்கையும் ஏற்காது. மழையென்றும், வெயிலென்றும், காற்றென்றும், பசியென்றும், தாகமென்றும், நித்திரையென்றும் பாராட்டாதே. இந்தச் சரீரமே அநித்தியம் என்றால், அதையொட்டிய அவஸ்தைகள் நித்தியமாகுமா? இந்திரிய அவஸ்தைகளுக்கு அஞ்சியாவது இந்திரிய சுகங்களைக் கோரியாவது தேசீய தர்மத்தைக் கைவிடாதே. பிரம்மமே நித்தியம். சத்தியமே ஜெயம். நீயும் அடிமைத்தனத்திலிருந்து நீங்கவேண்டும். உன்னுடைய ஜய பேரிகையை அடித்துக்கொண்டு உலகத்தில் எந்த எந்தப் பாகத்தில் யார் யார் அடிமைப்பட்டிருக்கிறார்களோ அவரவரை விடுவிக்க வேண்டும். உன் செயலால் பாரதமாதா முன்போல் உலகத்திற்குத் திலகமாய் ஜ்வலிக்க வேண்டும். இந்தக் கொள்கைகளைக் கைவிடாதே, கைவிடாதே, கைவிடாதே. முக்காலும் சொன்னோம்.

வந்தேமாதரம்.

# பாரதியார் கட்டுரைகள்

## மாதர்

### பெண்

**வே**தபுரத்தில் தர்மவீதியில் வாத்தியார் பிரமராய அய்யர் என்றொரு பிராமணர் இருக்கிறார். இவர் சாக்த மதத்தைச் சேர்ந்தவர். "சக்திபூஜை" பண்ணுவோரில் சிலர் மதுமாம்ஸ போஜனம் செய்கிறார்கள். இந்த வாத்தியார் அப்படியில்லை. இவர் "சுத்த சைவம்"; அதாவது ஆட்டுக்குட்டியை மாம்ஸம் தின்னும்படி செய்தாலும் செய்யலாம்; இந்த வாத்தியாரை மாம்ஸம் தின்னும்படி செய்யமுடியாது. இவர் இங்கிலீஷ், ப்ரெஞ்சு என்ற இரண்டு பாஷைகளிலும் நல்ல பாண்டித்ய முடையவர். கொஞ்சம் ஸம்ஸ்கிருதமும் தெரியும். பகவத்கீதை, வால்மீகி ராமாயணம், குமாரஸம்பவம் மூன்று நூலும் படித்திருக்கிறார். வேதாந்த விசாரணையிலே நல்ல பழக்கமுண்டு. கதை, காலக்ஷேபம், உபந்யாஸம் முதலியன நடந்தால், தவறாமல் கேட்கப் போவார். பெரும்பாலும் கதை கேட்டுவிட்டு அதிருப்தியுடனே திரும்பி வருவார்.

வீட்டுக்கு வந்து உபந்யாஸிகளின் கொள்கைகளை ஒருமாஸம் தொடர்ச்சியாக நண்பர்களுடனே தர்க்கிப்பார். "ஹிந்துக்கள் முற்காலத்தில் நல்ல மேதாவிகளாக இருந்தனர். இன்னும் அதிசீக்கிரத்தில் மேலான நிலைமைக்கு வரப்போகிறார்கள். ஆனால் இந்தத் தேதியில், பண்டிதர்களாக வெளிப்பட்டு பிரஸங்கங்களும், கதைகளும், காலக்ஷேபங்களும் நடத்தும் ஹிந்துக்களிலே நூற்றுக்கு தொண்ணூறு பேர் சமையல் வேலைக்குப் போகவேண்டியவர்கள். அதைவிட்டு, உலகத்துக்கு ஞானோபதேசம் பண்ணக் கிளம்பிவிட்டார்கள். இது பெரிய தொல்லை, உபத்திரவம், தொந்தரவு, கஷ்டம், ஸங்கடம், ஹிம்ஸை, தலை நோவு. இந்தத் தேதியில், ஹிந்து ஜாதி முழு மூடமாக இருக்கிறது. நம்மவர்கள் மூளைக்குள்ளே கரையான் பிடித்திருக்கிறது. எனக்கு ஹிந்துக்களின் புத்தியை நினைக்கும்போது வயிற்றெரிச்சல் பொறுக்கமுடியவில்லை. படகோனியா தேசத்தில் கூட சராசரி நூற்றுக்கு இத்தனைபேர் மூடர்களாக இருப்பார்களென்று தோன்றவில்லை." என்று நானாவிதமாக நம் தேசத்தாரின் அறிவு நிலைமையை தூஷணைசெய்து கொண்டேயிருப்பார்.

மேற்படி பிரமராய வாத்தியாருக்குத் தமிழிலும் கொஞ்சம் ஞானமுண்டு. ஐரோப்பியரின் சாஸ்திரங்களில் பலவற்றைத் தமிழில் எழுதியிருக்கிறார். சில சமயங்களில் கவிதை கூட எழுதுவார். இவருடைய கவிதை மிகவும் உயர்ந்ததுமில்லை, தாழ்ந்ததுமில்லை; நடுத்தரமானது. இவருக்கு சங்கீதத்தில் நல்ல ஞானமுண்டு. ஆனால் பாடத்தெரியாது. தொண்டை சரிப்படாது. தாளத்தில் மஹா நிபுணர். பெரிய பெரிய

மிருதங்கக்காரரெல்லாம் இவரைக் கண்டால்பயப்படு வார்கள்.

இவர் இந்தத் தெருவில் வார்த்தை சொன்னல் மூன்ருவது தெருவுக்குக் கேட்கும். பகலில் பள்ளிக் கூடத்து வேலை முடிந்தவுடனே வீட்டுக்கு வந்து, ஸாயங்காலம் ஆறுமணி முதல் எட்டுமணி வரை தன் வீட்டுத் திண்ணையில் சிநேகிதர்களுடன் பேசிக் கொண்டு, அதாவது, கர்ஜனை செய்து கொண்டிருப் பார். பிறகு சாப்பிடப் போவார். சாப்பிட்டுக் கையலம்பி கை ஈரம் உலர்வதற்கு முன்பு, மறுபடி திண்ணைக்கு வந்து சப்தம் போடத் தொடங்கிவிடு வார். இவருடைய வீட்டுத் திண்ணைக்கு அக்கம்பக் கத்தார் 'இடிப் பள்ளிக்கூடம்' என்று பெயர் வைத் திருக்கிருர்கள். அந்த இடிப் பள்ளிக்கூடத்துக்கு வந்து மாலைதோறும் நாலைந்து பேருக்குக்குறையாமல் இவருடைய பேச்சைக் கேட்டுக்கொண்டிருப்பார்கள். அந்த நாலைந்து பேருக்கும் இன்னும் காது செவிடா காமலிருக்கும் விஷயம் அனேகருக்கு ஆச்சர்யத்தை உண்டாக்குகிறது.

மேற்படி வாத்தியாருக்கும் எனக்கும் ஸ்நேக முண்டு. நானும் அடிக்கடி இடிப்பள்ளிக்கூடத்துக்குப் போய் பேச்சுக் கேட்கும் வழக்கமுண்டு. ஹிந்துக் கள் பரம மூடர்களென்று அவர் சொல்லும் வார்த் தையை மாத்திரம் நான் அங்கீகாரம் செய்துகொள் வது கிடையாது. மற்றப்படி, அனேகம் விஷயங்களில் அவருடைய அபிப்பிராயங்கள் எனக்கு நியாயமாகவே தோன்றும்.

நாலாநாள் ஞாயிற்றுக்கிழமை சாயங்காலம் மழைத்தூற்றலாக இருந்தபடியால், நான் வெளியே உலாவப் போகாமல், பொழுது போக்கும் பொருட்டாக மேற்படி இடிப்பள்ளிக்கூடத்துக்குப் போய்ச் சேர்ந்தேன். அங்கே வாத்தியார் கர்ஜனை அட்டஹாஸமாக நடந்து கொண்டிருந்தது. கேட்டுக்கொண்டிருந்தவர்களின் "ஜாப்தா" பின்வருமாறு :—

1. வீராசாமி நாயக்கர். (இந்த நாயக்கர் ஆனைக்குட்டியைப் போலிருப்பார்; சர்க்கார் உத்தியோகம்; முப்பத்துமூன்று வயது; அதற்குள் சரியான வழுக்கை; நல்ல வ்யவஹார ஞானமுடையவர்; வாய் பேசுவது கிடையாது; கோபம் வருகிறபோது கொஞ்சம் பொடி யெடுத்து மூக்கில் போட்டுக் கொள்வார்.)

2. கொங்கண பட்டர். (இவர் பெருமாள் கோயில் பட்டர்; ஏழரையடி உயரம்; இவரை யார் வேண்டுமானாலும் வையலாம்; வேஷ்டியைப் பிடித்திழுக்கலாம். மேற்படி வீராசாமி நாயக்கர் இவருடைய தலையில் கால்மணி நேரத்திற் கொருதரம் குட்டுவார். இவருக்குக் கோபம் வராது. இவருடைய ஜாதகத்திலே கோபத்துக்குரிய கிரகம் சேரவில்லையென்று கேள்வி.)

3. நாராயண செட்டியார் (பணக்காரர். குள்ளம். வட்டிக்குக் கொடுக்கல் வாங்கல், இடிப்பள்ளிக்கூடம்-இந்த இரண்டு தொழிலையுந்தவிர, மூன்றாவது கார்யத்தை இவர் கவனிப்பதே கிடையாது. வாரத்துக்கொருமுறை வெள்ளிக்கிழமையன்று பிள்ளையார்

கோவிலுக்குப் போவார். மற்றப்படி வீட்டை விட்டு வெளியேறமாட்டார். இவரை அந்தப்புரச் செட்டியாரென்றும் சொல்வார்கள்.)

4. குருசாமி பாகவதர். (ஸங்கீத வித்வான் குழந்தைகளுக்குப் பாட்டும், வாத்தியமும் சொல்லிக் கொடுப்பார். சாரீரம் கட்டை.)

மேற்படி சபையில் நானும் போய்ச்சேர்ந்தேன். பிரமராய வாத்தியாருக்கு என்னைக் கண்டவுடன் கொஞ்சம் சந்தோஷம் ஏற்பட்டது.

"வாருங்கள், வாருங்கள், உங்களுக்கும் ரஸப் படக்கூடிய விஷயந்தான் பேசிக்கொண்டிருக்கிறோம்" என்றார்.

"அதாவது என்ன விஷயம்?" என்று கேட்டேன்.

"ஸ்திரீகளுடைய பேச்சு" என்றார்.

"ஸ்திரீகளைப் பற்றின பேச்சா? சரிதான் மேலே உபந்யாஸம் நடக்கட்டும்" என்றேன்.

வாத்தியார் கர்ஜனையைத் தொடங்கினார்:—

"நான் சொன்ன விஷயத்தைச் சுருக்கமாக *'சக்தி தாஸ'ருக்கு மறுமுறை சொல்லிக் காட்டி விட்டு மேலே சொன்னால் தான் அவருக்குத் தொடர்ச்சி தெரியும்" என்று சொல்லி பூர்வ கதையையெடுத்தார்.

---

* ஸ்ரீ பாரதியாரின் புனை பெயர்.

அந்த நிமிஷத்தில் வீராசாமி நாயக்கர் ஒரு தரம் பொடி போட்டுக்கொண்டு கொங்கண பட்டர் தலையில் ஒரு குட்டுக் குட்டினுர்.

"சில்லரை விளையாட்டு வேண்டாம்; வாத்தியார் பிரசங்கம் நடக்கட்டும்" என்றேன்.

வாத்தியார் கர்ஜனை செய்யலானுர்.

"இந்தியாவில் ஆண் பிள்ளைகளுக்குக் கூட வாக்குச் சீட்டுக் கிடையாது. அதாவது ஜனங்களுடைய இஷ்டப்படி ஆள் நியமித்து ஜனசபையாலே நடத்தும் அரசாட்சி யுரிமை ஹிந்துக்களுக்குக் கிடையாது. ஹிந்துக்களுக்குப் புத்தி சொற்பம். நம்முடைய தேசத்தில் ஆண்பிள்ளைகளுக்குக் கிடையாத மேற்படி வாக்குச் சீட்டுச் சுதந்திரம் வேறு சில தேசங்களிலே பெண்களுக்கு உண்டு. அதாவது, அரசாட்சி இன்னபடிதான் நடக்கவேண்டுமென்று நியமிக்கும் பாத்தியதை அங்கே ஸ்திரீகளுக்கும் உண்டு.

"ஆஸ்திரேலியா, ந்யூஸிலாந்து, டென்மார்க், நார்வே, யுனைடெட் ஸ்டேட்ஸிலே பாதி, கானடா—இத்தனை தேசங்களில், பெண்களுக்கு வாக்குச் சீட்டு கெட்டியாகவுண்டு. இங்கிலாந்திலே கூட அந்த அநுஷ்டானத்தை ஏற்படுத்த வேண்டுமென்று பலர் மன்ருடுகிருர்கள். போன மந்திரி ஆஸ்க்வித் கூட அந்தக் கட்சியை நெடுங்காலமாக எதிர்த்து வந்து, ஸமீபத்தில் அதற்கனுகூலமாக பேசுகிருரென்று கேள்வி. இதைவிடுங்கள்.

"துருக்கி தேசம் தெரியுமா? அங்கே நேற்று வரை ஸ்திரீகளை மூடிவைத்திருப்பது வழக்கம். கஸ்

"அக்கதையில் ஒரு முகம்மதியப் பிரபு மூன்று சகோதரிகளை மணம் செய்ததாக எழுதியிருக்கிறீர்கள். அப்படி சகோதரமான மூன்று பெண்களை மணம் புரிந்து கொள்ளுதல் முகம்மதிய சாத்திரப்படி 'ஹராம்' (பாதகம்) ஆகக் கருதப்படுகிறது. தன் மனைவி உயிருடனிருக்கையில் அவளுடன் பிறந்த மற்ற ஸ்திரீயை ஒரு முஸ்லீம் மணம் புரிந்துகொள்ளக்கூடாதென்பதே எங்களுடைய சாத்திரங்களின் கொள்கை" என்று அந்த முகம்மதிய நண்பர் சொன்னார்.

இதைக் கேட்டவுடன் நான்:— "சரிதான், எனக்கு அந்த விஷயம் தெரியாது. மனைவியொருத்தியின் சகோதரிகளை மணம் புரியும் வழக்கம் ஹிந்துக்களுக்குள்ளே உண்டாதலால், அதுபோலே முகம்மதியர்களுக்குள்ளேயே இருக்கலாமென்று நினைத்து அங்ஙனம் தவறாக எழுதி விட்டேன். எனவே அந்தக் கதாநாயகனாகிய முகம்மதியப் பிரபுவுக்கு அவனுடைய சிற்றப்பன் தன் மூன்று குமாரத்திகளையும் மணம்புரிவித்தானென்பதை மாற்றித் தன்னினத்தைச் சேர்ந்த மூன்று பெண்களை மணம் புரிவித்தானென்று திருத்தி வாசிக்கும்படி 'சுதேசமித்திரன்' பத்திரிகையில் எழுதி விடுகிறேன்" என்றேன்.*

* 'ரெயில்வே ஸ்தானம்' என்ற கதையில் நான் மேலே கூறிய சாதாரணத்தவறு புகவிட்டது பற்றி பத்திராதிபரும் பத்திரிகை படிப்போரும் என்னைப் பொறுத்துக்கொள்ளும்படி வேண்டுகிறேன். உலகமெல்லாம் மாதர்களுக்கு நியாயம் செய்ய வேண்டுமென்ற கிளர்ச்சி நடப்பதை அனுசரித்து முஸ்லீம்களும் ஏக பத்தினி விரதம், பெண் விடுதலை, ஆண் பெண் சமத்துவம் என்ற கொள்கைகளைப் பற்றி மேன்மை அடைய வேண்டுமென்பதே என் கருத்து. இந்தக் கருத்து நிறைவேறும்படி பரமாத்மாவான அல்லா ஹுத்த ஆலா அருள் புரிவாராக.

இதிலிருந்து சம்பாஷணை பொதுவாக முகம்மதிய விவகாரங்களின் விஷயத்தைக் குறித்து நடைபெறலாயிற்று. அப்பால் முகம்மதிய மாதர்களின் ஸ்தானத்தைக் குறித்துப் பேசலானோம்.

என்னுடனே ஒரு ஹிந்து நண்பர் இருந்தார். அவர் அந்த முஸ்லீம் நண்பரை நோக்கி:—"உங்களுக்குள்ளே ஸ்திரீகளை அந்தப்புரத்தில் மறைத்துவைப்பதாகிய (கோஷா) வழக்கம் எக்காலத்தில் ஏற்பட்டது?" என்று கேட்டார்.

அது கேட்டு அந்த முகம்மதிய நண்பர்:—"முகம்மது நபி (ஸல்லல்லாஹி அலகிவஸல்லா) அவர்கள் காலத்திற்கு நெடுங்காலம் முன்னே இந்த வழக்கம் அரேபியாவில் இருந்து இடையே மாறிப்போய்விட்டது. பிறகு முகம்மதுநபி அதை மீளவும் விதியாக்கினார்" என்றார்.

அப்போது நான் "மதவிஷயங்களை அதாவது அல்லாவிடம் செலுத்தவேண்டிய பக்தி முதலிய விஷயங்களைத் தவிர, விவாகம், ஸ்திரீகளை நடத்தவேண்டியமாதிரி முதலிய ஜனசமூகத்தின் ஆசார நியமங்களில் காலத்துக்குத் தக்கபடி புதிய மாறுதல்கள் செய்து கொள்ளலாமன்றோ?" என்று கேட்டேன்.

"அங்ஙனம் ஆசார விஷயங்களிலே கூட மாறுதல்கள் செய்ய எங்கள் சாஸ்திரங்கள் இடங்கொடுக்கவில்லை!" என்று அந்த முஸ்லீம் நண்பர் சொன்னார். 'எந்த சாஸ்திரங்களுமே ஆசார நியமங்களில், அதாவது நம்மால் விதிக்கப்பட்ட புதிய ஆசாரமுறையில் அதற்குப் பிறகு யாதொரு மாறுதலும் ஏற்படக் கூடாதென்று விதிப்பதுதான் வழக்கம். ஆனால் அந்

தப்படி எங்கும் நடப்பதில்லை. எல்லா ஜாதிகளிலும் எல்லா ஜன சமூகங்களிலும் எல்லா தேசங்களிலும் எல்லா மதஸ்தர்களுக்குள்ளும் காலத்துக்குக்காலம் ஆசாரங்களில் புதிய மாறுதல்கள் ஏற்பட்டுக் கொண்டுதான் வருகின்றன" என்று நான் சொன்னேன்.

"புராதன நபிகளால் விதிக்கப்பட்ட ஆசாரங்களில் சில முகம்மதிய நபியின் காலத்தில் மாறவில்லையோ? அதுபோல் முகம்மது நபியின் காலத்தில் ஏற்பட்ட ஆசாரங்களை அதன் பிறகு மாற்றக்கூடாதோ?" என்று என் ஹிந்து நண்பர் கேட்டார்.

அது கேட்ட என் முஸ்லீம் நண்பர்:— "கூடாது. ஏனென்றால் முகம்மது தான் கடைசி நபி. அவருடைய உத்தரவுகள் கடைசியான உத்தரவுகள். அவற்றை மாற்றுவதற்கு இடமில்லை" என்றார்.

"முந்திய நபிகளின் கட்டளைகளும் கடவுளுடைய நேரான கட்டளைகளேயன்றி அந்தந்த நபிகளின் சொந்தக் கருத்துக்களல்ல என்பதை இஸ்லாமானவர்கள் அங்கீகாரம் செய்கிறார்கள். காலத்தின் மாறுதலுக் கிணங்க அல்லா தன் பழைய கட்டளைகளை மாற்றி ஒவ்வொரு புதிய நபி மூலமாகவும் புதிய கட்டளைகள் பிறப்பித்துக்கொண்டு வந்திருக்கிறார்; எனவே, முகம்மது நபி இருந்த காலத்துக்கும் தேசத்துக்கும் பொருந்த அவர் மூலமாக புதிய கட்டளைகள் கொடுக்கப்பட்டன. மதக்கொள்கைகள் எக்காலத்துக்கும் எந்த தேசத்திற்கும் பொது. ஆதலால் அவற்றை மாற்றக்கூடாது. வெறுமே ஜனக்கட்டு சம்பந்தமான ஆசார விவகாரங்களை காலதேசங்

களுக்குப் பொருந்தும்படி மாற்றலாமென்று முகம்மது நபி சொல்லவில்லையா?" என்று அந்த ஹிந்து நண்பர் கேட்டார்.

"அங்ஙனம் எங்கள் நபிநாயகம் அவர்கள் உத்தரவு கொடுக்கவில்லை" என்று என் முஸ்லீம் நண்பர் தெரிவித்தார்.

"உங்களுக்கு நிச்சயமாகத் தெரியுமோ? நீங்கள் கொரான் முழுவதும் வாசித்திருக்கிறீர்களோ?" என்று நான் கேட்டேன்.

அதற்கு என் முஸ்லீம் நண்பர்:— "நான் கொரான் முழுவதும் ஓதியதில்லை. என் சுற்றத்தாரில் சிலர் கொரான் முற்றிலும் ஓதியிருக்கிறார்கள். இந்த விஷயத்தைப் பற்றி அவர்களிடம் கேட்டுத் தெரிவிக்கிறேன்" என்றார். பிறகு இந்த விஷயத்தை விட்டு விட்டோம்.

அப்பால் நான் என் முஸ்லீம் நண்பரை நோக்கி:— "தென் ஜில்லாக்களிலே தமிழ்ப் பேசும் முஸ்லீம் (ராவுத்தர்) களுக்குள்ளே கோஷா வழக்கம் காணப்படவில்லையே! அதன் காரணம் யாது?" என்று கேட்டேன். "இங்கும் சிலர் அந்த வழக்கத்தைப் பரிபாலிக்கத்தான் செய்கிறார்கள்" என்று என் முஸ்லீம் நண்பர் சொன்னார்.

"எனினும் பலர் அதைப் பரிபாலிக்கவில்லையே? அதன் முகாந்திரம் யாது?" என்று கேட்டேன்.

"வேதசாஸ்திர விதிகளில் அவர் செலுத்தக் கடமைப்பட்ட அளவு பயபக்தி செலுத்தாமலிருப்

பதே அதற்கு முகாந்திரம்" என்று என் முஸ்லீம் நண்பர் தெரிவித்தார்.

"அப்படியிருந்தும், தென் ஜில்லாக்களிலுள்ள இந்த முஸ்லீம்கள் மற்றப் பக்கத்து முஸ்லீம்களைக் காட்டிலும் அல்லாவின் பக்தியிலும் மதப்பற்றுதலிலும் சிறிதேனும் குறைந்தவர்களில்லை என்பது பிரத்யக்ஷமன்றோ? அங்ஙனமாக, இவர்கள் கொரான் விதிகளில் போதிய அளவு பயபக்தி செலுத்தாமல் இருக்கிறார்கள் என்று சொல்லுதல் நியாயம் அன்று. இந்த கோஷா விஷயத்தில் மாத்திரம் இந்த தேச சம்பிரதாயங்களைத் தழுவிநடக்கிறார்கள். இவர்களுடைய கூட்டத்தில் எத்தனை ஞானிகளும் பக்திமான்களும் அவதாரம் செய்திருக்கிறார்கள். அவர்கள் இந்த கோஷா விஷயத்தை இக்கூட்டத்தின் மீது வற்புறுத்தாமல்தான் இருந்திருக்கிறார்கள். ஆதலால், மத பக்தி முதலிய விஷயங்கள் மாறுதல்கள் கூடாதேயொழிய, ஆசாரங்களில் காலத்துக்குத் தகுந்த, இடத்துக்குத் தகுந்த, மாறுதல்கள் செய்துகொள்ள இஸ்லாம் சாஸ்த்திரங்களே அனுமதி தரக்கூடும் என்று நினைக்கிறேன்" என்று நான் சொன்னேன்.

இது கேட்டு அந்த முஸ்லீம் நண்பர் மீளவும்:— "நான் நன்றாகக் கொரான் ஓதியவர்களை விசாரித்து இந்த விஷயத்தில் முடிவு சொல்லுகிறேன்" என்றார். "இடைக்காலத்து சாஸ்திரங்கள் இந்த விஷயத்தில் அதிக முரண் செலுத்தக்கூடும். ஆதலால் சாட்சாத் கொரான் வேதத்தையே நன்றாகப் படித்து உணர்ந்தவர்களிடம் விசாரணை செய்யுங்கள்" என்றேன்.

"சரி, அங்ஙனமே செய்கிறேன்" என்று என் முஸ்லீம் நண்பர் சொன்னார்.

பிறகு துருக்கி தேசத்தில் ஸ்திரீகளுக்குள்ளே பிரம்மாண்டமான விடுதலைக் கிளர்ச்சி நடந்து வருவதைப் பற்றியும் அங்கு பல மாதர்கள் கோஷா வழக்கத்தை முற்றிலும் ஒழித்துவிட்டு, கல்விகேள்விகளில் உயர்ந்த தேர்ச்சி யுடையோராய், தங்களுக்குள்ளே சபைகள் சேர்த்தும், தாங்களே உபந்நியாஸங்கள் முதலியன நடத்தியும், உலகத்து மற்ற மாதர்களைப் போல் துருக்கியிலுள்ள மாதரும் கல்வி, விடுதலை, ஆண்களுடன் சமத்துவம் இவற்றை எய்தி மேம்படுமாறு அதிதீவிரமான முயற்சிகள் செய்து வருவதைப் பற்றியும் நான் சில வார்த்தைகள் சொன்னேன்.

அப்பால் எங்கள் காலைக் கூட்டம் கலைந்துவிட்டது. என் முஸ்லீம் நண்பரும் தம் வீட்டுக்குப் போனார்.

## நவீன ருஷ்யாவில் விவாக விதிகள்

ருஷ்யாவில் ஜார் சக்ரவர்த்தியின் ஆட்சி பெரும் பாலும் ஸமத்துவக் கக்ஷியார் அதாவது போல்ஷி விஸ்ட் கக்ஷியாரின் பலத்தாலே அழிக்கப்பட்டது. எனிலும் ஜார் வீழ்ச்சியடைந்த மாத்திரத்திலே அதி காரம் போல்ஷிவிஸ்ட்களின் கைக்கு வந்து விட வில்லை. அப்பால் சிறிது காலம், முதலாளிக்கூட்டத் தார் கெரன்ஸ்கி என்பவரைத் தலைவராக நிறுத்தி, ஒரு விதமான குடியரசு நடத்தத் தொடங்கினார்கள். ஆனால் கெரன் ஸ்கியின் ஆட்சி அங்கு நீடித்து நடக் கவில்லை. இங்கிலாந்து, ப்ரான்ஸ் முதலிய நேச ராஜ்யங்களிடமிருந்து பல வகைகளில் உதவி பெற்ற போதிலும் புதிய கிளர்ச்சிகளின் வெள்ளத்தினிடை யே, கெரன்ஸ்கியால் தலை தூக்கி நிற்க முடியவில்லை. சில மாஸங்களுக்குள்ளே கெரன்ஸ்கி தன் உயிரைத் தப்புவித்துக்கொள்ளும் பொருட்டாக ருஷ்யாவி னின்றும் ஓடிப்போய், நேசவல்லரசுகளின் நாடுகளில் தஞ்சமென்று குடி புக நேரிட்டது.

போல்ஸிவிக் ஆட்சி ஏற்பட்ட காலத்திலே அதற்குப் பலவகைகளிலும் தோஷங்கள் கற்பிப்பதை யே தம் கடமையாகக் கருதியவர்களிலே சிலர் அதன் மீது ராஜரீக நெறிகளிலே குற்றங்கள் சுமத்தியது

போதாதென்று, போல்ஷிவிஸ்ட் கக்ஷியார் ஸ்திரீகளையும் பொதுவாகக் கொண்டு ஒருத்தியைப் பலர் அனுபவிக்கிறார்களென்ற அபாண்டமான பழி சுமத்தப்பட்டது. ஆனால், "கெட்டிக்காரன் புளுகு எட்டு நாளைக்கு". ஒன்பதாம் நாள் உண்மை எப்படியேனும் வெளிப்பட்டு விடும். ஒரு பெரிய ராஜ்யத்தைக் குறித்து எத்தனை காலம் பொய் பரப்பிக்கொண்டிருக்க முடியும்? சில தினங்களின் முன்பு, இங்கிலாந்து தேசத்தில் மாஞ்செஸ்டர் நகரத்தில் பிரசுரம் செய்யப்படும் "மாஞ்செஸ்டர் கார்டியன்" என்ற பத்திரிகை நவீன ருஷியாவின் விவாக விதிகளைப் பற்றிய உண்மையான விவரங்களைப் பிரசுரம் செய்திருக்கிறது.

அவற்றைப் பார்க்கும்போது, நவீன ஐரோப்பிய நாகரிகம் என்று புகழப்படும் வஸ்துவின் நியாயமான, உயர்ந்த பக்குவ நிலைமை மேற்படி போல்ஷிவிஸ்ட் விவாக ஸம்பிரதாயங்களில் எய்தப் பட்டிருக்கிறதென்று தெளிவாக விளங்குகிறது. ஆண் பெண் இரு பாலரும் பரிபூர்ண ஸமத்வ நிலைமை யுடையோர். இங்ஙனம் இரு பாலோரும் முற்றிலும் ஸமானம் என்ற கொள்கைக்கு பங்கம் நேரிடாதபடி, விவாகக் கட்டைச் சமைக்க வேண்டும் என்பதே ஐரோப்பிய நாகரிகத்தின் உண்மையான நோக்கம். பெண்களுக்கு விடுதலை தாங்கள் வேறு பல ஜாதியார்களைக் காட்டிலும் அதிகமாகக் கொடுத்திருப்பதே தாம் நாகரிகத்தில் உயர்ந்தவர்கள் என்பதற்கு முக்கியமான அடையாளங்களில் ஒன்றாமென்று ஐரோப்பியர்கள் சொல்லுகிறார்கள். அந்த வகையிலே பார்த்தால், ஐரோப்பாவின் இதரப் பகுதிகளைக் காட்டிலும் நவீனருஷியா உயர்ந்த நாகரிகம் பெற்றுள்ளதென்பது ப்ரத்யக்ஷமாகத் தெரிகிறது.

"மாஞ்செஸ்டர் கார்டியன்" சொல்லுகிறது:—

"தெற்கு ஸோவியட் (போல்ஷிவிஸ்ட்) ருஷியாவில் இதுவரையிலிருந்த வீண் நிர்ப்பந்தங்கள் இனி விவாக விஷயத்தில் இல்லாதபடி ஒழித்துவிடப்படும். அதாவது, மத வேற்றுமைகள் முதலியன விவாகங்களுக்குத் தடையாக கணிக்கப்பட மாட்டா! இப்போதுள்ள சட்டப்படி ஸ்திரீகளுக்கும் புருஷர்களுக்கும் எவ்விதத்திலும் வேற்றுமை கிடையாது. இருபாலோரும் ஸமானமாகவே கருதப்படுவர். எல்லாக் குழந்தைகளும் ஸமூஹச் சட்டப்படி பரிபூர்ண சமத்வம் உடையனவாம். பாதுகாப்பில்லாத குழந்தைகள் யாருக்குப் பிறந்தபோதிலும், அவற்றைப் பாதுகாக்க ஒரு தனி இலாகா ஏற்பட்டிருக்கிறது. இந்தச் சட்டம் ராஜாங்க சாஸனப்படி நடைபெறும் விவாகங்களையே அங்கீகாரம் செய்யும். பெண்கள் பதினாறு வயதுக்குள்ளும், ஆண்கள் பதினெட்டு வயதுக்குள்ளும் விவாகம் செய்துகொள்ள வேண்டும். இருதிறத்தாரும் மனமொத்தால்தான் விவாகம் செய்யலாம். விவாகம் முடிந்ததும் புருஷன் அல்லது ஸ்திரீயின் பெயரை குடும்பத்தின் பெயராக வைத்துக்கொள்ளலாம். விவாகத்துக்குப் பிறகு தம்பதிகள் பரஸ்பரம் உதவியாக வாழக் கடமைப்பட்டிருக்கிறார்கள். புருஷனேனும் ஸ்திரீயேனும் விவாக பந்தத்தை நீக்கிக்கொள்ள விரும்பினால், அங்ஙனமே நீக்கிக்கொள்ளச் சட்டம் இடங்கொடுக்கிறது."

மேற்படி விவரங்கள் "மாஞ்செஸ்டர் கார்டியன்" பத்திரிகையிலே காணப்படுகின்றன. சிலதினங்களின் முன்பு ஒரு கிராமாந்தரத்து ஸ்திரீ "மாதர் நிலை" என்ற மகுடத்தின் கீழே "சுதேசமித்திரன்" பத்திரி

கையில் ஒரு வியாஸம் எழுதியிருந்தார். அந்த வியாஸத்தை வாசித்துப் பார்த்தால் (ஸ்ரீமான் காந்தி சொல்லுவதுபோல) எவனுக்கும் அழுகை வராமல் இராது. அந்த வ்யாஸத்தில் நம்முடைய தேசத்து ஸ்திரீகளை நம்மவரில் ஆண்மக்கள் எத்தனை இழிவாகவும் குரூரமாகவும் நடத்துகிறார்களென்பதை அந்த ஸ்திரீ மிகவும் நன்றாக எடுத்து விளக்கியிருந்தார். உலகத்தில் ஒரு ஸ்திரீ ஜனன மெய்திய மாத்திரத்திலே பூமாதேதி மூன்றே சொச்சம் முழம் கீழே அமிழ்ந்துபோய் விடுவதாக இந்நாட்டில் முந்தைய ஆண் மக்கள் எழுதி வைத்திருப்பதையும் அதுபோல் ஸ்திரீகளை இழிவாகவும் குறைவாகவும் சொல்லும் வேறு பல "சாத்திர" வசனங்களையும் மேற்கோள் காட்டி, அந்த மாது நம் பெண்மக்களின் ஸ்திதி விலங்குகளின் ஸ்திதியைக் காட்டிலும் பரிதாபத்துக்கு இடமாக இருப்பதை விளக்கி மிகவும் வருத்தமுணர்த்தியிருந்தார்.

இப்படிப்பட்ட நம்முடைய ஸ்திரீகளின் நிலைமையை நவீன ருஷ்யாவில் ஸ்திரீகளின் விஷயமாக ஏற்பட்டிருக்கும் சட்டங்களுடன் ஒப்பிட்டுப் பாருங்கள். அப்போதுதான் நம்மை ஐரோப்பிய நாகரிகம் எந்த சக்தியினாலே கீழே வீழ்த்திற்று என்பதும், எந்த அம்சங்களில் நாம் ஐரோப்பிய நாகரிகத்தின் வழியைப் பின்பற்றத் தகும் என்பதும் தெளிவுறப் புலப்படும். நாம் ஐரோப்பியர் காட்டும் நெறிகளை முற்றிலுமே கைப்பற்றிக்கொள்ளுதல் அவசியமில்லை. திருஷ்டாந்தமாக, நாம் குழந்தைகளை குடும்ப சம்ரக்ஷணையினின்றும் பிரித்து ராஜாங்க ஸம்ரக்ஷணையில் விடவேண்டியதில்லை. பெண்கள் 14 வயதுக்குள்ளும்

ஆண்கள் 18 வயதுக்குள்ளும் விவாகம் பண்ணித் தீரவேண்டுமென்று நிர்பந்தப்படுத்த வேண்டிய தவசியமில்லை. விவாகத்தை ரத்து செய்யும் விஷயத்தில் அவஸரப்பட வேண்டியதில்லை. பொறுமையை உபயோகப்படுத்தி விவாகக் கட்டை நிரந்தரமாகப் பாதுகாப்பதே மனித நாகரிகத்தின் சிறப்பாதலால், நாம் அதற்குரிய ஏற்பாடு செய்வோம். ஆனால் " ஆண்களுக்கும் பெண்களுக்கும் எவ்விதத்திலும் வேற்றுமை கிடையாது. இருபாலோரும் ஸமானமாகவே கருதப்படுவார்கள்" என்று ருஷ்யச் சட்டம் கூறுமிடத்திலே நாம் ஐரோப்பிய நாகரிகத்தின் கருத்தை அனுஸரித்தல் மிக, மிக, மிக, மிக, அவஸரம்.

# தென் ஆப்பிரிக்காவில் பெண்கள் விடுதலை

தென் ஆப்பிரிக்காவிலே "பியேட்டர் மாரிட்ஸ்புர்க்" என்ற பட்டணத்தில் 1910-ஆண்டில் "பெண்கள் விடுதலைச் சங்கம்" என்றொரு சபை ஸ்தாபனம் செய்யப்பட்டது. இதிலே பல வகுப்புகளைச் சேர்ந்த பெண்கள் ஒன்று கூடி "பார்லிமெண்டு" சபையிலே பிரதிநிதிகள் நியமிப்பதற்காக சீட்டுப் (ஓட்) போடும் சுதந்திரம் பெண்களுக்குக் கொடுத்தால் ஒழிய வேறு விதமான சீர்திருத்தங்கள் பெண்களுடைய நிலைமையிலே உண்டாக்குவது சாத்தியமில்லை என்று முடிவு செய்துகொண்டு அந்நோக்கத்தை நிறைவேற்றும்படி பிரயத்னம் செய்து வருகின்றார்கள். இந்தச் சங்கம் ஆரம்பித்த காலத்தில் 'நட்டா'லிலே பெண்கள் நகர சபை (Municipality) க்குச் சீட்டுப் போடும் உரிமை கூட இல்லாதிருந்தனர். இச் சங்கத்தினரின் முயற்சியால் ஸ்திரீகளுக்குள்ளே ஜாதி, குலம், செல்வம், ஸ்தானம், பட்டம் முதலியவற்றால் ஏற்பட்டிருந்த அனாவசியமான தாரதம்யங்கள் குறைந்து வருகின்றன. கல்வி விஷயத்திலே (அதாவது பெண் கல்வி மாத்திரம் அன்று), பொதுவாக தேசத்து ஜனங்களின் படிப்பு விஷயத்தில் இவர்கள் மிகவும் சிரத்தை செலுத்தி வருகிறார்கள். பள்ளிப்பிள்ளைகளுக்கும், பெண்களுக்கும் இயற்கை விதிகளை நன்றாகக் கற்றுக்

கொடுத்து மேற்படி விதிகளைத் தவறினால் இயற்கையே தண்டனை செய்யும் என்பதை அவர்கள் நன்றாகத் தெரிந்து கொள்ளும்படி செய்து, பொதுஜன அறிவை இயற்கை நெறியில் ஓங்கும்படி செய்யவேண்டும் என்று பாடு படுகிறார்கள். நிலை தவறிப்போன ஸ்திரீகளைக் கொடூரமான அவமதிப்பாலும் அசிரத்தையாலும் மேன் மேலும் கெட்டழிந்து துன்பப்படாதபடி நல்வழி காட்டி நேர்மைப் படுத்தலே தகுதியென்று தீர்மானித்து அதற் குரிய முயற்சி செய்து வருகிறார்கள். "ஜனசபை ராசி" (ஜன சபைப் பார்லிமெண்டு) ராசி கமிட்டி யென்று தன் ராசி ஒன்று நியமித்து அந்த ராசி (கமிட்டி) யைச் சேர்ந்தவர்கள் அப்போதப்போது ஜன சபைக்கு முன்பு வரும் மசோதாக்களைப் படித்து ஆராய்ச்சி செய்கிறார்கள். ஏதேனும் ஒரு மசோதா சட்ட மாவதனாலே ஜனங்களுக்குப் பிரதிகூலம் ஏற்படும் என்று தோன்றினால், உடனே ஜன சபைக்காரரைத் தனித்தனியே போய்ப் பார்த்து ஆட்சேபங்கள் செய்தல், தந்திகளின் மூலம் ஆட்சேபித்தல் முதலிய காரியங்கள் செய்கிறார்கள். ஸ்திரீகளுக்குத் தொழிற்சாலைகளிலே கொடுக்கும் சம்பளம் இன்ன அளவுக்குக் கீழே போகக்கூடாதென்று நிர்ணயஞ் செய்த ஜன சபையார் ஒரு "சம்பளக் கீழெல்லை மசோதா" கொண்டு வரவேண்டும் என்று சொல்லி, அதற்காகப் பல "மெம்பர்"* களைப் போய்ச் சந்தித்து வாதாடி வருகிறார்கள்.

---

[* நடுவிலே ஒரு ரசமான வார்த்தை. "மெம்பர்" என்பதற்குச் சரியான தமிழ்ச் சொல் எனக்கு அகப்படவில்லை. இது ஆச்சர்யத்திலும் ஆச்சர்யம். "அவயவி" சரியான வார்த்தையில்லை. "அங்கத்தான்" கட்டிவரரது. "சபிகன்" சரியான பதந்தான். ஆனால் பொது ஜனங்களுக்குத் தெரியாது. யாரேனும் பண்டிதர்கள்

ஸ்திரீகளுக்கு நகர சபையிலே சீட்டுப் போடும் சுதந்திரம் மேற்படி சங்கத்தாரின் முயற்சியாலே தான் கைகூடிற்று. ஸ்திரீகளையும் குழந்தைகளையும் யாரேனும் அடித்து ஹிம்சை செய்ததாக நியாயஸ்தலங்களிலே வழக்கு வரும்போது, மேற்படி சங்கத்தின் காரியஸ்தர்கள் போயிருந்து கவனித்து வருகிறார்கள். தென்னாப்பிரிக்கா முழுமைக்குமாக் ஒரு பெரிய 'விடுதலை'க்கோட்டம் (கோட்டம் என்பது பெருஞ்சபை) ஏற்பட்டிருக்கிறது. அதனுடன் இந்தச் சங்கமும் சேர்ந்திருக்கிறது. "பிருத்தானிய ஸ்திரீ ஸாம்ராஜ்யம்" என்ற பெரிய கோட்டத்துடன் இவையெல்லாம் ஐக்கியப்பட்டிருக்கின்றன. அந்நிய தேசங்களில் உள்ள விடுதலைக் கூட்டத்தாருடனே இவர்கள் அடிக்கடி கடிதப் போக்கு வரவு நடத்துகிறார்கள். இவ்விஷய மெல்லாம் சென்னையில் மிஸஸ் அன்னி பெஸண்ட் என்ற பண்டிதை நடத்தும் "காமன்வீல்" (பொதுநலம்) பத்திரிகையிலே சொல்லப் படுகிறது. மிஸஸ் அன்னி பெஸண்ட் பெண்கள் விடுதலை விஷயத்திலே தீவிரமான பக்தி யுடையவர் என்பது சொல்லாமலே விளங்கும். இப்படியே எல்லா தேசங்களிலும் பெண்கள் மேன்மேலும் சுதந்திரம் பெற்று மனித ஜாதியை மேன்மைப்படுத்த முயற்சி செய்கிறார்கள். தமிழ்நாட்டு ஸ்திரீகள் மாத்திரம் தமது மனுஷ்ய பதவியை ருசுப்படுத்துவதற்கு யாதொரு வழியும் செய்யாமல் இருக்கிறார்களே! ஏன்? என்ன காரணம்?

---

நல்ல பதங்கள் கண்டு பிடித்துக்கொடுத்தால் புண்ணிய முண்டு. அரை மணி நேரம் யோசித்துப்பார்த்தேன்; 'உறுப்பாளி'? ஏதெல்லாமோ நினைத்தேன். ஒன்றும் மனதிற்குப் பொருந்தவில்லை. என்ன செய்வேன்! கடைசியாக "மெம்பர்" என்று எழுதி விட்டேன். இன்னும் ஆர, அமர யோசித்துச் சரியான பதங்கள் கண்டுபிடித்து மற்றொரு முறை சொல்லுகிறேன்.]

## இந்தியாவில் விதவைகளின் பரிதாபகரமான நிலைமை

ஸ்ரீமான் மோஹனதாஸ் கரம்சந்திர காந்தி (மகாத்மா காந்தி) யால் நடத்தப்படும் "நவஜீவன்" என்ற பத்திரிகையில் ஒருவர் பாரத தேசத்து விதவைகளைப் பற்றிய சில கணக்குகளைப் பிரசுரம் செய்திருக்கிறார்.

அவற்றுள் குழந்தைக் கைம்பெண்களைப் பற்றிய பின்வரும் கணக்கு மிகவும் குறிப்பிடத் தக்கது

| வயது | மணம்புரிந்த மாதர் | கைம்பெண்கள் |
|---|---|---|
| 0-1 | 13212 | 1014 |
| 1-2 | 17753 | 856 |
| 2-3 | 49787 | 1807 |
| 3-4 | 134105 | 9273 |
| 4-5 | 302425 | 17703 |
| 5-10 | 2219778 | 94240 |
| 10-15 | 10087024 | 223032 |

இந்தக் கணக்கின்படி இந்தியாவில் பிறந்து ஒரு வருஷமாகு முன்னரே விதவைகளாய்விட்ட மாதர்களின் தொகை 1014! 15 வயதுக்குக் குறைந்த கைம்பெண்களின் தொகை $3\frac{1}{2}$ லக்ஷம்! இவர்களில் சற்றுக் குறைய 18000 பேர் ஐந்து வயதுக்குட்பட்டோர்!

இப்படிப்பட்ட கணக்குகள் சில கொடுத்துவிட்டு, அவற்றின் இறுதியில் மேற்படிக் கடிதம் எழுதியவர் "இக்கைம்பெண்களின் மொத்தத் தொகை மிகவும் அதிகமாக இருக்கிறது. இதைப் படிக்கும்போது

எந்த மனிதனுடைய மனமும் இளகி விடும். (இந்நாட்டில்) விதவைகள் என்ற பாகுபாட்டை நீக்க முயல்வோர் யாருளர்?" என்று சொல்லி வருத்தப் படுகிருர்.

இந்த வியாசத்தின் மீது மகாத்மா காந்தி பத்திராதிபர் என்ற முறையில் வியாக்கியானம் எழுதியிருக்கிருர். அந்த வியாக்கியானத்தின் ஆரம்பத்தில் ஸ்ரீமான் காந்தி, "மேலே காட்டிய தொகையைப் படிப்போர் அழுவார்கள் என்பது திண்ணம்" என்கிருர். அப்பால், இந்த நிலைமையை நீக்கும் பொருட்டு, தமக்குப் புலப்படும் உபாயங்களில் சிலவற்றை எடுத்துச் சொல்லுகிருர். அவற்றின் சுருக்கம் யாதெனில், (1) பால்ய விவாகத்தை நிறுத்திவிடவேண்டுமென்பதும் (2) 15 வயதுக்குட்பட்ட கைம்பெண்களும் மற்ற இளமையுடைய கைம்பெண்களும் புனர் விவாகம் செய்துகொள்ள இடம் கொடுக்கவேண்டுமென்பதுமே யாகும்.

ஆனல் இந்த உபாயங்களை விருப்பமுடையோர் அநுசரிக்கலா மென்றும், தமக்கு இவற்றை அநுசரிப்பதில் விருப்பமில்லை யென்றும், தம்முடைய குடும்பத்திலேயே பல விதவைகள் இருக்கலாமென்றும், அவர்கள் புனர் விவாகத்தைப்பற்றி யோசிக்கவே மாட்டார்களென்றும், தாமும் அவர்களை மறுமணம் செய்து கொள்ளும்படி கேட்க விரும்பவில்லை என்றும் ஸ்ரீ காந்தி சொல்லுகிருர்.

### ஸ்ரீமான் காந்தி சொல்லும் உபாயம்

" ஆண்மக்கள் புனர்விவாகம் செய்துகொள்ளுவதில்லை என்ற விரதம் பூணுதலே விதவைகளின்

தொகையைக் குறைக்கும் அருமருந்தாகும்" என்று ஸ்ரீமான் காந்தி அபிப்பிராயப்படுகிருர். இந்த விநோதமான உபாயத்தை முதல் முறை வாசித்துப் பார்த்தபோது எனக்கு ஸ்ரீமான் காந்தியின் உட் கருத்து இன்னதென்று விளங்கவில்லை. அப்பால், இரண்டு நிமிஷம் யோசனை செய்து பார்த்த பிறகு தான், அவர் கருத்து இன்னதென்பது தெளிவுபட லாயிற்று. அதாவது, 'முதல் தாரத்தைச் சாகக் கொடுத்தவன் பெரும்பாலும் கிழவனுகவேயிருப்பான். அவன் மறுபடி ஒரு சிறு பெண்ணை மணம் புரியு மிடத்தே அவன் விரைவில் இறந்துபோய் அப்பெண் விதவையாக மிஞ்சி நிற்க இடமுண்டாகிறது. ஆத லால், ஒருமுறை மனைவியை இழந்தோர் பிறகு மணம் செய்யாதிருப்பதே விதவைகளின் தொகையைக் குறைக்க வழியாகும்' என்பது ஸ்ரீமான் காந்தியின் தீர்மானம்.

சபாஷ்! இது மிகவும் நேர்த்தியான உபாயம் தான். ஆனல் இதில் ஒரு பெரிய சங்கடம் இருக் கிறது. அது யாதெனில் இந்த உபாயத்தின்படி ஆண்மக்கள் ஒரு போதும் நடக்கமாட்டார்கள். மேலும், பெரும்பாலும் கிழவர்களே முதல் தாரத்தை இழப்பதாக ஸ்ரீமான் காந்தி நினைப்பதும் தவறு. 'இந்தியாவில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் சரா சரி 25-ம் பிராயத்தில் மரணம் நேருகிறது' என்பதை ஸ்ரீமான் காந்தி மறந்து விட்டார். எனவே, இளம் பிராயமுடைய பலரும் மனைவியரை இழந்து விடுகிருர் கள். அவர்கள் ஸ்ரீமான் காந்தி சொல்லும் சந்நியாச மார்க்கத்தை ஒருபோதும் அநுஷ்டிக்க மாட்டார்கள் அவர் அங்ஙனம் அநுஷ்டிப்பதினின்றும் தேசத்

துக்கு பல துறைகளிலும் தீமை விளையுமேயன்றி நன்மை விளையாது. ஆதலால் அவர்களை அங்ஙனம் துறவு பூணும்படி கேட்பதும் நியாயமில்லை.

ஸ்திரீ-விதவைகளின் தொகையைக் குறைக்க வழி கேட்டால், ஸ்ரீமான் காந்தி "புருஷ-விதவை" களின் (அதாவது: புனர்விவாகமின்றி வருந்தும் ஆண் மக்களின்) தொகையை அதிகப்படுத்தவேண்டுமென்கிறார்! இதினின்றும், இப்போது ஸ்திரீ-விதவைகளின் பெருந்தொகையைக் கண்டு தமக்கு அழுகை வருவதாக ஸ்ரீமான் காந்தி சொல்லுவது போல், அப்பால் புருஷ விதவைகளின் பெருந்தொகையைக்கண்டு அழுவதற்கு ஹேது உண்டாகும்.

மேலும், ஆணுக்கேனும் பெண்ணுக்கேனும் இளமைப் பிராயம் கடந்த மாத்திரத்திலே போக விருப்பமும் போகசக்தியும் இல்லாமற் போகும்படி கடவுள் விதிக்கவில்லை. உலகத்தின் நலத்தைக் கருதி கடவுளால் ஏற்படுத்தப்பட்டிருக்கும் போக இச்சையை அக்கிரமமான வழிகளில் தீர்த்துக் கொள்ள முயல்வோரை மாத்திரமே நாம் கண்டிக்கலாம். கிரமமாக ஒரு ஸ்திரீயை மணம் புரிந்துகொண்டு அவளுடன் வாழ விரும்புவோர் வயது முதிர்ந்தோராயினும் அவர்களைக் குற்றம் சொல்வது நியாயமன்று. சிறிய பெண் குழந்தைகளை வயது முதிர்ந்த ஆண்மக்கள் மணம் புரியலாகாதென்பதை நாம் ஒரு வேளை பேச்சுக்காக ஒப்புக்கொண்டபோதிலும், வயதேறிய பெண்களை வயது முற்றிய ஆண்மக்கள் மணம் புரிந்துகொள்ளக் கூடாதென்று தடுக்க எவனுக்கும் அதிகாரம் கிடையாது. எனவே, எவ்வகையாலே நோக்குமிடத்தும் ஸ்ரீமான் காந்தி சொல்லும் உபாயம் நியாய விரோதமானது; சாத்தியப்படாதது; பயனற்றது.

விதவைகளின் தொகை குறைப்பதற்கும் அவர்களுடைய துன்பங்களை தீர்ப்பதற்கும் ஒரே வழிதான் இருக்கிறது. அதை நம்முடைய ஜனத்தலைவர்கள் ஜனங்களுக்கு தைர்யமாக போதிக்கவேண்டும். அதை ஜனங்கள் எல்லோரும் தைர்யமாக அனுஷ்டிக்க வேண்டும். அதாவது யாதெனில்:—இந்தியாவில் சிற்சில ஜாதியாரைத் தவிர மற்றபடியுள்ளோர், நாகரிக தேசத்தார் எல்லோரும் செய்கிறபடி, விதவைகள் எந்தப் பிராயத்திலும் தமது பிராயத்துக்குத் தகுந்த புருஷரை புனர் விவாகம் செய்துகொள்ளலாம். அப்படியே புருஷர்கள் எந்தப் பிராயத்திலும் தம் வயதுக்குத் தக்க மாதரை மறுமணம் செய்துகொள்ளலாம். இந்த ஏற்பாட்டை அனுஷ்டானத்திற்குக் கொண்டுவர வேண்டும். வீண் சந்தேகம், பொறுமை, குருட்டுக்காமம், பெண்களை ஆத்மாவில்லாத, ஹ்ருதயமில்லாத, ஸ்வாதீனமில்லாத அடிமைகளாக நடத்தவேண்டுமென்ற கொள்கை-இவற்றைக் கொண்டே நம்மவர்களில் சில புருஷர்கள் 'ஸ்திரீகளுக்கு புனர் விவாகம் கூடாது' என்று சட்டம் போட்டார்கள். அதனாலேதான், மனைவியில்லாத கிழவர்கள் சிறு பெண்களை மணம் புரிய நேரிடுகிறது. அதனாலேதான், ஹிந்து தேசத்து விதவைகளின் வாழ்க்கை நரகவாழ்க்கையினும் கொடியதாய் எண்ணற்ற துன்பங்களுக்கு இடமாகிறது. பால்ய விதவைகள் புனர் விவாகம் செய்து கொள்ளலாமென்று ஸ்ரீமான் காந்தி சொல்லுகிறார். ஆனால் அதைக்கூட உறுதியாகச் சொல்ல அவருக்கு தைரியம் இல்லை; மழுப்புகிறார். எல்லா விதவைகளும் மறுமணம் செய்துகொள்ள இடம் கொடுப்பதே இந்தியாவில் மாதருக்குச் செய்யப்படும் அநியாயங்கள் எல்லாவற்றிலும் பெரிதான இந்த அநியாயத்திற்குத் தகுந்த மாற்று. மற்றப் பேச்செல்லாம் வீண் கதை.

பாரதியாரின் கட்டுரைகள்

# கலைகள்

## இன்று

(ஒரு ரிஷி குமாரன் எழுதியது)

இன்று தேவர்களை அழைக்கிறோம்.

இந்த மண்ணுலகத்திலே மீளவும் கிருத யுகத்தை நாட்டும் பொருட்டாக.

அறிவின்மை, அசுத்தம், சிறுமை, நோய், வறுமை, கொடுமை, பிரிவு, அநீதி, பொய் என்ற ராக்ஷஸக் கூட்டங்களை யழித்து மனித ஜாதிக்கு விடுதலை தரும் பொருட்டாக.

கல்வி, அறிவு, தூய்மை, பெருமை, இன்பம், செல்வம், நேர்மை, ஒற்றுமை, நீதி, உண்மை என்ற ஒளிகளெல்லாம் வெற்றியடையும் பொருட்டாக.

இன்று தேவர்களை அழைக்கிறோம், எம்மை ரிஷிகளாகச் செய்து தரும் பொருட்டு, எமது குற்றங்களையெல்லாம் நீக்கிக் கோணல்களை நிமிர்த்தி, எமக்கு அமர இன்பத்தைத் தரும் பொருட்டு.

எமதறிவையே தேனாக்கிக்கொடுக்கிறோம். இந்தத் தேனை தேவர்கள் உண்டு களிபெறுக. எமது மந்திரங்கள் தேவருடைய திருவடியைப் பற்றுக. அவர்களை இந்த வேள்வியிலே கொண்டு தருக. எமதுடலையும், உயிரையும், அறிவையும் அவர்களுக்குக் கோயிலாக்கு கிறோம். எமதுடைமைகள் எல்லாம் அவர் களைச் சார்ந்தன; எமது மனைவி மக்கள் அவர் களுக்குச் சேவகர்; எமது வீடு, வாயில், மாடு, கழனி யெல்லாம், அவர்களுக் குரியன. எமது தொழில் அவர்களுடையது. எமது நினைப்புக் களெல்லாம, ஆசைகளெல்லாம், விருப்பங்கள் எல்லாம், இன்பங்கள் எல்லாம் தேவர் முன்பு வைக்கின்றோம்; அவை அவரின் உணவாகுக.

வானவரே, வந்து சுவை கொள்ளுவீர்.

அன்பே, வா, மித்ரா; உன்னைப் பணிகின் றோம். உன்னாலே காக்கப்பட்டவன் அழிவ தில்லை. தோல்வி பெறுவதில்லை. இவனை இங்கிருந்தேனும், தொலையில் இருந்தேனும் தீங்கு வந்து தீண்டுவதில்லை என்று எமது முன்னோர் கண்டனர். நாமும் அங்ஙனமே காண்கின்றோம்.

அனைத்தையும் ஆழ்ந்து நிற்கும் அநந்த நிலையே, வருக. வருணா, எல்லையற்றது நினது தண்மை. இந்த எமதறிவாகிய யாகஸ்தலத் திலே நிறுத்தி, எமது கட்டுகளை எல்லாம் வெட்டிவிடு. வலிமையே, நினது வரவு நல் வரவு. உன்னை மிகவும் வேண்டுகிறோம். அர்ய மா, எமக்கு வலிமை தருதல் வேண்டும்.

இன்பமே வா, வா, வா. பகதேவா, எப்போதும் எம்மோடு கூடி வாழ்ந்திரு. உனது முகம் மிகவும் அழகுடையது. அதைப் பார்த்துக்கொண்டேயிருந்தால் போதும், எமதுள்ளம் நிறைந்திருக்கும். உனது உதய தேவி முன்னமே வந்துவிட்டாள். இளையவள், செந்நிறமுடையவள், என்றும் விழிப்பவள், இவளைத் தீ கொணர்ந்து கொடுத்தான். தீ எம்மிடத்தே வளர்கிறான். தீ வலியவன். அவன் உண்மையை யுடைய கடவுள். உள்ளத்தை அவனுக்கு விறகாகக் கொடுத்தோம். அதில் என்றும் எரிவான்; அவிந்துபோகமாட்டான். தீ எமது தலைவன். அவனை முப்போதும் சரணமடைகின்றோம்.

இன்று இப்போது தேவர்களை அழைக்கிறோம். வா, சூர்யா, தெய்வ ஒளியே, ஞானச்சுடரே, அமிர்த ஊற்றே, வலிமையின் தந்தையே, வானவர் விழியே, அநந்தவிரிவே, ஆக்கமே, புகழே, வெற்றியே, எமதரசே, நின் வரவு நன்று. மிகவும் நன்று.

மருத்துக்களே, புயற் காற்றுக்களே, மனதின் அசைவுகளே, மதிகளே, ஒளி மிகுந்தீர், வலிமையுடையீர், வானத்தையும் மண்ணையும், வலிமைக்களியிலே, குமுறும்படி செய்வீர். மேகங்களைப் புடைத்து நல்ல மின்னல் காட்டுவீர், மருத்துக்களே, வாரீர். மனதிலே நேரும் சோர்வுகளை யெல்லாம் உங்கள் வீரத்தினாலே தீர்த்து விடுக. நீங்கள் வாயுமண்டலத்தைப் புனிதப் படுத்துகிறீர்கள். வானத்திலிருந்து மழை பொழியச் செய்கிறீர்கள். வருக.

இன்று தேவர்களை அழைக்கிறோம்.

காற்றே வா. இங்கேயே இரு எப்போதும்; திரும்பியே போகாதே. நீ உயிர், உன்னை வரிக்கின்றோம். அசுவினி - தேவர் உயிர்ப் பரிகளிலே ஏறி வருகின்றனர். அவர் நோய்களைத் தீர்ப்போர். அவரை எம்முள்ளே பதியும்படி செய்கின்றோம்.

## தமிழருக்கு

தமிழா, தெய்வத்தை நம்பு. பயப்படாதே. உனக்கு நல்ல காலம் வருகின்றது.

உனது ஜாதியிலே உயர்ந்த அறிஞர் பிறந்திருக்கிறார்கள். தெய்வங்கண்ட கவிகள், அற்புதமான ஸங்கீத வித்வான்கள், கை தேர்ந்த சிற்பர், பல நூல் வல்லார், பல தொழில் வல்லார், பல மணிகள் தோன்றுகிறார்கள். அச்சமில்லாத தர்மிஷ்டர் பெருகுகின்றனர். உனது ஜாதியிலே தேவர்கள் மனிதராக அவதரித்திருக்கிறார்கள். கண்ணை நன்றாகத் துடைத்துவிட்டு நான்கு பக்கங்களிலும் பார். ஒரு நிலைக் கண்ணாடியிலே போய்ப் பார்.

நமது நாட்டு ஸ்திரீகளிலே பலர் சக்தி கணங்களின் அவதாரமாக ஜனித்திருக்கிறார்கள். ஒளி, சக்தி, வலிமை, வீர்யம், கவிதை, அழகு, மகிழ்ச்சி நலங்களெல்லாம் உன்னைச் சார்கின்றன.

தமிழா, பயப்படாதே. ஊர்தோறும் தமிழ்ப் பள்ளிக்கூடங்கள் போட்டு ஐரோப்பிய சாஸ்திரங்களை எல்லாம் தமிழில் கற்றுக்கொடுக்க ஏற்பாடு செய்.

ஜாதி வேற்றுமைகளை வளர்க்காதே. 'ஜாதியிரண்டொழிய வேறில்லை' என்ற பழந் தமிழ் வாக்கியத்தை வேதமாகக் கொள்.

பெண்ணை அடிமை என்று கருதாதே. முற்காலத்துத் தமிழர் மனைவியை "வாழ்க்கைத் துணை" என்றார். ஆத்மாவும் சக்தியும் ஒன்று. ஆணும் பெண்ணும் சமம்.

வேதங்களை நம்பு. அவற்றின் பொருளைத் தெரிந்துகொண்டு பின் நம்பு. புராணங்களைக் கேட்டுப் பயனடைந்து கொள். புராணங்களை வேதங்களாக நினைத்து மடமைகள் பேசி விலங்குகள் போல் நடந்து கொள்ளாதே.

தமிழா, உனது வேலைகள் அனைத்திலுமே பொய்க் கதைகள் மிதமிஞ்சி விட்டன. உனது மதக் கொள்கைகள், லௌகிகக் கொள்கைகள், வைதிக நடை - எல்லாவற்றிலுமே பொய்கள் புகுந்து தலைதூக்கி ஆட இடங்கொடுத்து விட்டாய். இவற்றை நீக்கிவிடு. வீட்டிலும், வெளியிலும், தனிமையிலும், கட்டடத்திலும், எதிலும், எப்போதும் நேர்மை யிருக்கவேண் வேண்டும்; உண்மை யிருக்கவேண்டும். நீயும் பிறரை வஞ்சிக்கலாகாது. பிறரும் உன்னை வஞ்சிக்க லாகாது. பிறர் பிறரை வஞ்சிப்பதையும் நீ இயன்ற வரை தடுக்கவேண்டும், எல்

லாப் பேறுகளைக் காட்டிலும் உண்மைப் பேறு தான் பெருமை கொண்டது. உண்மை தவங்களுக்கெல்லாம் உயிர். உண்மை சாஸ்திரங்களுக்கெல்லாம் வேர். உண்மை இன்பத்திற்கு நல்லுறுதி. உண்மை பரமாத்மாவின் கண்ணாடி. ஆதலால், தமிழா, எல்லாச் செய்திகளிலும் உண்மை நிலவும்படி செய்.

தமிழா, எழுதிப் படிப்பதெல்லாம் மெய்யுமில்லை, எதிர் நின்று கேட்பதெல்லாம் பொய்யுமில்லை. "முந்திய சாஸ்திரந்தான் மெய், பிந்திய சாஸ்திரம் பொய்" என்று தீர்மானம் செய்து கொள்ளாதே. காலத்துக்கும் உண்மைக்கும் எதிரிடையாக ஓர் கணக்கு ஏற்பட்டிருக்கிறதா? "தகப்பன் வெட்டிய கிணறு என்று சொல்லி மூடர்கள் உப்பு நீரைக் குடிக்கிறார்கள்" என்று 'பஞ்சதந்திரம்' நகைக்கிறது.

இவ்வுலகில் நான்கு புருஷார்த்தங்கள் என்று பெரியோர்கள் காட்டியிருக்கிறார்கள். அவை அறம், பொருள், இன்பம், வீடு-என்பன.

இவற்றுள் அறமாவது கடமை. அது உனக்கும் உனது சுற்றத்தாருக்கும், பிறர்க்கும், நீ செலுத்த வேண்டிய கடமை. 'பிறர்' என்பதனுள் வையகம் முழுதும் அடங்கும். கடமையில் தவறலாகாது. தொழில்களெல்லாம் நற்பயன் தருமிடத்து அறங்களாகும்.

பொருள் என்பது செல்வம். நிலமும், பொன்னும், கலையும், புகழும் நிறைந்திருத்தல்,

நல்ல மக்களைப் பெறுதல், இன்பப்பெருமை சேருதல், இவை யெல்லாம் செல்வம். இச் செல்வத்தைச் சேர்த்தல் மனித உயிருக்கு ஈசன் இட்டிருக்கும் இரண்டாம் கட்டளை.

இன்பம் என்பது இனியபொருள்களுடன் உயிர் கலந்து நிற்பது. பெண், பாட்டு, கூத்து முதலிய ரஸ வஸ்துக்களை அனுபவிப்பது. இவ்வின்பங்கள் எல்லாம், தமிழா, உனக்கு நன்றாக அமையும்படி பராசக்தி அருள் புரிக. உன்னுடைய நோய்களெல்லாம் தீர்க. உனது வறுமை தொலைக. உனக்கு இனிமையும் அழகுமுடைய வஸ்துக்களெல்லாம் வசப்படுக. பஞ்ச பூதங்களும் உனக்கு வசப்படுக. நீ எப் பொழுதும் இன்பம் எய்துக.

வீடாவது பரமாத்மாவுடன் அறிவு கலந்து நிற்பது. "வீடு" என்ற சொல்லுக்கு "விடு தலை" என்பது பொருள். மேற்கூறப்பட்ட மூன்று புருஷார்த்தங்களும் ஈடேறிய பெரி யோருக்கு ஈசன் தானாகவே வீட்டு நிலை யருள் செய்வான். தமிழா, உனது புருஷார்த்தங்கள் கைகூடுக !

## தியானங்களும் மந்திரங்களும்

[ விடுதலைக்கு வழி ]

என் அறிவில் தெய்வத் தன்மை காணப் படுகிறது. நான் ஒரு தேவனைப்போலே சிந் தனை செய்ய வல்லேன். இனி என் செய்கை

களிலும் தெய்வத் தன்மை விளங்குதற்குரிய வழி செய்ய வேண்டும்.

நான் இவ்வுலகத்துப் பொருள்களின்மீது பேரவாக் கொள்வதில்லை. நான் இவ்வுலகத்தின் நாதன். இதற்கு நான் அடிமையில்லை. என் கையில் இயற்கை கொணர்ந்து தரும் பொருள்களைக் கொண்டு நான் திருப்தி எய்தக் கடவேன்.

நான் வேண்டிக் கரையத்தக்கது யாது? அதிகாரத்தை வேண்டி வருந்துவேனோ? ருஷிய ஜார் சக்கிரவர்த்தி வரம்பற்ற அதிகாரம் படைத்திருந்தான். அதினின்றும் என்ன பயனைக்கண்டான்? அன்றி நான் செல்வத்தை வேண்டி அழுங்குவேனோ? செல்வம் என்ன பயன் தரும்? நோவின்றிக் காக்குமோ? அன்று; நோவுகளை விளைக்கும்; பகையின்றிக் காக்குமா? அன்று; பகையைப் பெருக்கும்; கவலைகளும் அச்சங்களும் இன்றிக் காக்குமா? அன்று; அவற்றை மிகுதிப்படுத்தும். மரணமின்றிக் காக்குமா? காக்காது. எனில், அதனை வேண்டி அழுங்குதல் பெரும் பேதைமையன்றோ?

இரப்போன் தன்னைத்தான் விலைப்படுத்திக்கொள்கிறான். பசுவுக்குத் தண்ணீர் வேண்டும் என்றுகூடப் பிறரிடம் யாசித்தல் பெரிய அவமானம் என்று திருவள்ளுவர் சொல்லுகிறார். நான் எவரிடத்தும் ஒரு பொருள் வேண்டுமென்று கேட்கமாட்டேன்.

கடவுள் தன் அருளால் கொடுப்பவற்றை யேற்று மகிழ்வேன்.

[ ஆரோக்கிய ஸம்பந்தமான மந்திரங்கள் ]

நான் நோயற்றேன். நான் வலிமையுடையேன். என் உடம்பின் உறுப்புக்கள் தெய்வ வலிமையைப் பெற்றுக் கொண்டு விட்டன. அவை திறனுடையன; இலாகவமுடையன; இன்பந் தரித்தன; மிக எளிதில் இயங்குவன; மஹாசக்தியின் வீடுகளாயின. என் உடம்பில் நோயின் வேகமே கிடையாது. நான் நோய்களை யெல்லாம் புறத்தே வீசியெறிந்துவிட்டேன். நான் ஸுகம்; நானே பலம்; நான் சக்தி. பொய் பலஹீன முடையது; நான் ஸத்யம்; நான் கடவுள்; நான் ஆற்றல்; நான் வலிமையின்றி நோயுறல் யாங்ஙன மியலும்?

ஆஹா! வலிமையும், நோயின்மையும், ஆற்றலுமிருப்பதால் எனக்கு விளையுமின்பத்தை என்னென் றுரைப்பேன்? தேவத் தன்மையால் நான் எய்தும் ஆனந்தத்தை ஏதென்று சொல்வேன்? நான் தேவன்; நான் தேவன்; நான் தேவன்.

என் தலை, என் விழிகள், எனது நாசி, என் வாய், என் செவிகள், என் கழுத்து, மார்பு, வயிறு, கைகள், இடை, கால்கள்— இவையெல்லாம் முற்றிலும் ஆரோக்கியமுடையன; நோயற்றன; நோயுறத் தகாதன; எக்காலும் நோயுற மாட்டா.

என் மனம் ஆரோக்கியமே வடிவு கொண்டது. என் மனமும் ஹ்ருதயமும் எவ் வித நோய்ப் பூச்சிகளாலும் தாக்கப்படாதன.

நோய்களையும் அசுத்தங்களையும் நான் அறவே எறிந்துவிட்டேன். அவை மீண்டு வராதபடி அவற்றை சூன்யத்திற்குள்ளே வீழ்த்திவிட்டேன்.

நானே ஆரோக்கியம்; நான் தேவன்.

[ அமரத் தன்மையைக் குறித்த மந்திரங்கள் ]

நான் அமரன். எனக்குச் சாவு கிடையாது. நாழிகைகள் கழிக. நாட்கள் ஒழிக. பருவங்கள் மாறுக. ஆண்டுகள் செல்க. நான் மாறுபடமாட்டேன். நான் எக்காலமும் உறுதியாகவும் ஸ்திரமாகவும் இருப்பேன். என்றும் உயிர்வாழ்வேன். எப்போதும் ஸத்யமாவேன். எப்போதும் களித்திருப்பேன். இதையெல்லாம் நான் உறுதியாகத் தேர்ந்து கொண்டேன். இஃதெல்லாம் உண்மையென்று அறிவேன்.

நான் கடவுள், ஆதலால் சாகமாட்டேன். தெய்வம் என்னுள் எப்போதும் வந்து பொழிந்து கொண்டிருக்கும்படி என்னைத் திறந்து வைத்திருக்கிறேன். அதாவது, நான் என்னுள் வீழும்படி எப்போதும் திறந்து நிற்கிறேன். என்னுள்ளே கடவுள் நிரம்பியிருக்கிறான். அதாவது, என்னுள் யான் நிரம்பிக்கிடக்கிறேன். என் நாடிகளில் அமிர்தம் ததும்பிப் பாய்கிறது. அதனால்

என் இரத்தம் வேகமும் தூய்மையும் உடைய தாய் இருக்கிறது. ஆதலால் என்னுள்ளே வீர்யம் பொங்கிக்கொண்டிருக்கிறது.

நான் எப்போதும் வீர்யமுடையேன், ஜாக்ரதையுடையேன்; எப்போதும் தொழில் செய்வேன்; எப்போதும் காதல் செய்வேன்; ஆதலால் சாதல் இல்லேன்.

நான் இத்தனை ஆனந்தத்துள் மூழ்கிக் கிடக்குமாறென்னே? நான் தேவனாதலால்.

நான் தீராத இளமை சார்ந்தேன். என்றும், எப்போதும், நித்யமான கால முழுமையிலும், தீராத, மாறாத இளமையுடையேன். மூட மனிதர் தீர்க்காயுள் வேண்டுகின்றனர். நான் அதனை வேண்டேன். ஏனென்றால், இவர்களெய்தும் நீண்டவயது துன்பமாகிறதேயன்றி வேறில்லை. நான் ஸதாகாலம் துன்பமின்றி வாழும் வாழ்க்கையை விரும்புகின்றேன். அதனை நான் எய்தி விட்டேன். தீராத கவலை பொதிந்த சாதாரண மனித வாழ்க்கை சற்று நீடிப்பினால் என்ன பயன் தரும்? நான் கவலையை ஒழித்தேன், ஆதலால் எப்போதும் வாழ்வேன். எப்போதும் வாழ்வேன், ஆதலால் கவலையை விட்டேன். கவலையாலும் பயத்தாலும் மரணமுண்டாகிறது. கவலையும் பயமும் பகைவர். நான் இப்பகைவரை வென்று தீர்த்தேன். ஆதலால் மரணத்தை வென்றேன். நான் அமரன்.

# சிட்டுக் குருவி

சிறிய தானியம் போன்ற மூக்கு; சின்னக் கண்கள்; சின்னத் தலை; வெள்ளைக் கழுத்து; அழகிய மங்கல்-வெண்மை நிறமுடைய பட்டுப் போர்த்த வயிறு; கருமையும் வெண்மையும் கலந்த சாம்பல்நிறத்தாலாகிய பட்டுப்போர்த்த முதுகு; சிறிய தோகை; துளித் துளிக் கால்கள்.

இத்தனையும் சேர்த்து ஒரு பச்சைக் குழந்தையின் கைப்பிடியிலேபிடித்துவிடலாம். இவ்விதமான உடலைச் சுமந்து கொண்டு என் வீட்டிலே இரண்டு உயிர்கள் வாழ்கின்றன. அவற்றில் ஒன்று ஆண். மற்றொன்று பெண். இவை தம்முள்ளே பேசிக்கொள்கின்றன. குடும்பத்துக்கு வேண்டிய உணவு தேடிக் கொள்கின்றன. கூடு கட்டிக்கொண்டு, கொஞ்சிக் குலாவி மிக இன்பத்துடன் வாழ்ந்து, முட்டையிட்டுக் குஞ்சுகளைப் பசியில்லாமல் காப்பாற்றுகின்றன.

சிட்டுக்குருவி பறந்து செல்வதைப்பார்த்து எனக்கு அடிக்கடி பொறாமை யுண்டாகும். ஆஹா! உடலை எவ்வளவு லாவகத்துடன் சுமந்து செல்கின்றது. இந்தக் குருவிக்கு எப்போதேனும் தலை நோவு வருவதுண்டோ? ஏது, எனக்குத் தோன்றவில்லை. ஒருமுறையேனும் தலைநோவை அனுபவித்த முகத்திலே இத்தனை தெளிவு இருக்க நியாயமில்லை. பயமும் மானமும் மனிதனுக்குள்ளது போலவே குருவிக்கு உண்டு. இருந்தபோதிலும், க்ஷணந்

தோறும், மனிதருடைய நெஞ்சைச் செல்லரிப்பதுபோலே அரிக்குங் கவலைத் தொகுதியும், அதனால் ஏற்படும் நோய்த்திரளும் குருவிக்கு இருப்பதாகத் தெரியவில்லை.

தெய்வமே, எனக்கு இரண்டு சிறகுகள் கொடுக்க மாட்டாயா? பாழ்பட்ட மனிதர் கூட்டத்தையும், அதன் கட்டுகளையும், நோய்களையும், துன்பங்களையும் பொய்களையும் உதறி எறிந்துவிட்டு, நான் இச்சைப்படி வானத்திலே பறந்து செல்லமாட்டேனா? ஆஹா! எத்தனை தேசங்கள் பார்க்கலாம்! எத்தனை நாடுகள், எத்தனை பூக்கள்! எத்தனை மலைகள், எத்தனை சுனைகள், எத்தனை அருவிகள், எத்தனை நதிகள், எத்தனை கடல்வெளிகள்! வெயில், மழை, காற்று, பனி இவையெல்லாம் என் உடம்புக்கு நன்றாய் வழக்கப்பட்டு, இவற்றால் நோய்கள் உண்டாகாமல், எப்போதும் இன்ப உணர்ச்சிகளே உண்டாகும். இந்த நிலை எனக்கு அருள் புரியலாகாதா? குருவிக்குப் பேசத் தெரியும்; பொய் சொல்லத் தெரியாது. குருவியில் ஆண் பெண் உண்டு; தீராத கொடுமைகள் இல்லை. குருவிக்கு வீடுண்டு; தீர்வை கிடையாது. குருவிக்கு உணவு உண்டு; உழைப்புண்டு நாயகனில்லை; சேவகமில்லை.

தெய்வமே, எனக்கு இவ்விதமான வாழ்க்கை தரலாகாதா? குருவிக்கில்லாத பெருமைகள் எனக்கும் சில அருள் செய்திருக்கிறாய் என்பது மெய்தான். ஆராய்ச்சி, பக்தி, சங்கீதம், கவிதை முதலிய இன்பங்கள் மனிதனுக்குக் கைகூடும்; குருவிக்கு இயல்

பில்லை. ஆனாலும், இந்த இரண்டு வித இயல்பும் கலந்து பெற்றால் நான் பரிபூரண இன்பத்தை அடைய மாட்டேனா?

இந்தக் குருவி என்ன சொல்லுகிறது? "விடு", "விடு". "விடு" என்று கத்துகிறது. இஃது நான் விரும்பிய இன்பத்திற்கு வழி இன்னதென்று தெய்வம் குருவித் தமிழிலே எனக்குக் கற்றுக்கொடுப்பது போலிருக்கிறது.

விடு, விடு, விடு,—தொழிலை விடாதே. உணவை விடாதே. பேட்டை விடாதே. கூட்டை விடாதே. குஞ்சை விடாதே. உள்ளக்கட்டை அவிழ்த்து விடு. வீண் யோசனையை விடு. துன்பத்தை விடு.

இந்த வழி சொல்லுவதற்கு எளிதாயிருக்கிறது. இதனை நன்றாக உணர்ந்து கொள்ளுதல் எளிதன்று. உணர்ந்த பின்னும், இதை வழக்கப்படுத்துதல் அருமையிலும் அருமையிலும் அருமை.

"விடு" என்ற பகுதியிலிருந்து "வீடு" என்ற சொல் வந்தது. வீடு என்பது விடுதலை. இதை வடமொழியில் முக்தி என்கிறார்கள். இந்த நிலைமையை இறந்து போனதன் பின்பு பெறவேண்டும் என்று பெரும்பாலோர் விரும்புகிறார்கள். இவ்வுலக வாழ்க்கையிலேயே, இப்போதே, இந்நிலையை விரும்புதல் நன்று.

விடுதலையே இன்பத்திற்கு வழி; விடுதலை பெற்றோர் வறுமையிலிருந்து மாறிச் செல்வ

மடைவார்கள். மெலிவும் நோயும் நீங்கி வலிமையும் உறுதியும் பெறுவார்கள். சிறுமை நீங்கிப் பெருமை காண்பார்கள். துன்பங்கள் நீங்கி இன்பம் எய்துவார்கள்.

வா; நெஞ்சே, பராசக்தியை நோக்கிச் சில மந்திரங்கள் சாதிப்போம்.

நான் விடுதலை பெறுவேன்; எனது கட்டுக்கள் அறுபடும். நான் விடுதலை பெறுவேன்; என்னிச்சைப்படி எப்போதும் நடப்பேன். என்னிச்சையினாலே பிறருக்குத் தீங்கு விளையாது. எனக்கும் துன்பம் விளையாது. நன்மைகளே என்னுடைய இச்சைகள். இவற்றை நான் எப்போதும் நிறைவேற்றும்படியாக க்ஷணந்தோறும் எனக்குப் பிராண சக்தி வளர்ந்துகொண்டு வருக. உயிர் வேண்டுகிறேன். தலையிலே இடி விழுந்த போதிலும் சேதப்படாத வயிர உயிர். உடலை எளிதாகவும், உறுதியுடையதாகவும், நேர்மையுடையதாகவும் செய்து காக்கின்ற உயிர்.

அறிவு வேண்டுகிறேன்; எந்தப் பொருளை நோக்கு மிடத்தும், அதன் உண்மைகளை உடனே தெளிந்து கொள்ளும் நல்லறிவு; எங்கும் எப்போதும், அச்சமில்லாத வலிய அறிவு;

பிறவுயிருக்குத் தீங்கு தேடமாட்டேன். என்னுடைய உயிருக்கு எங்கும் தீங்கு வர மாட்டாது.

பராசக்தி, நின்னருளால் நான் விடுதலை பெற்று இவ்வுலகத்தில் வாழ்வேன்.

## சந்திரத் தீவு

தென்கடலில் மலேயத் தீவுகளினிடையே "பூலோ பூலாங்" என்ற ஒரு சிறிய தீவிருக்கிறது. "பூலோ பூலாங்" என்ற மலேயப் பதத்துக்குச் சந்திரோதயத் தீவு என்று அருத்தம். சுமார் எழுபதினயிரம் வருடங்களுக்கு முன்னே இத் தீவு 'சந்த்ர த்வீபம்' என்ற பெயருடன் விளங்கிற்று. அக் காலத்தில் அங்கு கங்காபுத்ரன் என்ற ஹிந்து ராஜா ராஜ்யம் செலுத்திக்கொண்டு வந்தான்.

அவனுக்கு ஆண் மகவு கிடையாது. பல விதமான தவங்களும், வேள்விகளும் புரிந்த பின் ஒரே ஒரு பெண் குழந்தை பிறந்தது. அதற்குச் சந்திரிகை என்ற பெயரிட்டு வளர்த்தான்.

அந்தப் பெண்ணினுடைய அழகும் கல்வியும் வர்ணிப்பதற்கு அரியன. கப்பல் வியாபாரிகளின் மூலமாக அப்பெண்ணினுடைய கீர்த்தி பூமண்டல முழுதிலும் பரவிவிட்டது.

அப்போது காசி நகரத்தில் அரசு செலுத்தின வித்யாபுத்ரன் என்ற பிராம்மண ராஜன், அந்தப் பெண்ணை மணம் செய்துகொள்ள விரும்பி, சண்டிகை என்ற தன் பெரிய தாயையும் ஸுதாமன் என்ற தன் மந்திரியையும் சந்திரத் தீவுக்கு அனுப்பினன்.

அவ்விருவரும் பல ஸம்மானப் பொருள்களுடனும் பரிவாரங்களுடனும் சந்திரத்

தீவிலே போயிறங்கி கங்காபுத்ரனைக் கண்டு வரிசைகளையெல்லாம் கொடுத்துக் காசிராஜன் கருத்தை அறிவித்தார்கள்.

சந்திரிகைக்கு வயது பதினேழு. நடுப் பகலில் அவள் ஓரிடத்துக்கு வந்தால் அங்கு பகலொளி மங்கி நிலவொளி வீசும்.

அவள் முகம் முழுமதி போன்றிருந்தது. அவள் நெற்றி பிறை போன்றது. அவள் விழிகள் நிலவு கொப்புளித்தன. அவள் புன்னகை நிலவு வீசிற்று. அவள் மேனியும் நிலவையே தெறித்தது.

இத்தகைய அழகுடைய பெண் பூமண்டலத்தில் எங்கும் கிடையாதபடியால், அவளைத் தகுதியற்ற வரனுக்குக் கொடுக்கக் கூடாதென்று கங்காபுத்ரன், வந்த வரன்களையெல்லாம் விலக்கி, மிகப் பொறுமையுடன் காத்திருந்தான்.

காசிராஜன் படத்தைப் பார்த்தவுடனே, அவனைத் தன் மகள் மணம்புரியலாமென்ற எண்ணம் கங்காபுத்ரனுக் குண்டாயிற்று. அவன் ராணியும் இணங்கினாள். ஆனால், அந்தப் பெண்ணுக்கு ஸம்மதமில்லை. பெண், சந்திரிகை, காசியிலிருந்துவந்த மந்திரி ஸுதாமனுடைய அழகையும் அவன் சொல்-நயத்தையும், நடை மேன்மையையும் கண்டு மயங்கியவளாய் அவனையே மணம் புரிந்துகொள்வேனென்று ஒரே ஸாதனையாக ஸாதித்தாள்; அதாவது, முரண்டு பண்ணினாள்.

மறுநாள் கங்காபுத்ரன் தனது மந்திரியாகிய ராஜ கோவிந்தனையும் காசி தேசத்து மந்திரியான ஸுதாமனையும் பல வேடர் பரிவாரங்களையுஞ் சேர்த்துக் கொண்டு யானை வேட்டைக்குச் சென்றான். வேட்டையில் இரண்டு ஆண் யானைகள் பட்டன. அப்பால் வனத்திலேயே ஸ்நான போஜனங்கள் முடித்துக் கொண்டு சிரம பரிஹாரத்தின் பொருட்டாக ஆங்கோர் ஆலமர நிழலிலே, கங்காபுத்ரன், ராஜகோவிந்தன், ஸுதாமன் மூவருமிருந்து பல விதமான சாஸ்த்ர ஸம்பாஷணைகள் செய்யலாயினர் :—

அந்த ஸம்பாஷணையினிடையே சந்திரத்தீவின் ராஜா கேட்கிறான் :— "இன்று காலையில் இரண்டு யானைகளைக் கொன்றோமே? அது பெரிய பாவமன்றோ? ஆஹா? என்ன நேர்த்தியான மிருகங்கள்! ஆஹா! எத்தனை அழகு, எத்தனை ஆண்மை, எத்தனை வீரம், எத்தனை பெருந்தன்மை. அவற்றைக் கொன்றோமே, இது கொடிய பாவமன்றோ?" என்றான்.

அதற்குக் காசி மந்திரி ஸுதாமன் சொல்லுகிறான் :—"ஆர்ய புத்ரா, யானையைக் கொல்வது மாத்திரந்தானா பாவம்? ஆடு, மாடு, கோழிகளைத் தின்கிறோமே. அது பாவமில்லையா?" என்றான்.

சந்திரத் தீவின் அரசன் "அதுவும் பாவந்தான்" என்றான்.

அப்போது ஸுதாமன் சொல்லுகிறான் :- "மாம்ஸ போஜனம் ஜந்துக்களுடைய இயற்கை; ஆதலால், பாவமாகாது. மனிதன் மாத்திரம்தானா மாம்ஸம் தின்னுகிறான்? மனிதனைப் புலி தின்னவில்லையா? சிங்கம், புலி, கரடி, நாய், நரி, முதலிய மிருகங்களெல்லாம் அஹிம்ஸா விரதத்தைக் கைக்கொண்டிருக்கின்றனவா? கொக்கு மீனைத்தின்னவில்லையா? பெரிய மீன் சிறிய மீனை விழுங்கவில்லையா? பருந்து கோழியைத் தின்னவில்லையா? காக்கை பூச்சிகளைத் தின்னவில்லையா? குருவி புழுக்களை யுண்ணவில்லையா? புழுக்களை ஒன்றையொன்று பக்ஷிக்கவில்லையா?" என்றான். அதற்குச் சந்திரத்தீவின் மந்திரியாகிய ராஜகோவிந்தன் சொல்லுகிறான், -"ஜீவஹிம்ஸை பொது நியாய மென்று சொல்லுதல் தவறு. யானை மாம்ஸந் தின்னாது. மாடு தின்னாது. மான் தின்னாது. குரங்கு தின்னாது. ஒட்டகை தின்னாது. குதிரை தின்னாது. கழுதை தின்னாது" என்றான்.

அப்போது கங்காபுத்ரன் நகைத்துக் கொண்டு:— "சிங்கம் புலி நம்மைத் தின்னுமென்றால், நாம் வேட்டையாடி அவற்றைத் தின்பது நியாயமென்று விளையாட்டுக்கு வைத்துக்கொள்ளலாம். சிங்கம் புலிகளை வேட்டையாடித் தின்போர் யாரையுங் காணோம். யாதொரு சூது மறியாத, எவ்வுயிருக்கும் எவ்வகைத்தீமையும் செய்யாத ஆட்டையும், மானையும், பசுவையும் மனிதன் தின்பது நியாயமா?" என்றான்.

அப்போது மந்திரி ராஜகோவிந்தன் சொல்லுகிறான் :— "சிற்சில ஜந்துக்கள்—பெரும்பான்மையான ஜந்துக்கள்-இதர உயிர்களைக்கொன்றுதான் ஜீவிக்கின்றன. ஆனால், மனிதனைத் திருத்தினால் பிறகு காக்கை, குருவி முதலிய அனேக ஜந்துக்களைக் கொஞ்சம் கொஞ்சமாக மாம்ஸம் தின்னாதபடி திருத்தி விடுதல் ஸாத்தியமென்று தோன்றுகிறது; போதுமான தானியங்களும் பழங்களும் கிடைத்தால் காக்கை, குருவி, கிளி—இவை பூச்சி புழுக்களைத் தின்னாதபடி பயிற்சி செய்விக்கலாம். மனிதன் உயிர்க்குலத்தின் ராஜா. "அரசனெப்படி அப்படி மன்னுயிர்." மனிதன் கருணா தர்மத்தையும் ஸமத்வ தர்மத்தையும் கைக்கொண்டால், பிற உயிர்களும் நாளடைவிலே கைக்கொள்ளும்" என்றான்.

அப்போது காசி மந்திரி ஸுதாமன் சொல்லுகிறான் :—

"இதர ஜீவ ஜந்துக்களின் மீது கருணை செலுத்து முன்னே, மனிதர் ஒருவருக்கொருவர் கருணை செலுத்துவதற்குரிய ஏற்பாடுகள் செய்தால் நல்லது. போர்களில் மனிதர் ஒருவரையொருவர் கொல்லவில்லையா? ஆட்டை மாட்டைக் கொன்றாலும் தின்ன உபயோகப்படுகிறது. மனிதரை மனிதர் தின்னும் வழக்கம் சிற்சில் தீவினருக்குள்ளே காணப்படுகிறதெனினும், நம்மைப் போன்ற நாகரிக ஜாதியார்களுக்குள்ளே அவ்வித வழக்கமில்லை. மனிதரை மனிதர் தின்னப் பயன்படாவிடினும் அநாவசியமாகக் கொன்று தள்ளுகிறார்கள்.

மேலும் பிறஉயிர்களை அடிமைப்படுத்தும்வழக்கம் மிருகங்களுக்கில்லை. சிங்கத்துக்குக்கீழே மற்றொரு சிங்கம் அடிமை கிடையாது. ஒரு நாய், ஒரு கழுதை, ஒரு நரி, ஒரு பன்றிகூடச் சிங்கத்தின் கீழே அடிமையில்லை. முயல்கூடக் கிடையாது. மிருகங்களும், பக்ஷிகளும் பிற ஜாதி மிருக பக்ஷிகளை அடிமைப் படுத்துவதில்லை; ஸ்வஜாதிகளையும் அடிமையாக்குவதில்லை. மனிதரோ, ஆடு, மாடு, குதிரை, கழுதை, ஒட்டகை, யானை முதலிய அன்னிய ஜாதி ஜந்துக்களை அடிமைப்படுத்தி வைத்திருப்பது மட்டுமேயல்லாது, பிற மனிதர்களையும் அடிமைப்படுத்தி வைத்திருக்கிறார்கள். இதைப்போல் பாவம் வேறேதேனுமுண்டோ? பிற உயிரொன்றை ஆயுள் முழுதும் தன்கீழே வைத்துச் சிறிது சிறிதாக மனமுடையச் செய்து அடிமை நிலையிலே வருந்தி வருந்தி வாணாள் தொலைக்கும்படி செய்வதைக் காட்டிலும் ஒரேயடியாக அவற்றைக் கொன்றுவிடுதல் எத்தனையோ மடங்கு சிறந்த தன்றோ? மனிதர் கீழே மனிதர் இருப்பதைக் காட்டிலும் சாதல் சிறந்தது."

"ஆணுக்கு ஆண் அடிமைப்பட்டிருக்கும் அநியாயத்தைக் காட்டிலும் ஆணுக்குப் பெண் அடிமைப்பட்டிருக்கும் அநியாயம் மிக மிகப் பெரிது" என்று சந்திரத் தீவின் மந்திரியாகிய ராஜகோவிந்தன் சொன்னான்.

"ஆணுக்கு ஆணும் ஆணுக்குப் பெண்ணும் அடிமைப்படாதிருத்தல் ஸாத்யமென்று

தோன்றவில்லை" என்று ராஜா கங்கா புத்ரன் சொன்னான்.

"எங்ஙனம்?" என்று காசி மந்திரி ஸுதாமன் கேட்டான்.

"ஆண்களில் பெரும்பாலோர் செல்வமில் லாதவர்கள், சிலர் செல்வ முடையவர்கள். ஆதலால் செல்வமுடைய சிலருக்கு அஃதில் லாத பலர் அடிமைப் படுதல் அவசியம்" என்று ராஜா சொன்னான்.

"பெண்களை ஏன் அடிமையாக்க வேண் டும்?" என்று சந்திரத் தீவின் மந்திரியாகிய ராஜகோவிந்தன் கேட்டான்.

அதற்கு ராஜா கங்கா புத்ரன் சொல்லு கிறான்:—

"பெண் சரீர பலத்தில் ஆணைக்காட்டிலும் குறைந்தவள். அவளாலே ஸ்வாதீனமாக வாழ முடியாது. தனிவழி நடக்கையிலே துஷ்டர் வந்து கொடுமை செய்தால், தன்னைக் காத்துக் கொள்ள வலியில்லாதவள். குழந்தை ஸம்ரக்ஷ ணம் முதலிய அவசியங்களாலே, உழுது பயி ரிட்டுத் தொழில் புரிந்து ஜீவனம் செய்வதில் இயற்கையிலேயே பெண்ணுக்குப் பல தடை கள் ஏற்படுகின்றன. அப்போது அவள் ஆஹார நிமித்தமாக ஆணைச் சார்ந்து நிற்றல் அவசியமாகிறது. பிறன் கைச்சோற்றை எதிர்பார்த்தால், அவனுக்கடிமைப் படாமல் தீருமா?" என்றான். அப்போது காசி மந்திரி யாகிய ஸுதாமன் சொல்லுகிறான்:—

"பெண்கள் உழவு முதலிய தொழில் அனைத்திலும் ஆண் மக்களுக்கு ஸமானமான திறமை காட்டுகிறார்கள். மேலும், அவர்களுக்கு ஆண் மக்கள் ஸம்பாத்தியம் பண்ணிப் போடாமல், அவர்கள் ஸம்பாதித்து ஆண் மக்களுக்குச் சோறுபோடும் நாடுகளிலேகூட, ஆண் மக்கள் பெண்களை அடிமை நிலையிலேதான் வைத்திருக்கிறார்கள். சரீர பலத்தில் ஸ்திரீகள் ஆண்களை விட இயற்கையிலே குறைந்தவர்கள் என்பது மாத்திரம் மெய். இது மனிதருக்குள் மட்டுமன்று, எல்லா ஜந்துக்களுள்ளும் அப்படியே. ஆண் சிங்கத்தைக் காட்டிலும் பெண் சிங்கம் பலம் குறைந்தது; வடிவில் சிறியது. காளை மாட்டைக்காட்டிலும் பசுமாடு பலங் குறைந்தது, வடிவத்திலே சிறியது. ஆண் நாயைக் காட்டிலும் பெண் நாய் பலங்குறைந்தது. சேவலைக் காட்டிலும் கோழி சிறிது. ஆண் குருவியைக் காட்டிலும் பெண் குருவி சிறிது. அநேகமாக எல்லா ஜந்துக்களின் விஷயத்திலும் இதுவே விதி. இக்காரணம் பற்றியே மிருகங்கள், பக்ஷிகள், மனிதர், பூச்சிகள் முதலிய ஸகல ஜந்துக்களிலும் பெண்ணை ஆண் தாழ்வாக நடத்தும் வழக்கமிருக்கிறது. மனிதன் நாகரிக ஜந்துவாதலால் மற்றைய ஜந்துக்களைப் போல் அத் தாழ்வு நிலையைப் புறக்கணித்து விடாமல், அதை சாசுவதமாக்கி, சாஸ்த்ர மேற்படுத்தி வைத்திருக்கிறான், மனித ஜாதியில் ஆணுக்குப் பெண் அடிமைப் பட்டிருப்பதுபோல் இதர ஜந்துக்களுக்குள்ளே கிடையாது. மனிதரிலே கொடுமை அதிகம். இதற்கெல்லாம் ஆதி காரணம் ஒன்றே. பலங் குறைந்த

உயிரை பலம் மிகுந்த உயிர் துன்பப்படுத்த லாம் என்ற விதி சகல பிராணிகளினிடையே யுங் காணப்படுகிறது. மனிதர் அதை எல்லை யில்லாமல் செய்கிறார்கள்'' என்றான்.

அப்போது ராஜா கங்காபுத்ரன் ஸுதா மனை நோக்கி:-

''ஒரு ஸ்த்ரீயைப் புருஷன் அடிமையாக நடத்துவதும், மானைப் புலி தின்பதும், ஆட்டை மனிதன் தின்பதும், பள்ளனை அர சன் சொற்பக் கோபத்தால் சிரச்சேதம் செய் வதும் இவை அத்தனைக்கும் ஒரே பேர் என்று சொல்லுகிறாயா'' என்றான்.

அதற்கு ஸுதாமன் :—''ஆம். ஜந்துக் கள் பரஸ்பரம் துன்பப்படுத்தாமல் தடுப்பது நமக்கு ஸாத்யமில்லை. நாட்டிலுள்ள காக்கை குருவிகளை ஒருவேளை திருத்தினாலும் திருத்த லாம். வனத்திலுள்ள துஷ்ட மிருகங்களை யும் கோடானு கோடி ஜந்துக்களையும் மண் ணுக்குள் பூச்சி புழுக்களையும் கடலில் மீன் களையும் திருத்த மனிதனால் ஆகாது, மேலும் சிங்கம் புலிக்கு வாழைப்பழங்களும், மீன் புழுக்களுக்கெல்லாம் கீரையும், பூச்சி புழுக்க ளத்தனைக்கும் அரிசியும் தயார் பண்ணிக் கொடுக்க மனிதனால் முடியுமா. அதாவது, ஒரு வேளை அவை எல்லாம் மாம்ஸ பக்ஷ ணத்தை நிறுத்தி விடுவதாக ஒப்புக்கொண்ட போதிலும், நாம் அவற்றை சாகபக்ஷணிகள் ஆக்க வழியில்லை. ஆனால் மனிதருக்குள்ளே பரஸ்பரம் அடிமைப்படுத்தினாலும், முக்கிய

மாக ஆண் பெண்ணை அடிமைப்படுத்தாமலும் மனிதர் ஸமத்வமாகவும் நியாயமாகவும் வாழ வழியுண்டு" என்றான்.

"மனிதர் பிறவுயிர்களைத் தின்னதபடி செய்யும் வழியுண்டு" என்று ராஜகோவிந்தன் சொன்னான்.

"எப்படி?" என்று சந்திரத்தீவின் ராஜாவாகிய கங்காபுத்ரன் கேட்டான்.

அப்போது ஸுதாமன் சொல்லுகிறான்:- "அரசனெப்படி அப்படி மன்னுயிர். ராஜா ஸ்த்ரீகளையும், மற்ற மனிதரையும் அடிமையாகக் கருதாமலிருந்தால் நாட்டில் ஸமத்வமுண்டாகும். ஒரு நாட்டில் நிலையுற்றால், எல்லா நாடுகளிலும் சீக்கிரத்தில் பரவிவிடும். கெட்ட வழக்கங்களைப்போலவே நல்லவழக்கங்களையும் பூமண்டலத்து ஜனங்கள் ஒருவரிடமிருந்து மற்றொருவர் கைக்கொள்ளுதல் மரபே" என்றான்.

அப்போது மந்திரி ராஜகோவிந்தன் சொல்லுகிறான் :-

"நாட்டில் அரசன் எவ்விதமான ஆஹாரமுண்கிறானே, அதுபோன்ற ஆஹாரமே சகல ஜனங்களுக்கும் என்று ஏற்பாடு செய்யவேண்டும். அங்ஙனம் செய்தால் எல்லாக் கஷ்டங்களும் நீங்கிப்போம்" என்றான்.

அப்போது ராஜா கங்காபுத்ரன் சொல்லுகிறான் :- "நமது சந்திரத்தீவை எடுத்துக்

கொள்வோம். இங்குள்ள மனிதர் அத்தனை பேரும் மாம்ஸம் தின்பதில்லையென்று வைப் போம்; இத்தனை பேருக்கும் தின்ன சாக பதார்த்தங்கள் நம் தீவிலில்லையே?" என்றான்.

"வருஷந்தோறும் இரண்டு லக்ஷம் சாக்குத் தேங்காய்களும் மூன்று லக்ஷம் சாக்கு மற்றப் பழ வகைகளும் பாரத தேசத்துக்கு நாட்டினின்றும் ஏற்றுமதி செய்யப்படுகின்றன" என்று மந்திரி சொன்னான்.

அப்போது ராஜா கங்காபுத்ரன் சொல்லுகிறான் :-

"சரி, நான் தீர்மானம் செய்துவிட்டேன். ஆறிலும் சாவு, நூறிலும் சாவு. இன்றைக்கிருப்பவர் நாளைக்கிருப்பார்களென்று நிச்சயமாகச் சொல்ல இடமில்லை. எனக்கு முன் கோடானு கோடி அரசர் உலகத்திலே பிறந்து மாண்டு போயினர். மனு, மாந்தாதா, தசரத ராமாதிகளெல்லாம் மண்ணிலே கலந்துவிட்டனர்; என் காலத்தில் ஒரு புதிய தர்மம் நிலைப்படும்படி செய்கிறேன். மந்திரி ராஜகோவிந்தா, கேள்! நம்முடைய ப்ரஜைகள் எத்தனைபேர்? மொத்தம் 2 லக்ஷம் பேர். சரி. இங்கு விளைகிற நெல், புல், கிழங்கு, காய், கனி, ஒன்றும் வெளியேபோகக் கூடாது. பதினெட்டு வயதுக்குமேல் அறுபது வயதுவரையுள்ள எல்லாரும் உழுதல், பயிரிடுதல் தோட்டஞ் செய்தல், துணி நெய்தல், மனை கட்டுதல் ஊர் துடைத்தல் முதலிய அவசியமான தொழில்களிலே ஸமமான பாகம் எடுத்துக் கொள்ளவேண்டும், வீடு விளக்கலும், குழந்தை

வளர்த்தலும் சோறுக்கலும் பெண்களுடைய தொழிலாதலால், அவர்கள் பயிர்த் தொழில் முதலியவற்றிலே துணைபுரிதல் வேண்டாம் சரி. மொத்த விளைவை இந்த இரண்டுலக்ஷம் ப்ரஜை களும் ஸமமாகப் பகுத்துக்கொள்வோம். எனக் கும்-எனக்கும் என்பத்தினிக்கும்என் குழந்தை களுக்கும்—எத்தனை தானியம், எத்தனை கனி, எத்தனை கிழங்குண்டோ அப்படியே ஒவ்வொரு ஆண், பெண், குழந்தைக்கும் ஸமபாகமாகப் பங்கிட்டுக் கொடுத்துவிட ஏற்பாடு செய்வோம். பெண்களை அடிமைப்படுத்தவும் வேண்டாம். காசிராஜன் பெரிய தாயாராகிய சண்டிகையை அவள் கொண்டு வந்த வரிசைகளுடன், ஒற் றைக் கிரட்டையாக வரிசை கொடுத்துப் பரி வாரங்களுடன் அடுத்த கப்பலில் பாரத தேசத் துக்கனுப்பி விடுவோம். நமது மகள் சந்திரி கையின் இஷ்டப்படி அவளை ஸுதாமனுக்கே மணம் புரிந்து கொடுத்து விடுவோம். நீ என்ன சொல்லுகிறாய்? ஸுதாமா, இங்கேயே இருப் பாயா? காசிக்குப்போனால் நான் உன்னுடன் என் மகளை அனுப்ப முடியாது" என்றான்.

அதற்கு ஸுதாமன் :—"நான் இங்கேயே இருக்கிறேன். பயமில்லை. விஷயத்தையெல் லாம் தெளிவாகச் சொல்லி யனுப்பினால் காசி ராஜா கோபம் கொள்ளமாட்டார். என்னு டைய தம்பியை அவருக்கு மந்திரியாக நியமித் துக்கொள்ள ஏற்பாடு செய்து விடுகிறேன். நான் இங்கே இருப்பேன்; இந்தத் தீவும் அழகியது. இதிலுள்ள ஜனங்களும் நல்லவர் கள். இதன் அரசனாகிய நீயும் நல்லவன். நின் மகளோ என் நெஞ்சில் தெய்வம். ஆத

லால் இங்கிருப்பேன்" என்றான். விவாகம் நடந்தது. அங்கு மன்னனும் குடிகளும் அண்ணன் தம்பிகள் போல—யாருக்கும் பசியில்லாமல், யாருக்கும் நோவில்லாமல், யாருக்கும் வறுமை யில்லாமல், யாருக்கும் குறைவில்லாமல், யாருக்கும் பகையில்லாமல்—எவ்வித மான துன்பமுமில்லாமல், ஸுதாமன் ராஜ கோவிந்தன் என்ற இரண்டு மந்திரிகளுடன் கங்காபுத்ர ராஜன் நெடுங்காலம் ஸுகத்துடன் வாழ்ந்தான்.

## நெல்லிக்காய்க் கதை

நான் சிறு குழந்தையாக இருக்கும்போது 'ஹிந்துக்களைப் போலே ஒற்றுமைக் குறைவான கூட்டத்தார் உலகத்தில் வேறெந்த தேசத்திலும் இல்லை' யென்றும் 'ஹிந்துக்கள் நெல்லிக்காய் மூட்டைக்குச் சமான' மென்றும் சிலர் சொல்லக் கேட்டிருக்கிறேன். பிறகு, உலகத்திலுள்ள வேறு பல தேசங்களின் பூர்வ சரித்திரத்தையும் தற்கால இயல்பையும், பல விதங்களில் ஆராய்ச்சி செய்து பார்த்ததில் மேற்படி வார்த்தை தவறு என்று தெரிந்தது. கிழக்கே, மேற்கே, தெற்கே, வடக்கே, உலகத்திலுள்ள எந்த ராஜ்யத்தைப் பார்த்த போதிலும், அங்கு பணமும் அதிகாரமும் இருக்கும் வரை, மனிதர் பரஸ்பர விரோதங்களையும் பொறாமைகளையும் உள்ளே அடக்கி வைத்துக்கொண்டு ஒரு விதமான வெளியொற்றுமை பாராட்டித் திரிகிறார்கள். இருந்தாலும், நாலடியாரில் சொல்லியபடி,

"அட்டுற யார்மாட்டும் நில்லாது
செல்வம் சகடக்கால் போலவரும்."

லக்ஷ்மீதேவி எந்த இடத்திலும், ஒரே நிலையாக நிற்பது வழக்கமில்லை. செல்வமும் அதனாலுண்டான பெருமையும், ஒரு கூட்டத்தாருக்கிடையே குறைவு படும்போது, உட்பொருமையும் மாற்சரியமும் வெளிப்பட்டு தலைதூக்கி ஆடுகின்றன. உலக சரித்திரத்தை அறிவுடன் படித்த புத்திமான்கள் இதனை நன்ருக அறிவார்கள்.

## இந்துக்களின் சிறப்பு

ஆனல், இவ்விஷயத்திலே கூட, மற்ற தேசத்தாரைக் காட்டிலும் ஹிந்துக்கள் மேலென்று எனது விசாரணையில் தென்படுகின்றது. ஏனென்ருல், ஹிந்துக்களிடம் தெய்வ பக்தி என்ற சிறந்த குணம், மற்றெல்லா தேசத்தாரைக் காட்டிலும் அதிகமென்பதை மேற்குப் பக்கத்துப் பண்டிதரிலே கூடப் பக்ஷபாதமற்ற பல யோக்கியர் கண்டு பிடித்துச் சொல்லியிருக்கிருர்கள். தெய்வ பக்தியினுல் ஜீவதயை உண்டாகிறது.

"எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே
யல்லாமல் வேருென்றறியேன் பராபரமே',

என்று தாயுமானவர் தமது தெய்வ பக்தியின் உண்மையை விளக்கினுர்.

சென்ற கார்த்திகை மாதம், புயற்காற்றடித்ததைப் பற்றி தென்னுற்காடு ஜில்லா

வைச் சோதனை செய்த ஸர்க்கார் அதிகாரியான ஓர் ஆங்கிலேயர் தம்முடைய அறிக்கையில், ஹிந்து ஜனங்களுடைய விசேஷ ஜீவதயை, அதிதி ஸத்காரம் என்ற குணங்களை மிகவும் புகழ்ந்து பேசியிருக்கிறார். காற்றடித்த இரவில் சில வைதிக பிராமணர் தமது வீட்டிற்குள் பறையர் வந்திருக்க இடங்கொடுத்ததாகப் பத்திரிகைகள் கூறின. ஏழைகளாக நம்மைச் சூழ்ந்திருப்போர் சிவனுடைய கணங்கள், நாராயணனுடைய மக்கள், முருகனுக்குத் தோழர், சக்தியின் அவதார ரூபம். பரமசிவன் சண்டாள ரூபத்துடன் சங்கராச்சார்யாருக்கு ஸமத்துவ ஞானத்தை ஊட்டினார். ஸ்ரீரங்கத்தில் எம்பெருமான் கடைக்குலத்தவராகிய திருப்பாணாழ்வாரை பரிசாரக வேதியன் முதுகிலே சுமந்து கொண்டு வந்து தனது கர்வ நோயைத் தீர்த்துக்கொள்ளும்படி கட்டளையிட்டருளினார்.

சந்திரனின் ஒரு களங்கம் —
ஆனால் தீர்க்கக் கூடியது.

சந்திரனுக்குள் ஒரு களங்கம் இருப்பது போல், இப்போது நம்முடைய கூட்டத்தில் ஒரு களங்கமிருக்கிறது. ஆனால் பூத சந்திரனில் உள்ள களங்கத்தை அதுதானே மாற்றிக் கொள்ளாது. ஞான சூர்யராகிய ஹிந்துக்கள் தமக்குள்ள குறையை விரைவாக நீக்கி வருகிறார்கள். அந்தக் களங்கமாவது நமது ஜாதிக் கட்டிலுள்ள சில வழக்கங்கள். மறுபடி தெய்வத்தை நம்பி எல்லோரும் இன்புற வேண்டி குணகர்மங்களால் வர்ண நிச்சயம் செய்து

கொண்டு, பூமண்டலத்துக்கு ஞானோபதேசம் செய்யும் பொருட்டாக பாரத தேவி தனது பத்மாஸனத்தில் வீற்றிருக்கிறாள். காலம் ஹிந்துக்களின் சார்பில் வேலை செய்கிறது. தேவர்களெல்லாரும் ஹிந்துக்களை கைதூக்கி விடப் புறப்பட்டிருக்கிறார்கள். பரமாத்மா ஒன்று. அவனுக்கு ரிஷிகள் பல பெயர் சொல்லிப் போற்றுகிறார்களென்று வேதம் சொல்லுகிறது.

"பேரனந்தம் பேசி மறையனந்தஞ் சொலும்
பெரிய மௌனத்தின் வைப்பு"

என்று தாயுமானவர் காட்டினார். ராமகிருஷ்ணர் இதையே சொன்னார். இந்த உண்மை ஹிந்துக்களுடைய புத்தியில் வேரூன்றி விட்டது. எனவே, கலி நீங்கிவிட்டது.

## பலாப்பழம்

நெல்லிக்காய் மூட்டையைப் பற்றி இப்போது யாரும் பேசுவதில்லை. நெல்லிக்காய் கொடுத்தால் எல்லோரும் வாங்கித் தின்கின்றார்கள். ஆனால், ஹிந்துக்கள் நெல்லிக்காய் மூட்டை போலென்று சொல்வோனைக் கண்டால், எல்லோரும் கைகொட்டிச் சிரிப்பார்கள். இந்து தேசம் ஒரு தேவலோகத்துப் பலாப் பழத்தைப்போலாகிவிட்டது. இனியென்றும் அழியாத பலாப்பழம். ஒவ்வொரு ஆர்யனும் அதில் முளைத்தவன். நாம் எல்லோரும் சேர்ந்து அந்தப் பலாப்பழத்தின் மேல் தோல். உள்ளே ஞானச்சுளை, நமக்கு அழிவில்லை. நமக்குள்ளே

பிரிவில்லை. நாமொன்று. நாம் எப்போதும் தெய்வத்தை நம்புகிறோம். தெய்வத்தை நம்பி நாம் அறத்தைச் செய்தால், நம்முடைய யோக க்ஷேமங்களை தெய்வம் ஆதரிக்குமென்று பகவத்கீதை சொல்லுகிறது.

## ராகவ சாஸ்திரியின் கதை

வேதபுரத்தில் தெலுங்குப் பிராமணர்களின் புரோகிதராகிய குப்புசாஸ்திரி என்பவர் நேற்றுக் காலை என்னைப் பார்க்கும் பொருட்டு வந்தார். நாற்காலியில் உட்காரச்சொன்னேன். உட்கார்ந்தார்.

"ஆச்சர்யம்! ஆச்சர்யம்!" என்றார்.

"என்னங் காணும் ஆச்சர்யம்!" என்று கேட்டேன். குப்புசாஸ்திரிகள் சொல்லுகிறார்:

"புளியஞ்சாலைக்கு அருகே சத்திரம் இருக்கிறது, தெரியுமா! அங்கே மலையாளத்திலிருந்து ஒரு நம்பூரி பிராமணர் வந்திருக்கிறார். அவருடைய கல்விக்கோர் எல்லையே கிடையாது. நாலு வேதம் ஆறு சாஸ்திரம் அறுபத்தி நாலு கலைஞானம்—சகலமும் அவருக்குத் தெரிகிறது" என்றார்.

"இத்தனை விஷயம் அவருக்குத் தெரியுமென்பது உமக்கு எப்படித் தெரியும்?" என்று கேட்டேன். குப்பு சாஸ்திரி:— "நேற்று நான் போய் சம்பாஷணை செய்து

கொண்டிருந்தேன். ஸம்ஸ்கிருதம் தான் பேசுகிறார். கடல் மடை திறந்துவிட்டதுபோல் வார்த்தை சொல்லுகிறார். ஸரஸ்வதி அவதார மென்றே சொல்லவேண்டும்" என்று அளவில்லாமல் புகழ்ந்தார்.

அந்த நம்பூரியின் பெயரென்ன?" என்று கேட்டேன். "அவர் பெயர் ராகவ சாஸ்திரி" என்று குப்புசாஸ்திரி சொன்னார். "அவரை நம்மிடம் அழைத்துவாரும்" என்று சொல்லி யனுப்பினேன்.

இன்று காலையில் மேற்படி ராகவசாஸ்திரி வந்தார். குப்பு சாஸ்திரிக்கு பக்கத்து கிராமத்தில் ஏதோ விவாகக்கிரியை நடத்தி வைக்கும்படி நேரிட்டிருப்பதால், அவர் கூட வராமல் இந்த ராகவ சாஸ்திரியை என் வீட்டு அடையாளம் சொல்லியனுப்பி விட்டாரென்று பின்னிட்டுத் தெரிந்தது.

ராகவ சாஸ்திரியைப் பார்த்தால் பார்சிக் காரரைப் போலே யிருந்தது. காலிலே பூட்ஸ், கால்சட்டை, கோட்டு, நெக்டை, டொப்பி—பாதாதிகேசம் வெள்ளைக்கார உடுப்புப் போட்டிருந்தார். நான் இவரைப் பார்த்த உடனே 'பார்ஸியோ யூரேஷ்யனோ' என்று எண்ணி "நீர் யார்?" என்று இங்கிலீஷிலே கேட்டேன். "நான் தான் ராகவ சாஸ்திரி. தாங்கள் என்னைப் பார்க்க விரும்பியதாக குப்பு சாஸ்திரி சொன்னார். தாங்கள் தானே காளிதாசர்?" என்று அவர் கேட்டார். 'ஆம்' என்று சொல்லி உட்காரச் சொன்னேன்.

அவரை ஏற இறங்க மூன்றுதரம் பார்த்தேன்; என் மனதில் சந்தேக மேற்பட்டது. "நீர் பிராமணரா?" என்று கேட்டேன். "இல்லை" என்றார். "நீர் நம்பூரி பிராமணன் என்று குப்பு சாஸ்திரி சொன்னாரே?" என்றேன்.

அதற்கு ராகவசாஸ்திரி சொல்லுகிறார்:— "நான் மலையாளி என்று குப்புசாஸ்திரியிடம் சொன்னேன். ஸம்ஸ்கிருதம் பேசுவதிலிருந்து நம்பூரி பிராமணனாகத்தான் இருக்க வேண்டும் என்று குப்புசாஸ்திரி தாமாகவே ஊகித்துக்கொண்டார் போலும். நான் ஜாதியில் தீயன். மலையாளத்தில் தீயரென்றால் தமிழ் நாட்டில் பள்ளர் பறையரைப் போலேயாம். தீயன் சமீபத்தில் வந்தால் பிராமணர் அங்கே ஸ்நானம் செய்து பாவத்தை நிவர்த்தி செய்து கொள்வது வழக்கம்" என்றார்.

இவர் இங்கிலீஷ்காரரைப் போல் உடுப்புப் போட்டிருந்தாலும் இவருக்கு இங்கிலீஷ் பாஷை தடதடவென்று பேச வரவில்லை. எனக்கோ ஸம்ஸ்கிருதம் பேசத் தெரியாது. பிறர் பேசினால் அர்த்தமாகும். ஆகவே, 'நான் இங்கிலீஷில் கேட்பது, அவர் ஸம்ஸ்கிருதத்தில் மறுமொழி சொல்வது' என்பதாக உடன்பாடு செய்து கொண்டோம். நெடுநேரம் சம்பாஷணை நடந்தது. அவருடைய பூர்வோத்தரங்களை எல்லாம் விசாரணை செய்தேன். அவர் என்னிடம் சொல்லிய கதையை இங்கே சுருக்கமாகச் சொல்லுகிறேன்.

ராகவ சாஸ்திரி சொல்லுகிறார் :—

"நான் பிறந்தது கள்ளிக்கோட்டை என்று சொல்லப்படும் கோழிக்கூட்டுக்கு சமீபத்தில் இரண்டு காதம் தூரத்தில் உள்ள ஒரு கிராமம். என்னுடைய தாயார் நான் பிறந்து நாலைந்து மாதத்திற்குள் இறந்து போய்விட்டாள். தகப்பனுர் என்னை இங்கிலீஷ் பள்ளிக்கூடத்தில் படிக்கவைத்தார். நாலைந்து வகுப்பு வரை படித்தேன். எனக்கு இங்கிலீஷ் படிப்பு சரியாக வரவில்லை. அப்போதே எனக்கு மலையாள பாஷையில் தேர்ச்சி உண்டாயிற்று. பதினைந்து வயதாக இருக்கையில் எனக்கு மலையாளத்தில் சுலோகம் எழுதத் தெரியும். பதினெட்டு வயதுவரையில் சும்மா சுற்றிக் கொண்டிருந்தேன். பிறகு தகப்பனுரிடம் சொல்லாமல் காசிக்குப் புறப்பட்டுப் போய் விட்டேன். காசியில் பண்டிதர்கள் நான் பிராமணன் இல்லை என்று எனக்குப் பாடம் சொல்லிக் கொடுக்க சம்மதப்பட வில்லை. அங்கே ஆர்ய ஸமாஜத்தைச் சேர்ந்த சிலர் எனக்கு நண்பர் ஆனுர்கள். ஆர்ய ஸமாஜத்தார் ஜாதிபேதம் பார்ப்பது கிடையாது. அவர்களுக்குள்ளே உயர்ந்த ஸம்ஸ்கிருத வித்வான்கள் இருக்கிருர்கள். அவர்களிடம் நான் ஐந்தாறு வருஷம் ஸம்ஸ்கிருதம் படித்தேன். பிறகு பஞ்சாப் நாட்டிற்குப் போய் லாஹூர் பட்டணத்தில் ஆர்ய ஸமாஜ உபதேசியாய்ச் சில வருஷங்கள் கழித்தேன். அங்கிருந்து கல்கத்தாவுக்கு வந்தேன். கல்கத்தா ஸர்வகலா சங்கத்தார் முன்பு பரீக்ஷை தேறி, "வியாகரண தீர்த்தன்" என்ற பட்டம் பெற்றேன். இதற்கிடையே மலையாளத்திலிருந்து எனது பிதா இறந்து போய்விட்டார் என்ற

செய்தி கிடைத்தது. கொஞ்சம் பூர்வீகசொத்து உண்டு. அதைப் பிறர் கைக்கொள்ளாதபடி பார்க்கும் பொருட்டு, மலையாளத்துக்கு வந்தேன். இப்போது சில வருஷங்களாகக கோழிக்கூட்டிலே தான் வாஸம் செய்து வருகிறேன். எனக்கு சாஸ்திரிப்பட்டம் பஞ்சாபிலே கிடைத்தது'' என்ருர்.

"இங்கே எதற்காக வந்தீர்?'' என்று கேட்டேன். அதற்கு ராகவ சாஸ்திரி சொல்லுகிருர்:—

"எனக்கு விவாஹம் ஆகவில்லை. வேறு பந்துக்களும் இல்லை யாதலால் எவ்விதமான குடும்ப பாரமும் கிடையாது. போஜனத்திற்கு பூர்வீக சொத்திருககிறது. ஆதலால், என காலத்தை தேசத்துக்காக உழைப்பதிலே செலவிடவேண்டும் என்ற எண்ணம் உண்டாயிருக்கிறது. தேசத்துக்கு எவ்விதமான கைங்கர்யம் பண்ணலாம் என்பதைத் தங்களிடம் கேட்டுககொண்டு போகலாம் என்ற நோக்கத்துடன் இந்த ஊருக்கு வந்தேன்'' என்று சொன்னர்.

"எனக்குத் தெரியாது. நீர் உலகத்துக்கு என்ன விதத்திலே உபகாரம் பண்ண முடியுமென்பது உம்முடைய காலதேச வர்த்தமானங்களையும் உம்முடைய திறமையையும் பொறுத்த விஷயம்'' என்றேன்.

"ஜாதி பேதம் கூடாது. அதற்கு நமது பூர்வ சாஸ்திரங்களில் ஆதாரமில்லை. ஆனும்

பெண்ணும் ஸமானம். யாரும் யாரையும் அடிமையாக நடத்தக்கூடாது. இன்று நாம் பிறரை அடிமையாக நடத்தினல் நாளை நம்மை யேனும் நம்முடைய மக்களையேனும் பிறர் அடிமையாக நடத்துவார்கள். ஹிந்துக்கள் சட்டத்தை உடைக்காமல், இரவிலும், பகலிலும், விழிப்பிலும், தூக்கத்திலும், கனவிலும் எப்போதும் ஸ்வராஜ்யத்துக்குப் பாடுபட வேண்டும். விடுதலையில்லாதவர் எப்போதும் துன்பப்படுவார்கள். இது போன்ற விஷயங்களை ஊரூராகப் போய் உபந்யாஸம் செய்தாலென்ன? தாங்கள் உத்திரவு கொடுத்தால் நான் இந்தக் காரியம் செய்யக் காத்திருக்கிறேன்" என்று ராகவ சாஸ்திரி சொன்னர். இப்படி இவர் பேசிக்கொண்டிருக்கும்போது, நம்முடைய சிநேகிதர் வேதாந்த சிரோமணி ராமராயர் வந்து சேர்ந்தார். அவரிடம் இந்த மலையாளியின் பூர்வோத்தரங்களையும் இவர் என்னிடம் கேட்கும் கேள்வியையும் சொன்னேன். ராமராயர் ஸந்தேஹமே அவதாரம். இவர் இந்த மலையாளியின் உடுப்பையும் இவர் கேள்வியையும் பார்த்து ஏதோ மனதில் ஐயங்கொண்டு பின்வருமாறு சொல்லத் தொடங்கினர்:

"ஓய் மலையாளி, 'காளிதாஸர்' இஹலோக தந்திரங்களில் புத்தி செலுத்துவது கிடையாது. 'சக்தி, சக்தி' என்று ஒருவன் ஜபம் பண்ணிக்கொண்டிருந்தால், அவன் எல்லா விதமான பந்தங்களினின்றும் விடுபட்டு ஜீவன் முக்தியடைவான் என்ற தர்மத்தையே அவர் இடைவிடாமல் சொல்லிக்கொண்டு வருகிறர். இந்த

தர்மம் ஹிந்துக்களுக்கு மாத்திரமன்று. அமெரிக்கா தேசத்தார் எல்லாருக்கும் நல்லது. சக்தி உபாஸனையாலே விக்ரமாதித்யன் மாறாத புகழ் பெற்றான். இதைத்தான் இவர் சொல்லுவார். சுதேசிய விஷயமாக எப்படி உழைக்கலாம் என்பதை நீர் தெரிந்துகொள்ளவேண்டுமானால் சென்னைப் பட்டணத்திலும் வடநாட்டு நகரங்களிலும் புகழ்பெற்ற ஜனத்தலைவர்கள் இருக்கிறார்கள். அவரிடத்திலே போய் கேட்டுத் தெரிந்துகொள்ளும்'' என்று ராமராயர் சொன்னார்.

இங்ஙனம் ராமராயர் சொல்லியதில் அந்த ராகவ சாஸ்திரி திருப்தி அடையாமல், மறுபடி என்னை நோக்கி ''எனக்கு என்ன உத்திரவு செய்கிறீர்கள்?'' என்று கேட்டார்.

அதற்கு நான்:

''கேளீர், ராகவ சாஸ்திரியாரே! சட்டத்திற்கு விரோதமில்லாமல் நீர் சுதேசியம் பேசுவதிலும், மற்றப்படி ஸமத்வம் விடுதலை முதலிய தர்மங்களை நீர் ஹிந்துக்களுக்குப் புகட்டுவதிலும் எனக்கு யாதொரு ஆக்ஷேபமும் கிடையாது. ஆனால் நான் இப்போது கைக்கொண்டிருக்கும் தர்மத்தை உம்மிடம் சொல்லி விடுகிறேன். ஸம்மதமுண்டானால் அதை இந்தியாவில் மாத்திரமன்று, பூமண்டல முழுதும் சென்று முரசு அடிக்கக் கடவீர். அந்த தர்மம் யாதெனில்:—மானுடரே, நம்முடைய இஷ்டப்படி உலகம் நடக்கவில்லை. தெய்வத்தின் இஷ்டப்படி உலகம் நடக்கிறது. ''தெய்வமே சரண்'' என்று நம்பி எவன்

தொழில் செய்கிறானோ, அவன் என்ன தொழில் செய்த போதிலும் அது நிச்சயமாகப் பயன்பெறும். மனிதன் தன் உள்ளத்தை தெய்வத்துக்குப் பலியாக கொடுத்துவிட வேண்டும். அதுவே யாகம். அந்த யாகத்தை நடத்துவோருக்கு தெய்வம்,வலிமை, விடுதலை, செல்வம், ஆயுள், புகழ் முதலிய எல்லாவிதமான மேன்மைகளும் கொடுக்கும். இந்தக் கொள்கை நமது பகவத் கீதையில் சொல்லப்படுகிறது. இதனை அறிந்தால், பயமில்லை. ஹிந்துக்களுககுத்தான் இவ்விதமான தெய்வ பக்தி சுலபம். ஆதலால், ஹிந்துக்கள் தெய்வத்தை நம்பி எப்போதும் நியாயத்தைப் பயமில்லாமல் செய்து மேன்மை பெற்று மற்ற தேசத்தாரையும் கை தூக்கி விட்டாலொழிய இந்தப் பூமண்டலத்துக்கு நன்மை ஏற்படாது. உலகத்தார் அகங்காரம் என்ற அசுரனுக்கு வசப்பட்டு சகல தேசங்களிலும் நரக துன்பத்தை அனுபவிக்கிறார்கள். அஹங்காரத்தை வெட்டி எறிந்துவிட்டால் மனித ஜாதி அமரர்நிலை யடையும். தன்னை மற. தெய்வத்தை நம்பு. உண்மை பேசு. நியாயத்தை எப்போதும் செய். எல்லா இன்பங்களையும் பெறுவாய். இப்போது பழைய யுகம் மாறிப் புதிய யுகம் தோன்றப் போகின்றது. அந்தப் புதிய யுகம் தெய்வ பக்தியையே மூலாதாரமாகக்கொண்டு நடைபெறப்போகிறது. ஆதலால் அதில் ஹிந்துக்கள் தலைமை பெறுவார்கள். இது ஸத்யம். இதை எட்டுத் திசைகளிலும் முரசு கொண்டடியும். இதுவே யான் சொல்லக்கூடிய விஷயம்'' என்றேன்.

பிறகு, நான் சில வார்த்தைகள் பேசிய பிறகு ராகவ சாஸ்திரி விடை பெற்றுக் கொண்டு போகுந் தருணத்தில் ராமராயர் அவரை நோக்கி :—

"முதலாவது, இந்த உடுப்பை மாற்றி ஹிந்துக்களைப் போலே உடுப்புப் போட்டுக் கொள்ளும். அதுவே ஆரம்பத் திருத்தம். கல்கத்தாவில் 'அமிர்த பஜார் பத்திரிகை'யின் ஆசிரியராகிய ஸ்ரீமான் மோதிலால் கோஷ் அங்கே கவர்னராக இருந்த லார்ட் கார்மைக் கேல் என்பவரைப் பார்க்கப் போயிருந்தாராம். உஷ்ணகாலத்தில் சீமை உடுப்பைப் போட்டுக் கொண்டு லார்ட் கார்மைக்கேல் வியர்த்துக் கொட்டுகிற ஸ்திதியில் இருந்தாராம். அப்போது மோதிலால் கோஷ் கவர்னரை நோக்கி, 'இந்தியாவில் இருக்கும்வரை எங்களைப்போலே உடுப்புப் போட்டு கொண்டால் இத்தனை கஷ்டம் இராது' என்று சொன்னாராம். அதற்கு லார்ட் கார்மைக்கேல் 'நீர் சொல்லுவது சரிதான். எங்களுடைய மூடத் தனத்தாலே அவ்வாறு செய்யாமலிருக்கிறோம்' என்று மறுமொழி சொன்னாராம். அப்படியிருக்க நம்மவர் நம் தேசத்தில் சீமையுடுப்பு மாட்டுவது எவ்வளவு மூடத்தனம், பார்த்தீரா?" என்று சொன்னார். "இனிமேல் சுதேசி உடுப்புப் போட்டுக் கொள்ளுகிறேன்" என்று ராகவ சாஸ்திரி ஸம்ஸ்கிருத பாஷையில் சொல்லி விடைப் பெற்றுக் கொண்டு போய்விட்டார்.

# மலையாளம் (1)

மலையாளத்து ராகவ சாஸ்திரி என்பவர் நேற்று சாயங்காலம் மறுபடி என்னைப் பார்க்க வந்தார். நான் மௌன விரதம் பூண்டிருந்தேன். பிரமராய அய்யரும் 'பெண்—விடுதலை' வேதவல்லியம்மையும் ஏற்கனவே வந்திருந்தார்கள். மேனிலை முற்றத்தில் நல்ல தென்றல் காற்று வந்தது. அங்கு போய் உட்கார்ந்து கொண்டோம். அவர்கள் பேசினார்கள். நான் வாயைத் திறக்காமல் கேட்டுக் கொண்டிருந்தேன்.

பிரமராய அய்யர் ராகவ சாஸ்திரியை நோக்கி "மலையாளத்திலிருப்போர் இந்தப் பக்கத்தாரைக் காட்டிலும் நல்ல சிவப்பு நிறமாக இருக்கிறார்களே. காரணமென்ன?" என்று கேட்டார். "குளிர்ச்சியான பூமி" என்று வேதவல்லியம்மை சொன்னாள். கமுக மரத்திலே வெற்றிலைக் கொடிகள் படர்ந்திருக்குமென்றும், எங்கே பார்த்தாலும் ஏலக்காய் சிதறிக் கிடக்குமென்றும், பல வகைகளிலே மலையாளத்து நிலவளத்தைப் புகழ்ந்து சில சுலோகங்கள் சொல்லி அவற்றை ராகவ சாஸ்திரி கொச்சை இங்கிலீஷில் மொழி பெயர்த்துச் சொன்னார். வேதவல்லியம்மைக்கும் பிரமராயருக்கும் கொஞ்சம் ஸம்ஸ்கிருதம் தெரியும்; என்றாலும், ஸௌகரியத்தின் பொருட்டு எல்லாரும் இங்கிலீஷ் பாஷையிலேயே ஸம்பாஷணை செய்யத் தொடங்கினார்கள்.

"பூமி மிகவும் செழிப்பாகவும், அழகாக வும் இருக்கிறது; மலையாளத்தில் மனிதர் மாத்திரம் மூடர்" என்று வேதவல்லி சொன்னாள்.

"மூடர் மலையாளத்தில் மாத்திரமா? இந்தியாவில் எங்கும்தான் நிரம்பிக் கிடக்கிறார்கள்" என்றார் ராகவ சாஸ்திரி.

"இருந்தாலும் சராசரிக் கணக்குப் போட்டுப்பார்த்தால், மலையாளத்தில் மூடர் தொகை கொஞ்சம் அதிகம். விவேகானந்தர் மலையாளத்தைப் பற்றி எவ்வளவு கோபத்துடன் பேசுகிறார்?"

"நூறு கஜமுள்ள ஒரு பாலத்தின் இந்த ஓரத்தை ஒரு தீயன் தொட்டால் அந்த ஓரத்திலுள்ள நம்பூரி பிராம்மணனுக்குத் தீண்டல் வந்து விடுகிறதாம்; மூட நம்பிக்கை அங்கே மிகவும் அதிகம்" என்று பிரமராய அய்யர் மறுபடி வற்புறுத்திச் சொன்னார்.

அப்போது ராகவசாஸ்திரி: "அதெல்லாம் பண்டைக் காலத்தில். இப்போது மலையாளத்து நாயர்களும் தீயர்களும் பழைய வழக்கங்களை மாற்றுவதற்குப் பெரிய முயற்சிகள் செய்து வருகிறார்கள்."

"ஆமாம், ஐயா, நான் கூடக் கேள்விப்பட்டேன். தீயர்களுக்கு சிவாலயங்கள் கட்டிக் கொடுத்து அவர்களை மற்ற ஹிந்துக்களைப் போலே செய்து நல்ல நிலைமைக்குக் கொண்டு வர வேண்டுமென்று ஸ்ரீ நாராயண ஸ்வாமி

என்ற ஸந்யாஸி ஒருவர் பாடுபடுகிறதாகவும் படிப்பு, ஒற்றுமை முதலிய நற்குணங்களில் தேர்ச்சி பெறும் பொருட்டு மலையாள முழுவதும் பல இடங்களில் தீயர் ஸமாஜங்கள் ஏற்பட்டிருக்கிறதாகவும் பத்திரிகைகளில் வாசித்திருக்கிறேன். அந்த நாராயண ஸ்வாமியின் வரலாறு என்ன? கொஞ்சம் சொல்லும்'' என்று வேதவல்லியம்மை கேட்டாள்.

ராகவ சாஸ்திரி சொல்லுகிறார்:

"ஸ்ரீ நாராயணசாமி என்பவர் தீயர் ஜாதியில் பிறந்து பெரிய யோகியாய் மலையிலே தவஞ்செய்து கொண்டிருந்தார். அப்போது பல தீயர் அவரிடம்போய், ஸ்வாமி, தங்களை மலையாளத்து மஹாராஜா கூட மிகவும் கௌரவப்படுத்தும்படி அத்தனை மேன்மையான நிலைமையிலே இருக்கிறீர்கள். நாங்கள் உங்களுடைய குலத்தைச் சேர்ந்தவர்கள். எங்களை இதர ஜாதியார் மிகவும் தாழ்ந்த நிலைமையிலே வைத்திருக்கிறார்கள். கோயிலுக்குப் போனால் மற்ற ஜாதியார் எங்களை வெளிப்புறத்திலே நிறுத்துகிறார்கள். நேரே ஸ்வாமி தர்சனம் பண்ண வழியில்லை. எங்களுக்கு ஒரு புகல் சொல்லக்கூடாதா?' என்று கேட்டார்கள். அப்போது நாராயணஸ்வாமி சொல்லுகிறார்:

'கேளீர், ஸகோதரர்களே! கோயில் கட்டுவதற்கு நம்பூரிப் பிராம்மணர் தயவு வேண்டியதில்லை. கல்வேலை தெரிந்த கல்தச்சர் நாட்டில் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். பணம் கொடுத்தால் கோயில் கட்டிக்கொடுப்பார்கள்.

ஆதலால், நீங்கள் இந்த விஷயத்தில் வருத்தப் படவேண்டாம், பணம் சேர்த்துக்கொண்டு வாருங்கள். எத்தனை கோயில் வேண்டுமானு லும் கட்டலாம். நான் ப்ரதிஷ்டை பண்ணிக் கொடுக்கிறேன்' என்றார். இதைக் கேட்ட வுடனே தீயர்கள் தமக்குள்ளிருந்த பணக்கார ரிடம் தொகை சேர்க்கத் தொடங்கினார்கள். காலக்கிரமத்தில் பெரிய தொகை சேர்ந்தது. இப்போது பல இடங்களில் மேற்படி ஸ்ரீ நாரா யண ஸ்வாமி ஆலயப்ரதிஷ்டை செய்திருக்கி ரூர்" என்று சாஸ்திரி சொன்னார்.

"இவர் கோயில்கள் கட்டினதைப்பற்றி இதர ஜாதியார் வருத்தப்படவில்லையா?" என்று வேதவல்லியம்மை கேட்டாள்.

"ஆம். அவர்களுக்குக் கோபம்தான். ஒருநாள் இந்த நாராயணஸ்வாமி ரயில் யாத் திரை செய்கையில் இவர் ஏறியிருந்த வண்டி யில் ஒரு நம்பூரி பிராமணர் வந்து சேர்ந்தார். அந்த நம்பூரி இவரை நோக்கி இடது கைச் சிறுவிரலை நீட்டிக்கொண்டு, 'பெயரென்ன?' என்று கேட்டார்.

'என் பெயர் நாணு என்று ஜனங்கள் சொல்லுவார்கள்' என்று நாராயணஸ்வாமி சொன்னார்.

'தீயர்களுக்குக் கோயில் கட்டிக்கொடுக்கும் ஸந்யாஸி நீர் தானோ?' என்று நம்பூரிகேட்டார்.

'ஆம்' என்று ஸ்வாமி சொன்னார். 'பிராம ணர் பிரதிஷ்டை செய்து பூஜிக்க வேண்டிய

தெய்வத்தை நீர் பிரதிஷ்டை செய்யும்படி உமக்கு யார் அதிகாரம் கொடுத்தார்கள்?' என்று நம்பூரி கேட்டார்.

அதற்கு நாராயண ஸ்வாமி:— 'பிராமணர்களுடைய சிவனை நான் பிரதிஷ்டை செய்யவில்லை. நான் பிரதிஷ்டை செய்தது தீயர்களுடைய சிவன். இதில தாங்கள் வருத்தப்படவேண்டாம். தங்களுடைய சிவன் வழிக்கே நாங்கள் வரவில்லை' என்றனர்.''

இவ்வாறு ராகவ சாஸ்திரி மேற்படி நாராயண ஸ்வாமியைக் குறித்துப் பல கதைகள் சொன்னார். பிறகு மலையாள பாஷையின் ஆதி கவியாகிய துஞ்சத்து எழுத்தச்சன் என்பவரைப் பற்றிக் கொஞ்சம் வார்த்தை நடந்தது. எழுத்தச்சன் என்றால் எழுத்தின் அச்சன் (தந்தை) என்ற பொருள். இந்த எழுத்தச்சன் எத்தனாவது நூற்றாண்டிலிருந்தான என்ற கால நிர்யணம் ராகவ சாஸ்திரிக்குத் தெரியவில்லை. இவர் பிறந்த கிராமத்தின் பெயர் ஏதோ சொன்னார்; அது எனக்கு மறந்து விட்டது. இக் காலத்திலே கூட அந்த கிராமத்துக்குப் பககத்து நாட்டுப்புறங்களிலே எங்கேனும் ஓரிடத்தில் பிள்ளைக்கு அக்ஷராப்யாஸம் பண்ணிவைத்தால் அதற்கு அந்த கிராமத்திலிருந்து மண்ணெடுத்துக் கொண்டுவந்து அக்ஷரம் படிக்கும் சிறுவனுக்குக் கொஞ்சம் கரைத்துக் கொடுக்கும் வழக்கம் உண்டு என்று மேற்படி சாஸ்திரியார் சொன்னார். துஞ்சத்து எழுத்தச்சன் செய்த ராமாயணத்திலிருந்தும் சிவ புராணத்திலிருந்தும், மேற்படி

ராகவ சாஸ்திரி, சில சுலோகங்களை எடுத்துச் சொல்லிப் பொருள் விளக்கினர். அதன் நடை பழைய தமிழ்; கொச்சையில்லாத சுத்தமான ஸம்ஸ்கிருதச் சொற்களையும் தொடர்களையும் யதேஷ்டமாக சேர்த்துச் சொல்லப்பட்டிருக்கிறது. அந்தத் தமிழ் காதுக்கு மிகவும் ஹிதமாகத்தானிருக்கிறது. துஞ்சத்து எழுத்தச்சன் வாணிய ஜாதியைச் சேர்ந்தவராம். இவர் தமிழ் நாட்டிலே போய்க் கல்வி பயின்றவராம். இவருக்கு ஒரு பெண் இருந்தாள். அவளும் கவிதையிலே மிகவும் திறமை வாய்ந்தவள். அவள் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா விஷயமாகப் பக்திப் பாட்டுக்கள் பல பாடி யிருப்பதாகத் தெரிகிறது. அந்தப் பாட்டுக்களை மலையாள ஸ்த்ரீகள் பாடும்போது கேட்டால் மிகவும் இன்பமாக இருக்குமென்று ராகவ சாஸ்திரி சொன்னர். அவரே மாதிரி கொஞ்சம் பாடிக் காட்டினர் :—

" கண்ணனை எங்களுக்குக் காந்தனய் நல்கேணும், விண்ணோர் புகழ்ந்த நாயிகே, மாயிகே, நீ "

என்று அந்தப் பாட்டின் முதற்கண்ணி சொன்னர். அதாவது:—

" கண்ணனை எங்களுக்குக் காந்தனய் நல்க வேணும், விண்ணோர் புகழும் நாயிகே " என்றவாறு.

'நாயிகே' என்பது வடசொல். 'நாயகியே' என்பது பொருள். 'மாயிகே' என்

ருல் ஹே மாயாதேவி என்று அர்த்தம். இது பராசக்தியை நோக்கி கோபிகள் தமக்கு கண்ணனைத் தரும்படி வேண்டிய பாட்டு.

இங்ஙனம் அவர்கள் நெடுநேரம் ஸம்பாஷணை செய்துகொண்டிருந்தார்கள்.

பிரமராய அய்யர் கடைசியாக "ஹிந்து தேசமாகிய ரத்ன மாலையில் மலையாளம் ஸாமான்ய ரத்னமன்று" என்றார்.

பிறகு வேதவல்லியம்மை அச்சிகளைப் பற்றி பல கேள்விகள் கேட்டார். ஏற்கனவே, ஐரோப்பிய ஸ்த்ரீகளுக்கு உள்ள விடுதலை (நாயர் ஸ்திரீகளாகிய) அச்சிகளுக்கு உண்டென்று வெளிப்பட்டது. வேதவல்லியம்மைக்கு சந்தோஷம் பொறுக்க முடியவில்லை. பிரமராயர் பெருமூச்சு விட்டார். உடனே பிரமராய அய்யருக்கும் வேதவல்லிக்கும் சண்டை உண்டாயிற்று. இந்த வியாஸம் ஏற்கனவே நீண்டு போய்விட்ட படியால், மேற்படி பிரமராயர் வேதவல்லி யுத்தக் கதையை சௌகரியப்பட்டால் மற்றொரு முறை எழுதுகிறேன்.

## மலையாளம் (2)

அந்த ராகவ சாஸ்திரி இன்னும் ஊருக்குப் போகவில்லை. வேதபுரத்திலே தான் இருக்கிறார். இன்று காலையில் வந்தார். நான் தனியே இருந்தேன். வேறு யாரு

மில்லை. எங்களுக்குள்ளே பேச்சு நடந்தது. மிகவும் நீண்ட கதை. அவர் ஆறு மணி நேரஞ் சொன்னார். எனக்கு ஞாபகமிருக்கிற பாகத்தைச் சுருக்கமாக எழுதுகிறேன்.

நான் கேட்டேன், "சாஸ்திரியாரே, அந்த தீயர் ஸமாஜத்தின் பெயரென்ன?"

சாஸ் :—"ஸ்ரீ நாராயண தர்ம பரிபாலன யோகம்"

"யோகம் என்றால் சபை என்று அர்த்தமா?"

சாஸ் :—"ஆம்."

"அந்த சபை அங்கே, மலையாளத்தில் அதிகமாய் பரவியிருக்கிறதோ?" என்று நான் கேட்டேன்.

சாஸ் :—"ஆம். அதில் ஸ்திரீகளினுடைய யோகம் என்ற பகுதி ஒன்றிருக்கிறது."

"ஓஹோ! புருஷர் ஸமாஜத்தைப்பற்றி முதலாவது பேசுவோம்" என்றேன்.

ராகவ சாஸ்திரி தொடங்கினார். ராகவ சாஸ்திரி சொல்லியது என்னவென்றால் :–

மேற்படி ஸ்ரீ நாராயண தர்ம பரிபாலன யோகத்துக்கு வட மலையாளத்தில் கண்ணனூர் மாஹி, கோழிக்கூடு முதலிய இடங்களிலும் தென் மலையாளத்தில் திருவனந்தபுரம், கொல்லம் முதலிய இடங்களிலும், கொச்சி ராஜ்யத்திலும், மங்களூரிலும், மலையாள தேச முழுதிலுமுள்ள முக்கிய ஸ்தலங்கள் எல்லாவற்றிலும்

கிளைச்சபைகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. சென்னைப் பட்டணத்தில் ஒரு கிளை இருக்கிறது. இந்த வருஷத்துப் பெருங் கூட்டம் சில மாதங்களின் முன்பு திருவாங்கூரில் உள்ள ஆலுவாய் என்ற ஊரிலே நடந்தது. அப்போது பாலக்காட்டிலுள்ள விக்டோரியா காலேஜ் முதல் வாத்தியாராகிய ஸ்ரீமான் பி.சங்குண்ணி அக்ராஸனம் வஹித்தார். அப்போது அவர் செய்த பிரசங்கத்தில் சில குறிப்பான வார்த்தைகள் சொன்னார். அவையாவன:

நாம் பயப்படக்கூடாது. மனம் தளரக்கூடாது. மேற்குலத்தார் நம்மை எத்தனைவிதங்களில் எதிர்த்த போதிலும் நாம் அவர்களைக் கவனியாமல் இருந்துவிட வேண்டும். எனக்குப் பாலக்காட்டில் அடிக்கடி கையெழுத்துச் சரியில்லாத மொட்டைக் கடிதங்கள் வந்துகொண்டிருந்தன. அந்தக் கடிதங்களில் நான் காலேஜ வாத்தியாராய் வேலையில் இருக்கக்கூடாதென்றும், அது பிராம்மணர் செய்ய வேண்டிய தொழில் என்றும், எனது முன்னோர் செய்த தொழில்களாகிய உழவு, விறகு வெட்டுதல், பனையேறுதல் முதலியனவுமே நான் செய்யத் தக்கதொழில்களென்றும் பாலக்காட்டுப்பிராம்மணர் சொல்லுவதாகத் தெரிகிறது. இப்படிப் பட்ட வார்த்தைகளை நாம் கவனியாததுபோல இருந்துவிடவேண்டும். நாம் கீழ் ஜாதி என்ற நினைப்பே கூடாது. எவன் தன்னை எப்படி நினைத்துக்கொள்ளுகிறானோ, அவன் அப்படியே ஆய்விடுகிறான். நாம் மேல் ஜாதியாரை வெல்ல வேண்டுமானால், மேன்மைக் குணங்கள் பழகிக்கொள்ள வேண்டும். படிப்பினால் மேன்

மையடையலாம். இங்ஙனம் ஸ்ரீமான் சங்குண்ணி தீயருக்கு நல்ல நல்ல உபதேசங்கள் செய்தார்.

ஸ்ரீ நாராயண தர்மபரிபாலன யோகத்தின் பெண்களின் கூட்டம் இவ்வருஷத்தில் ஆலுவாயில் நடந்தது. ஆண்களின் கூட்டம் கழிந்த பிறகு, பெண் கூட்டம் நடத்தினார்கள். இதில் திருவாங்கூரின் திவானாகிய ஸ்ரீமான் கிருஷ்ணன்நாயர் அக்ராஸனம் வகித்தார். இந்த ஆலுவாயில் ஒருநதி ஓடுகிறது. அதன் ஜலம் மிகவும் ரமணீயமானது. வஸந்த காலத்தில் அவ்வூர் வாஸத்துக்கு மிகவும் இன்பமென்று கருதி வடநாட்டிலிருந்துகூட அநேகர் அங்கே வந்து வாஸம் செய்கிறார்கள். ஆலுவாயில் தீயர்-யோகத்தின் பெண் கிளைக்கூட்டம் நடந்த போது அங்கே கௌரியம்மையென்ற தீய ஜாதிப் பெண் வந்து இங்கிலீஷில் பேசினாள். இவள் பி. ஏ. பரீக்ஷையில் தேறினவள். இவளுடைய பேச்சை எல்லாரும் வியந்தார்கள். தீயர் முன்னுக்கு வந்து மேன்மை பெற முயற்சி செய்வதில் திவான் கிருஷ்ண நாயர் மிகுந்த அநுதாபம் காட்டி வருகிறார்.

“தீயர் கள்ளிறக்கும் ஜாதியார் அன்றோ? தீயருக்கு ஈழுவர் என்ற பெயர் அன்றோ, நமது தமிழ் நாட்டுச் சாணாரைப் போலே?” என்று கேட்டேன்.

ராகவசாஸ்திரி சொல்லுகிறார்:— “ஆம். சாணாரைப்போல் கள்ளிறக்கும் தொழில் உண்டு. சங்குண்ணி சொல்லியது போலே

விறகு வெட்டுதல், உழுதல், மற்றும் வைத்தியம் செய்தல், மந்திரவாதம் செய்தல் இவையெல்லாம் பண்டு தீயர் தொழிலாக இருந்தன. இப்போது தீயர்களில் வக்கீல்கள், உத்தியோகஸ்தர், வாத்தியார், உயர்ந்த தொழில் செய்வோர் இருக்கிறார்கள்."

## நம்பூரிகளும் தீயரும்

"நம்பூரிகள் மிகவும் வைதிகமாயிற்றே? அவர்களிடத்தில் தற்காலத்துப் புதிய தீயர் எவ்விதமான எண்ணம் வைத்து நடக்கிறார்கள்?" என்று கேட்டேன்.

"பகை" என்று ராகவ சாஸ்திரி சொன்னார். "காரணமென்ன?" என்றேன்.

"புதிய தீயர் இப்போது நம்பூரிகளைப் பகைப்பது மாத்திரமேயல்லாது, எப்போதுமே நம்பூரிகளைத் தீயர் பகைத்து வந்ததாகச் சொல்லி வருகிறார்கள். ஆலுவாயில் ஸ்ரீ. நாராயணஸ்வாமி ஒரு ஸம்ஸ்கிருத பள்ளிக்கூடம் ஏற்படுத்தியிருக்கிறார். பெரிய கட்டிடம் கட்டியிருக்கிறார். நிறையப் பணம் சேர்ந்திருக்கிறது. அந்தப் பள்ளிக்கூடத்தில் எல்லா ஜாதிப் பிள்ளைகளுக்கும் ஸம்ஸ்கிருதம் கற்பிக்கப்படுகிறது. ஒரு மகம்மதியப் பிள்ளை கூட அந்தப் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து வாசித்து வருகிறான். இங்ஙனம் பல வகைகளிலே தீயர் மேன்மை பெற முயல்வதில் நம்பூரிகளுக்குச் சம்மதமில்லை. அதனால் நம்பூரிகளிடம் தீய

ருக்குப் பகை உண்டாகிறது இயற்கைதானே? செய்வாருக்குச் செய்வார் செத்துக் கிடப்பாரா?

"பிராம்மணராக நம்பூரிகள் பரசுராமனால் செய்யப்பட்டனர் என்றும், அதற்கு முன்பு மீன் பிடிக்கும் செம்படவராக இருந்தனரென்றும் தீயர்கள் நம்பி வருகிறார்கள். மலையாள பூமி செழித்துப்போய் காடுபட்டுக் கிடந்ததை பரசுராமன் நாடாக திருந்தியபோது, அங்கு வந்து குடிப்போகும்படி கர்நாடகத்திலிருந்தும் சோழநாட்டிலிருந்தும் பிராம்மணர்களைக் கூப்பிட்டார். இந்தப் பார்ப்பார் அங்கேபோய் குடியேறச் சம்மதப்படவில்லை. எனவே, பரசுராமன் கோபம் கொண்டு தென்கன்னடக் கரையிலிருந்த செம்படவரைப் பிராம்மணராகச் செய்து குடியேற்றினார். நம்பூரிகள் விவாக சமயங்களிளில் குளம், நதி, ஏதேனும் நீர்நிலைக்குப் போய் வலைபோடுவது போலே அபிநயிக்கும் பொய்ச் சடங்கொன்று நடத்தி வந்தார்கள். இப்போது, நம்பூரிகளும் நாகரிகப்பட்டு வருகிறபடியால் வீட்டிலேயே ஒரு பெரிய பாத்திரத்தில் நீரை வைத்து, அதில் வாழையிலையை துண்டு துண்டாக மீன் ஸ்தானத்தில் போட்டு வைத்து, அதன் மேலே வலை போடுவது போல் துணி போட்டு அபிநயித்து வருகிறார்கள். மேற்படி பரசுராமன் கதை பொய்க் கதை என்பதே என்னுடைய அபிப்பிராயம். இக்காலத்து நம்பூரிகள் விவாக சமயங்களில் மீன் பிடிக்கும் சடங்கு நடத்துவதற்கு வேறேதேனும் மூலமிருந்தாலும் இருக்கலாம். 'நான் அக் கதையை ஏன் சொன்

னேன்' என்றால், இக்காலத்துத் தீயர்களுக்கு நம்பூரிகளிடத்தில் எத்தனை பெரும்பகை இருக்கிறதென்பதைக் காட்டும் பொருட்டாகச் சொன்னேனேயொழிய வேறொன்று மில்லை.

"ஆதிமுதல் தீயருக்கும் பிராம்மணருக்கும் சண்டை உண்டு. தீயர் மற்ற ஹிந்துக்களைப் போலே மக்கள்-தாயத்தை அனுசரிக்கிறார்கள். மருமக்கள்-தாயம் நாயருக்குள்ளே இருப்பது போல் தீயருக்குள்ளில்லை. பிராம்மணர் நாயர் ஸ்திரீகளுடன் ஸம்பந்தம் செய்வது போலே தீயருடன் செய்து கொள்ள இடமில்லை. தீயர் அதனை விரும்பவில்லை. அதுவே நம்பூரிகளுடன் பகைமைக்கு மூலம்.

"நம்பூரிகளிலே பலர், பரசுராமன் மலையாளத்து பூமியைத் தங்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்ததாகச் சொல்லுகிறார்கள். அவர்கள் பெரிய ஜமீன்தார்களாகவும் மிராசுதார்களாகவும் இருக்கிறார்கள். 'ஜன்மி'கள் என்று தம்மைச் சொல்லிக் கொள்ளுகிறார்கள். 'ஜன்மி' என்றால் ஜன்மபாத்யதை உடையவர்களென்று அர்த்தம்.

"நம்பூரிகளெல்லாம் நல்ல சிவப்பு நிறம்; மிகவும் அழகாக இருக்கிறார்கள். பொதுவாகவே மலையாளத்தார் தமிழரைக் காட்டிலும், தெலுங்கரைக் காட்டிலும் அதிக சிவப்பு நிறமுடையவர்கள். குஜராத்தியரை மாத்திரமே, நிறவிஷயத்தில், தக்ஷிணத்தில் மலையாளிக்குச் சமானமாகச் சொல்லலாம். அதிலும், நம்பூரிகள் நல்ல சிவப்பு. ஆனால் நாகரிக ஜனங்

களில்லை. நம்பூரிக்கும் நாகரிகத்துக்தும் வெகு தூரம்.

"நம்பூரிக்குள்ளே ஜாதிப்பிரிவுகள் உண்டு. இந்தியாவில் ஜாதி வித்யாஸத்திலே ஒரு விநோதம் என்னவென்றால், எந்த மூலையிலே போய் எந்த ஜாதியை எடுத்துப் பார்த்தாலுப் அதற்குள் நாலு உட்கிளை யில்லாமல் இருப்பததில்லை. நம்பூரிகளுக்குள்ளே ஸம்ஸ்கிருத படிப்பும் வேதபாடமும் இப்போதும் அழிந்து போகவில்லை. திருஷ்டாந்தமாக தாழைக்காட்டு மனை என்ற இல்லத்து நம்பூரிகள் வேதப் படிப்பில் கீர்த்தி பெற்றவர்கள்; அவர்களிடம் பணமும் அதிகம். பிராயச்சித்தம் முதலிய வைதிக கிரியைகளிலே முடிவான தீர்மானங்கள் கேட்க வேண்டுமானால், ஜனங்கள் அந்த இல்லத்தாரிடத்திலே கேட்கிறார்கள்."

இங்ஙனம் மேற்படி ராகவசாஸ்திரி சொல்லி வருகையில், நான் "'ஜன்மி' களாகி ஜமீன்தார்களாகவும் வித்வான்களாகவும் ஒரே குடும்பத்தார் இருப்பது விசேஷந்தான்" என்று சொன்னேன்.

அதற்கு ராகவசாஸ்திரி :-"வேதத்துக்குப் பொருள் தெரிந்து படிக்கும் நம்பூரிகளை நான் பார்த்தது கிடையாது. பிறரை மயக்கும் பொருட்டு ஓர் இரண்டு வேத சம்ஹிதைகளைப் பாராமல் குருட்டுஉருப்போட்டு வைக்கிறார்கள். இதில் அதிக விசேஷமில்லை" என்றார்.

அதற்கு நான் :—"சாஸ்திரியாரே, ஜமீன் தார்களாய் பணச்செருக்கிலே இருப்போர் பிறரை மயக்க விரும்பினால் கல்விக் கஷ்டம் இல்லாமலே மயக்குவதற்கு வேறு நூற்றுத் தொண்ணூறு சுலபமான வழிகள் உண்டு" என்றேன்.

பிறகு சாஸ்திரியார் நம்பூரிகளின் அறிவுக் குறையைக் குறித்துப் பல கதைகள் சொல்லத் தொடங்கினார். அவை மிகவும் பெரியகதைகள். இந்த வியாஸம் ஏற்கனவே மிகவும் நீண்டு போய் விட்டது. ஆதலால், அவர் சொல்லிய தின் தொடர்ச்சியை மற்றொரு வியாஸத்தில் எழுதுகிறேன். ராகவசாஸ்திரி நான் மௌன விரதம் பூண்ட நாளில் துஞ்சத்து எழுத்தச்சன் விஷயமாகச் சொல்லிய விஷயத்தைக் குறித்து மறுபடி இன்று காலை சம்பாஷித்தோம். அதையும் பின்புதான் தெரிவிக்க வேண்டும்.

## மலையாளத்துக் கதை

மலையாளத்துக் கதை போகப்போக ரஸப் படுகிறது. ராகவசாஸ்திரி மலையாளத்தைப் புகழுகிற புகழ்ச்சியைக் கேட்டால் யாருக்கும் அந்நாட்டிலே போய் சில மாதங்கள் கழித்து வரவேண்டுமென்ற இச்சையுண்டாகும்.

நம்பூரிப்பிராமணர்களும், பலாப்பழமும், மாம்பழமும், வாழைப்பழமும், இனிய ரூபங் களும் மலிந்து கிடக்கும் அந்த நாட்டை நினைக் கும்பொழுது எனக்குப் பெரிய விருப்பமுண்டா

கிறது. இயற்கைத் தெய்வம் அங்கே அழகு முழுவதையும் சிந்தியிருப்பதாக ராகவசாஸ்திரி சொல்லுகிறார். மலையாள மென்பது ஸௌந்தரியத்தின் பெயர் என்று குழந்தைப் பருவம் முதலாகவே என் மனதிற்பட்டிருந்தது. நான் மலையாளத்திற்குப் போனதே கிடையாது. சும்மா வடக்கம் மலையாளத்தைப் பற்றியும் தெற்கம் மலையாளத்தைப்பற்றியும் கதை கேட்டிருக்கிறேன். மலையாள பகவதிக்கும் சாஸ்தாவுக்கும் அந்தநாட்டில் நடக்கும் மகிமையைக் கேட்டுப் பலமுறை ஆச்சரியப்பட்டதுண்டு. மலையாளத்து மந்திரவாதிகளின் கதைகளைக் கேட்டு நகைத்ததுண்டு. மலையாளம் சக்திநாடென்றும், அங்கே பெண்களுக்குப் படிப்பும் அறிவும் மிகுதியென்றும், அதனாலே தான் அந்த நாட்டிற்குப் பெண்மலையாளம் என்னும் பெயருண்டாயிற்று என்றும் கேள்விப்பட்டேன். அங்கே புலையரைத் தீயரும், தீயரை நாயரும், நாயரை நம்பூரியும் மிகவும் இழிவாக நினைக்கிறார்களென்பது மூன்று லோகப் பிரஸித்தம். இந்த ராகவசாஸ்திரி வந்ததிலிருந்து எனக்கு அந்த நாட்டிலே ஜாதிப்பகைமை ஏற்படுவதற்குப் போதுமான காரணங்கள் இருப்பதாகத் தெரிவதுடன் இங்கிலீஷ் படித்த தீயர், நாயர், இருபகுதிகளிலும் ஒரு பகுதியார் மேற்படி பகையை நெருப்புக்கு நெய்விட்டு வளர்க்கக்கூடிய நிலைமையிலே இருக்கிறார்களென்பதையும் காண்கிறேன்.

"தமிழ் நாட்டிலேயும் இது போலவே ஜாதி விரோதங்களை வளர்த்து விடவேண்டு

மென்று சில கயவர் பாடுபட்டு வருகிறார்கள். தமிழ்நாட்டு வேளாளருக்கும், பார்ப்பாருக்கும் முதலியாருக்கும், தொழிலாளிகளுக்கும் சொல்லுகிறேன். ஜாதி விரோதத்தை உடனே கைவிடுக" என்று சாஸ்திரி சொன்னார்.

"மலையாளத்துக் கதை மேலே நடத்தும்" என்றேன். ராகவ சாஸ்திரி சொல்லுகிறார்:—

"நம்பூரி இல்லத்தில் (வீட்டில்) வெளித் தோட்டமிருக்கும் வேலிக்குள் யாரும் நுழையக்கூடாது. நம்பூரிப் பெண்கள் ஜனனை (அந்தப்புரம்); தோட்டத்திலே குளப்புரை. அந்தப் பெண்களில் பலருக்கு விவாஹமே கிடையாது.. சாவு மட்டும் புருஷரில்லாமல் வாழ்ந்து, செத்த பிறகு பிணத்துக்கு மணச் சடங்கு செய்வதுமுண்டு. நம்பூரிகளில் மூத்த பிள்ளைக்கு சொத்து எல்லாம். மூத்த பிள்ளை ஒருவன் மாத்திரமே விவாஹஞ் செய்யலாம். மற்ற இளைய பிள்ளைகள் நாயர் ஸ்திரீகளுடன் ஸம்பந்தஞ் செய்து கொள்ளுவார்கள். ஒரு நம்பூரி பல பெண்களை மணந்துகொள்வான். அப்படியிருந்தும் அவர்களில் பெண் தொகை மிச்சப்பட்டு பலர் மணமறியாமல், வெயிலறியாமல், காற்றறியாமல் வாழ்ந்து குளப்புரை யருகே தோட்டத்தில் புதைக்கப்படுகின்றனர்.

'மனோரமா' என்று அங்கே (மலையாளத்தில்) ஒரு பத்திரிகை இருக்கிறது. அதில் போன வருஷம் ஒரு நம்பூரி தனது ஜாதி ஸ்திரீகளின் அறியாமையைப் பற்றி ஒரு வேடிக்கையான கதை எழுதினார். அந்த நம்

பூரி வீட்டில் அவருடைய பந்துக்களில் ஒரு ஸ்திரீ இந்து தேச சரித்திர விஷயமாகப் பேசுகையிலே கும்பினி (ஈஸ்டு இந்தியா கம்பெனி) என்றொரு ராணியிருந்ததாகவும் அந்த கும்பினியின் தங்கை பெயர் இந்தியா என்றும் சொன்னாளாம்.

"நம்பூரிகளுக்குள்ளே இப்போது தான் ஸபை கூடி 'இங்கிலீஸ் படித்தால் ஜாதி பிரஷ்டம் பண்ண வேண்டுமா வேண்டாமா' என்று ஆலோசனை செய்து வருகிறார்கள். அந்த ஆலோசனை இன்னும் முடிவு பெறவில்லை. 'ஜன்மி'கள் (நம்பூரி ஜமீன்தார்கள்) இப்போது ஏழைகளாய் வருகிறார்கள். அவர்களுடைய செல்வம் குறைகிறது. அவர்களுக்கு நோயும் மரணமும் மிகுதிப்படுகின்றன" என்றார்.

அப்போது நான் சொன்னேன்:—"உண்மையாகவே இந்த நம்பூரி உயர்ந்த குலம். காலத்தின் குறிப்பை யறியாமல் தாழ்ச்சியடைகிறான் போலும்" என்றேன்.

ராகவ சாஸ்திரி சொல்லுகிறார்:—"நம்பூரிகளுக்குள்ளே, எழுதப் படிக்கத் தெரியாத சிலர் கவிதை செய்கிறார்கள். திருஷ்டாந்தமாக காஞ்ஞோணி இல்லம் என்ற குடும்பத்தைச் சேர்ந்த அண்ணன் தம்பி இருவருக்கும் எழுதப் படிக்கத் தெரியாது. கவிதை ராஜாக்களுக்கு மகிழ்ச்சி உண்டாகும்படி செய்கிறார்கள். மலையாளத்தில் கவிதைக் காற்று வீசுகிறது.

“நாயர் ஸ்திரீகளுடன் ஸம்பந்தம் என்பது ஒருவகை மணம். முண்டு (வேஷ்டி) கொடுப்பதே சடங்கு. நாயர்களுடனும் பிராமணருடனும், நாயர்களில் ராஜ குடும்பத்தார் முதல் ஏழைகள் வரை எல்லாரும் இஷ்டப்படி ஸம்பந்தஞ் செய்து கொள்ளலாம். ஒரு ஸ்திரீ தன் இஷ்டப்படி ஸம்பந்தங்களை நீக்கலாம், மாற்றலாம், சட்டம் தடுக்காது. பிள்ளைக்குத் தகப்பன் பெயர் கிடையாது. தாயின் பெயரை மாத்திரந்தான் நியாயஸ்தர் விசாரணையிலே கூடக் கேட்பார்கள்” என்றார்.

“நல்லது, புதிய தீயருக்கும், நாயருக்கும், நம்பூரிகளுக்கும் ஒற்றுமையும், அன்பும், அறிவும் பகவதி சேர்த்திடுக” என்றேன்.

இந்த சமயத்தில் ‘பாப்பா’[1] வந்து “பகவதிப் பாட்டு பாடட்டுமா?” என்று கேட்டது. “பாடு, பாடு” என்று ராகவசாஸ்திரி தலையை ஆட்டினார். பாப்பா பாடுகிறது.

ஆ—ஆ—ஆ!
நின்னைச் சில வரங்கள் கேட்பேன்,—அவை
நேரே இன்றெனக்குத் தருவாய்;—என்றன்
முன்னைத் தீயவினைப் பயன்கள்—இன்னும்
மூளாதழிந்திடுதல் வேண்டும்;—இனி
என்னைப் புதிய உயிராக்கி,—எனக்
கேதும் கவலை யறச்செய்து,—மதி
தன்னை மிகத் தெளிவு செய்து,—என்றும்
சந்தோஷம் கொண்டிருக்கச் செய்வாய்!—ஹே!
காளீ, வலிய சாமுண்டீ!—ஓங்
காரத் தலைவி யென் னிராணீ!

1. ‘பாப்பா’—ஸ்ரீ பாரதியாரின் இளைய குமாரி.

## டிண்டிம சாஸ்திரியின் கதை

இன்று காலை பொழுது விடிய இரண்டு நாழிகைக்கு ஒருவர் வந்து என் வீட்டுக் கதவையிடித்தார். நான் போய்க் கதவைத் திறந்து பார்த்தேன். கையில் ஒரு லாந்தர் வைத்துக் கொண்டிருந்தார். நெற்றியிலே ஸ்ரீ சூர்ணம்; தலையில் பாகை; உடம்பில் முழந்தாள் வரை நீண்ட பெரிய கர்நாடக உடுப்பு; காலில் பாதக்குறடு; கையில் தும்பிக்கை போலே ஒரு தடி. "யார்? எந்த ஊர்?" என்று கேட்டேன்.

அப்போது அவர் சொல்லுகிறார்:—"நான் வசிப்பது கும்பகோணம். என் பெயர் டிண்டிம சாஸ்திரி. வேத புரத்தில் ஸ்வாமி தரிசனத்துக்காக வந்தேன். தங்களையும் பார்த்து விட்டுப் போகலாமென்று நெடுநாளாக இருந்த ஆசையை இப்போது தீர்த்துக்கொண்டேன்" என்றார்.

'சரி' என்று சொல்லி நான் அவரை உள்ளே அழைத்துவந்தேன். மேல் மெத்தையில் குழந்தை குட்டிகள் தூங்கிக்கொண்டிருந்தபடியால், கீழேயே கூடத்தில் ஒரு பிரப்பம் பாயை விரித்தேன். விளக்கேற்றினேன். டிண்டிமரும் நானும் உட்கார்ந்து கொண்டோம். டிண்டிம சாஸ்திரி தன்னுடைய வெற்றிலைப் பெட்டியை எடுத்தார். நானும் அவரும் வெற்றிலை போட்டுக்கொண்டோம். அப்போது டிண்டிமர்:— "தாங்கள் ப்ரமபத்ரம் (புகையிலை) போடுவது கிடையாதோ?" என்றார்.

நான் சொன்னேன் :— "கிடையாது, ஸ்வாமி; முன்னெல்லாம் நாளொன்றுக்கு மூன்று தூக்குப் புகையிலை சவைத்துத் துப்பிக்கொண்டிருந்தேன். இரண்டு வருஷ காலமாக அவ் வழக்கத்தை நிறுத்திவிட்டேன்" என்றேன்.

"சரிதான்" என்று சொல்லி லேசாக நகைத்துவிட்டு, டிண்டிம சாஸ்திரி தம்மிடமிருந்த புகையிலை டப்பாவைத் திறந்து அதற்குள்ளிருந்த சுகந்த பரிமள புகையிலையை ஒரு கொத்து, எலுமிச்சங் காய் அளவு, கையில் எடுத்து வாய்க்குள்ளே திணிக்க மாட்டாமல் திணித்துக்கொண்டார்.

இரண்டுதரம் எழுந்து வெளியே எச்சில் துப்பிவிட்டு வந்தார். மேலே இருந்த பட்டையையும் தலையில் இருந்த பாகையையும் கழற்றிப் பக்கத்தில் வைத்துக்கொண்டு பேசத் தொடங்கினர்:—"முந்தி ஒரு தடவை 'சுதேசமித்திரன்' பத்திரிகையில் மலையாளத்திலிருந்து தீய ஜாதியைச் சார்ந்த 'ராகவ சாஸ்திரி' என்ற மனுஷ்யன் வந்ததாகவும், அவர் மலையாளத்து நம்பூரிப் பிராமணர்களைத் தூஷித்துப் பேசியதாகவும் தாங்கள் எழுதியிருந்தீர்கள். நான் அதற்கப்புறம் மலையாளத்துக்குப் போய் பல க்ஷேத்திரங்களில் ஸஞ்சாரம் செய்தேன். அங்கு பல நம்பூரிப் பிராம்மணர்களைக் கண்டேன். அவர்களெல்லோரும் மஹா யோக்யர்கள். தீயர்களைக் கஷ்டப்படுத்துகிற நாயர்களைக் கஷ்டப்படுத்தினர்களே யென்ருலோ, அதுவெல்லாம் பழைய

கர்மம். அதனால் உண்டான பாவப் பயன்களை அவர்கள் அனுபவித்தார்கள்; இப்போதும் அனுபவிக்கிறார்கள். சந்திரனிலே கூட மாசு தோன்றுகிறது. அதுபோல், உலகத்திலும் எந்த ஜாதியாரிடத்திலும், குற்றம் கண்டு பிடிக்கப்போனால், குற்றம் இருக்கத்தான் செய்யும். 'குற்றம் பார்க்கில் சுற்றமில்லை' என்று ஔவையாரே சொல்லியிருக்கிறார்கள். மேற்படி ஔவையாரைக் குறித்து நான் மலையாளத்தில் கேள்விப்பட்ட புதுமைகளைத் தங்களிடம் சொல்லவேண்டுமானால், அது வேறு பெரிய கதையாக நீளும். நம்பூரிப் பிராமணர்களை மொத்தமாக கவனிக்கும்போது நல்ல ஸாதுக்களாகவே யிருக்கிறார்கள். அவர்களுடைய யோக்யதை இக் காலத்தில் சோபிக்க இடமில்லை. முதலாவது, அவர்களுக்கு நவீன லௌகிகக் (அதாவது ஐரோப்பியக்) கல்வியில்லை. அது ஓர் ஊனம். ஆனால், அதை அவர்கள் சீக்கிரத்தில் நிவிருத்தி செய்து கொள்ளுவார்கள்.

"ஒரு நம்பூரி என்னிடம் சொன்னார்: இங்கிலீஷ் பாஷையிலுள்ள சாஸ்திரங்களைத் தெரிந்துகொள்வதில் அவர்களுடைய வைதிக நெறிக்கு யாதொரு விரோதம் கிடையாதென்றும், ஆனால், இங்கிலீஷ் பாஷையைப் படித்தால்தான் தோஷமென்றும், ஆதலால் இங்கிலீஷிலிருந்து மேற்படி சாஸ்திரங்களை யாராவது தர்ஜமா பண்ணிப் போட்டால் நம்பூரிமார் வாசிப்பது மல்லாமல் மேற்படி சாஸ்திரங்களில் அதுல்யமாக பாண்டித்யம் பெறுவார்கள் என்றும், நம்பூரியின் புத்திக்கு ஸமான

மான தீக்ஷ்ணம் இந்த லோகத்தில் வேறு எந்த ஜாதியாருக்கும் கிடையாது என்றும் அந்த நம்பூரி சொன்னார்."

என்று இங்ஙனம் டிண்டிம சாஸ்திரி கதை சொல்லி வருகையில் நான் அவரிடம்:— "ஸ்வாமி, தாங்கள் என்ன ஸ்மார்த்தரா வைஷ்ணவரா, விஷயம் தெரியவில்லையே. நெற்றியில் நாமம் இல்லை; ஸ்ரீசூர்ணம் மாத்திரம் தெரிகிறது. வைஷ்ணவர் சாஸ்திரி என்று பெயர் வைத்துக் கொள்வதில்லையே" என்றேன்.

அதற்கு டிண்டிம சாஸ்திரி:— "நான் ஸ்மார்த்தன்தான். கீற்று நாமக்காரன். நாங்கள் லேசாக நாமம் போடுவோம். நேற்று மத்தியானம் சார்த்தினபடியாலே திருமண் கலைந்துபோய் ஸ்ரீசூர்ணம் மாத்திரம் தெரிகிறது. ஸ்ரீரங்கத்துக் கோயிலில், ஸ்மார்த்தர் நாமம் போட்டுக்கொண்டு பரிசாரகம் செய்கிறார்கள். அநேக ஜில்லாக்களில் நாங்கள் இருக்கிறோம்" என்றார்.

"நம்பூரிப் பிராம்மணரைப் பற்றி நான் பிறந்தது முதல் இன்று வரை நீர் ஒருவர் தான் ஸ்தோத்திரம் பண்ணக் கண்டேன். இதுவரை எங்கே போனாலும், நம்பூரியைத் திட்டுவார்களே யொழிய, நம்பூரி நல்லவன் என்று யாரும் சொல்வது கிடையாது" என்று நான் சொன்னேன்.

அப்போது டிண்டிம சாஸ்திரி சொல்லுகிறார்:—"ஐயோ, ஸ்வாமி! ஐயோ, ஸ்வாமி!

ஐயோ, ஸ்வாமி! தங்களுக்குத் தெரியாத விஷயம் ஒன்றுமில்லை. ஆனால் தாங்கள் இந்த ஸங்கதி மாத்திரம் கேள்விப் பட்டிருக்க மாட்டீர்கள்! மலையாளத்தில் தெய்வம் நேரே பேசுகிறது, ஸ்வாமி. அங்கே நல்ல பாம்புகள் மனுஷ்யருடைய காலைச் சுற்றிவரும், கடிக்காது. பதிவிரதைகள் அந்தப் பாம்புகளை வசப்படுத்திப் போட்டார்களாம்.

'நம்பூரி' என்றால், 'நம்பிஸ்ரீ' என்ற பட்டத்தின் திரிதல் விகாரம். பாலக்காட்டில் எனக்கு ஒரு நம்பூரி பிராண ஸ்நேகிதராக இருந்தார். அவருக்கு அவ்வூர் வக்கீல் ஒருவர் சொல்லிய சில சரித்திர சம்பவங்களை அவர் எனக்குச் சொன்னார்.

"1521-ம் வருஷத்தில் கொச்சிராஜா ஐம்பதினாயிரம் நாயர் படையும் சில போர்த்துக்கீசிய பீரங்கிப் பட்டாளமும் சேர்த்துக்கொண்டு கோழிக்கூட்டுத் (கள்ளிக்கோட்டைத்) தம்பிரான் மேலே படையெடுத்து வந்தார். அப்போது, தம்பிரானைச் சேர்ந்த பிராமணர்கள் கூட்டம் கூடி, கொச்சிராஜா அன்னியருடன் சேர்ந்துகொண்டு பிராமண சத்துருவாக மூண்டது பற்றி அவனைச் சாபமிட்டார்கள். பிராமண சாபத்துக்கிடமான ராஜாவுக்கு ஜயம் கிடையாதென்று தீர்மானித்துக் கொச்சிராஜனுடன் வந்த ஐம்பதினாயிரம் நாயர்களும் ஓடிப்போய் விட்டார்கள். கொச்சிராஜன் போர்த்துகீசியர் முகத்தை நோக்கப் போர்த்துகீசியர் கடலை நோக்கத் தம்பிரான் தலை பிழைத்தது.

"திப்பு சுல்தான் காலத்தில் முகம்மதிய ஸேனாதிபதியொருவன் சிறிய படையுடன் வந்து பாலக்காட்டுக் கோட்டையின் முன்னே சில பிராமணர்களை மேல் அங்கவஸ்திரத்தை உரிந்து நிற்கும்படி செய்வித்து பிராமணர்களை அவமானப்படுத்திய கோரத்தை சகிக்க மாட்டாமல் யாதொரு சண்டையுமின்றி தம்பிரான் இனத்தார் கோட்டையை விட்டுப் போய்விட்டதாக புல்லர்டன் என்ற இங்கிலீஷ் ஸேனாதிபதி எழுதி வைத்திருக்கிறான். இச் சங்கதிகளெல்லாம் 'லோகன்' எழுதின 'மலபார் மானுயல்' புஸ்தகத்தில் போட்டிருக்கிறதாம். அந்தக் காலத்து போர்த்துக்கீசிய வைஸ்ராய், 'ஆல்பான்ஸோ ஆல்புகர்க்' என்பவன் கொச்சி ராஜாவிடம் சொன்னானும்: 'இனிமேல் இந்த ராஜ்யத்தில் பிராமண வாக்கு செல்லாது. இனிமேல் அன்னியனுடைய கோலுக்கு வணங்க வேண்டும்' என்று சொன்னானும்.

"திப்பு சுல்தான் கோழிக்கூட்டில் ஹிந்துக்களை அடக்க ஆரம்பஞ் செய்தபொழுது, இருநூறு பிராமணரைப் பிடித்து முஸலீம் ஆக்கி கோமாம்சம் புசிக்கச் செய்தானும். அவனை எதிர்க்கத் திறமையில்லாமையால் கோட்டயம் ராஜாவும் கூத்தநாட்டு ராஜாவும் இங்கிலீஷ்காரருக்கு விண்ணப்பஞ் செய்தார்கள் :-"நீங்கள் பிராம்மணர்களையும் ஏழைகளையும் ராஜ்ய முழுவதையும் காப்பாற்றவேண்டும்" என்று. இங்ஙனம் மேற்படி டிண்டிம சாஸ்திரி எத்தனையோ விதமான கதைகள் சொன்னார். அவர் சொன்ன விஷயங்களையெல்லாம், பின்னிட்டு "நம்பூரிமார்" என்று தனிக்கதை

எழுதுவேன், அதிலே சொல்கிறேன். இது நிற்க. காலை தோசை தின்று பால் சாப்பிட்டு விட்டுத் தாம்பூலம் தரித்துக்கொண்டு டிண்டிம சாஸ்திரி என்னிடம் விடைபெற்றுச் சென்றார். அவர் போய் பத்து நிமிஷத்துக்கெல்லாம் பழைய ராகவசாஸ்திரி முன்போல் ஐரோப்பிய உடை தரித்துக்கொண்டு வந்து ப்ரஸந்நமானார்.

அவர் யார் ஞாபகமிருக்கிறதா? ஆதியில் இந்த ராகவசாஸ்திரி என்னிடம் வந்து நம்பூரியைப் பழித்துப் பேச அதை நான் சுதேசமித்திரன் பத்திரிகைக்கெழுத, அதைப் பார்த்துத் தான் டிண்டிம சாஸ்திரி என்னை உணர்ந்து வந்தார். ராகவ சாஸ்திரி வந்தவுடன் நான் அவரிடம் டிண்டிமர் வந்துவிட்டுப்போன விருத்தாந்தங்களையெல்லாம் சொன்னேன்.

அப்போது ராகவசாஸ்திரி கடகட வென்று சிரித்தார். இவர் கையில் "ரயில் பை" கொண்டு வந்திருந்தார். அதை எடுத்துக் கொண்டு "நான் மெத்தையிலே போய்த் தனியாக ஐந்துநிமிஷம் இருக்க வேண்டும்" என்று சொன்னார்.

"அதற்கு என்ன, செய்யும்" என்றேன். தனியாகப் போயிருந்தார். திரும்பி வரும் போது பார்த்தால் பூட்ஸ் எல்லாம் போய், ஸ்ரீசூர்ணம், தலைப்பாகை ஸஹிதமான டிண்டிமசாஸ்திரி வந்து தோன்றினார். 'இதென்னடா வேடிக்கை' யென்று தீர விசாரணை செய்யும்போது, ஒரே ஆசாமி ராகவசாஸ்திரியாகவுப் டிண்டிம சாஸ்திரியாகவும் இரண்டு

வேடந் தரித்து எனக்கு நம்பூரிகளுடைய விஷயத்தில் கோபம் அதிகப்படும்படி செய்வதற்காக இப்படி விளையாடினர் என்று தெரிய வந்தது.

அவர் பிறப்பில் தீயரில்லை. நம்பூரிதான் என்றும் தெரியவந்தது.

## கொட்டைய சாமி

தென் பாண்டி நாட்டில் நெட்டையபுரம் என்றொரு ஊர் இருக்கிறது. எந்தக் காரணத்தாலோ, அவ்வூர் ஜனங்கள் அக்கம் பக்கத்து கிராமத்தார்களைக் காட்டிலும் சராசரி முக்கால் அல்லது ஒரு சாண் அதிக உயரமாக இருப்பார்கள். இது பற்றியே நெட்டையபுரம் என்ற காரணப் பெயர் உண்டாயிற்றென்று பல பண்டிதர்கள் ஊகிக்கிறார்கள்.

அந்த ஊரில் மிகவும் கீர்த்தி யுடைய சிவன் கோயில் ஒன்றிருக்கிறது. ஆனித் திருவிழாவின்போது அக்கோயிலில் தேரோட்டம் மிகவும் அற்புதமாக நடக்கும். சூழ்ந்துள்ள கிராமங்களினின்றும் நாயக்கர்களும், நாயக்கச்சிகளும், ரெட்டிகளும், ரெட்டிச்சிகளும், பறையர் பறைச்சிகளும் பெருங் கூட்டமாகத் தேர் சேவிக்கும் பொருட்டு வந்து கூடுவார்கள்.

கொண்டையெல்லாம் செவ்வந்திப் பூ, வீதி யெல்லாம் கரும்பு சவைத்துத் துப்பிம் சக்கை. அவர்களுடைய குழந்தைகள் ஆணுய

பெண்ணும், பெரும் பகுதி நிர்வாணமாகவும், சிறு பகுதி இடுப்பில் மாத்திரம் ஒரு சிறு துணியை வளைந்து கட்டிக்கொண்டும் வரும். துணி உடுத்திய குழந்தைகளுக்குள்ளே ஆண் பெண் வேற்றுமை கண்டு பிடிப்பது மிகவும் சிரமம். ஏனென்றால், ஆண் குழந்தைகளைப் போலவே பெண் குழந்தைகளுக்கும் முன் குடுமி சிரைக்கும் விநோதமான வழக்கம் அந்த ஜாதியார்களுக்குள்ளே காணப்படுகிறது.

ஷை நெட்டையபுரத்தில் ஒரு ஜமீன்தார் இருக்கிறார். அவருக்கு இப்போது சுமார் முப்பது அல்லது முப்பத்தைந்து வயதிருக்கும். செக்கச்செவேலென்று எலுமிச்சம்பழம் போலே பார்வைக்கு மிகவும் அழகாக இருக்கிறார். அவருடைய நடை யுடை பாவனைகளில் உடை மாத்திரம் இங்கிலீஷ் மாதிரி. நடையும் பாவனைகளும் முற்காலத்துப் பாளையக்காரரைப் போலேயாம். பூட்ஸ் முதல் தொப்பிவரை அம்மனிதருடைய உடுப்பைப் பார்த்தால் லண்டன் நகரத்து லார்டு மக்களின் அச்சு சரியாக இருக்கும். இவர் மூன்று தரம் இங்கிலாந்துக்குப் போய் வந்திருக்கிறார். இங்கிலீஷ் பாஷை பேசினால், திக்காமலும் தட்டாமலும் சர சர சர வென்று மழை வீசுவதுபோல் வீசுவார். இவருக்குக் குதிரை யேற்றத்திலும் வேட்டையிலும் பிரியம் அதிகம். நானூறு வேட்டை நாய்கள் வளர்க்கிறார். இவருடைய அந்தப்புரத்தில் பன்னிரண்டு தாலிகட்டிய பெண்டாட்டிகளும் வேறு பல காதல் மகளிரும் இருக்கிறார்கள்.

இந்த ஜமீன்தார் சிவபக்தியில் சிறந்தவர். வீபூதி ருத்திராக்ஷங்களை மிகவும் ஏராளமாகத் தரிக்கிறார். தினம் இரண்டு வேளை அரண்மனையில் தாமே சிவபூஜை நடத்தி வருகிறார். திங்கள்கிழமை தோறும் தவறாமல் மாலையிலே சிவன் கோயிலுக்குப் போய் ஸ்வாமி தரிசனம் பண்ணி வருகிறார். திருவிழாக்காலங்களில் முதலாவது வந்து நின்று முக்கால் வாசிப் பொழுதையும் கோயிலிலே செலவிடுவார். தேரோட்டத்தின்போது வடத்தை மற்ற ஜனங்களுடன் சேர்ந்து நெடுந்தூரம் இழுத்துக் கொண்டு போவார். அப்பால் கையில் ஒரு பிரம்பை எடுத்துக்கொண்டு ஜனங்களை உற்சாகப் படுத்தின படியாகவே, தேர் மீட்டும் நிலைக்கு வந்து நிற்க எவ்வளவு நேரமான போதிலும் கூடவே வருவார்.

கோயிலுக்கு வரும் ஸமயங்களில் மாத்திரம் இவர் ஐரோப்பிய உடையை மாற்றித் தமிழ உடை தரித்துக்கொண்டு வருவார். பலாச் சுளைகளைப்போல் மஞ்சளாகக் கொழுக் கொழுக் கென்ற உடம்பும், பரந்த மார்பும், விரிந்த கண்களும், தலையில் ஒரு ஜரிகைப் பட்டுத் துண்டும், கை நிறைய வயிர மோதிரங்களும், தங்கப் பொடி டப்பியும், தங்கப்பூண் கட்டிய பிரம்புமாக இந்த ஜமீன்தார் சென்ற ஆனித் திருவிழாவின் போது, ஒரு நாட் காலையில், ஷை சிவன் கோயிலுக்கெதிரே, வெளி மண்டபத்தில் கல்யாண ஜமக்காளத்தின் மீது பட்டுத் தலையணைகளில் சாய்ந்து கொண்டு, வெற்றிலை, பாக்கு, புகையிலை போட்டுக் கொண்டு பக்கத்திலிருந்த வெள்ளிக் காளாம்

பியில் சவைத்துச் சவைத்துத் துப்பிக் கொண்டிருந்தார்.

அந்த ஸமயத்தில், ஷை ஜமீன்தாரின் முன்னே, கன்னங்கரேலென்ற நிறமும், மலர் போலத் திறந்த அழகிய இளைய முகமும், நெருப்புப் பொறி பறக்கும் கண்களுமாக, ஏறக்குறைய இருபத்தைந்து வயதுடைய இளைஞனொருவன் வந்து தோன்றினான். இவன் பெயர் கொட்டைய நாயக்கன். இவன் யோகி யென்று அந்த ஊரில் சிலர் சொல்லுகிறார்கள். ஞானப் பயித்தியங் கொண்டவனென்று சிலர் சொல்லுகிறார்கள். பொதுவாக ஜனங்கள் இவனுக்கு கொட்டைய சாமியார் என்ற பெயர் வழங்குகிறார்கள்.

இவனைக் கண்டவுடனே ஜமீன்தார்:— "வாடா, கொட்டையா" என்றார்.

"சாமி, புத்தி" என்றான் கொட்டையன்.

"காவி வேஷ்டி உடுத்திக் கொண்டிருக்கிறாயே! என்ன விஷயம்?" என்று ஜமீன்தார் கேட்டார்.

கொட்டையன் மறுமொழி சொல்லவில்லை. சும்மா நின்றான்.

"ஸந்யாஸம் வாங்கிக்கொண்டாயா?" என்று ஜமீன்தார் கேட்டார்.

"ஆமாம்; பாண்டியா, ஊரார் வீட்டு ஸ்த்ரீகளை யெல்லாம் ஸந்யாஸம் பண்ணிவிட்டேன்" என்று கொட்டையன் சொன்னான்.

"சாப்பாட்டுக்கென்ன செய்கிறாய்" என்று ஜமீன்தார் கேட்டார்.

"என்னுடைய பெண்டாட்டிக்கு அரண்மனையில் சமயலறையில் வேலையாயிருக்கிறது. அவள் அங்கிருந்து பேஷான நெய், தயிர், சாதம், கறி, எல்லாம் மஹாராஜா போஜனம் பண்ணு முன்னாகவே எனக்குக் கொணர்ந்து தருகிறாள். ஆதலால், பரமசிவனுடைய கிருபையாலும், மஹாராஜாவின் கிருபையாலும் ஷை பெண்டாட்டி கிருபையாலும் சாப்பாட்டுக்கு யாதொரு கஷ்டமுமில்லை" என்று கொட்டையன் சொன்னான்.

"துணிமணிகளுக்கு என்ன செய்கிறாய்?" என்று ஜமீன்தார் கேட்டார்.

கொட்டையன் மறுமொழி யொன்றுஞ் சொல்லவில்லை. சும்மா நின்றான்.

அப்பொழுது ஜமீன்தார் அவனை நோக்கி:— "நாலாநாள் இரவில் நீ கீழவாயிலோரத்திலுள்ள பாம்பலம்மன் கோயிலிலிருந்து சில கற்சிலைகளையும், ஒரு வேலாயுதத்தையும் வேஷ்டிகளையுந் திருடிக்கொண்டு வந்தாயாமே; அது மெய்தானா?" என்று கேட்டார்.

"இல்லை, பாண்டியா, திருடிக்கொண்டு வரவில்லை. சும்மா எடுத்துக்கொண்டு வந்தேன்" என்று கொட்டையன் சொன்னான்

இதைக் கேட்டவுடனே ஜமீன்தார் கல கலவென்று சிரித்தார். பக்கத்திலிருந்த மற்றப் பரிவாரத்தாரும் சிரித்தார்கள்.

அப்போது ஜமீன்தார் கேட்கிறார்:—"சரி கொட்டையா, நீ திருடவில்லை; சும்மா எடுத்துக்கொண்டு வந்தாயாக்கும். சரி, அப்பாலே என்ன நடந்தது?" என்றார்.

"கோயிற் பூசாரி சில தடியாட்களுடன் என் வீட்டுக்கு வந்து ஸாமான்களைக் கேட்டான். சிலைகளையும் துணிகளையும் திரும்பக் கொடுத்துவிட்டேன். வேலாயுதத்தை மாத்திரம் கொடுக்கவில்லை" என்று கொட்டையன் சொன்னான்.

"ஏன்?" என்று ஜமீன்தார் கேட்டார்.

"அந்த வேலை எங்கள் வீட்டுக் கொல்லையில் மந்திரஞ் சொல்லி ஊன்றி வைத்திருக்கிறேன். அத்தனை பயல்களுங் கூடி அதை அசைத்து அசைத்துப் பார்த்தார்கள். அது அணுவளவு கூட அசையவில்லை" என்று கொட்டையன் சொன்னான்.

"அவ்வளவு பலமாக ஊன்றி விட்டாயா?" என்று ஜமீன்தார் கேட்டார். "இல்லை, பாண்டியா, அதை ஒரு பூதம் காப்பாற்றுகிறது. ஆதலால் அசைக்க முடியவில்லை" என்று கொட்டையன் சொன்னான்.

இதைக் கேட்டவுடன் ஜமீன்தார் கலகல வென்று சிரித்தார். ஸபையாரும் நகைத்தனர்.

அப்போது, ஜமீன்தார் கொட்டையனை நோக்கி:—"ஏதேனும் பாட்டுப் பாடு; கேட்போம்" என்றார்.

"உத்தரவு; பாண்டியா" என்று சொல்லிக் கொட்டையன் கண்ணனைப்போலே கூத்தாடிக்கொண்டு பின்வரும் டொம்பப் பாட்டுக்கள் பாடலானான்.

பாட்டு

வண்டிக்கார மெட்டு

1. கால் துட்டுக்குக் கடலை வாங்கிக்
காலை நீட்டித் தின்கையிலே
என்னை யவன் கூப் பிட்டே
இழுத் தடித்தான் சந்தையிலே.
"தண்டை, சிலம்பு சல சலென;
வாடி தங்கம்,
தண்டை சிலம்பு சல சலென."

2. சந்தையிலே மருக் கொழுந்து
சரம் சரமா விற்கையிலே
எங்க ளிடம் காசில்லாமல்
எங்கோ முகம் வாடிப் போச்சே.!
"தண்டை சிலம்பு சல சலென;
வாடி தங்கம்,
தண்டை சிலம்பு, சல சலென,"

கொட்டையன் இங்ஙனம் ஆட்டத்துடன் பாடி முடித்தவுடனே, ஜமீன்தார் "சபாஷ்" என்று சொல்லி:— இன்னுமொரு பாட்டுப் பாடு, கொட்டையா" என்றார்.

கொட்டையன் தொடங்கி விட்டான் :—

பாட்டு

" காக்கைக் குஞ்சுக்குக் கலியாணம் ;
கொக்குப் பெட்டைக்கு மஞ்சாணம் "

" எப்போ எப்போ கலியாணம் ?"
காடு விளைய விட்டுக்
கண்டாங்கி நெய்ய விட்டுக்
கொக்குச் சமைய விட்டுக்
குழைய விட்டே தாலி கட்டிக்

" காக்கைக் குஞ்சுக்குக் கலியாணம் ;
கொக்குப் பெட்டைக்கு மஞ்சாணம். "

இதைக் கேட்டு ஜமீன்தார் " சபாஷ் " என்று சொல்லிக் கொட்டையனை நோக்கி :— " இன்னுமொரு பாட்டுப்பாடு " என்றார்.

கொட்டையன் உடனே ஆட்டமும் பாட்டுந் தொடங்கி விட்டான் :—

பாட்டு

" வெற்றிலை வேண்டுமா, கிழவிகளே ? "
" வேண்டாம், வேண்டாம், போடா ! "

" பாக்கு வேண்டுமா, கிழவிகளே ?"
" வேண்டாம், வேண்டாம், போடா ! "

" புகையிலை வேண்டுமா, கிழவிகளே ? "
" வேண்டாம், வேண்டாம், போடா ! "

" ஆமக்கன் வேண்டுமா, கிழவிகளே ? "
" எங்கே? எங்கே? கொண்டுவா, கொண்டுவா "

இந்தப் பாட்டைக் கேட்டு ஜமீன்தார் மிகவும் சிரித்துப் "போதும்; போதும்; கொட்டையா, நிறுத்து; நிறுத்து" என்றார்.

கொட்டையன் ஆட்டத்தையும் பாட்டையும் உடனே நிறுத்தி விட்டான். இப்பாட்டுக்களை மிகவும் அற்புதமான நாட்டியத்துடன் கொட்டையன் பாடியதுபற்றி ஜமீன்தார் மிகவும் ஸந்தோஷமெய்திக் கொட்டையனுக்கு ஒரு பட்டுத் துண்டு இனம் கொடுத்தார்.

நான் அந்த ஸமயத்தில் அந்தக் கோயிலுக்கு ஸ்வாமி தரிசனத்துக்காகப் போயிருந்தேன். அங்கே இந்தச் செய்திகளையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்தேன்.

* * *

அன்று ஸாயங்காலம் நான் மறுபடி அந்த கோயிலுககுப் போனேன். அங்கு வெளி மண்டபத்துக் கெதிரே கொட்டையன் நின்றான். காலையில் தனக்கு ஜமீன்தார் இனம் கொடுத்த பட்டுத் துண்டைச் சுக்கல் சுக்கலாகக் கிழித்து இரண்டு கைகளிலும் நாலி நாலியாகக் கட்டிக் கொண்டிருந்தான்.

நான் அவனை நோக்கி:—"ஏன், கொட்டைய சாமியாரே, பட்டை ஏன் கிழித்தாய்?" என்று கேட்டேன்.

இதைக் கேட்டுக் கொட்டையன்:—

"பட்டைக் கிழித்தவன் பட்டாணி—அதைப்
பார்த்திருந்தவள் கொங்கணச்சி—
துட்டுக் கொடுத்தவன் ஆசாரி—இந்தச்
சூழ்ச்சியை விண்டு சொல், ஞானப் பெண்ணே"

என்று பாடினன்.

"இதற்கென்ன அர்த்தம்?" என்று கேட்டேன். கொட்டையன் சிரித்துக்கொண்டு மறுமொழி சொல்லமல் ஓடிப் போய்விட்டான்.

காலையில் ஜமீன்தாரிடம் பட்டுக்கு மேலே இவன் கொஞ்சம் பணமும் கேட்டதாகவும், அவர் கொடுக்க முடியாதென்றும் சொன்னதாகவும், அந்தக் கோபத்தால் இவன் பட்டைக் கிழித்துக் கைகளில் நாலி நாலியாகத் தொங்கவிட்டுக் கொண்டதாகவும், பின்னாலே பிறரிடமிருந்து கேள்விப்பட்டேன்.

"கொட்டைய சாமி" என்ற சிறிய கதை முற்றிற்று.

"கதாரத்னாகரம்"

## ரத்னமாலை

]பல தேசத்து ஞானிகளின் வசனங்களை 'ஆர்ய' பத்திரிகையில் 'போல் ரிஷார்' 'Paul Richard' என்ற பிரான்ஸ் நாட்டு வித்வான் தொகுத்தெழுதி வரும் கோவையிலிருந்து 'காளிதாஸன்' மொழி பெயர்த்தது.]

### உண்மை நாட்டம், விடாமுயற்சி

தன்னைத்தான் செம்மைப்படுத்திக் கொள்வதில் செலவிடும் முயற்சியின் பயனே மனிதனுக்கு சந்தோஷத்தைத் தரக்கூடியது. ('அந்த் வான்' மருத்துவன்.)

மிகவும் மேல்நிலையிலிருப்போரும் மிகவும் தாழ் நிலையிலிருப்பாரும் எல்லாரும் ஒருங்கே

செய்ய வேண்டிய கடமை ஒன்று உண்டு: அதாவது, ஓயாமல் தம்மைத்திருத்திச் செம்மை செய்தல். (கன் பூஷியஸ்.)

தன்னைத் திருத்துவதில் தளர்ச்சியே கூடாது. தான் அறநெறியில் தேர்ந்துவிட்டதாகக் கர்வங்கொள்ளும்போதே, மனிதன் அறத்திலிருந்து நழுவத் தொடங்குகிறான். (சூ—சிங்.)

லாபம் நின்றுபோனால்; அப்போது நஷ்டம் ஆரம்பிக்கிறது. வேகத்துடன் ஏறிச் செல்வது பெரிதன்று; எப்போதும் ஏறிச் செல்லவேண்டும்; அதுவே பெரிது.(ப்ளூதார்க்)

விருப்பமும் நம்பிக்கையும் தூண்டுமிடத்து மனிதன் உயிருக்கு அஞ்சிப் பின்வாங்கலாகாது. பாதையில் ஒரு க்ஷணங்கூடச் சோம்பியிருக்கலாகாது. தாமதம் செய்பவன் பாதையினின்றும் வலிந்து புறத்தே தள்ளப்படுவான். (பரீத்—உத்தீன்—அத்தர்.)

உண்மையைநாடி உழைப்பவன், இடையே சில விசேஷ சித்திகள் பெற்றவுடன் தடைப்பட்டு நில்லாமல், அதற்கு அப்பாலும் முயற்சி செய்தால் கடைசியாக நித்திய ஞானமாகிய செல்வத்தைப் பெறுவான். (ராமகிருஷ்ண பரமஹம்ஸர்)

நான் என்னை உணர்ந்தவனாகக் கருதவில்லை. ஆனால் ஒரு காரியம் செய்கிறேன். கடந்து போனவற்றை யெல்லாம் மறந்து,

முன்னே நிற்பவற்றை நாடுகிறேன். பரிசு பெறும் பொருட்டுக் குறியை நோக்கி விரைகின்றேன். (பைபில் : பிலிப்பியர்)

விடாமுயற்சியும் உறுதியும்உடையவருக்கு எதுவும் அரிதில்லை. (லுன்—யூ)

பெறுதற்கரியவற்றைப் பெற வேண்டி அறிஞன் விடாமுயற்சியைக் கைக்கொள்ளுகிறான். (லஓ—த்ஸே)

ஊக்கத்துடன் தேடுகிறவன் காண்பான்' (பஹா—உல்லா.)

சிலர் கல்வி பழகமாட்டார். சிலர் பழகியும் தேறமாட்டார். சிலர் கேள்வி கேட்க மாட்டார். சிலர் கேட்டும் விடைப்பொருள் தெரிந்து கொள்ளமாட்டார். இவர்களெல்லாம் மனஞ் சோர்ந்து போகவேண்டாம். சிலர் எதையும் தெளிவுறக் காணமாட்டார். சிலர் தெளிந்தும் கலங்குவார். இவர்கள் மனஞ்சோரவேண்டாம். சிலர் அப்யாஸம் செய்வதில்லை. சிலர் செய்தாலும் உறுதியடைவதில்லை. இவர்கள் மனஞ் சோரவேண்டாம். விடாமுயற்சி ஒன்றிருந்தாற் போதும்; பிறன் ஓரடியிற்செய்வதை இவர்கள் நூறடியிற் செய்வார்கள். பிறன் பத்தடியிற் செய்வதை இவர்கள் ஆயிரம் அடியிற் செய்து விடுவார்கள். இந்தவிடாமுயற்சி விதிப்படி நடப்பவன் எத்தனை மூடனாயினும் மேதாவியாய் விடுவான்; எத்தனை பலஹீனனாயினும் வலிமை பெற்றுவிடுவான். (கன்பூஷியஸ்.)

காலத்தாலும் பொறுமையாலும் முசுக் கட்டையிலை பட்டாய் விடுகிறது. (பாரசீக பழமொழி)

உடம்பைப் போல உணர்வும் தான் ஏற்படுத்திக்கொள்ள விரும்பும் வழக்கத்தைப் பழக்கத்தினால் அடைகிறது. (ஸோக்ராதெஸ்)

ஆத்ம சுத்தியாக தொழிலைச் செய்யுங்கள். அதில் விழிப்போடிருங்கள். விடாமுயற்சி செய்யுங்கள். சிந்தனையோடிருங்கள். உங்கள் விடுதலையிலே கருத்துச் செலுத்துங்கள். (மஹாபரி நிர்வாண ஸூக்தம்.)

கடைசிவரை எவன் பொறுத்திருப்பானோ அவன் காக்கப்படுவான். (பைபில்: மத்தேயு)

விடாமுயற்சியாலே ஆத்மவுடைமை பெறுவீர். (பைபில்: லூக்.)

சிறுக விதைத்தவன் சிறுக அறுப்பான். பெருக விதைத்தவன் பெருக அறுப்பான். (பைபில்: கொரிந்தியார்.)

தேவ யாத்திரை செய்வோன் எப்போதும் அதைரியப்படலாகாது. இஷ்ட தேவதையின் அழகை ஒரு லக்ஷ வருஷம் பாடுபட்டுங் காணாவிடின் அப்போதும் அதைரியப்படலாகாது (பஹா உல்லா.)

எந்த நாளும் அதைரியப்படாமல் இருப்பவனே பெருமையடைந்து நித்தியானந்தத்தை உண்ணுகிறான். (மஹாபாரதம்.)

நியாயமுள்ள மனிதன் ஏழுதரம் விழுந்தும் மறுபடி எழுகிறான். (பைபிள் பழமொழி)

நித்யப் பொருளைக் காணும் பொருட்டாக நீ செய்யும் முதல் முயற்சி பயன்படாவிட்டால், அதனால் தைரியத்தை இழந்துவிடாதே. விடா முயற்சி செய்ய, தெய்வத்தின் அருள்பெறு வாய். (ராமகிருஷ்ண பரமஹம்ஸர்.)

## உடம்பைப் பேணுதல்

சீன தேசத்து ஞானி 'யாகத்ஸ்உங்—த்ஸே' என்பவர் சொல்லுகிறார்:—"மண்ணுலகத்தையும், வானுலகத்தையும் சேர்த்ததோர் விம்பம்; அதன் பெயர் உடம்பு. அதனைத் தெய்வம் உன் வசம் கொடுத்திருக்கிறது. உன் காவலிலே யகப்பட்டிருக்கும் மண்ணை விண்ணுடன் இசைத்து (ஸம்மேளப்படுத்தி) நடத்துவதே உயிர் வாழ்க்கை யென்று சொல்லப் படும்."

ராமகிருஷ்ண பரமஹம்ஸர் சொல்லுகிறார்:—"உயிரும், உடம்பும்: உள்ளே குணம், வெளியே குறி."

'எபிக்தெதுஸ்' என்ற கிரேக்க ஞானி சொல்லுகிறார்:— "ஆத்த சக்தியால் ஆத்மாவுக்கு விளையும் பயன் சரீர சக்தியால் உடலுக்கு உண்டாகும்."

ராமகிருஷ்ண பரமஹம்ஸர்:-"தர்மிஷ்டர் உடம்பைப் போற்ற வேண்டும். அது ஆத்மாவின் கோயில். நித்யப் பொருள் அதனுள்ளே விளங்குகிறது."

ஸ்வாமி விவேகானந்தர் :— "வலிமையுற, நோயின்றி உடம்பைக் காத்தல் அவசியம். உடம்பு மிகச் சிறந்த கருவி. அதனினும் சிறந்த கருவி உன்னிடமில்லை. ஆதலால், அதை வலிதாக, நோயற்றதாக வைத்துக் கொள். உனது உடம்பு எஃகைப்போல் வலிய தென்று பாவனை செய்துகொள். மெலிந்தோருக்கு விடுதலையில்லை. மெலிவையெல்லாம் துரத்திவிடு. உடம்பு வலிதென்று அதனிடம் சொல்லு. அறிவு வலிதென்று அறிவினிடம் சொல்லு. உன்னிடத்திலே நீ எல்லையற்ற திடமும் நம்பிக்கையும் கொண்டிரு."

'மஹாலக்கம்' என்ற பௌத்த நூல் சொல்லுகிறது :— "உடன் பிறந்தோரே! இரண்டுவித மிகையு மில்லாதிருப்போனே விடுதலை பெறுவான். எப்போதும் காமாதி இன்பங்களை நாடுதல் ஒரு மிகை; இஃதிழிந்தது, சிறுமை, மிருகத்தன்மை, ஆபத்து. இந்த வழியிலே பாமரர் செல்லுகிறார்கள். மற்றொரு மிகையாவது உடம்பை மிதமிஞ்சிய விரத முதலியவற்றால் வருந்தச் செய்தல். இது துன்பம்; இது வீண். புத்தபகவான் கூறியது, மேற்கூறிய சந்துகளிரண்டினும் வேறான வழி; அது அறிவைத் திறப்பது; தெளிவு தருவது; விடுதலைக்கும் ஞானத்துக்கும் நிறைவுக்கும் வழிகாட்டுவது."

யோக ஸூத்ரங்களின் ஆசிரியராகிய பதஞ்ஜலி முனிவர் சொல்லுகிறார் :— "வலிமைகளிலே மதியை நிறுத்தி ஸம்யமம் (ஆழ்ந்த தியானம்) செய்தால் யானையின் பலம் முதலியன கைகூடும்."

தமிழ்ப் பழமொழி :- "சுவரிருந்தாலன்றோ சித்திர மெழுதலாம்?" [கருத்து :— வேர்வை சிந்தும்படி நாள்தோறும் உடலை உழைக்க வேண்டும். நன்றாகப் பசித்தபிறகு போஜனம் செய்யவேண்டும். மனதிலே சந்தோஷம் வேண்டும். இவற்றாலே ஒருவன் உடம்பைக் காத்தால் ஒழிய, தர்மம் நடக்காது.]

## தர்க்கம்

"விரைந்து கேட்க; மெல்லச் சொல்லுக." (பைபிள்.)

ராமகிருஷ்ண பரமஹம்ஸர்:— "பிறர் குணதோஷங்களைப் பற்றித் தர்க்கிப்பதிலே பொழுது செலவிடுவோன், பொழுதை வீணே கழிக்கிறான். தன்னைப்பற்றிச் சிந்தனை செய்தாற் பயனுண்டு. ஈசனைப் பற்றிச் சிந்தனை செய்தாற் பயனுண்டு. பிறரைப்பற்றி யோசித்தல் வீண்."

'ஹெர்மஸ்' என்ற புராதன மிசிர (எகிப்து) தேசத்து ஞானி:—"மகனே, விவாதத்திலே நேரங் கழித்தல் நிழலுடனே போராடுவதற்கு நிகராகும்."

'சொக்ராதெஸ்' என்ற கிரேக்க ஞானி:- "அறியாதார் பேச்சை நிறுத்தினாற் கலக மில்லை."

ராமகிருஷ்ண பரமஹம்ஸர் :—"வாதாடுவதனால் பிறன் தனது பிழைகளை அறிந்து கொள்ளும்படி செய்ய முடியாது. தெய்வத்

தின் திருவருள் ஏற்படும்போது, அவனவன் பிழைகளை அவனவன் தெரிந்துகொள்ளுவான்.''

திருவள்ளுவர்:—

'' யாகாவா ராயினும் நாகாக்க''
'' சொல்லிற் பயனுடைய சொல்லுக.''

## மாலை (1)

### அலங்கார சாஸ்திரம்

எல்லாவித அலங்காரங்களும் உவமையணியின் விஸ்தாரங்களைத் தவிர வேறொன்றுமில்லை; 'உபமாலங்காரமே அலங்கார சாஸ்திரத்தின் பிராணன்' என்று பழைய இலக்கணக்காரர் சொல்லுகிறார்கள்.

பிரான்ஸ் தேசத்தில் மஹாகீர்த்தி பெற்று விளங்கிய நெப்போலியன் சக்கிரவர்த்தியின் மதம் அப்படியன்று. ''உவமையணி விரிவணி ஒன்றும் பெரிதில்லை. புனருக்தி (மீட்டுரை) தான் மேலான அலங்காரம். அதாவது, நம்முடைய கக்ஷியைத் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டேயிருக்கவேண்டும். எதிராளி சொல்லும் பேச்சை கவனிக்கவே கூடாது. நம்முடைய கக்ஷியை ஓயாமல் திரும்பச் சொல்லவேண்டும். அடிக்கடி எந்த வார்த்தை சொல்லுகிறோமோ அந்த வார்த்தை மெய்யாய்ப் போகும்'' என்று நெப்போலியன் சொல்லியதாக ஒரு கதை. லௌகீக

காரியங்களிலே இது நல்ல உபாயம். நம்முடைய நியாயத்தை சொல்லிக் கொண்டேயிருக்கவேண்டும். திரும்பத் திரும்பச் சொல்லுவதினால், பொய் கூட மெய்யாகத் தோன்றும்படி செய்துவிடலாம்.

## குண்டூசி வியாபாரம்

ஒருவன் ஊசி வியாபாரம் பண்ணினான். பக்கத்துக் கடையிலே ஒருவன் வாழைக்காய் வியாபாரம். அவனைப்பார்த்து குண்டூசி வியாபாரியும் பகல் வெயில் நேரத்தில் அரைத் தூக்கமாய் கண்ணை மூடிக்கொண்டே சாமான் எடுத்துக் கொடுக்கும் வழக்கத்தை கற்றுக் கொண்டான். ஒரு நாள் பகல் வெயிலில் குண்டூசிக்காரன் அரைக்கண்ணைத் திறந்து கொண்டு முக்கால் குறட்டையாகத் தூங்கிக் கொண்டிருந்தான். அப்போது இலேசான கனவு காணலானான். கையிலே வாய் திறந்த குண்டூசி டப்பி யொன்று இருக்கிறது. இவன் கனவிலே ஒரு பெண் வந்தாள். அவள் வந்து தன் புருவத்திலும் கண்ணிமையிலும் ஜவ்வாது தடவுவதாகக் கனக் கண்டான். கையிலிருந்த குண்டூசி டப்பியை கண்ணிலே கவிழ்த்துக்கொண்டு மிகவும் வருத்தப்பட்டான். குண்டூசி வியாயாரம் பண்ணுகிறவன் பட்டப்பகலில் நடுக்கடையில் உட்கார்ந்து தூங்கக் கூடாது.

## தூற்றல்

ஓயாமல் தூற்றல் போட்டால் அது மழையாகமாட்டாது. சிணுங்கல் மழையினால் கெடுதி

தான் உண்டாகும். தூற்றலாகத் தொடங்கியது மழையாக விரைவிலே பெய்து முடித்து விடவேண்டும், ஒரு நல்ல காரியம் செய்யத் தொடங்குவோன், அதை ஒரே நீட்டாக வருஷக் கணக்கில் நீட்டி, மற்றவர்களுக்கு அதுவே ஒரு தீராத் தொல்லையாகும்படி செய்யலாகாது. "சுபஞ்ச சீக்கிரம்"; நன்மையை துரிதப்படுத்த வேண்டும்.

### வசன நடை

தமிழ் வசன நடை இப்போது தான் பிறந்து பல வருஷமாகவில்லை. தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும். ஆதலால், இப்போதே நமது வசனம் உலகத்தில் எந்த பாஷையைக் காட்டிலும் தெளிவாக இருக்கும்படி முயற்சிகள் செய்ய வேண்டும். கூடிய வரை பேசுவது போலவே எழுதுவதுதான் உத்தமமென்பது என்னுடைய கக்ஷி. எந்த விஷயம் எழுதினாலும் சரி, ஒரு கதை அல்லது ஒரு தர்க்கம், ஒரு சாஸ்திரம், ஒரு பத்திரிகை விஷயம், எதை எழுதினாலும் வார்த்தை சொல்லுகிற மாதிரியாகவே அமைந்து விட்டால் நல்லது.

பழக்க மில்லாத ஒரு விஷயத்தைக் குறித்து, அதாவது ஜனங்களுக்குச் சற்றேனும் பழக்கமில்லாமல் தனக்கும் அதிக பழக்கமில்லாத ஒரு விஷயத்தைக் குறித்து எழுத ஆரம்பித்தால் வாக்கியம் தத்தளிக்கத்தான் செய்யும், சந்தேகமில்லை. ஆனாலும் ஒரு வழியாக முடிக்கும்போது, வாய்க்கு வழங்குகிறதா

என்று வாசித்துப் பார்த்துக் கொள்ளுதல் நல்லது. அல்லது, ஒரு நண்பனிடம் படித்துக் காட்டும் வழக்கம் வைத்துக்கொள்ள வேண்டும். சொல்ல வந்த விஷயத்தை மனதிலே சரியாகக் கட்டி வைத்துக் கொள்ள வேண்டும். பிறகு கோணல், திருகல் ஒன்றுமில்லாமல், நடை நேராகச் செல்ல வேண்டும். முன் யோசனை யில்லாமலே நேராக எழுதும் திற மையை வாணி கொடுத்துவிட்டால், பின்பு ஸங்கடமில்லை. ஆரம்பத்திலே, மனதிலே கட்டி முடிந்த வசனங்களையே எழுதுவது நன்று. உள்ளத்திலே நேர்மையும் தைர்யமு மிருந்தால், கை பிறகு தானாகவே நேரான எழுத்து எழுதும். தைர்யம் இல்லாவிட்டால் வசனம் தள்ளாடும். சண்டி மாடுபோல ஓரி டத்தில் வந்து படுத்துக்கொள்ளும்; வாலைப் பிடித்து எவ்வளவு திருகினாலும் எழுந்திருக் காது. வசன நடை, கம்பர் கவிதைக்குச் சொல்லியது போலவே, தெளிவு, ஒளி, தண்மை, ஒழுக்கம் இவை நான்குமுடையதாக யிருக்கவேண்டும். இவற்றுள், ஒழுக்கமாவது தட்டுத்தடையில்லாமல் நேரே பாய்ந்து செல் லும் தன்மை. நமது தற்கால வசன நடை யில் சரியான ஓட்டமில்லை. தள்ளாட்டம் அதிகமாகக் காணப்படுகிறது. உள்ளத்திலே தமிழ்ச் சக்தியை நிலைநிறுத்திக் கொண்டால், கை நேரான தமிழ் நடை யெழுதும்.

## தமிழ் நாட்டிலே புஸ்தகப் பிரசுரம்

தமிழ் நாட்டிலே புஸ்தகம் எழுதுவோரின் நிலைமை இன்னும் சீராக வில்லை. பிரசுரத்

தொழிலே ஒரு வியாபாரமாக நடத்தும் முதலாளிகள் வெளிப்பட வில்லேயாதலால், சங்கடம் நீங்காமலிருக்கிறது. புதிய புஸ்தகங்களைப் படித்துப் படித்து, 'பயன்படுமா படாதா' வென்று தீர்மானம் செய்யவேண்டும். 'நன்ருக விலேயாகுமா விலேயாகாதா' என்பதை ஊகித்தறிய வேண்டும். ஆசிரியரிடமிருந்து புஸ்தகத்தை முன் விலேயாகவோ, வேறுவித உடன்பாடாகவோ, வாங்கிக் கொண்டு தாம் கைம்முதல் போட்டு அச்சிட்டு லாபம் பெறவேண்டும். இந்த வியாபாரத்தை நமது தேச முதலாளிகள் தக்கபடி கவனியாமலிருப்பது வியப்பை உண்டாக்குகிறது. புஸ்தகங்கள் வெளிவரத்தான் செய்கின்றன. பெருந் தொகையான ஜனங்கள் வாங்கிப் படிக்கத்தான் செய்கிருர்கள். ஒரு ஒழுங்கான பிரசுர வியாபாரம் நடந்தால் ஜனங்களுக்கு நல்ல புஸ்தகங்கள் கிடைக்கும். இப்போது அச்சிடப் பணமுள்ளவர் எழுதும் புஸ்தகங்களே பொது ஜனங்களுக்கு கிடைக்கின்றன. பெரும்பாலும் பழைய புஸ்தகங்களிலே ஆச்சரியமானவை பல எழுதப்பட்ட காலத்தில், ஆசிரியர் தனவந்தராக யிருந்ததில்லே. மேன்மேலும் ஊக்கத்துடன் நடத்திஞல், பிரசுர வியாபாரத்தில் நிறைய லாபம் உண்டாகுமென்பதில் சந்தேகமில்லே.

## விக்டர் ஹ்யூகோ என்ற பிரஞ்சு ஞானியின் வசனங்கள்

### தெய்வம் எப்படிப் பேசுகிறது?

உலகத்தில் நடைபெறும் செய்திகளேயெல்லாம் கடைந்து பார்க்கவேண்டும். அப்

போதுதான் தெய்வத்தின் பாஷை விளங்கும். அதன் ஆணைகள் தெளிவுபடும். ஆனால் இது ரஹஸ்ய பாஷை; எளிதில் அர்த்தமாகாது. சாதாரண மனிதர் இந்தப் பாஷையை மொழி பெயர்க்கத் தொடங்கினால், அதிலே பிழைகள் போடுகிறார்கள்: அவஸரப் படுகிறார்கள். முன் பின் முரணுகிறார்கள்; இடையிடையே சில அமிர்தங்களை விட்டு விடுகிறார்கள்.

அறிவுடையோர், பொறுமையுடையோர், ஆழ்ந்து சிந்தனை செய்வோர்—இவர்கள் பரபரப்புக்கொள்ளாது, காத்திருந்து காத்திருந்து மெல்ல மெல்ல மொழிபெயர்த்துப் பார்க்கிறார்கள். இவர்களுடைய மொழி பெயர்ப்பிலே உண்மையகப்படுகின்றது.

## ஸமத்வம் என்பது யாது

ஸமத்வக் கொள்கையிலே இரண்டு செய்திகளைப் பற்றிய விசாரணையுண்டாகிறது. முதலாவது, செல்வத்தையுண்டாக்குதல். இரண்டாவது, அதைப் பங்கிட்டுக் கொடுத்தல். முதலாவது செய்தியில் தொழிலைப் பற்றிய ஆராய்ச்சியேற்படுகிறது. இரண்டாவது செய்தியில் கடவுளைப் பற்றிய பேச்சு.

முதல் விஷயம் திறமைகளின் உபயோகத்தைப் பற்றியது.

இரண்டாம் விஷயம் இன்பங்களைப் பங்கிட்டுக் கொடுப்பதைப் பற்றியது.

திறமைகளை உபயோகப்படுத்துவதினாலே ஜன வலிமையுண்டாகிறது.

இன்பங்களை நேரே வகுத்தால் ஒவ்வொருவனுக்கும் இன்பம் உண்டாகிறது.

நேரே வகுத்தல் என்றால் ஒன்றுபோல் வகுத்தல் என்று அர்த்தமில்லை. நியாயமாக வகுத்தல் என்று அர்த்தம். நியாயமே ஸமத்வத்தின்பெயர். நியாயமே முதலாவது ஸமத்வம்.

மேலேகூறிய ஜன வலிமை, ஸர்வஸௌகம் என்ற இரண்டும் சேர்ந்தால் ஜனச் செம்மை ஏற்படுகிறது.

மனிதன் செல்வவானாவான். குடிகள் விடுதலைபெற்றிருப்பர். நாடு உயர்வுபெற்றிருக்கும்.

## காதல்

உலகம் இறுகி ஒரு பொருளாய் நிற்பது; ஒரேயொரு தெய்வம் முடிவுவரை விரிந்து நிற்பது; இது காதல்.

காதலர் பிரிந்திருக்கும்போது அவர்களை ஒருவருக்கொருவர் ஓலையெழுதலாகாதென்று தடுத்தால், அவர்கள், நமக்குத் தெரியாதபடி, ஆயிரம் ஆச்சரிய வழிகள் கண்டு பிடித்துப் பேசிக்கொள்கிறார்கள். பறவைகளின் பாட்டையும், மலர்களின் கந்தத்தையும், குழந்தையின் சிரிப்பையும், ஞாயிற்றின் ஒளியையும், காற்றின் உயிர்ப்பையும், விண்மீன்களின் கதிர்களையும் காதலர் தூது விடுகிறார்கள். ஏன்

கூடாது? தெய்வத்தின் படைப்பு முழுதும் காதலுக்குத் தொண்டு செய்யும் பொருட்டே அமைந்திருக்கிறது. உலக முழுதையும் தூது போகச் செய்கிற திறமை காதலர்க்குண்டு.

இளவேனிற் காலமே, நான் அவளுக்கு எழுதுகிற ஓலை நீ.

உயிரே, நீ கல்லாய்ப் பிறந்தால் காந்தக் கல்லாய்ப்பிற; செடியானால், தொட்டால்வாடிச் செடியாகி விடு; மனிதனானால், காதல் செய். காதலர் இல்லாவிடின், ஞாயிறு என்றதோர் தீப்பந்தம் அவிந்துபோய்விடும்.

## மாலை (2)

### "ஆணிமுத்தைப் போலே அறிவு முத்து மாலையினாள்"

ஐரோப்பிய ஸங்கீதம், ஹிந்து ஸங்கீதம் இரண்டையும் பற்றித் தமது கொள்கைகளை வங்கத்துப் புலவராகிய ஸ்ரீ ரவீந்திரநாத் தாகூர் தமது சரித்திரக் குறிப்புகளிலே எழுதியிருக்கிறார். இவர் இளவயதிலே பல வருஷம் இங்கிலாந்தில் வாஸம் செய்தவர்; குழந்தை முதலாகவே நல்ல ரஸிகர், இவருடைய வார்த்தைகள் மதிப்புக்குரியன.

ரவீந்திர நாதர் சொல்லுகிறார்:

"குரலைப் பழக்குவதில் நமது தேசத்துப் பாட்டுக்காரரைக் காட்டிலும் மேற்கு நாட்டுப் பாடகர் மிகவும் சிறப்புடையோர். அவர்களுக்

குத் தொண்டை வசப்பட்டிருப்பதுபோலே, இங்கு இல்லை. நம்மவர்களிலே உயர்ந்த பாட்டுக்காரர் பாடும்போதுகூட 'இவர்கள் சிரமப்படுகிறார்கள்' என்ற விஷயம் வெளியே தெரிந்துவிடுகிறது. யாதொரு சிரமும் காட்டாதபடி மழை பெய்வதுபோல இயற்கையாகப் பாடும்படி நம்மவர் சாரீரத்தைப் பழக்கவில்லை. சில சமயங்களில் மேல் ஸ்தாயியிலும் தமக்கு எட்டாத ஸ்வரங்களைத் தொட முயற்சி செய்கிறார்கள். ஐரோப்பாவில் பாட்டுக்கு வெளியேறுவோரின் தொண்டை, வல்லவன் வாசிக்கும் வாத்தியம்போல, ஒரு குற்றம், ஒரு அபசப்தம், ஒரு கரகரப்பு, ஒரு பிழை இல்லாமல் இருக்கவேண்டும். இவ்வாறு தொண்டையைப் பயிற்சி செய்யாதோர் அங்கே பாடுவதாக வெளிப்படமாட்டார்கள்.

"நம்மவர்கள், பாட்டுக் கச்சேரிக்கு வந்தால், சபைக்கு வந்த பிறகுதான் தம்பூர் சேர்ப்பதும் மிருதங்கத்தைத் தட்டித் தட்டி ஒத்திட்டுப் பார்ப்பதும் எதெல்லாமோ ஒரு மணி நேரத்து வேலை செய்கிறார்கள். இந்த நீண்ட ஹிம்ஸையை சபையோர் சும்மா பொறுத்துக் கொண்டிருக்கிறார்கள். ஐரோப்பாவிலே அப்படியில்லை. கருவிகளையெல்லாம் சபைக்கு வருமுன்பாகவே நேர்படுத்தி வைத்துக் கொண்டு சபைக்கு வந்த உடனே பாட்டுத் தொடங்குகிறார்கள்.

"நம்மவர்கள் வர்ணமெட்டு சரியா என்பதையே பிரதானமாகப் பார்க்கிறார்கள். அங்குள்ளோர் குரலையே முதலாக வைத்துக் கொண்டு ஆச்சரியமான வேலை செய்கிறார்கள்.

"எனக்கு ஐரோப்பிய ஸங்கீதம் ரஸப்படவில்லை; நன்றாகத் தானிருக்கிறது; ஆனால், "ஸர்க்கஸ்" வேடிக்கை எப்படி ஒழுங்காகவும் நன்றாகவுமிருக்கிறதோ அதே மாதிரி. ஒரு பெரிய பாட்டுக்காரி இங்கிலாந்தில் கச்சேரி நடத்தும்போது நான் கேட்கப்போனேன். பாடிக்கொண்டு வரும்போதே பக்ஷிகள் கத்தும் ஒலிகளை காட்டத் தொடங்கினாள். எனக்கு சிரிப்புப் பொறுக்க முடியவில்லை. பெருங் கேலியாக இருந்தது. ஆண் பாட்டு இத்தனை மோசமில்லை.

"நெடுநாள் பழக்கத்தினால் இப்போது எனக்கு ஐரோப்பிய ஸங்கீதத்தின் பொருள் விளங்கத்தான் செய்கிறது. ஆனால், நம்முடைய ஸங்கீதத்தின் வழி வேறு, அவர்கள் வழி வேறு. அது ஜடம்; நம்முடையது ஸூக்ஷமம் அது லௌகீகம்; நமது பாரமார்த்திகம். அந்த சங்கீதத்திலே மானுஷீக சக்தி அதிகமிருக்கிறது; நமது ஸங்கீதத்திலே தெய்வ சக்தி விளங்குகிறது."

மேலே. ரவீந்திரர் வார்த்தைகளை அப்படியே மொழிபெயர்க்கவில்லை. ஸாராம்சத்தை எனது பாஷையில் எழுதியிருக்கிறேன். 'நம்முடைய ஸங்கீத சாஸ்திரம் ஐரோப்பிய சாஸ்திரத்தை விட மேலானது' என்று ரவீந்திரர் சொல்லும் வார்த்தை முழுவதும் உண்மையென்பது இரண்டு முறைகளிலும் பழக்கமுடைய பண்டிதரெல்லோருக்கும் தெரிந்த விஷமேயாம். ஆனாலும், நமது தேசத்து வித்வான்கள் கண்டப் பயிற்சி, ஸபா நாகரிகம்

என்ற அம்சங்களில் ஐரோப்பியர்க்கு ஸமான மாகும்படி முயற்சி செய்தால் நல்லது. ஜனங் களுக்கு இன்பம் அதிகப்படும்; பாடுவோருக்கு பணம் அதிகப்படும்.

## கவி

ஸ்ரீ விநயகுமார ஸர்க்கார் என்ற சரித்திரா சிரியர் சொல்லுகிறார்:—

"கி.பி. ஐந்தாம் நூற்றாண்டினிலே ஹிந்து ஜாதியில் மகத்தான ஞானக்கிளர்ச்சியொன்று தோன்றிற்று. அது தொடங்கிய சில வருஷங் களில் சீன தேசத்திலே பெரிய ராஜ்யங்களும் பெரிய சாஸ்திரப் பயிற்சிகளும் விளங்கி நின் றன. அக்காலத்தில் சீனத்திலே பரவிய அக் கிளர்ச்சியே அடுத்த நூற்றாண்டில் ஜப்பான், அரேபியா, துருக்கிஸ்தானம் என்ற நாடுகளில் பெருகிச் சென்றது. ஜப்பானில் ஒளி மிகுந்த "நரா" வின் காலம் (கி.பி. 710-94); அதுவே பாக்தாது பட்டணத்தில் ஹரூன் அல்ரஷீது ராஜ்யம் நடத்தியதும். அந்த கிளர்ச்சிக் காலத்திலே தான் பாரத தேசத் திலே காளிதாஸன் பிறந்தான். ஆசியா கண் டத்திலே புதிய ஒளி பிறந்தது."

உண்மையான கவிதை அருமையான திரவியம். அதனால் உலகம் க்ஷேமத்தை அடைகிறது. எந்த நாட்டிலே புதிய மஹாகவி தோன்றுகிறானோ, அந்த நாடு மஹா பாக்ய முடையது. தமிழ் நாட்டிலே கவிதையின் புகழ் ஏறுக.

## போத்தன்ன என்ற தெலுங்கக் கவிராயர்

சென்னைப் பட்டணத்திலிருந்து பம்பாய்க்குப்போகும் (மதராஸ் தென்மராட்டிய) ரெயில் பாதையில் 'வொண்டிமிட்ட' என்றொரு ஸ்டேஷன் இருக்கிறது. அதற்குப் பக்கத்திலுள்ள 'வொண்டிமிட்ட' என்னும் ஊர் மிகவும் அழகுடையது. 'வொண்டிமிட்ட' என்றால் 'ஒற்றை மலை' என்று அர்த்தம். ஒற்றைக் குன்று; அதனடியிலே பெரிய ஏரி. மேலே இராமலிங்கேசர் ஆலயம். தெலுங்குப் பாஷையில் மிகச் சிறந்த காவியமாக ஸ்ரீ பாகவதத்தை எழுதிய 'போத்தன்ன' என்ற மகாகவி அந்த ஊரிலே பிறந்தவர். இவருடைய பாகவதம் நம்முடைய இராமாயணத்தைப்போல் ஸம்ஸ்கிருத நூலைத் தழுவி எழுதப்பட்ட வழிநூல் ஆயினும் படிப்பவருக்கு முதனூலத்தனை பெருமை தோன்றும்படி அமைந்திருக்கிறது. நாம் கம்ப ராமாயணத்தைக் கொண்டாடுவது போலே, தெலுங்கர் 'போத்தன்ன'வின் பாகவதத்தைக் கொண்டாடுகிறார்கள். சில தினங்களின்முன்பு 'ஹிந்து'ப் பத்திரிகையில் மேற்படி 'போத்தன்ன'வைப்பற்றி கும்பகோணம் இங்கிலீஷ் பள்ளிக் கூடத்தில் வாத்தியாராக இருக்கும் ஸ்ரீ வெங்கடேசய்யர் என்பவர் ஒரு கடிதம் எழுதியிருக்கிறார். 'போத்தன்னவின் ஜன்ம நக்ஷத்திரத்தைக் கண்டுபிடித்து அதனை 'வொண்டிமிட்டா'வில் வருஷந்தோறும் கொண்டாட வேண்டுமென்றும் அதற்குத் தெலுங்கு தேசத்திலும் வெளிப்பக்கங்களிலுமுள்ள ஆந்திர பாஷாபிமானிகள் எல்லோரும் வந்து கூடவேண்டுமென்றும் ஸ்ரீ வெங்கடே

சய்யர் சொல்லுகிறார். அவருடைய ஜன்ம நக்ஷத்திரம் நிச்சயமாகத் தெரியாத பக்ஷத்தில் ஸ்ரீ கிருஷ்ணஜயந்தியன்று அவர் ஞாபகத்தை கொண்டாடலாமென்கிறார். இது சரியான வார்த்தை.

## கம்பர், திருவள்ளுவர், இளங்கோ

ஆனல், தமிழ்நாட்டில் இதுபோன்ற விஷயங்களைக் கவனிப்பார் இல்லை. தமிழ் நாட்டு வீரருக்கும் கவிகளுக்கும், லோகோபகாரிகளுக்கும் இதுவரை எவ்விதமான திருவிழாவையும் காணவில்லை. பூர்வீக மகான்களின் ஞாபகத்தைத் தீவிரமாக பக்தியுடன் வளர்க்காத நாட்டில் புதிய மகான்கள் பிறக்க வழியில்லை. தப்பித் தவறி ஓரிருவர் தோன்றினுலும் அவர்களுக்குத் தக்க மதிப்பு இராது. பண்டைக் காலத்து சக்திமான்களை வியப்பதும், அவர்களுடைய தொழிற் பெருமையை உலகறிய முழக்குவதும், கூடியவரை பின்பற்ற முயல்வதுமாகிய பழக்கமே இல்லாத ஜனங்கள் புதிய சாமான்களை என்ன வகையிலே கணிப்பாகள்?

எதனை விரும்புகிறேமோ அது தோன்றுகிறது. எதை ஆதரிக்கிறேமோ அது வளர்ச்சி பெறுகிறது; பேணுத பண்டம் அழிந்து போகும். பழக்கத்தில் இல்லாத திறமை இழந்துவிடப்படும். அறிவுடையோரையும் லோகோபகாரிகளையும், வீரரையும் கொண்டாடாத தேசத்தில் அறிவும், லோகோபகாரமும் வீரமும் மங்கிப்போகும். தமிழ் நாட்டில் இப்

போது 'புதிய உயிர்' தோன்றியிருப்பதால், நாம் இவ்விஷயத்தில் தமோ குணஞ் செலுத்தாமல், கம்பன், இளங்கோ, திருவள்ளுவர் முதலிய மகா கவிகளுக்கு ஞாபகச் சிலைகளும் வருஷோத்ஸவங்களும் ஏற்பாடு செய்ய வேண்டும். திருவள்ளுவர் மயிலாப்பூரிலே பிறந்தவர். அங்கே திருவள்ளுவர் கோயில் இப்போது இருக்கிறது. ஜன்மதினம் நிச்சயமாகத் தெரியவில்லை. ஒரு வேளை அந்தக் கோயிற் பூசாரிக்குத் தெரியக்கூடும்.

ஐந்து மகா காவியங்களிலே சிறந்ததாய் 'சிலப்பதிகாரம்' செய்த இளங்கோ முனிவர் வஞ்சி நகரத்தில் பிறந்தவர். இந்த வஞ்சி நகரம் இப்போது திருச்சிராப்பள்ளிக்கு அருகேயுள்ள கரூர் என்று பண்டித மு. ராகவய்யங்கார் தீர்மானம் செய்கிறார் இந்த ஆசிரியரது ஜன்ம தினத்தையும் நிச்சயமாகச் சொல்வதற்கு வழியில்லை.

மயிலாப்பூரில் திருவள்ளுவர் கோயிலைச் செம்மையாகக் கட்டவேண்டும். இப்போது மிகவும் ஏழை நிலைமையில் இருக்கிறது. திருவழுந்தூரிலும், கரூரிலும் ஞாபகச்சின்னங்கள் ஏற்படுத்த வேண்டும். ஜன்ம தினங்கள் நிச்சயப்பட வழியில்லை. ஆதலால், ஸரஸ்வதி பூஜைக்கு முன்பு அல்லது பின்பு குறிப்பிட்டதொரு தினத்தில் இந்த மகான்களின் ஞாபகத்தைக் கொண்டாடுதல் பொருத்தமுடைய செய்கையாகும். நவராத்திரி உத்ஸவங்கள் நமக்குள் வழக்கமாக உள்ளதால், அந்த ஸமயத்தை ஒட்டி நமது மகாகவிகளுக்குத் திருவிழாக் கொண்டாடுதல் ஸுலபமாக இருக்கும்.

பண்டித ஸபைகளையும், பொதுஜன ஆரவாரங்களையும் கோலாஹலமாக நடத்தி, எல்லா வர்ணத்தாரும் எல்லா மதஸ்தரும் சேர்ந்தால், சந்தோஷமும் அறிவுப் பயனும் உள்ளமாண்பும்பெற இடமுண்டாகும். மதபேதங்கள் பாராட்ட இடமில்லாத திருவிழாக்கள் தமிழ் நாட்டில் எவ்வளவு அவசிய மென்பதை ஒவ்வொரு அறிவாளியும் எளிதாக ஊகித்துக் கொள்ளலாம்.

## ஜப்பானியக் கவிதை

ஸமீபத்தில் "மாடர்ன் ரிவியூ" என்ற கல்கத்தாப் பத்திரிகையிலே 'உயோநே நோகுச்சி' என்ற ஜப்பானியப் புலவர் ஒரு லிகிதம் எழுதியிருக்கிறார். அதிலே அவர் சொல்வதென்னவென்றால் :—

"மேற்குக் கவிதையில் சொல்மிகுதி. எண்ணத்தை அப்படியே வீண் சேர்க்கையில்லாமல் சொல்லும் வழக்கம் ஐரோப்பியக் கவிதையிலே யில்லை. எதுகை சந்தம் முதலியவற்றைக் கருதியும், சோம்பற் குணத்தாலும், தெளிவில்லாமையாலும் பல சொற்களைச் சேர்த்து வெறுமே பாட்டை அது போகிற வழியெல்லாம் வளர்த்துக் கொண்டு போகும் வழக்கம் ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் அதிகமிருக்கிறது. தம்முடைய மனதிலுள்ள கருத்தை நேரே வெளியிடுவதில் மேற்குப் புலவர் கதைகளெழுதுவோரைக் காட்டிலும் சக்தி குறைந்திருக்கிறார்கள்.

"ஜப்பானில் அப்படியில்லை. வேண்டாத சொல் ஒன்றுகூடச் சேர்ப்பது கிடையாது. 'கூடை கூடையாகப் பாட்டெழுதி அச்சிட வேண்டும்' என்று ஒரே ஆவலுடன் எப்போதும் துடித்துக் கொண்டிருப்பவன் புலவனாக மாட்டான். கவிதை யெழுதுபவன் கவியன்று. கவிதையே வாழ்க்கையாக உடையோன், வாழ்க்கையையே கவிதையாகச் செய்தோன்-அவனே கவி. புலவனுக்குப் பணம் ஒரு பொருளன்று. வானத்து மீன், தனிமை, மோனம், மலர்களின் பேச்சு—இவற்றிலே ஈடுபட்டுப்போய் இயற்கையுடனே ஒன்றாக வாழ்பவனே கவி.

"கற்று முடிந்து வீட்டுக்குத் திரும்புகையிலே ஒரு சீடன் 'வாஷோமத்ஸுவோ' என்னும் புலவரிடம் மூன்று ரியோ (அதாவது ஏறக்குறைய முப்பது வராகன்) காணிக்கையாகக் கொடுத்தானாம். இவர் ஒருநாளுமில்லாதபடி புதிதாக வந்த இந்தப் பணத்தை வைத்துக் காப்பது தொல்லையாதலால் வேண்டியதில்லை என்று திரும்பக் கொடுத்துவிட்டாராம். இவருக்காகா (Kaga) என்ற ஊரில் ஹொகூஷி என்றொரு மாணாக்கர் இருந்தார். இந்த ஹொகூஷியின் வீடு தீப்பட்டெரிந்து போய்விட்டது. அந்தச் செய்தியை ஹொகூஷிப் புலவர் தமது குருவாகிய 'வாஷோ மத்ஸுவோ' புலவருக்குப் பின்வரும் பாட்டில் எழுதியனுப்பினார்.

'தீப்பட்டெரிந்தது, வீழுமலரின் அமைதி யென்னே!'

"மலர் தனக்கு வாழுங் காலம் மாறிக் கீழே விழும்போது எத்தனை அமைதியுடன் இருக்கிறதோ, அத்தனை அமைதியுடன் ஞானி தனக்கு வருந்துன்பங்களை நோக்குகின்றான். 'வீடு தீப்பட்டெரிந்தது. ஆனால் அதுபற்றித் தன் மனம் அமைதியிழந்து போகவில்லை' யென்ற விஷயத்தை ஹொாகூஷி இந்தப் பாட்டின் வழியாகத் தெரிவித்தார்."

'சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல் ஜப்பானியக் கவிதையின் விசேஷத் தன்மை' யென்று நோகுச்சிப் புலவர் சொல்லுவதுடன் ஆங்கிலேயரின் கவிதை இதற்கு நேர் மாறாக நிற்கிறதென்றும் சொல்லுகிறார். நமக்குள்ளே திருக்குறள் இருக்கிறது; "கடுகைத் தொளைத் தேழ்கடலைப் புகட்டிக் குறுகத் தறித்த குறள்." கிழக்குத்திசையின் கவிதையிலே இவ்விதமான ரஸம் அதிகந்தான். தமிழ் நாட்டில் முற்காலத்தில் இது மிகவும் மதிப்பெய்தி நின்றது. ஆனாலும், ஒரேயடியாகக் கவிதை சுருங்கியேபோய் விட்டால் நல்லதன்று. ஜப்பானிலே கூட எல்லாக் கவிதையும் "ஹொாகூஷி" பாட்டன்று. "நோகுச்சி" சொல்வதிலே அருமையான உண்மையிருக்கிறது. "எப் பொருள் யார் யார் வாய் கேட்பினும், அப்பொருள் மெய்ப் பொருள் காண்பதறிவு."

## தமிழின் நிலை

கல்கத்தாவில் "ஸாஹித்ய பரிஷத்" (இலக்கியச் சங்கம்) என்றொரு சங்கமிருக்கின்றது. அதைத் தென்னாட்டிலிருந்து ஒரு

வர் சிறிது காலத்திற்கு முன்புபோய் பார்த்து விட்டு வந்து அச்சங்கத்தார் செய்யும் காரியங் களைப்பற்றி "ஹிந்து" பத்திரிகையில் ஒரு விஸ்தீர்ணமான லிகிதம் எழுதியிருக்கிறார். மேற்படி பரிஷத்தின் நிலைமையையும் காரியங் களையும் அவர் நமது மதுரைத் தமிழ்ச் சங்கம் முதலிய தமிழ் நாட்டு முயற்சிகளுடன் ஒப்பிட் டுக் காட்டி, நம்மவரின் ஊக்கக் குறைவைப் பற்றி மிகவும் வருத்தப் படுகிறார். தெலுங்கர், மலையாளத்தார், கன்னடர் எல்லாரும் தத்தம் பாஷைகளின் வளர்ச்சியின் பொருட்டு வரு ஷாந்தப் பெருங்கூட்டங்கள் நடத்தி வருகிறார் கள். அவற்றால் விளையும் பயன் நமது சங்கத் தாரின் காரியங்களால் தமிழ் நாட்டிற்கு விளைய வில்லை. வங்காளத்திலுள்ள 'ஸாஹித்ய பரி ஷத்' தின் நோக்கமென்னவென்றால், 'எல்லா விதமான உயர்தரப் படிப்புக்களும் வங்காளப் பிள்ளைகளுக்கு வங்காளி பாஷையில் கற்றுக் கொடுக்கும் காலத்தை விரைவில் கொண்டு வந்து விடவேண்டும்' என்பது. 'விரைவா கவே இந்த நோக்கத்தை அவர்கள் நிறை வேற்றி விடுவார்கள்' என்பது பல அடையா ளங்களினால் நிச்சயமாகத் தோன்றுகிறது என்று அந்த லிகிதக்காரர் சொல்லுகிறார். வங்காளிகளின் விஷயம் இப்படியிருக்க, மயி லாப்பூரில் சிறிது காலத்திற்கு முன்னே நடந்த ஸ்ரீ வைஷ்ணவ சபைக் கூட்டத்தில் பெரும் பான்மையோர் இங்கிலீஷ் தெரியாத வைதிக பிராமணராக இருந்தும் அதிலே சில இங் கிலீஷ் உபந்நியாசங்கள் நடந்ததை எடுத்துக் காட்டி மேற்படி லிகிதக்காரர் பரிதாபப் படு கிறார். 'நமது ஜனத் தலைவர்கள் இங்கிலீஷில்

யோசிப்பதையும் பேசுவதையும் நிறுத்தினல் ஒழிய, நமது பாஷை மேன்மைப்பட இடமில்லை' என்று அவர் வற்புறுத்திச் சொல்லுகிறார்.

மேற்படி லிகிதக்காரர், தமது கருத்துகளை இங்கிலீஷ் பாஷையில் எழுதி வெளியிட்டிருப்பது போலவே தமிழில் எழுதித் தமிழ் பத்திரிகைகளில் பிரசுரப்படுத்தி இருந்தால் நன்ருக இருந்திருக்கும். ஸபைகள், ஸங்கங்கள், பொதுக் கூட்டங்கள், வருஷோத்ஸவங்கள், பழஞ்சுவடிகள் சேர்த்துவைத்தல், அவற்றை அச்சிடல் இவையெல்லாம் பாஷைவளர்ச்சிக்கு நல்ல கருவிகள் என்பதில் சந்தேகமில்லை. ஆனல், தமிழ் மக்கள் தமது மொழியை மேன்மைப் படுத்த விரும்பினல் அதற்கு முதலாவது செய்ய வேண்டிய காரியம் ஒன்று உண்டு. அதாவது, கால விசேஷத்தால் நமது தேசத்திலே விசாலமான லௌகிக ஞானமும் அதனைப் பிறருக்கு உபயோகப்படும்படி செய்வதற்கு வேண்டிய அவகாசம் பதவி முதலிய ஸௌகர்யங்களும் படைத்திருப்பவராகிய இங்கிலீஷ் படித்த வக்கீல்களும், இங்கிலீஷ் பள்ளிக்கூடத்து வாத்தியார்களும், தமது நீதி ஸ்தலங்களையும் பள்ளிக்கூடங்களையும் விட்டு வெளியேறியவுடனே, இங்கிலீஷ் பேச்சை விட்டு தாம் தமிழரென்பதை அறிந்து நடக்கவேண்டும். பந்தாடும்போதும், சீட்டாடும்போதும், ஆசாரத் திருத்த ஸபைகளிலும் வருணுசிரம ஸபைகளிலும், எங்கும், எப்போதும், இந்தப் "பண்டிதர்கள்" இங்கிலீஷ் பேசும் வழக்கத்தை நிறுத்தினல், உடனே தேசம் மாறுத

லடையும். கூடியவரை, இவர்கள் தமிழெழுதக் கற்றுக்கொள்ள வேண்டும். இவர்கள் அத்தனை பேரும் தமிழ்ப் பத்திரிகை வாங்கிப் படிக்க வேண்டும் புஸ்தக ரூபமாகவும், பத்திரிகைகளில் லிகிதங்களாகவும், இவர்கள் எழுதுகிற கதை, காவியம், விளையாட்டு வார்த்தை, வினை வார்த்தை, சாஸ்திர விசாரணை, ராஜ்ய நீதி எல்லாவற்றையும் தமிழில் எழுத வேண்டும். தமிழ்ப் பத்திரிகைகள் நடத்துவோர் இப்போது படுங் கஷ்டம் சொல்லுந் தரம் அல்ல. வெளியூர் வர்த்தமானங்களைத்தவிர மற்றப்படி எல்லா விஷயங்களும் பத்திராதிபர்கள் தாமே எழுதித் தீரவேண்டியிருக்கிறது. வெளியூர்களிலுள்ள "ஜனத் தலைவரும்" ஆங்கில பண்டித "சிகாமணிகளும்" தமிழ்ப் பத்திரிகைகளை சரியானபடி கவனிப்பதில்லை. அந்தந்த ஊரில் நடக்கும் பொதுக்காரியங்களையும், அவரவர் மனதில் படும் புது யோசனைகளையும் தெளிந்த தமிழிலே எழுதி தமிழ் பத்திரிகைகளுக்கு அனுப்புதல் மிகவும் ஸுலபமான காரியம். ஜனத் தலைவர்களால் இக்காரியம் செய்யமுடியாத பக்ஷத்தில் பிறருக்குச்சம்பளம் கொடுத்தாவது செய்விக்க வேண்டும்.

## நூலாசிரியர் பாடு

பத்திராதிபரின் கஷ்டங்கள் அதிகமென்று சொன்னேன். இக்காலத்தில் தமிழ் நூலாசிரியர் படுங் கஷ்டங்களை ஈசனே தீர்த்து வைக்கவேண்டும். உண்மையான கவிதைக்குத் தமிழ் நாட்டில் தக்க மதிப்பில்லை. இங்கி

லீஷ் பாஷையிலிருந்து க்தைகள் மொழி பெயர்த்துப் போட்டால் பலர் வாங்கி வாசிக்கிறார்கள். அல்லது, இங்கிலீஷ் முறையைத் தழுவி மிகவும் தாழ்ந்த தரத்தில் பலர் புது நாவல்கள் எழுதுகிறார்கள்; அவர்களுக்கு கொஞ்சம் லாப மேற்படுகிறது. தமிழில் உண்மையான இலக்கியத் திறமையும் தெய்வ அருளும் பொருந்திய நூல்கள் எழுதுவோர் ஒரு சிலர் தோன்றியிருக்கிறார்கள்; இவர்களுடைய தொழிலை அச்சடிப்பாரில்லை; அச்சிட்டால் வாங்குவாரில்லை. அருமை தெரியாத ஜனங்கள் புதிய வழியில் ஒரு நூலைக் காணும் போது அதில் ரஸமனுபவிக்க வழியில்லை. இங்கிலீஷ் படித்த "ஜனத் தலைவர்" காட்டும் வழியையே மற்றவர்கள் பிரமாணமென்று நினைக்கும்படியான நிலைமையில் தேசம் இருக்கிறது. இந்தப் 'பிரமாணஸ்தர்கள்' தமிழ் நூல்களில் புதுமையும் வியப்பும் காணுவது சாத்தியமில்லை என்ற நிச்சயத்துடனிருக்கிறார்கள். ஆகவே, நூலாசிரியர், தமக்குத் தெய்வம் காட்டிய தொழிலிலே மேன்மேலும் ஆவலுடன் பாடுபட வழியில்லாமல், வேறு தொழில் செய்யப் போய்விடுகிறார்கள்.

காலம் சென்ற ராஜமையர் புதிதாகத் தமிழ்க் கதை எழுதுவதில் உண்மையான திறமை காட்டி யிருக்கிறார். அவருக்குத் தகுந்த சம்மானமில்லை. ஆதலால், அவர் அந்தத் திறமையை மேன்மேலும் வளர்த்துக் கொண்டு போக இடமில்லாமல், ஆரம்பத்திலேயே கைவிட்டு, இங்கிலீஷ் மாதப் பத்திரிகை நடத்தப் போய் விட்டார். ஜமீன்தார்கள்

மீதும், பிரபுக்கள் மீதும், 'காமா சோமா' என்று புகழ்ச்சிப் பாட்டுக்கள் பாடினால், கொஞ்சம் ஸம்மானம் கிடைக்கிறது. உண்மையான தொழிலுக்குத் தகுந்த பயன் கிடைக்கவில்லை. மேற்படி 'பிரமாணஸ்தர்' தமிழ் மணத்தை விரும்பாமல் இருந்ததால், இந்த நிலைமை உண்டாய்விட்டது. ஆகையால், இங்கிலீஷ் படித்த தமிழ் மக்கள்—முக்கியமாக, வக்கீல்களும் பள்ளிக்கூடத்து வாத்தியார்களும்—தமது வாக்கிலும் மனதிலும் தமிழரசியைக் கொலுவிருக்கும்படி செய்து வணங்க வேண்டுமென்றும், அதுவே இப்போதுள்ள ஸ்திதியில் தமிழ் வளர்ப்புக்கு மூல ஸாதனமாகுமென்றும் அறிக்கையிட்டுக் கொள்ளுகிறேன்.

## தமிழ் நாட்டின் விழிப்பு

### பத்திரிகைகளின் நிலைமை

கும்பகர்ணன் தூங்கினனும். இலங்கையில் சண்டை நடக்கிறது. மூன்று லோகமும் நடுங்குகிறது. 'ராம ராவண யுத்தத்துக்கு ராம ராவண யுத்தமே நிகர்' என்று முன்னோர் சொல்லி யிருக்கிறார்கள். அப்படிப் பட்ட சண்டையின் அதிர்ச்சியிலேகூட, கும்பகர்ணனுடைய தூக்கம் கலையவில்லை. ஆயிரக் கணக்கான ஆடுமாடு குதிரைகளின் காலில் கூர்மையான கத்திகளைக்கட்டி அவன் மேலே நடக்கச் சொன்னார்கள்; தூக்கம் கலையவில்லை. ஏழெட்டு மேகங்களை அவன் காதுக்குள்ளே போய் இடியிடிக்கச் சொல்லி ராவணன் கட்

டழைபிட்டாலும்; மேகங்கள் போய் இடித்தன வாம்; கும்பகர்ணன் குறட்டை நிற்கவே யில்லை.

மேற்படி கும்பகர்ணனைப்போலே சில தேசங்கள் உண்டு. அண்டங்களத்தனையும் இடிந்து விழுந்தாலும் காது கேட்காத செவி டர் வாழும் தேசங்கள் சிலவுண்டு. அந்த தேசங்களிலே வாஸம் செய்வோர் மஹா பாவி கள். மாதுர் துரோகம், பிதுர் துரோகம், சகோதரத் துரோகம், தெய்வத் துரோகம், சுதேசத் துரோகம் முதலிய பெரிய பாதகங் கள் செய்து சீரழிந்த மானுடர் அப்படிப்பட்ட தேசங்களில் வாழ்கிறார்கள்.

ஆனால், ஹிந்து தேசம் அப்படி................ யில்லை! இங்கு தமிழ் நாட்டைப்பற்றி முக்ய மாகப் பேச வந்தோம்; தமிழ் நாடு மேற்படி மஹா பாதக ஜாப்தாவைச் சேர்ந்த தன்று, அன்று!

ராமலிங்க சுவாமிகளும், 'சுதேசமித் திரன்' சுப்பிரமணிய அய்யரும், இவர்களைப் போன்ற வேறு சில மகான்களும் தமிழ் நாட் டின் புதிய விழிப்புக்கு ஆதி கர்த்தாக்களாக விளங்கினர். ஹிந்து தர்மத்தின் புதுக் கிளர்ச்சிக்கு விவேகாநந்தர் ஆரம்பம் செய் தார். அவரைத் தமிழ் நாடு முதலாவது அங்கீ காரம் செய்துகொண்ட பிறகுதான், வங்கம், மஹாராஷ்ட்ரம் முதலிய ஹிந்து தேசத்து மாகாணங்கள் அவருடைய பெருமையை உணர்ந்தன.

பூமண்டல முழுதிலும் பெரிய விழிப் பொன்று வரப்போகிறது. அதற்காதாரமாக ஹிந்துஸ்தானம் கண்ணை விழித்து இருப தாண்டுகளாயின. ஹிந்துஸ்தானத்துக்குள் தமிழ்நாடு முதலாவது கண் விழித்தது. ஆனால், இன்னும் புத்தி சரியாகத் தெளியாமல் கண்ணை விழிப்பதும் கொட்டாவி விடுவதுமாக இருக்கிறது.

ஒரு தேசத்தின் பொதுப் புத்தியை அளந்து பார்க்க வேண்டுமானால், அதற்கு எத்தனையோ அறிகுறிகள் உண்டு. அந்த தேசத்து ராஜாங்க நிலை, தர்ம ஸ்தாபனங்களின் நிலை, கோயில்களின் நிலை முதலிய எத்தனையோ அடையாளங்களால் ஒரு தேசத்தாரின் பொது ஞானத்தை அளவிடலாம். இவற்றுள்ளே சமாசாரப் பத்திரிகைகளையும் ஓரடையாளமாகக் கருதத்தகும். ஆனால் ஐரோப்பா, அமெரிக்காக் கண்டங்களில் நடக்கும் பத்திரிகைகளுடன் தமிழ்நாட்டுப் பத்திரிகையை ஒப்பிட்டுப் பார்த்து, இவற்றின் பரிதாபகரமான நிலைமையைக்கண்டு, 'ஆஹா! இப்படிப்பட்ட தமிழ்நாடு எங்கே பிழைக்கப் போகிறது!' என்று எண்ணிப் பாழும் நெஞ்சு உடைந்து போகவேண்டாம். ஏனென்றால், வர்த்தமானப் பத்திரிகை நாமாக உண்டாக்கிய கருவியன்று. பிறரிடமிருந்து கற்றுக் கொண்ட தந்திரம்; சென்ற முப்பது வருஷங்களாகத்தான் தெரிந்து கொண்டிருக்கிறோம். இன்னும், சரியாக முதிர்ச்சி அடையவில்லை. தவிரவும், தமிழ்ப் பத்திரிகைகளுக்கு ராஜாங்கத்தார் உதவி கிடையாது. பத்திரிகை

களுக்கு ராஜாங்கத்தார் எத்தனைக் கெத்தனை மதிப்புக் கொடுக்கிறார்களோ, அத்தனைக்கத்தனை நாட்டில் மதிப்பேறி, அதனால் பத்திரிகைகளுக்குத் தகுந்த லாபமுண்டாம், அதிலிருந்து சரியான வித்வான்களின் கூட்டம் யதேஷ்டமாய்ச் சேர்ந்து, அந்தத் தொழில் மேன்மையடைய இடமுண்டாகும்.

தமிழ்நாட்டில் இப்போது நடைபெறும் ராஜாங்கம் தமிழ் பாஷையில் தேர்ச்சியுடையதன்று. தமிழ் பாஷையை முதலாக மதிப்பதன்று. 'தமிழ் முழு நாகரிகமுடையதா, இல்லையா' என்பதைப் பற்றியே சந்தேகங்களுடையது; ஆதலால், தமிழ்ப் படிப்பில்லாமலும், தமிழ் மணமில்லாமலும் ஸந்தோஷமடைந்திருக்கும் இயல்புடையது.

தவிரவும், தமிழ்ப் பத்திரிகைகள் நடத்துவோருக்குச் சரியான திரவிய லாபமில்லாமலிருப்பதற்கு வேறு பல காரணங்களும் உள. அவற்றுள் பத்திராதிபர்களின் அஜாக்கிரதை (சோம்பேறித்தனம்) ஒன்று. எனக்கு நாலைந்து முக்கியமான தமிழ்ப் பத்திரிகைள் வருகின்றன. அவற்றுள் ஒன்று வாரப் பத்திரிகை. அது பழுத்த சுதேசியக்கக்ஷியைச் சேர்ந்தது. ஆனால் தக்க பயிற்சியில்லாதவர்களால் நடத்தப்படுவது. சில தினங்களின் முன்பு அந்தப் பத்திரிகையில் யுத்த சம்பந்தமான தலையங்கம் ஒன்று எழுதப்பட்டிருந்தது. அதில் ருஷியாவில் "போல்ஷெவிக்" என்ற ஒரு மனுஷ்யன் இருப்பதாகவும், அவன் ஒரு கக்ஷி ஏற்படுத்தி நமது நேசக் கக்ஷிக்கு விரோ

தம் செய்வதாகவும் சொல்லியிருந்தது! அஃது அந்நாட்டில் ராஜ்யப் புரட்சிக் கூட்டங்களில் ஒன்றாகிய 'மார்க்ஸிமிஸ்த்' கக்ஷிக்கு மற்றொரு பெயரென்றும் ஒரு மனுஷ்யனுடைய பெயர் அல்லவென்றும் அந்தப் பத்திராதிபர்தெரிந்து கொள்ளவில்லை. மேலும், அதே பத்திரிகை யில் ஒவ்வொரு வியாசத்துக்கும் தமிழ் மகுடத் துக்குமேலே இங்கிலீஷ் மகுடமொன்று சூட்டி யிருக்கிறது. "ருஷியாவின் நிலைமை" "The Situation in Russia," "தாய்ப்பாஷையின் மூல மாகக் கல்வி பயிற்றல்" "The Vernaculars as media of instruction." ஆஹா! நான் மாற்றி யெழுதுகிறேன். தமிழை முதலாவது போட்டு இங்கிலீஷை பின்னே போட்டேன். அந்தப் பத்திரிகைகளில் அப்படியில்லை. இங்கிலீஷை முன்னே போட்டு, தமிழைக் கீழே போட்டிருக் கிறது. "அமெரிக்கா ஸ்திரீ" பார்த்தாயா? என்னைத் தெரியாமலே என் கை முதலாவது தமிழ் வார்த்தை எழுதுகிறது. "American woman" "அமெரிக்கா ஸ்திரீ" "Our Mathadhipatis" "நமது மடாதிபதிகள்," என்று எழுதியிருக்கிறது. காயிதப் பஞ்சமான காலம்; என்ன அநாவசியம் பார்த்தீர்களா?

இங்கிலாந்தில் வர்த்தமான பத்திரிகைகள் ப்ரான்ஸ் தேசத்து மந்திரிகளுடைய உபந்யா சங்களையும், பெரிய சாஸ்திரிமார், பெரிய கைத் தொழில் நிபுணர், த்ரவ்ய சாஸ்திர நிபுணர், ஜனத்திருத்தத் தலைவர் முதலியவர்களின் உபந்யாசங்களையும், பல ப்ரெஞ்சு ராஜாங்க சம்பந்தமான விவகாரங்களையும், ப்ரெஞ்சு பத்திரிகைகளிலிருந்து மொழி பெயர்த்துப்

போடுகின்றன. அப்படியே பிரான்ஸ் தேசத்து பத்திரிகைகள் ஜெர்மன் பாஷையிலிருந்து பல விஷயங்களை மொழிபெயர்த்து எழுதுகின்றன. ஆனால் அந்த மொழி பெயர்ப்புக்களில் ஸ்வ பாஷையின் வழக்கங்களையும் பிரயோகங்களை யும் கைவிட்டு அன்னிய பாஷையின் வசன நடையைப் பின்பற்றும் வழக்கம் கிடையாது. ஆனால் தமிழ் நாட்டிலோ முழுதும் தமிழ் நடையை விட்டு இங்கிலீஷ் நடையில் தமிழை எழுதும் விநோதமான பழக்கம் நமது பத்தி ராதிபர்களிடம் காணப்படுகிறது. முதலாவது, நீ, எழுதப்படுகிற விஷயத்தை இங்கிலீஷ் தெரியாத ஒரு தமிழனிடம் வாயினல் சொல்லிக் காட்டு. அவனுக்கு நன்ருக அர்த்தம் விளங்கு கிறதா என்று பார்த்துக்கொண்டு பிறகு எழுது. அப்போதுதான் நீ எழுதுகிற எழுத்து தமிழ் நாட்டிற்குப் பயன்படும். உனக்கு இஹபர க்ஷேமங்களுக்கு இடமுண்டாகும். இல்லாதுபோனல், நீயும் சிரமப்பட்டு மற்றவர் களுக்கும் பயனில்லாமல் போகிறது. சில சம யங்களில் சில பத்திரிகைகளை வாசித்துவிட்டு, நான் :—"ஐயோ, இவ்வளவு காயிதத்தில் எத் தனையோ ஆச்சரியங்களும், எத்தனையோ சந்தோஷங்களும் எழுதலாமே" என்று எண்ணி வருத்தப்படுவதுண்டு.

## தமிழில் சாஸ்த்ர பரிபாஷை

பஞ்ச பூதங்களின் இயற்கையைப்பற்றின ஆராய்ச்சிகளிலே, நம்மைக் காட்டிலும் ஐரோப்பியர் முன்னேறி நிற்பது தெரிந்த விஷயம். ஆதலால், ஐரோப்பாவில் வழங்கும்

லௌகிக சாஸ்திரங்களைத் தமிழில் எழுத வேண்டுமென்று பல பண்டிதர் மிகவும் ஆவலோடிருக்கிறார்கள். ஏற்கனவே, சில பகுதிகளின் ஆரம்பம் தமிழில் மொழிபெயர்த்திருக்கிறது. இந்த முயற்சி மேன்மேலும் வளரும்; வளர்ந்து தீரவேண்டும். அந்த சாஸ்த்ரங்களையெல்லாம் ஏக காலத்திலே தமிழில் எழுதி முடிப்பதற்காக ஒரு பண்டித-சங்கம் ஏற்படக் கூடும். நமது ராஜாக்களுக்கும், ஜமீன்தார்களுக்கும், செட்டிகளுக்கும் நல்ல புத்தி யுண்டாகித் தமிழில் நவீன சாஸ்த்ரம் சேர்ப்பதாகிய காரியத்தை அவர்கள் தக்க பண்டிதர்களின் உதவிகொண்டு, விரைவில் நிறைவேற்றி மேன்மை பெறக்கூடும்.

## அஸ்திவாரக் காரியம்

இதற்கெல்லாம் முன்னதாகவே பண்டிதர்கள் செய்துவைக்க வேண்டிய அடிப்படைக் காரியம் ஒன்றுண்டு. கூடியவரை சாஸ்த்ர பரிபாஷையை நிச்சயப்படுத்தி வைத்தால், பிறகு மொழிபெயர்ப்புத் தொடங்குவோர்க்கு அதிக சிரமமிராது; ஸங்கடமிராது. பரிபாஷை ஸங்கேதம், குழூவுக்குறி என்ற மூன்று சொல்லும் ஒரேபொருளைப் பலவகையிலே குறிப்பன; அதாவது, ஒரு கூட்டத்தார் அல்லது ஒரு சாஸ்திரக்காரர் விசேஷார்த்தம் தோன்றும்படி உடன்பட்டு வழங்கும் பொது வழக்கமில்லாத சொல். இங்ஙனம் பரிபாஷையை நிச்சயப்படுத்த வேண்டுமென்ற நோக்கத்துடன், சேலத்தில் வக்கீல் ஸ்ரீ சக்ரவர்த்தி ராஜகோபாலாச்சார்யரும் ஸ்ரீ வெங்கட சுப்பைய

ரும் சேர்ந்து ஒரு மாதப் பத்திரிகையைத் தொடங்கியிருக்கிறார்கள். இந்தப் பத்திரிகையின் பெயர் 'தமிழ் சாஸ்த்ர-பரிபாஷைச் சங்கத்தாரின் பத்திரிகை.' மேற்கண்ட பெயருடன் ஒரு சங்கம் சேலத்தில் ஏற்பட்டிருக்கிறது. அந்த சங்கத்தின் கார்யஸ்தர், அந்த ஊர்க் காலேஜில் ப்ரகிருதி சாஸ்திர பண்டிதராகிய ஸ்ரீ ராமநாதய்யர்.

'தமிழில் சாஸ்த்ர பரிபாஷை மாஸப் பத்திரிகை, என்ற சேலத்துப் பத்திரிகையின் முதலாவது சஞ்சிகை இங்கிலீஷில் வெளிப்பட்டிருக்கிறது. ஆரம்பத்திலே தமிழில் எழுதாமல் தமிழருக்கு வேண்டிய இக்காரியத்தை இங்கிலீஷ் பாஷையிலே தொடங்கும்படி நேரிட்டதற்கு ஸ்ரீ ராஜகோபாலாச்சார்யர் சொல்லும் முகாந்தரங்கள் எனக்கு முழு நியாயமாகத் தோன்றவில்லை. ஆனால், கூடிய சீக்கிரத்தில் தமிழ்ப்பகுதி யொன்று அந்தப் பத்திரிகையில் சேருமென்று தெரிகிறது. அனேகமாக, இரண்டாம் ஸஞ்சிகையிலேயே தமிழ்ப் பகுதி சேருமென்று கேள்விப்படுகிறேன். அங்ஙனம், தமிழ் சேர்ந்து நடக்கும் சாஸ்த்ரப் பத்திரிகையினால், தமிழ் நாட்டாருக்கு மிகப் பெரிய பயன் விளையுமென்பதில் சந்தேகமில்லை.

## பரிபாஷை சேகரிக்க ஓருபாயம்

ஸ்ரீ காசியிலே, 'நாகரி ப்ரசாரிணி சபையார்' ஐரோப்பிய ஸங்கேதங்களை யெல்லாம் எளிய ஸம்ஸ்கிருத பதங்களில் போட்டு, மிகப் பெரியதோர் அகராதி உண்டாக்கி வருகிறார்

கள். அந்தச் சொற்களை வேண்டியவரை, இயன்றவரை, தேச பாஷைகள் எல்லாவற்றிலும் ஏககாலத்தில் கைக்கொண்டு வழங்கலாம். ஐரோப்பாவில் எல்லா பாஷைகளும் இவ்விதமாகவே லத்தீன், யவன பரிபாஷைகளைக் கைக்கொண்டிருக்கின்றன. இவ்வாறு செய்வதால் நமது தேச பாஷைகளில் ஸங்கேத ஒற்றுமை யேற்படும். அதனால் சாஸ்த்ரப் பயிர் தேச முழுவதிலும் வளர்ந்தோங்கி வருதல் எளிதாகும்.

## பஞ்சாங்கம்

'விவேகபோதினி' பத்திரிகையில் ஸ்ரீமான் ஆர். சாமிநாதய்யர் நமது பஞ்சாங்கத்தில் உள்ள பெரிய பிழையொன்றை எடுத்துக் காட்டி யிருக்கிறார். இப்போது தை மாதப் பிறப்பை உத்தராயணத்தின் ஆரம்பமாக நாம் நினைப்பது தவறு; அது காட்சியனுபவத்திற்கு விரோதம். மார்கழி மாதம் எட்டாந் தேதியே உத்தராயணம் தொடங்கிவிட்டது. அன்றைக்கே சூரியன் தனது தெற்கெல்லையிலிருந்து வடக்கு நோக்கிப் புறப்பட்டுவிட்டான். மேற்படி ஸ்ரீ சாமிநாதய்யர் எழுதுகிறார்:-" ஒரு காலத்தில் வஸந்த விஷுவானது கார்த்திகை நக்ஷத்திரத்தில் இருந்ததாகவே வேதத்தினல் தெறிகிறது. அப்போது உத்தராயணம் மாக மாஸத்திற் பிறந்திருக்கும். அதற்கு இரண்டாயிரம்-இரண்டாயிரத்தைந்நூறு வருஷங்களுக்கப்பால் அந்த விஷு அசுவினி நக்ஷத்திரத்தில் மேஷ ராசியின் ஆரம்பத்திலிருந்தது."

இங்ஙனம், வஸந்த விஷுவானது மேஷ ராசியின் ஆரம்பத்தில் இருந்த காலத்தில் உத்தராயணம் தை மாதப் பிறப்பன்று தொடங்கிற்று. அதற்கப்பால் கணக்குத் தவறிப்போய் விட்டது. அயன விஷுக்களின் சலனத்தை அறியாமலோ அறிந்திருந்தும் கவனியாமலோ, ஸம்வத்ஸரத்தின் பரிமாணத்தை $20\frac{1}{2}$ நிமிஷம் ஜாஸ்தியாகக் கணித்து விட்டபடியால், அயன விஷு காலங்கள் வருஷம் ஒன்றுக்கு $20\frac{1}{2}$ நிமிஷம் பிந்தி வருகின்றன. 80 வருஷத்தில் ஒரு முழுநாள் பிந்திவிடும். மேற்குறித்த நியமங்கள் ஏற்பட்டு இப்போது அநேக நூற்றாண்டுகளாய் விட்டபடியால், புண்யகாலங்கள் 20, 22 நாள் பிந்திப்போய் நியமங்களும் பிரத்தியக்ஷத்துக்கு விரோதமாயிருக்கின்றன.

## பருவ நினைப்பு

சித்திரையும், வைகாசியும் இளவேனிற் காலமென்றும், ஆனியும் ஆடியும் முதிர் வேனிற் காலமென்றும் தமிழ்ப் பள்ளிக் கூடங்களிற் படித்தோம். இது பல நூற்றாண்டுகளின் முன்பு சரியாக இருந்தது. மேற் கூறப்பட்ட கணக்குத் தவறினல் பருவக் காலத்தையும் தவருக்கிவிட்டோம். இப்போது, இளவேனிற் காலம் பங்குனி மாதம் எட்டாந் தேதியிற் பிறந்துவிடுகிறது. ஆதலால், நம்மவர் அயன விஷு காலங்களிற் செய்யும் ஸ்நானம், தானம் முதலிய வைதிகக் கிரியைகளெல்லாம் புண்ணிய காலங்கள் கழிந்து மூன்று வாரங்களுக்கு அப்பால் தவருக நடந்து வருகின்றன. அயன விஷுக்

களை நேராகத் தெரிந்து பஞ்சாங்கத்தில் வருஷப்பிறப்பைச் சரியான நாளில் வைத்தால், பருவக் கணக்கும் நேராகும். கால நிலையை ஹிந்துக்கள் பல விதத்திலே மறந்திருக்கிறார்கள். உடனே செம்மைப்படுத்திக்கொள்ளும் திறமையை நமக்கு தேவர்களும் ரிஷிகளும் அருள் செய்க.

## ஸங்கீத விஷயம்

இங்குள்ள ஜந்துக்களிலே மனிதருக்கும் பறவைகளுக்குந்தான் பாடத்தெரியும். மற்ற மிருகங்களுக்குப் பாட்டு வராது. பறவைகள் வானத்திலே பறக்கும் வழக்கமிருப்பதால், அவற்றின் மன நிலை ஸங்கீதத்திற்கு இசைகின்றது போலும்! மனிதன் உடம்பினாலே பறக்காவிட்டாலும், உள்ளத்தைத் திசை வெளியிலே பறக்கும்படி செய்கிறான். அப்போது, இயற்கையிலே பாட்டுத் தோன்றுகிறது. ரஸங்கள் ஒன்பது:—

(1) வீரம்,
(2) ரௌத்ரம் (கோபம்),
(3) அத்புதம் (வியப்பு)
(4) சாந்தம் (நடுவுநிலை),
(5) பயாநகம் (அச்சம்),
(6) பீபத்ஸம் (வெறுப்பு),
(7) ஹாஸ்யம் (நகை),
(8) கருணை சோகம் (துயரம்): இதை 'அவலம்' என்பது பழைய தமிழ் வழக்கு.
(9) சிருங்காரம் (காமம்).

* இது தொடங்கிவரும் பகுதிகள் "பாட்டு" என்ற தலைப்பில் பாரதியார் 'சக்திதாஸன்' என்ற புனை பெயரில் 1916 ஆம் ஆண்டு 'சுதேசமித்திரனி'ல் எழுதியவை.

வெளிப் பொருள்களைக் காணும்போது அல்லது நினைக்கும்போது மனிதனுடைய உள்ளத்திலே இந்த ஒன்பது சுவைகளில் ஏதேனும் ஒன்று தோன்றும். இரண்டு மூன்று கலந்தும் தோன்றக்கூடும். ரஸ உணர்ச்சியிலே உள்ளத்தை முழுதும் ஈடுபடுத் தக்கூடிய சிலர் கவிதை, பாட்டு, சித்திரம் முதலிய தெய்வக் கலைகளிலே சிறப்படைகிறார்கள். ரஸ உணர்ச்சி இல்லாவிடின், இக் கலைகள் நசித்துப்போகும்.

பிறர் துன்பத்தைக் காணும்போது தனது துன்பம்போல் எண்ணி வருந்தும் இயல்புடைய ஒருவனும் பிறர் துன்பத்தைக் கருதாத ஒருவனும் யாப்பிலக்கணம் படித்துக் கவிதை செய்யப் பழகுவாராயின், முந்தியவன் உண்மையான கவிதை எழுதுவான்; பிந்தியவன் பதங்களைப் பின்னுவான்; இவனுடைய தொழிலிலே கவிதையிராது. இப்படியேதான் ஒவ்வொன்றிலும்.

ரஸ ஞானமில்லாதபடி பல்லவிகளும் கீர்த்தனங்களும் பாடுவோர் ஸங்கீதத்தின் உயிரை நீக்கிவிட்டு வெற்றுடலை அதாவது பிணத்தைக் காட்டுகிறார்கள். இக்காலத்து ஸங்கீத வித்வான்களிலே பலர் 'ஸங்கீதத்திற்கு நவ ரஸங்களே உயிர்' என்பதை அறியாதவர்.

முத்துசாமி தீக்ஷிதர், தியாகையர், பட்டணம் சுப்பிரமணிய அய்யர் முதலியவர்களின் கீர்த்தனங்களிலே சிலவற்றை அதிக ஸங்கதிகளுடன் பாடுவோரே 'முதல்தர வித்வான்

கள்'. இந்தக் கீர்த்தனங்களெல்லாம் ஸம்ஸ்கிருதம் அல்லது தெலுங்கு பாஷையில் இருக்கின்றன. ஆகவே, முக்காலே மும்மாகாணி 'வித்வான்' களுக்கு இந்தக் கீர்த்தனங்களின் அர்த்தம் தெரியாது. எழுத்துக்களையும் பதங்களையும் கொலை செய்தும், விழுங்கியும் பாடுகிறார்கள். அர்த்தமே தெரியாதவனுக்கு 'ரஸம்' தெரிய நியாயம் இல்லை.

நானும் பிறந்தது முதல் இன்றுவரை பார்த்துக்கொண்டே வருகிறேன். பாட்டுக் கச்சேரி தொடங்குகிறது. வித்வான் 'வாதாபி கணபதிம்' என்று ஆரம்பஞ் செய்கிறார். 'ராமநீ ஸமான மெவரு' 'மரியாத காதுரா' 'வரமு லொஸகி' ...................... ஐயையோ, ஐயையோ, ஒரே கதை.

எந்த ஜில்லாவுக்குப் போ, எந்த கிராமத்திற்குப் போ. எந்த 'வித்வான்' வந்தாலும், இதே கதைதான். தமிழ்நாட்டு ஜனங்களுக்கு இரும்புக் காதாக இருப்பதால், திரும்பத் திரும்பத் திரும்பத் திரும்ப ஏமெட்டுப் பாட்டுக்களை வருஷக் கணக்காகக் கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். தோற்காது உள்ள தேசங்களிலே இந்தத் துன்பத்தைப் பொறுத்துக் கொண்டிருக்க மாட்டார்கள்.

'பூர்விக மஹான்களுடைய பாட்டுக்களை மறந்து போய்விட வேண்டும்' என்பது என்னுடைய கக்ஷியன்று. அவற்றை அர்த்தத்துடன் பாடவேண்டும். பதங்களைப் பிழையாக உச்சரிக்கக் கூடாது. பதங்களை வாய்

விட்டுத் தெளிவாகச் சொல்ல வேண்டும். விழுங்கிவிடக்கூடாது. பத்து முப்பது கீர்த்தனங்களையே ஓயாமற் பாடி ஸங்கீதத்தை ஒரு தொல்லையாகச் செய்துவிடக் கூடாது.

புதிய புதிய கீர்த்தனங்களை வெளியே கொண்டுவரவேண்டும். இப்போது ஸங்கீத வித்வான்களிலே தலைமைப் பட்டிருப்போர் தமிழிலே புதிய மெட்டுக்களில் கீர்த்தனங்கள் செய்ய முயல வேண்டும். நவ ரஸங்களின் தன்மைகளையும், இன்னின்ன ராகங்களை இன்னின்ன விதங்களிலே பாடினல், இன்னின்ன ரஸங்கள் உண்டாகும் என்பதையும் கற்றுத் தெரிந்து கொள்ளுதல் அவசியம்.

'பூர்வகாலத்து மஹான்களுக்குத் தெய்வப் பிரஸாதமிருந்தது. எங்களுக்கில்லையே. என்ன செய்வோம்?' என்று புதிய வித்வான்கள் புதிய கீர்த்தனங்கள் அமைப்பதிலே பின் வாங்கக்கூடாது. தெய்வங்கள் இறந்துபோகவில்லை. இப்போதும் அவற்றை உபாஸனை செய்து அவற்றின் அருள் பெறலாம். தெய்வப் பிரஸாதத்தை ஒருவன் பக்தியாலும், ஜீவதயையாலும், நேர்மையாலும், உண்மையாலும், இடைவிடாத உழைப்பினலும் ஸம்பாதிக்க முடியும்.

"நாட்டிலே ஸங்கீதத்திற்குச் சரியான போஷணை செய்யும் ராஜாக்களும் பிரபுக்களும் இல்லை. எங்களுக்கு ஜீவனமே கஷ்டமாயிருக்கிறது. மனக்கஷ்டம் இல்லாமல் இருந்தாலன்றே ரஸஞானத்தை வளர்த்துக்

கொண்டு போகலாம். சில வருஷங்களுக்குள்ளே சில கீர்த்தனங்களை வரப்படுத்திக் கொண்டு ஜீவனத்திற்கு வழிதேட வேண்டிய ஸ்திதி ஏற்பட்டிருக்கிறது. என்ன செய்யலாம்?'' என்று நினைத்து மனமுடைந்துபோக வேண்டாம்.

இப்போது உலக முழுவதிலுமே ராஜாக்களையும் பிரபுக்களையும் நம்பி வித்தை பழகும் காலம் போய்விட்டது. பொதுஜனங்கள் நம்ப வேண்டும். இனிமேல் கலைகளுக்கெல்லாம் போஷணையும் ஆதரவும் பொதுஜனங்களிடமிருந்து கிடைக்கும். அவர்களுக்கு உண்மையான அபிருசி உண்டாக்கிக் கொடுப்பது வித்வான்களுடைய் கடமை. பிறகு, நல்ல போஷணை கிடைக்கும். ஒரு பிரபு மாதம் ரூபாய் 100 கொடுப்பான். ஊர் சேர்ந்தால் தலைக்குக் கால் ரூபாயாக வசூல்பண்ணி மாதம் 1000 ரூபாய் கொடுக்கும். ஊரையே யஜமானனாகக் கொள்ளவேண்டும்.

ஊர்தான் ராஜா. இந்த ராஜாவுக்கு ஆரம்பத்திலே கொஞ்சம் ஞானம் அளித்துப் பழக்கங் கொடுத்தால், வித்தைகளுக்கு எவ்விதமான குறைவும் ஏற்படாது. நவரஸங்களும் சேரவேண்டும். கருணை ரஸமும் (அதாவது சோகரஸமும்) சிருங்கார ரஸமுந்தான் நமது தேசத்தில் நடைபெறுகின்றன. மற்ற வீரம், கோபம் (ரௌத்ரம்), வியப்பு, வெறுப்பு, அச்சம், நகைப்பு, சாந்தம் என்ற ரஸங்களின் விலாஸம் பாட்டிலே காணப்படவில்லை. நல்ல பாட்டுப் பாடினல் நல்ல மதிப்புத் தானகவே வரும். அதிலிருந்து நல்ல வரும்படி ஏற்படும்.

திருஷ்டாந்தமாக: ஹாஸ்ய ரஸம் தோன்றும்படி ஒரு ராகத்தை விஸ்தரிக்கும்போது, அதிலே அர்த்தச் சேர்க்கையில்லா விடத்தும் ஜனங்கள் கடகட வென்று சிரிக்கவேண்டும்.

ரௌத்ர ரஸம் தோன்றும்படி பாடினல், அதைக் கேட்கும்போது, ஜனங்களுக்கு மீசை துடிக்கவேண்டும்; கண்கள் சிவக்கவேண்டும்.

வீர ரஸமுள்ள பாட்டை ஒரு வித்வான் பாடும்போது, ஜனங்களெல்லாம் தம்மையறியாமல் முதுகு நிமிர்ந்து தலைதூக்கி உட்கார வேண்டும். அவர்கள் விழியிலே வீரப்பார்வையுண்டாக்க வேண்டும். அப்போதுதான் பாட்டு ஸபலமாகும்.

பொருளிலும், ஓசையிலும் 'ரஸம்' கலக்காத பாட்டு இனிமேல் தமிழ் நாட்டிலே வழங்கலாகாது.

முத்துசாமி தீக்ஷிதர், தியாகையர், பட்டணம் சுப்பிரமணிய அய்யர், இந்த மூன்று பெயருடைய கீர்த்தனைகளைத்தான் வழக்கத்தில் அதிகமாய்ப் பாடுகிறார்கள். இவற்றுள்ளே, தீக்ஷிதரின் கீர்த்தனைகள் பச்சை ஸம்ஸ்கிருத பாஷையிலே எழுதப்பட்டவை. இவை கங்கா நதியைப்போல் கம்பீர நடையும் பெருந்தன்மையும் உடையன. வேறு பல நல்ல லக்ஷணங்களும் இருந்த போதிலும், ஸம்ஸ்கிருத பாஷையில் எழுதப்பட்டிருப்பதால் இவை நமது நாட்டுப் பொதுஜனங்கள் ரஸானுபவத்துடன் பாடுவதற்குப் பயன்பட மாட்டா.

தியாகையர் தெய்வ வரம் பெற்றவர். தியாகையர் ரஸக் கடல். கர்நாடக ஸங்கீதம் இப்போது உயிர் தரித்திருப்பதற்கு அவரே காரணம். பூர்வ காலத்து ஞானிகளைப்போலே, இவர் இஷ்ட தேவதைக்கு ஆத்மயக்ஞம் செய்து, தான் அற்று, வித்தைவடிவாகி விளங்கினர். இவருடைய பாட்டுக்களை இக்காலத்துப் பாடகர் அதிக 'ஸங்கதி'களாலும் ரஸநாசத்தாலும், சொற்களைத் திரித்தல், விழுங்குதல் முதலிய செய்கைகளாலும் இயன்றவரை ஆபாஸமாக்கிவிட்ட போதிலும், இன்னும் அவற்றிலே பழைய ஒளி நிற்கத்தான் செய்கிறது. குப்பையிலே கிடந்து மாசேறி ஒளி மங்கிப்போயிருந்தபோதிலும், மாணிக்கத்தின் குணம் ரத்னப் பரீக்ஷைக் காரனுக்குத் தெரியாதா? அது போலவே, ரஸ உண்மை தெரிந்தோர் இத்தனைகுழப்பத்துக்கிடையே தியாகையருடைய தொழிலின் ஸ்வரூபத்தை நன்கு கண்டுபிடித்துக்கொள்ள முடியும். கீர்த்தனத்தில் ராக தாளங்களை இசைத்திருக்கிற மாதிரியிலேயே அர்த்தம் தொனிக்கவேண்டும். அதைத்தான் ரஸச்சேர்க்கைஎன்று சொல்லுகிறோம். இதிலே தியாகையர் மிகவும் சிறப்புக் கொண்டவர்.

திருஷ்டாந்தமாக, 'சக்கனிராஜமார்க்கமு' என்ற கீர்த்தனத்தை எடுத்துக்கொள்ளுவோம் அதிக ஸங்கதிகளும், பின்னல்களும் இல்லாமல் இதன் பல்லவியை சுத்தமாகப் பாடிப் பாருங்கள். "நல்ல ராஜ மார்க்கம் இருக்கும் போது சந்துகளில் ஏன்சுற்றுகிருய்,மனதே"? என்ற அர்த்தம் அந்த இசையிலே அகப்படும்.

'மாருபல்க குன்னுவேமி' (ஏன் மறுமொழி சொல்லாமல் இருக்கிறாய்?) என்ற கீர்த்தனத்தின் பல்லவியைப் பாடிப் பாருங்கள். அந்த அர்த்தம் இசையிலே தொனிக்கும்.

'நன்னுப்ரோவ நீகிந்த தாமஸமா' (என்னைக் காக்க உனக்கு இத்தனை தாமஸமா? என்ற பல்லவி எடுத்தவுடனேயே அர்த்தம் பளீரென்று வீசும்.

இப்படியே எல்லாக் கீர்த்தனங்களும் ஏற்பட்டிருக்கின்றன. இந்த மாதிரி ஏற்படுத்த வேண்டும் என்று தியாகையர் சிரமப்பட்டு வேலை செய்யவில்லை. நெஞ்சிலே உண்மையிருந்தால், ஸங்கீதம் இயற்கையிலே இவ்விதமாகப் பிறக்கும்.

பிற்காலத்தில், பட்டணம் சுப்பிரமணிய அய்யர் முதலானவர்களின் பாட்டிலே இந்த லக்ஷணம் இல்லை. 'வரமுலொஸகி' என்ற பாட்டை எடுத்தீர்களானல், இசைக்கும் பொருளுக்கும் ஸம்பந்தமே இல்லை என்பது விளங்கும். சொற்கள், 'வரங்கொடுத்துக் காப்பது உனக்கு அரிதா?' என்று கேட்கின்றன. இசை சண்டைத் தாளம் போடுகிறது. இது நிற்க.

வித்வான்கள் பழைய கீர்த்தனங்களைப் பாடம் பண்ணி புராதன வழிகளைத் தெரிந்து கொள்ளுதல் அவசியம். ஆனல் தமிழ்ச் சபைகளிலே எப்போதும் அர்த்தம் தெரியாத பிற பாஷைகளில் பழம் பாட்டுகளை மீட்டும் மீட்டும் சொல்லுதல் நியாயமில்லை. அதனல் நமது

ஜாதி ஸங்கீத ஞானத்தை இழந்துபோகும்படி நேரிடும்.

மேலும், 'பாட்டுக்குத் தாளமே யொழிய தாளத்திற்குப் பாட்டில்லை' என்ற விஷயத்தைப் பாடுவோர் நன்கு தெரிந்துகொள்ள வேண்டும். சிலவிதக் கூத்துக்களிலே, தாளத்திற்குப் பாட்டுப் பாடுதல் பொருத்தம். அங்கே கூட, முழுதும் தாள நயத்தையே கருதி இசை நயத்தை நாசம் செய்துவிடக் கூடாது. அப்படியிருக்க, 'பாட்டுக் கச்சேரி' என்று பெயர் வைத்துக்கொண்டு அங்கே இசையின்பங்களைக் கொன்று தாள முழக்கத்தைப் பிரதான மாக்குதல் தகாது. அதிலும் கீர்த்தனங்களைப் பாடும்போது இசையின்பங்களைக் காட்டுதல் முதற்காரியமாகவும், தாளத்தை உபகரணமாகவும் கொள்ளவேண்டும்.

சுமார் 12 வருஷங்களுக்கு முன்பு நான் இரண்டு மூன்று வருஷம் ஸ்ரீ காசியில் வாஸஞ் செய்தேன். அங்கே, பாட்டுக்கச்சேரி செய்ய வரும் ஆண்களுக்கெல்லாம் நேர்த்தியான வெண்கலக் குரல் இருந்தது. பெண்களுக்கெல்லாம் தங்கக் குரல். அங்கிருந்து தென்னாட்டிற்கு வந்தேன். இங்கே, ஓரிரண்டு பேரைத்தவிர மற்றப்படி பொதுவாக வித்வான்களுக்கெல்லாம் தொண்டை சீர்கெட்டிருப்பதைப்பார்க்கும்போது, எனக்கு மிகவும் வியப்புண்டாயிற்று. ஒன்றுபோல எல்லோருக்கும் இப்படித் தொண்டை வலிமை குறைந்தும் நயங் குறைந்தும் இருப்பதன் காரணமென்ன? இதைப்பற்றிச் சில வித்வான்களி

டம் கேட்டேன். "வட நாட்டில, சர்க்கரை, பால், ரொட்டி, நெய் சாப்பிடுகிறார்கள்; புளி யும் மிளகாயும் சேர்ப்பதில்லை. இங்கே புளி மிளகாய் வைத்துத் தீட்டுகிறோம். அதனாலே தான் தொண்டை கெட்டுப்போகிறது" என் றனர். பின்னிட்டு, நான் யோசனை செய்து பார்த்ததில், 'மேற்படி காரணம் ஒரு சிறிது வாஸ்தவம்தான்' என்று தெரிந்து கொண் டேன். ஆனால், அதுவே முழுக்காரணம் அன்று. நம்மவர் தொண்டையை நேரே பழக்குவதில்லை. காட்டு வெளிகளிலே போய் கர்ஜனை செய்யவேண்டும். நதி தீரங்கள், ஏரிக் கரை, கடற்கரைகளிலே போய்த் தொண்டை யைப் பழக்கவேண்டும். சாஸ்திரப்படி அகார ஸாதனம் செய்யும் வழக்கம் தென்னாட்டிலே குறைவுபட்டிருக்கிறது.

தவிரவும், உள்ளத்திலே வீரம் இருக்க வேண்டும். உள்ளத்திலே ஸத்து இல்லாதவர் களுக்கு ஒரு தொழிலும் நேரே வராது. கலை கள் நேர்ப்படுவதைப் பற்றிப் பேசவேண்டிய தில்லை. உள்ளத்திலே தைர்யம், ஸந்தோஷம், வலிமை முதலிய சுப லக்ஷணங்கள் தமிழரைக் காட்டிலும் வடநாட்டு ஜனங்களிடம் சிறிது அதிகமாகத் தோன்றுகின்றன. முன்னெல் லாம், தமிழ் நாட்டிலேதான் இந்த குணங்கள் மிகவும் விசேஷமாக விளங்கின. இப்போது சில வருஷங்களாகக் குறைவு பட்டிருக்கின் றன. இந்த குணங்களை நமது ஜனங்களெல் லோருமே பயிற்சி செய்து கொள்ளவேண்டும், ஸங்கீத வித்வான்வான்கள் இவற்றைப் பழக் கப் படுத்தினால்தான், அவர்கள் கண்டத்திலே

உவகையும் வீரமும் பிறக்கும்; பாட்டிலே கலை யுண்டாகும்.

தமிழ்நாட்டு வித்வான்களுடைய ஸங்கீதத்தைப் பற்றி மேலே எழுதினேன். மற்ற சாதாரண ஜனங்கள் பாடும் பாட்டைப் பற்றிக் கொஞ்சம் ஆராய்ச்சி செய்ய விரும்புகிறேன். இந்தப் புதிய பகுதி தொடங்குமுன் மேற்படி சங்கீத வித்வான்களிடம் உள்ள நன்மையையும் சொல்ல வேண்டாமா? பெயர்கள் குறிப்பிடாதது பற்றி மன்னிப்பு வேண்டுகிறேன். கன்னியாகுமரி முதல் சென்னை வரை தமிழ் நாட்டில் உள்ள ஜில்லாக்களிலே ஒவ்வொன்றிலும் இக்காலத்தில் கருவிகளிலும் வாய்ப்பாட்டிலும் புகழ்பெற்ற வித்வான்கள் பலர் இருக்கின்றனர்.

காலத்தின் சீர்க்கேட்டாலும், ஸம்ப்ரதாய பங்கத்தினலும், நவரஸங்களுக்கும், பாட்டுக்கும் உள்ள தொடர்பை மறந்து விட்டபோதிலும், இவர்களிலே சிலர் (ஆணும் பெண்ணும்) ஸரஸ்வதி கடாக்ஷத்தினல் தம்மை அறியாமலே அற்புதமான வேலை செய்கிருர்கள். சில சமயங்களில் ஓரிண்டு ரஸங்களைத் தெரிந்தே பாட்டில் இசைக்கிருர்கள். அப்பாது இவர்களுடைய பாட்டு அல்லது வாத்தியம் மிகவும் உயர்ந்த நிலையடைகிறது. ஸமீப காலத்திலே இறந்து போன மஹா வைத்தியனதய்யர், புல்லாங்குழல் சரப சாஸ்திரி முதலிய மஹான்களுக்கு இப்போது தக்க பின்காப்பாளர் இல்லாமற் போகவில்லை.

ஆனல், இவர்கள் நான் முன்னிரண்டு பகுதிகளில் குறிப்பிட்ட செய்திகளையும் தயவு செய்து கவனிக்கும் பக்ஷத்தில் தமிழ் நாட்டுக்கு இவர்கள் செய்துவரும் உபகாரம் பலமடங்கு அதிகப்படு மென்பதும் அப்படி அதிகப்பட வேண்டுமென்பதும் என்னுடைய கருத்து; அதைத் தெரிவித்துக் கொண்டேன்.

இனி சாஸ்திரோக்தமாகப் பாடும் வித்வான்கள் அல்லாமல், ஸாமான்யமாகப் பாடும் பொது ஜனங்களுடைய செய்தியைப் பார்ப்போம்.

முதலாவது, நமது குடும்பஸ்திரீகளின் பாட்டை யெடுத்துக் கொள்வோம். கல்யாணப் பாட்டுகள், கும்மிப் பாட்டுக்ள் முதலியவற்று டன் நமது பெண்கள் "கீர்த்தனை" வகைகளும் கொஞ்சம் பாடுகிருர்கள். இதில், ஒரு சில பெண்கள் நல்ல லக்ஷணத்துடன் பாடுகிருர்கள் என்பதில் ஆக்ஷேபமில்லை. ஆனல் பெரும்பான்யோர் ஸங்கீத லக்ஷணமே தெரியாமல் தவருகப் பாடுகிருர்கள், பெரும்பான்மையோருக்கு தொண்டை நன்ருக பழகவில்லை. பெரும்பான்மையோருக்குப் படிப்பு மிகவும் குறைவாகவும் சூனியமாகவும் இருப்பதால் இவர்கள் பாடும்பாட்டு களிலே சொற்பிழையும் பொருட் பிழையும் மொய்த்துக் கிடக்கின்றன. அதிலும் இவர்கள் தீக்ஷிதர் தியாகையர் முதலியவர்களின் கீர்த்தனங்கள் பாடும்போது, தாளம் சுருதி ஒன்றையும் கவனிக்காமல் பதங்களைச் சூறையாடி மிகவும் விகாரப்படுத்தி விடுகிருர்கள். ஆனலும், ஆனலும், ஆனலும், தமிழ் நாட்டு ஸதிரீகளின் ஸங்கீதத்தை நாம் புகழாதிருக்க

லாகாது. இவர்கள் பாடும் பாட்டிலே பெரும் பான்மைக் கீர்த்தனங்களும், பத்யங்களும் தெலுங்கில் இருந்த போதிலும், தமிழ்ப்பாட்டுத்தான் அதிகமாகப் பாடுகிறார்கள். இந்த தமிழ்ப் பாட்டிலே பல பிழைகள் மலிந்து கிடந்தாலும், ஒரு சில பாட்டுக்கள் மிகவும் நன்றாக அமைந்திருக்கின்றன. 'ஓடம்' முதலியவற்றில் அதிஸமீப காலத்துப் பாட்டுக்கள் மிகவும் விகாரமாயிருந்தாலும் பழைய காலத்துப் பாட்டுக்களிலே சொல் நயம் அதிகம் இருக்கிறது. பின்னிட்டு "ரயில் வண்டி ஓடம்" முதலிய அசுத்தங்கள் அதிகமாகச் சேர்ந்துவிட்டன. இங்கிலீஷ் படித்த புருஷர்கள் கேட்டு மடத்தனமாகச் சந்தோஷப்பட்டதிலிருந்து, பெண்களுக்கு இந்த மாதிரி விரஸங்களிலே பற்றுதல் உண்டாயிற்று.

கும்மிப்பாட்டு, பல்லிப்பாட்டு, கிளிப்பாட்டு, நலங்குப்பாட்டு, பள்ளியறைப்பாட்டு, அம்மானைப்பாட்டு, தாலாட்டுப்பாட்டு முதலிய பெண்களுடைய பாட்டெல்லாம் மிகவும் இன்பமான வர்ணமெட்டு, தமிழர்களின் தாய், அக்காள், தங்கை, காதலி முதலிய இவர்கள் பாடும்பாட்டு மறக்கக்கூடிய இன்பமா? ஞாபகம் இல்லையா?

தமிழ்ப்பெண்களின் பாட்டைக் கையெடுத்து வணங்குகிறோம். ஆனால் அதில் ஏற்படுத்த வேண்டிய சீர்திருத்தங்கள் பல இருக்கின்றன.

### தாளஞானம்

நமது குடும்ப ஸ்திரீகளின் பாட்டிலே முக்கியமான குறை என்னவென்றால் இவர்களிலே பெரும்பாலோருக்குத் தாள ஞானமில்லை.

பெண்களுக்குத் தாளஞானம் ஏற்படுத்திக் கொடுப்பது மிகவும் சிரமமென்றும் இயற்கையிலே அவர்களுக்கு "லய வுணர்ச்சி" கொஞ்சம் குறைவென்றும் சிலர் தப்பாக நினைக்கிறார்கள். பெண்கள் குதித்துப் பாடும்போது பாருங்கள். 'டணீர், டணீர்' என்று எப்படித் தாளம் விழுகிறது. நமது பெண்கள் கீர்த்தனங்கள் முதலியவற்றைத் தாளமில்லாமற் பாடுவதற்குக் காரணம் பயிற்சிக் குறைவே யல்லாது வேறொன்றுமில்லை. அவர்களுக்கு நாம் சரியானபடி பாட்டுக் கற்றுக் கொடுப்பதில்லை.

"தாஸிகளா? கச்சேரி நடத்தப் போகிறார்களா? தாளம் தவறாமற் பாடி என்ன ஆக வேண்டும்?" என்று சிலர் பேசுவதுண்டு தாளம் தவறிப் பாடினால் காதுக்கு விரஸமாக இருக்கும். ஜனங்களுக்குப் பிரிய முண்டாகாது. வீட்டிலும் அதே காரணந்தான். எனது மகள் பிழையாகப்பாடினால்,பக்கத்தில் இருந்து கேட்கும் எனது காதுக்கு ஸுகப்படாது. அவளுக்கும் பாட்டில் நல்ல ருசி ஏற்படாது.

பெண்கள் பாடவே கூடாதென்று ஒரேயடியாக நிறுத்தி விட்டார்களானால் ஒரு தொல்லையுமில்லை. பிறகு உலக வாழ்வுமில்லை. கல்யாணப் பாட்டுக்களும், தாலாட்டுப் பாட்டுக்களும், காதற் பாட்டுகளும் நின்று போனால், பிறகு சுடுகாடுதான் மிச்சமிருக்கும். அப்படி நிறுத்த வேண்டுமென்று எவனும் விரும்பமாட்டான். ஆண்களைப் போலவே பெண்களும், எப்போதும் பாடத்தான் செய்வார்கள். ஆணைக்காட்டிலும் பெண்ணுக்கு

ஸங்கீதத்திலே அதிகத் தொடர்பு உண்டு. "செய்வன திருந்தச் செய்." பாட்டுப்பாட விரும்புவோர் நல்ல பாட்டிற் பழக வேண்டும். பாட்டுக் கேட்க விரும்புவோர் நல்ல பாட்டுக் கேட்க வழிதேடவேண்டும். பாட்டினால் மகிழ்ச்சி உண்டாகிறது; லக்ஷ்மீ கடாக்ஷம் ஏற்படு கிறது; உபசாந்தி பிறக்கிறது.

## ஹார்மோனியம்

தமிழ்நாட்டு மாதர்களுக்குள்ளே நல்ல பாட்டு வளர்ச்சி பெறவேண்டும் என்பது என்னுடைய விருப்பம் ஆனால், அதற்கு ஹார்மோனியப்பெட்டி ஒரு விக்கினமாக வந்து சேர்ந்திருக்கிறது. இந்தப் பெட்டி நமது நாட்டிலே பழகுவதினால் ஸங்கீதத்திற்குப் பலவிதமான தீங்கு உண்டாவதாக வித்வான்களிலே பெரும்பாலோர் ஒப்புக்கொள்கிறார்கள். ஆனால் அதை நிறுத்துவதற்கு யாரும் வழிதேட வில்லை. நமது ஸங்கீதத்திலுள்ள சுருள்கள் வீழ்ச்சிகள் முதலியவற்றை ஹார்மோனியத் திலே காட்டமுடியாது. ஆதலால், அந்த வாத்தியத்தில் அதிகம் பழக்கமுடையோரிடம் நமது ஸங்கீதத்தில் உள்ள விசேஷ நயங்கள் மங்கிப் போகின்றன. இதை யெல்லாங் காட்டிலும், அந்தப் பெட்டி போடுகிற பெருங்கூச்சல்தான் என் காதுக்குப் பெரிய கஷ்டமாகத் தோன்று கிறது.

மேலும், ஸங்கீதத்திலே கொஞ்சமேனும் பழக்கமில்லாதவர்களுக் கெல்லாம் இந்தக் கருவியைக் கண்டவுடனே "ஷோக்" பிறந்து

விடுகிறது. சத்தமுண்டாக்குவதற்கு நல்ல துருத்தி கைக்கு ஒத்ததாகப் பின்னே வைத்திருக்கிறது. ஒரு கட்டையை உள்ளே அழுத்தி, முன் பக்கத்துச் சாவிகளை இழுத்துவிட்டு, துருத்தியை அசைத்தால், "ஹோ" என்ற சத்த முண்டாகிறது. உடனே பாமரனுக்கு மிகுந்த சந்தோஷ முண்டாகிறது. "நாம் அல்லவா இந்த இசையை யுண்டாக்கினோம்?" என்று நினைத்துக்கொள்கிறான். உடனே வெள்ளைக் கட்டைகளையும் கருப்புக் கட்டைகளையும் இரண்டு தட்டுத்தட்டுகிறான். பேஷான தொனிகள்! மேலான தொனிகள்! பாமரன் பூரித்துப் போகிறான். முதல் நாள், முதல் தடவை, தொட்டமரத்திலே இவ்வளவு கோலாஹலம் உண்டாகிறது. பிறகு ஸரளி, அலங்காரம், பிள்ளையார் கீதம், சங்கராபரண வர்ணம், 'பவநுத' கீர்த்தனம்—இத்தனையும், ஹார்மோனியத்தில் மூன்று மாதத்திற்குள் பழக்கமாய் விடுகிறது. பாமரனின் மனதிலே "நாம் ஒரு வித்வான்" என்ற ஞாபகம் உறுதியாகப் பதிந்து விடுகிறது. ராக விஸ்தாரங்களைத் தொடங்கி விடுகிறான். ஒரு வீட்டில் "ஹார்மோனியம்" வாசித்தால் பக்கத்திலே ஐம்பது வீட்டுக்குக் கேட்கிறது. அறியாதவன் தனது அறியாமையை வீட்டில் இருந்தபடியே இரண்டு மூன்று வீதிகளுக்குப்பிரசுரம் பண்ணவேண்டுமானால், அதற்கு இந்தக் கருவியைப்போலே உதவி வேறொன்று மில்லை. வீணை தவறாக வாசித்தால் வீட்டில் உள்ள ஜனங்களுக்கு மாத்திரந்தான் துன்பம்; ஹார்மோனியம் தெரு முழுவதையும் ஹிம்ஸைப் படுத்துகிறது. ஒரு தேசத்தாரின் செவியைக் கெடுத்து ஸங்கீத

வுணர்ச்சி குறையும்படி செய்யவேண்டுமானால் கிராமந்தோறும் "நாலைந்து ஹார்மோனியம்" பரவும்படி செய்தால் போதும்.

நாடகக்காரர் வாய்ப்பாட்டுக்குச் சுருதி போடும் பொருட்டு இதை வைத்துக்கொள்ளு தல் ஒரு வேளை பொருந்தும். ஸாமான்ய ஜனங் கள் இதை சுருதிக்கு வைத்துக் கொள்வதனால் பல தீங்குகள் உண்டாகின்றன. இத் தீங்கு கள் யாவை என்பதையும் நமது நாட்டுக்குப் பொருத்தமான வாத்யங்கள் எவை என்பதை யும் பெண்கள் பாட்டை நேராக்குவதற்கு இன் னும் என்ன வழிகள் தேட வேண்டுமென்ப தையும் ஆராய்ச்சி செய்வோம்.

## தம்பூர்

நாடகக்காரர் தவிர ,மற்ற சாமான்ய ஜனங்கள் வீடுகளிலும், பஜனைக் கூடங்களி லும் பாடும்போது தம்பூர் சுருதி வைத்துக் கொள்ளுவதே பொருந்தும். ஹார்மோனியம் பேரிரைச்சல் போடுவதிலே பாட்டின் சத்தம் கணீரென்று கேட்பதில்லை. பாட்டுக் கீழாக வும் சுருதி மேலாகவும் நிற்கிறது. அஸாதா ரணமான உச்ச சாரீரமுடைய சிலர் மாத் திரமே ஹார்மோனியத்தின் சுருதிக்கு மேலே பாடக்கூடும்; பொதுப்படையாக சாத்திய மில்லை. பாட்டுக்கு உதவியாக சுருதி ஒலிக்க வேண்டும். பாட்டை விழுங்கும் சுருதி பிர யோஜனமில்லை. அது வெறும் மடமை.

## வீணை

வாத்தியம் படிக்க விரும்பும் ஸ்திரீகள் வீணை பழக வேண்டும். வீணை ஆரம்பத்திலே

கொஞ்சம் சிரமம். போகப்போக ஸுலபமாய் விடும். இந்தக் கருவியிலே தேர்ச்சி யேற்பட்டால் அதுதான் வாஸ்தவமான சங்கீதத் தேர்ச்சி யாகும். பெண்கள் வீணை வாசிப்பதனுல், நாட்டிலே ரஸப்பயிற்சியும் வாழ்க்கை நயமும் உண்டாகும். மைசூரிலும் மலையாளத்திலும் பழகியவர்களுக்கு, 'பெண்கள் வீணை கற்றுக்கொள்ளுதல் சிரமமில்லை' என்பது தெரியும். வீணை பழகிஞல் அதிலேயே நல்ல தாளஞானம் உண்டாய்விடும். வீணை மனிதர் குரல் போலவே பேசும். இன்பச் சுருள்களுக்கும் பின்னல்களுக்கும் வீணை மிகவும் பொருத்தமானது. அதன் ஒலி சாந்தி மயமானது. ஸரஸ்வதி தனது கையில் வீணையை தரித்துக்கொண்டிருக்கிருள். காளிதாஸ கவி பராசக்தியைப் பாடும்போது "மாணிக்ய வீணும் உபலாலயந்தீம்" என்று தொடங்குகிருர்.

## பொய்த் தொண்டை

ஆணுயினும் பெண்ணுயினும் கள்ளத் தொண்டை வைத்துக்கொண்டு பாடலாகாது. தொண்டையைத் திறந்து பாடிஞல்தான் சுகமுண்டாகும். இயற்கையிலே ஆணுக்குக் கனமான குரலும் பெண்ணுக்கு ஸன்னமான குரலும் ஏற்பட்டிருக்கின்றன. பெண்களிலே சிலர் இயற்கை ஸன்னத்தை அதிக ஸன்னப்படுத்த வேண்டுமென்று கருதிக் கள்ளத் தொண்டையிற் பாடுகிருர்கள். வேறு சிலர் லஜ்ஜையினலே கள்ளத் தொண்டைக்கு வந்து சேருகிருர்கள். இதுவும் தவறேயாம்.

தொண்டையைத் திறந்து தெளிவாகப் பாடுவதிலே லஜ்ஜைப்பட யாதொரு நியாயமுமில்லை.

## பெண்ணின் பாட்டு

### இதிலுள்ள வகுப்புக்கள்

இரு பாலருக்கும் பொதுவான சந்தங்கள் இருப்பதுடன், பெண்களுக்கு மாத்திரம் சிறப்பான பாட்டுக்களும் சந்தங்களும் இருக்கின்றன. பண்டைத் தமிழ் நாட்டு மாதர் பாடிக்கொண்டிருந்த பல பாட்டு வகைகள் இப்போது வழக்கின்றி இறந்துபோய்விட்டன.

ஆனால், ஜீவன் பெண்ணென்றும், பரமாத்மா ஆணென்றும் பாவனை செய்து பழைய பக்தர் பாடியிருக்கும் பாட்டுக்களில் பெண்களுக்குரிய சில பாட்டு வகைகள் காணப்படுகின்றன.

திருஷ்டாந்தமாக, திருவாசகத்திலே பின் வரும் வகைகள் காணலாம்.

(1) எம்பாவை (பெண்கள் நீராடப் போவது).

"கண்ணார முதமுமாய் நின்றான் கழல்பாடிப்
பெண்ணேயிப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய்."

(2) அம்மானைப் பாட்டு.

(3) தும்பி, குயில், கிளி முதலிய தூதுப் பாட்டுகள்.

(4) தெள்ளேணம் (நடுவே ஒரு பெரிய முரசை வைத்துக்கொண்டு, பெண்கள் சுற்றியிருந்து இரண்டு கைகளிலும் கோல்கொண்டு கொட்டி அந்தத் தாளத்திற்கு இசையப் பாடுதல்.)

(5) சுண்ணம் இடித்தல். சுண்ணமென்பது கந்தப் பொடி.

"பானற் றடங்கண் மடந்தை நல்லீர்
பாடிப் பொற்சுண்ண மிடித்தும் நாமே"

(6) சாழல்.

(7) உந்தி.

(இவ்விரண்டும் பெண்களுடைய விளையாட்டு என்று தெளிவாகிறது. ஆனால் விளையாட்டின் விவரங்கள் தெரியவில்லை.)

(8) பூவல்லி (பெண்கள் பூக் கொய்யும் போது பாடுவது.)

(9) தோணோக்கம் (பெண்கள் தோள் கோத்துப் பாடிக் குதிப்பது.)

(10) ஊசல் (இதை இக் காலத்தில் "ஊஞ்சற் பாட்டு" என்கிறோம்.)

(11) காலைத் துயில் எழுப்பும் பாட்டு.

இங்ஙனம், தாலாட்டு, அம்புலி, செங்கீரை, சப்பாணி முதலிய வேறு பல வகைகளுமிருந்தன. 'பிள்ளைத் தமிழ்' என்ற நூல் வகுப்பைக் காண்க. இவற்றிலே, தாலாட்டு, ஊஞ்சல், அம்மானை, பள்ளி யெழுச்சி என்ற நான்கு வகையும் வெவ்வேறு சந்தங்களுடன்

இக்காலத்தில் நமது பெண்களுக்குள் வழங்கி வருதல் காண்கிறோம். பழைய காலத்து வகைகளை நாம் விஸ்தாரமாக கவனிப்பதற்கு வேண்டிய சௌகரியங்கள் இல்லை. ஆதலால், பெயர் மாத்திரமே குறிப்பிட்டிருக்கிறோம்.

குடும்பத்துப் பெண்களிலே சாஸ்திரப்படி ஸங்கீதம் கற்றுக்கொள்வோரின் தொகை மிகவும் குறைவு. நகரப் பழக்கமும் சுக ஜீவனமும் உடைய குடும்பங்களில் மாத்திரமே பெண்களுக்கு வாத்தியார் வைத்துப் பாட்டுக் கற்றுக் கொடுக்கிறார்கள். ஆயினும், வாத்தியார் இல்லாமல் சாஸ்திர வழிகளில் வாஸனை ஏற்பட்டவர் பலர் உண்டு.

இவர்களையல்லாது, பொதுப்படையாகப் பார்க்குமிடத்து, நமது மாதர் பாட்டுக்களின் இனம் பின்வருமாறு :—

(1) கல்யாணப் பாட்டு.

நலங்கு, பத்யம், ஊஞ்சல், ஓடம் முதலியன.

(2) கும்மிப் பாட்டு. குதித்துப் பாடுகிற பாட்டுக்கள்.

இவ்வகுப்பில், கிளிப்பாட்டு, பல்லிப்பாட்டு முதலியனவும் அடங்கும்.

(3) அம்மானை, தூது, மாலை, சோபனம் முதலிய நீண்ட கதைப் பாட்டுக்கள்.

(4) பொதுத் தாலாட்டு, விளையாட்டுப் பாட்டுக்கள், ஜாவளிகள், கீர்த்தனை முதலியன.

மேலும், பண்ணைகளில் வேலை செய்யும் பெண்கள், நெல் குத்துவோர், சுண்ணும்பு இடிப்போர், குறிகாரி, தொம்பச்சி முதலிய வகுப்பினர் தத் தமக்கென்று தனியான மெட்டுக்கள் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். மேற் கூறப்பட்ட பாட்டுக்களில் மிக இன்பமான சந்தங்கள் பல இருக்கின்றன. இவை கால வெள்ளத்தில் மறைந்துபோகுமுன்பாக ஸங்கீத வித்வான்கள் பொறுக்கியெடுத்து ஸ்வர நிச்சயம் செய்து வித்தைப் பழக்கத்திலே சேர்த்துவிட வேண்டும்.

பெண்களுக்குக் கல்விப் பயிற்சி ஏற்பட்டால் இப்போதுள்ள கொச்சை மொழிகளும், பிழைகளும், ரஸக்குறைவும் பொருந்திய பாட்டுக்களை மறந்து விடுவார்கள். ஆனால், அத்துடன் பழைய ஸங்கீதக் கட்டுக்களை மறந்து போகாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். பழைய வழிகளை முற்றிலும் மறந்துபோய் நமது பெண்கள் நாடக மெட்டுக்கள் முதலியவற்றையே பாடத் தொடங்கி விட்டால், தமிழ் நாட்டில் ஸங்கீதவுணர்ச்சி நாசமாய்விட ஹேது உண்டாகும்.

கொச்சை மொழிகளும் ரஸக் குறைவும் மலிந்த பாட்டுக்களென்று சொன்னோம். ஆனாலும், ஒரு கூடைப்பதரில் ஒருழக்கு அரிசியகப்படும். அதை நாம் இழந்துவிடக்கூடாது. கவிதைத் தேட்டமுடையோர் நமது பெண்களின் பாட்டைத் தேடிப் பார்த்தால், சிற்சில விடங்களில் நல்ல கவிதை கிடைக்கும். பாட்டி ராமாயணத்தில் குசலவரின் கதையை ஒரு

னேப் பாட்டாகச் சொல்லுவாள். அதில் சீதையின் கஷ்டங்களைக் கேட்கும்போது குழந்தைகளெல்லாம் கண்ணீர் விட்டழும். ராமனைக் குசலவர் வெல்லும் இடத்து வரும்போது மனதிலே ஆத்திரம் பொங்கும். 'ராமனுக்கு வேணும்; நன்றாக வேணும்' என்று தோன்றும். நலங்குப் பாட்டு, கும்மி முதலியவற்றிலே கூடச் சில இடங்களிலே முத்துப்போல வார்த்தைகள் அகப்படும். தொழிற் பெண்களின் பாட்டு மிகவும் ரஸமானது. சந்தமும் இன்பம்; ஒன்றுக்குப் பாதி நல்ல கவிதை.

பெண்களின் பாட்டில் செய்ய வேண்டிய சீர்திருத்தங்களில் பெரும் பகுதி ஏற்கனவே குறிப்பிட்டிருக்கிறேன். இதன் சம்பந்தமாக இங்கே இன்னும் சில வார்த்தைகள் சேர்க்க விரும்புகிறேன். வீட்டிலே பந்துக்களின் முன்பும், விவாகஸந்தர்ப்பங்களிலும் பாடும்போதும் கூச்சத்தினலே பாட்டை விடக்கூடாது. வித்தை விஷயத்தில் கூச்சங்காட்ட நியாயமில்லை. வித்தைப் பயிருக்கு விடுதலை நீர் பாய்ச்ச வேண்டும். மேலும், பெண்களுக்குள்ளே பொதுக் கல்வியை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்க்க வேண்டும். கல்வியறிவில்லாத மூடர் எந்தத் தொழிலும் நேரே செய்யமாட்டார்கள். தவிரவும் பார்ஸி மெட்டிலே ஆரத்தி யெடுப்பது, இங்கிலீஷ் நலங்கு முதலிய கோரமானவிகாரங்களுக்குத் துணை செய்யக்கூடாது. நமது நாடகசாலைக்குள்ளே கல்வியறிவும், சாஸ்திரப் பழக்கமும், நாகரீகமும் நுழையுங்காலம் வரை, நமது பெண்கள் நாடகப் பாட்டுக்களை கவனி

யாமல் இருப்பது நன்று. வேதாந்தக் கொடுமையையும கொஞ்சம் குறைத்து விட்டால் பெரிய உபகாரம்.

## அபிநயம்

### கூத்தில் அபிநயமே பிரதானம்

தாள விஸ்தாரங்களைக் கூத்தன் தனது உடம்பிலே தோற்றுவிப்பதே கூத்தின் உடல். அபிநயமே கூத்தின் உயிர். தாளந் தவறாமல் ஆடிவிட்டால் அது கூத்தாகாது.

தற்காலத்தில் சில பாகவதர்கள் கதாகால க்ஷேபங்களில் இடையே கொஞ்சம் கூத்தாடிக் காட்டுகிறார்கள். இதற்குச் சிலர், "பட்டணம் கிருஷ்ண பாகவதரின் வழி" என்று பெயர் சொல்லுகிறார்கள். 'இந்தக் கூத்து வெறுமே தாள விஸ்தாரமாகக் குவிப்பது மாத்திரமே யல்லாமல், யதார்த்த நாட்டியமென்று பிறர் நினைக்க வேண்டும்' என்று உத்தேசித்தே அந்த பாகவதர்கள் அப்படிச் செய்கிறார்கள். ஆதலால், அதில் பலவித அபிநயம் பிடிக்கிறார்கள்.

பாகவதர் ஒருவர் வேதபுரத்தில் நந்தனார் சரித்திரம் நடத்தினார். நந்தன் அடிமை, ஐயர் ஆண்டை. ஐயருக்கு முன்னே நந்தன் போய் நிற்கிறான். "நைச்ய" பாவம் என்றது நைச்யத் தோற்றம். நைச்யம் என்பது நீசன் என்ற சொல்லடியாகத் தோன்று நீசத்தன்மை என்று பொருள் படும் குணப் பெயர். இங்கு

நீசன் என்பது அடிமை. எனவே, நைச்ய பாவமென்றால் அடிமைத் தோற்றம். இதை, அந்த பாகவதர் பல அபிநயங்களினால் காட்டினார். நிரம்ப நேர்த்தியான வேலை செய்தார். புருவத்தை அசைக்கிற மாதிரிகளும் கடைக் கண் காட்டுகிற மாதிரிகளும், தோளையும் வயிற்றையும் குலுக்குகிற மாதிரிகளும், மெல்ல மெல்ல பாகவதருடைய அபிநயங்கள் பக்தி ரஸத்திலிருந்து சிருங்கார ரஸத்தின் தோரணைகளுக்கு வந்து சேர்ந்தன. மேற்படி சிருங்காரத்தின் அபிநயங்களிலேயும் மேற்படி பாகவதர் குற்றமில்லை. புருவம், கடைக்கண் முதலியவற்றை மிகத் திறமையுடன் வெட்டுகிறார். சிருங்கார ரஸத்திற்கு, 'பாவம் ரதி; சந்திரன், சந்தனம் முதலியன உத்தீபனங்கள் அல்லது தூண்டுதல்கள்' என்றும் சாஸ்திரம் சொல்லுகிறது. மேற்படி பாகவதர் சந்திரன் முதலியவற்றைக் கண்ணாலே குறிப்பிடுகிறார்.

ஆனால் இவர் புருஷராக இருந்தும் புருஷாபிநயங்கள் குறைவாகவும், நாயிகாபிநயங்கள் அதிகமாகவும் கற்றிருக்கிற விந்தை குறிப்பிடத்தக்கது.

மேற்படி நைச்ய பாவத்திலே, அதாவது அடிமைத் தோற்றம் காட்டுவதிலே கூட, இவர் இந்தப் பெண்மையைக் கலப்பதினால் அதிக மிசிரம் ஏற்படுகிறது. ஆண்டையின் முன்னே வந்து நிற்கும் நந்தன் பறையன் பாதியும் தாஸி பாதியுமாகக் காட்டுகிறார்.

இருந்தாலும், பாகவதருடைய முகத்தில் காட்டும் அபிநயங்களைப் புகழ்ந்து சொல்லுதல்

நம்முடைய கடமை. ஊடலை மாத்திரம் முகத்தில் தொண்ணூற்றென்பது அபிநயங்களிற் காட்டுகிறார். இப்படி மற்ற வகுப்புக்களையும் சேர்த்தால் எத்தனைவித அபிநயங்களாகும்? நிறைய ஆகும் அல்லவா? கருணை ரசத்தின் பாவம் சோகம் என்று சொல்லப்படும். இதைக் காட்டுவதில் மேற்படி பாகவதருக்குத் தோடாப் பண்ணிப்போடத் தகும். இன்னும் ஒன்று, கடைசி: அதிலேதான் அந்த பாகவதர் முதல் தரமான வேலை செய்கிறார். அதாவது, பயாநக ரஸத்தைப் பதினாயிரம் அபிநயங்களிற் காட்டுகிறார். இந்த ரஸத்திற்கு பாவம் பயம். மானுக்கும், முயலுக்கும், சில மனுஷ்யருக்கும் இயற்கையாகவுள்ள பயத்தை இவர் அபிநயத்தில் பூதக்கண்ணாடி போலக் காட்டுகிறார். இந்த பாகவதர் சில தினங்களின் முன்பு என்னைப் பார்க்க வந்தார். "ஹாஸ்ய ரஸம், ரௌத்ர ரஸம், வீர ரஸம், அற்புதம், சாந்தம் என்ற ஐந்து ரஸங்களையும் நீங்கள் தீண்டவேயில்லை. அதென்ன காரணம்?" என்று கேட்டேன். அந்த பாகவதர் சொல்லுகிறார்:—

"நான் என்ன செய்வேன்? நான் நாட்டிய சாஸ்திரம் படித்தது கிடையாது. ஊரிலே கண்ட அபிநயங்களை நான் நடித்துக் காட்டுகிறேன். ஹிந்துக்களிலே அடிமைத்தனம் அதிகம். ஆதலால், எனக்கு "நைச்ய பாவம்" என்ற அடிமைத் தோற்றம் காட்டுதல் மிகவும் ஸுலபமாக வருகிறது. வீர ரஸம் காட்டச் சொன்னால் எப்படிக் காட்டுவேன்? நான் பிறந்தது முதலாக இன்றுவரை ஸஞ்சாரம் செய்து வந்திருக்கிற ஏழெட்டு ஜில்லாக்களில் ஒரு வீரனைக்கூடப் பார்த்ததில்லை. வீர ரஸத்திற்கு

நான் எங்கே போவேன்?" என்று சொன்னார். அப்போது நான் "ரஸ பண்டாரம்" என்ற ஸம்ஸ்க்ருத சாஸ்திரத்திலிருந்து பின் வரும் பொருளுடைய சுலோகங்களை அவருக்குப் படித்துக் காட்டினேன். அந்த நூல் சொல்லுகிறது:—

"லோக நடையினாலே சாஸ்திரம் பிறக்கிறது. அந்த சாஸ்திரத்தைப் பயிற்சியினாலே விஸ்தாரப் படுத்துகிறார்கள். ரஸதிருஷ்டி ஏற்படுவதற்கு இயற்கையே மூலம். ரஸவான்களுடைய பழக்கத்தாலும் பக்தி வழிகளை அனுசரிப்பதனாலும் ஒருவன் ரஸக் காட்சியை வருவித்துக் கொள்ளலாம்.

"ராகத் துவேஷங்களை ஜயிப்பதனாலே ஒருவன் சித்த ஸமாதியடைகிறான். அப்போது ஞானதிருஷ்டியுண்டாகிறது. அந்த ஞானதிருஷ்டி யுடையவர்கள் புறப்பயிற்சியில்லாமலே சாஸ்திரங்களுக்குக் கண்ணாடி போல் விளங்குவார்கள்.

"சிங்கார ரஸத்தை ஒரு கூத்தன் காண்பிக்கும் அபிநயங்களில் கூத்துப் பெண்ணுடைய அபிநயங்கள் கலக்கலாகாது. ஆண் மகனே பெண்ணுருக்கொண்டு கூத்தாடுவானாயின், அப்போது பெண்மை யபிநயங்கள் காண்பிக்கத் தகும். ஆண் மகன் உரு மாறாமல் கூத்தாடும்போது பெண்மை தோன்றலாகாது.

வீர ரஸத்தில் ஒருவன் தேர்ச்சியடைய விரும்புவானுயின், ராமன் முதலிய அவதார புருஷர்களுடைய வடிவை அவன் தியானம் செய்யக்கடவான். நரநாராயண உபாஸனேயே கூத்தனுக்கு வீர ரஸத்தில் தேர்ச்சி கொடுக்கும்.

"பயாநக ரஸத்தை ஸபையிலே கூத்தன் அதிகமாக விவரிக்கலாகாது. எந்த நாட்டிலே கூத்தர் பயாநகத்தையும் சோகத்தையும் அதிகமாகக் காட்டுகிருர்களோ, அந்த நாட்டில் பயமும் துயரமும் அதிகப்படும்.

"நைச்ய பாவம் அதிகமாகத் தோன்றும் கூத்தினுலே, ஒரு நாட்டார் அடிமையியற்கை மிகுதியாக உடையவர்கள் என்பதைத் தெரிந்துகொள்ளலாம். ஆதலால், கூத்தர் கூத்துக்களில் அடிமைத் தோற்றத்தை மிதமிஞ்சிக் காட்டாதபடி நாட்டார் கவனித்துக் கொள்ளவேண்டும்.

"நாட்டிய சாஸ்திரத்தை உண்மையாகப் பயின்ருல், அதிலிருந்து ஆண்களுக்கு ஆண்மையும், பெண்களுக்கும் பெண்மையும் உண்டாகும். அதை நெறி தவறிப் பயிற்சி செய்தால், அதிலிருந்து ஆணுக்குப் பெண்மையும், பெண்ணுக்கு ஆண்மையும் விகாரமாகத் தோன்றும்.

நாட்டிய சாஸ்திரத்தை ஆதியிற் பரமசிவன் நந்திக்குக் கற்றுக்கொடுத்தார். அப்போது, பகவான் நந்தியை நோக்கி, 'கேளாய்,

நந்தீ! அபிநயம் தவறுவதாலே ஜனங்கள் நரகத்தை அடைகிறார்கள். தார்மிஷ்டனாகிய கூத்தன் அபிநய உண்மைகளை ஆசார்யனிட மிருந்து நியமங்களுடனே கற்றுக்கொள்ள வேண்டும். அடிமைகள் கூத்துப் பழகினால் அபிநய தர்மங்களைச் சிறிதேனும் தெரிந்து கொள்ளாமல் எப்போதும் அடிமைக் கூத் தொன்றே ஆடிக்கொண்டிருப்பார்கள். அங் ஙனம் அடிமைகள் சாஸ்திர விரோதமாக நைச்யம் ஒன்றையே காட்டி நடத்தும் கூத் தைப் பார்ப்போர் நரகத்தை அடைகிறார்கள்' என்று சொல்லி, மேலும் சொல்லுகிறார்:— தார்மிஷ்டனாகிய சிஷ்யன் நெறிப்படி ஆசார்ய னிடமிருந்து கற்றுக்கொண்ட நாட்டியத்தில் நவரஸங்களும் ஸமரஸப்பட்டுக் காண்போ ருக்கு ஆனந்தத்தையும், லக்ஷ்மி கடாக்ஷத்தை யும் ஏற்படுத்தும். நல்ல ஆசார்யன் இல்லா மல் இந்த நாட்டிய சாஸ்திரத்தைப் பழகு வோன் உண்மையான பக்தியுடையவனாக இருக்கவேண்டும். தெய்வ பக்தியினாலே ஸகல வித்தைகளும் வசப்படும்."

இங்ஙனம் மேற்படி ரஸபண்டாரமென்ற நூலிலிருந்து நான் பல சுலோகங்களை அவருக் குப் படித்துக் காட்டினேன்.

இதையெல்லாம் கேட்டவுடன் அந்த பாக வதர் மிகவும் சந்தோஷ மடைந்தவராய், "இந்த சாஸ்திரத்தை என்னிடம் கொடுங்கள். நான் எழுதிக்கொண்டு இந்தப் பிரதியைக் கொடுத்துவிடுகிறேன்" என்றார். "அப் படியே செய்யுங்கள்" என்று சொல்லி அந் தச் சுவடியை அவரிடம் கொடுத்தேன்.

அந்த சாஸ்திரத்தில், ‘ரஸ ஞானத்திற்கு உபாஸனையே முக்ய ஸ்தானம்’ என்பது மிகவும் அழுத்திச் சொல்லப்படுகிறது. இதை அந்த பாகவதரிடம் எடுத்துக் காட்டினேன். அதன் பேரில், தாம் சில தினங்களின் முன்பு வேதநாயகர் கோயிலைப் பிரதக்ஷணம் செய்து கொண்டிருந்ததாகவும், அப்போது இந்த ஊர்க் குள்ளச்சாமி என்ற பரதேசி தம்மை இடையே நிறுத்தி, “ஓம் சக்தி” என்ற மஹா சக்தி மந்திரத்தைத் தமக்கு உபதேசம் செய்து விட்டுப் போனதாகவும், அதிலிருந்து தாம் பராசக்தி உபாஸனை செய்து வருவதாகவும் சொன்னார்.

நான், மிகவும் சந்தோஷத்துடன், அவரை வண்டியேற்றி வழியனுப்பிவிட்டு வந்தேன், அவர் இன்னும் நம்முடைய புஸ்தகத்தை திரும்பக் கொடுத்தனுப்பவில்லை.

---

பாரதியார் கட்டுரைகள் 4.

சமூகம்.

# ஆறில் ஒரு பங்கு

## முகவுரை

---

ஒரு ஜாதி ஓர் உயிர்; பாரத நாட்டிலுள்ள முப்பது கோடி ஜனங்களும் ஒரு ஜாதி. வகுப்புகள் இருக்கலாம்; பிரிவுகள் இருக்கலாகாது. வெவ்வேறு தொழில் புரியலாம்; பிறவி மாத்திரத்தாலே உயர்வு தாழ்வு என்ற எண்ணம் கூடாது. மத பேதங்கள் இருக்கலாம்; மத விரோதங்கள் இருக்கலாகாது.

இவ் உணர்வே நமக்கு ஸ்வதந்திரமும், அமரத் தன்மையும் கொடுக்கும். "நாந்ய: பந்தா வர்த்ததே அயநாய;" வேறு வழியில்லை.

இந் நூலை, பாரத நாட்டில் உழவுத் தொழில் புரிந்து நமக்கெல்லாம் உணவு கொடுத்து ரக்ஷிப்பவர்களாகிய பள்ளர் பறையர் முதலிய பரிசுத்தத் தன்மை வாய்ந்த வைசிய சகோதரர்களுக்கு அர்ப்பணம் செய்கிறேன்.

ஆசிரியன்.

## அத்தியாயம் 1.

மீனாம்பாள் வீணை வாசிப்பதிலே ஸரஸ்வதிக்கு நிகரானவள். புரசைபாக்கத்திலுள்ள எங்கள் வீட்டிற்கு அவள் வரும் சமயங்களிலெல்லாம் மேல் மாடத்து அறையை அவளுடைய உபயோகத்துக்காகக் காலி செய்து விட்டுவிடுவது வழக்கம். நிலாக் காலங்களில் இரவு எட்டு மணிக்கெல்லாம் போஜனம் முடிந்துவிடும். ஒன்பது மணி முதல் நடுநிசி வரையில், அவள் தனது அறையில் இருந்து வீணை வாசித்துக் கொண்டிருப்பாள். அறைக்கு அடுத்த வெளிப்புறத்திலே பந்தரில், அவளுடைய தகப்பனார் ராவ்பகதூர் சுந்தர ராஜுலு நாயுடு கட்டிலின்மீது படுத்துக் கொண்டு, சிறிது நேரம் வீணையைக் கேட்டுக்கொண்டிருந்து, சீக்கிரத்தில் குறட்டைவிட்டு நித்திரை செய்யத் தொடங்கி விடுவார். ஆனால், மகாராஜன் குறட்டைச் சத்தத்தால் வீணைச் சத்தம் கேளாதபடி செய்து விடமாட்டார்; இலேசான குறட்டைதான். வெளி முற்றத்தின் ஒரு ஓரத்திலே, நான் மட்டும் எனது 'பிரம்மசாரி'ப் படுக்கையைப் போட்டுக் கொண்டு படுத்திருப்பேன். வீணை நாதம் முடிவுறும் வரை, என் கண்ணிமைகளைப் புளியம் பசைபோட்டு ஒட்டினாலும் ஒட்டமாட்டா. மீனாம்பாளுடன் அறையிலே படுத்துக்கொள்ளும் வழக்கமுடைய எனது தங்கை இரத்தினமும் சீக்கிரம் தூங்கிப் போய்விடுவாள். கீழே, எனது தாயார், தமையனார், அவரது

மனைவி முதலிய அனைவரும் தூங்கி விடுவார்கள். எனது தமையனார் மனைவி, வயிற்றிலே சோற்றைப் போட்டுக் கைகழுவிக் கொண்டிருக்கும்போதே, குறட்டைவிட்டுக் கொண்டிருப்பாள். இடையிடையே குழந்தைகளின் அழுகைச் சத்தம்மட்டிலும் கேட்கும். தமையனாருக்குக் கோட்டையில் ரெவினியூ போர்டு ஆபீஸிலே உத்தியோகம். அவருக்கு நான்கு வருடங் களுக்கொரு முறை ஆபீஸில் பத்து ரூபாயும், வீட்டில் இரண்டு குழந்தைகளும் 'ப்ரமோஷன்.'

வஸந்த காலம், நிலாப்பொழுது; நள்ளிரவு நேரம். புரசைபாக்கம் முழுதும் நித்திரையிலிருந்தது. இரண்டு ஜீவன்கள்தான் விழித்து இருந்தன. நான் ஒன்று, மற்றொன்று அவள்.

கந்தர்வ ஸ்திரீகள் வீணை வாசிப்பதுபோல மீனாம்பாள் வாசிப்பாள். பார்ப்பதற்கும் கந்தர்வ ஸ்திரீயைப்போலவே இருப்பாள். அவளுக்கு வயது பதினாறு இருக்கும். கதையை வளர்த்துக்கொண்டு ஏன் போகவேண்டும்? மன்மதன் தனது அம்பொன்றின் முனையிலே என் பிராணனைக் குத்தி எடுத்துக் கொண்டுபோய் அவள் வசம் ஒப்புவித்து விட்டான். அடடா! அவளது இசை, எவ்வளவு நேரம் கேட்ட போதிலும், தெவிட்டாது; தினந்தோறும் புதுமை தோன்றும், அவள் முகத்தில் தோன்றுவதுபோல. அவளுடைய தந்தையாகிய ராவ்பகதூர் சுந்தர ராஜுலு நாயுடு எனது தாயாருக்கு ஒன்றுவிட்ட

அண்ணன். தஞ்சாவூர் முதலிய பல ஜில்லாக்களில் நெடுங்காலம் போலீஸ் இன்ஸ்பெக்டர் உத்தியோகம் பார்த்து ஸர்க்காருக்கு நன்முக உழைத்ததினுல் 'ராவ் பகதூர்' என்ற பட்டம் பெற்றவர். சுதேசீயம் தொடங்கும் முன்பாகவே இவர் வேலையிலிருந்து விலகி விட்டவர். இதை எதன் பொருட்டாகச் சொல்லு கிறேன் என்றால், அவருக்குக் கிடைத்த பட்டம் வெறுமே சில சுதேசீயத் தலைவர்கள் மீது 'ரிப்போர்ட்' எழுதிக் கொடுத்து சுலபமாக சம்பாதித்த பட்டமன்று. யதார்த்தத்திலேயே திறமையுடன் உழைத்ததினுற் கிடைத்த பட்டம். குழந்தை முதலாகவே மீனும்பாளை எனக்கு விவாகம் செய்துகொடுக்கவேண்டும் என்பது அவருடைய கருத்து. அந்தக் கருத்து நிறைவேறு வதற்கு நேர்ந்த விக்கினங்கள் பல. அவ் விக்கினங் களில் பெரும்பான்மையானவை என்னுலேயே உண் டாயின.

நான் சுமார் பதினுறு பிராயம் வரை சென்னைக் கிறிஸ்தியன் காலேஜில் படித்துக்கொண்டிருந்தேன். "வேத கால முதலாக இன்றுவரை பாரத தேசத்தி லுள்ள ரிஷிகளெல்லோரும் ஒன்றும் தெரியாத மூடர் கள். அர்ஜுனனும், காளிதாசனும், சங்கராச்சாரியா ரும், சிவாஜியும், ராமதாஸரும், கபீர்தாஸரும், அதற்கு முன்னும் பின்னும் நேற்றுவரையிருந்த பாரத தேசத் தார் அனைவரும் நெஞ்சில் வளர்த்துவந்த பக்திகளெல் லாம் இழிந்த அநாகரீகமான மூட பக்திகள்" என்பது

முதலான ஆங்கிலேய 'சத்தியங்கள்' எல்லாம் என் உள்ளத்திலே குடிபுகுந்து விட்டன. ஆனால், கிறிஸ்துவப் பாதிரி ஓர் விநோதமான ஜந்து. ஹிந்து மார்க்கத்திலும், ஹிந்து நாகரீகத்திலும் பக்தி செலுத்துவது பேதைமை என்று ருஜுப்படுத்திக்கொண்டு வரும்போதே, அவர் கொண்டாடும் கிறிஸ்து மார்க்கமும் மூடபக்தி என்று வாலிபர் மனதில் படும்படி ஏற்பாடு செய்துவிடுகிறார். மத விஷயங்களைப்பற்றி விஸ்தாரமான விவகாரங்கள் எழுதி, படிப்பவர்களுக்கு நான் தலை நோவு உண்டாக்கப்போவதில்லை. சுருக்கம்: நான் எனது பூர்வ மதாசாரங்களில் பற்று நீங்கி, 'ஞானஜ்ஞானம்' பெறவில்லை; பிரம்ம ஸமாஜத்திலே சேர்ந்து கொண்டேன்.

சிறிது காலத்திற்கு அப்பால், பட்டணத்தில் படிப்பை நிறுத்திவிட்டு, வீட்டில் யாரிடமும் சொல்லாமல் கல்கத்தாவுக்குப் புறப்பட்டுப்போய், அங்கே பிரம்ம ஸமாஜத்தாரின் மார்க்க போதனை கற்பிக்கும் பாடசாலை யொன்றிலே சேர்ந்து சில மாதங்கள் படித்தேன். பிரம்ம ஸமாஜத்தாரின் 'உபதேசி'களில் ஒருவனாக வெளியேற வேண்டும் என்பது என்னுடைய நோக்கம். அப்பால், அங்கிருந்து, பஞ்சாப், ஹிந்துஸ்தானம் முதலிய பல பிரதேசங்களில் யாத்திரை செய்துகொண்டு, கடைசியாகச் சென்னபட்டணம் வந்து சேர்ந்தேன். நான் ஹிந்து மார்க்கத்தை விட்டு நீங்கியதாக எண்ணி,

எனது ஜாதியார் என்னைப் பல விதங்களில் இம்சை செய்தார்கள். இந்த இம்சைகளினால் எனது சித்த வுறுதி நாளுக்கு நாள் பலம் அடைந்ததே யல்லாமல், எனக்கு மனச்சோர்வு உண்டாகவில்லை. எனது தகப்பனார்—இவர் பெயர் துபாஷ் ராமச்சந்திர நாயுடு—வெளிவேஷ மாத்திரத்தில் சாதாரண ஜனங்களின் ஆசார விவகாரங்களை வைத்துக்கொண்டிருந்தார்; எனினும் உள்ளத்தில் பிரம்ம ஸாமஜப் பற்று உடையவர். ஆதலால், நான் வாஸ்தவமான பரமாத்ம பக்தியும், ஆத்ம விசுவாசமும், எப்போதும் உபநிஷத்துக்கள் படிப்பதில் சிரத்தையும் கொண்டிருப்பது கண்டு, அவருக்கு அந்தரங்கத்தில் மிகுந்த உவகை யுண்டாயிற்று. வெளி நட்பில் என்மீது கோபம் பராட்டுவது போலிருந்தாரே யன்றி, எனது பந்துக்கள் சொற்படி கேட்டு என்னைத் தொல்லைப்படுத்தவில்லை. ஸகல ஸௌகரியங்களும் எனக்கு முன்னைக் காட்டிலும் அதிகமாக நடக்கும்படி வீட்டில் ஏற்பாடு செய்து வைத்திருந்தார். ஆனால், எனது தமையன் மாத்திரம் என்னிடம் எக்காரணம் பற்றியோ மிகுந்த வெறுப்பு பாராட்டினான். நான் தலையிலே பஞ்சாபிகளைப் போலப் பாகை கட்டிக்கொள்வது வழக்கம். '15 ரூபாய்'க் குமாஸ்தாக்களுக்கென்று பிரத்தியேகமாக அழகு, அந்தம், ஆண்மை எதுவுமின்றி ஏற்பட்டிருக்கும் கும்பகோணத்துப் பாகை நான் கட்டிக்கொள்ளுவதில்லை. இதுகூடத் தமையனுக்கு கோபம் உண்டாக்கும். "ராஜபுத்ருடு வீடு, தொங்க விதவா!

தலலோ மகா ஆடம்பரமுக பகடி வீடிகி!" என்று எதெல்லாமோ சொல்லி ஓயாமல் திட்டிக்கொண்டிருப்பான். இப்படியிருக்க, ஒருநாள் எனது தகப்பனர் திடீரென்று வாயுக் குத்தி இறந்து போய்விட்டார். அவருக்கு பிரம்மஸமாஜ விதிப்படி கிரியைகள் நடத்த வேண்டும் என்று நான் சொன்னேன். எனது தமையன் சாதாரண ஆசாரங்களின்படிதான் நடத்த வேண்டும் என்முன். பிரமாத கலகங்கள் விளைந்து, நானூறு மத்தியஸ்தங்கள் நடந்த பிறகு, சமாதானத்தில் அவன் தனதிஷ்டப்படி கிரியைகள் முடிந்த பின்பு, நான் எனது கொள்கைப்படி பிரம்ம ஸமாஜ குரு ஒருவரை வைத்துக்கொண்டு கிரியைகள் செய்தேன். இதுவெல்லாம் எனது மாமா ராவ் பகதூர் சுந்தராஜுலு நாயுடுவுக்கு என்மீது மிகுந்த கெட்ட எண்ணம் உண்டாகும்படி செய்துவிட்டது. ஆதலால் விவாகம் தடைப் பட்டுக்கொண்டே வந்தது. ஆனால் இறுதிவரை, என்னை யெப்படியேனும் சீர்திருத்தி, எனக்கே தனது மகளைப் பாணிக்கிரஹணம் செய்து கொடுக்க வேண்டும் என்பது அவருடைய இச்சை.

வசந்தகாலம், நிலாப்பொழுது, நள்ளிரவு நேரம் புரசைபாக்கம் முழுமையும் நித்திரையிலிருந்தது, விழித்திருந்த ஜீவன்கள் இரண்டே. ஒன்று நான், மற்றொன்று அவள். இன்பமான காற்று வீசிக்கொண்டிருந்தது. மேல் மாடத்தில், மீனம்பாளுடைய அறையிலிருந்து, முறைப்படி வீணைத் தொனி கேட்டது.

ஆனால், வழக்கப்படி குறட்டை கேட்கவில்லை. ராவ் பகதூர் குறட்டை மாமா ஊரிலில்லை. வெளியே ஒரு கிராமத்துக்கு போயிருந்தார். நான் நிலா முற்றத்தில் எனது கட்டிலின் மீது உட்கார்ந்து கொண்டிருந்தேன். என் உள்ளத்திலோ, இரண்டு எரிமலைகள் ஒன்றையொன்று சீறி யெதிர்த்துப் போர் செய்து கொண்டிருந்தன. இவற்றுள்ளே, ஒன்று காதல்; மற்றொன்று—பின்பு தெரியவரும். வீணைத்தொனி திடீரென்று நின்றது. சிறிது நேரத்தில், எனது பின்புறத்தில் ஒரு ஆள் வந்து நிற்பது உணர்ந்து, திரும்பிப் பார்த்தேன். மீனாம்பாள்!

இப்பொழுது தான் நாங்கள் புதிதாகத் தனியிடத்திலே சந்தித்திருக்கிறோமென்றும், அதனால் இங்கு நீண்டதோர் காதல் வர்ணனை எழுதப்படு மென்றும் படிப்பவர்கள் எதிர்பார்க்க வேண்டாம். இவ்விதமாக நாங்களிருவரும் பலமுறை சந்தித்திருக்கிறோம். மீனாம்பாள் மஞ்சத்தின் மீது உட்கார்ந்தாள்.

'மீனா! இன்று உன்னிடத்தில் ஒரு விசேஷம் சொல்லப்போகிறேன்' என்றேன். 'எனக்கு அது இன்னதென்று ஏற்கனவே தெரியும்' என்றாள்.

'என்னது? சொல்லு.'

'நீ பிரம்மசரிய சங்கற்பம் செய்துகொள்ளப் போகிறாய் என்ற விசேஷம்.'

'ஏன்? எதற்கு? எப்படி? உனக்கு யார் சொன்னார்கள்?' என்று கேட்டேன்.

'வந்தே மாதரம்' என்றாள்.

மீனாம்பாளுடைய அறிவுக் கூர்மை எனக்கு முன்னமே தெரியுமாதலால், அவள் சொல்லியதிலிருந்து அதிக வியப்புண்டாகவில்லை.

அதன்பின், நான் அவளிடம் பின்வருமாறு கூறலாயினேன்:— 'ஆம். பாரத தேசத்தை இப்பொழுது பிரம்மசாரிகளே ரக்ஷிக்கவேண்டும். மிக உயர்ந்திருந்த நாடு மிகவும் இழிந்துபோய் விட்டது. இமயமலையிருந்த இடத்தில் முட்செடிகளும் விஷப்பூச்சிகளும் நிறைந்த ஒரு பாழுங் காடு இருப்பதுபோல் ஆய்விட்டது. அர்ஜுனன் வாழ்ந்த மாளிகையில் வௌவால்கள் தொங்குவதுபோலிருக்கிறது. இதை பிரம்மசாரிகளே காப்பாற்ற வேண்டும். பொப்பிலி ராஜாவின் மகனாகவேனும், ராஜா ஸர் ஸவலை ராமஸாமி முதலியார் மகனாகவேனும் பிறவாமல் நம்போன்ற சாதாரண குடும்பங்களிலே பிறந்தவர்கள் விவாகம் செய்து கொண்டால், இந்தப் பஞ்ச நாட்டில் அவர்களுக்கு மூச்சு முட்டிப் போகிறது. குருவியின் தலையிலே பனங்காயை வைப்பதுபோல, இந்த நரிக் கூட்டத்திலுள்ள ஒரு வாலிபன் தலையிலே ஒரு குடும்ப பாரத்தைச் சுமத்தும்போது, அவனுக்கு கண் பிதுங்கிப்போய்விடுகிறது. அவனவனுடைய அற்பக் காரியங்கள் முடிவு பெறுவதே பகீரத ப்ரயத்தனம் ஆய்விடுகிறது. தேச காரியங்களை இவர்

கள் எப்படிக் கருதுவார்கள்? பிரம்மசாரிகள் வேண்டும்; ஆத்ம ஞானிகள் வேண்டும்; தம்பொருட்டு உலக சுகங்களை விரும்பாத தீரர்கள் வேண்டும். இந்த சுதேசியம் கேவலம் ஒரு லௌகிக காரியமன்று, இது ஒரு தர்மம். இதில் பிரவேசிப்பவர்களுக்கு வீர்யம், தேஜஸ், கர்ம யோகித் தன்மை முதலிய அரிய குணங்கள் வேண்டும். நான் பிரம்மசரிய விரதத்தைக் கைக்கொள்ளலாமென்று நினைத்திருக்கிறேன். ஆனால்—'

மீனா:— 'ஆனால், நான் அதற்கு ஒரு சனியாக வந்து குறுக்கிட்டிருக்கிறேன் என்று சொல்லுகிறாய்.'

'பார்த்தாயா, பார்த்தாயா! என்ன வார்த்தை பேசுகிறாய்? நான் சொல்லவந்ததைக் கேள். எனது புதிய சங்கற்பம் ஏற்படுமுன்னதாகவே, என் உயிரை உனக்கு அர்ப்பணம் செய்துவிட்டேன். இப்போது எனது உயிருக்கு வேறொரு கடமை ஏற்பட்டிருக்கிறது. அவ் விஷயத்தில் உனது கட்டளையை எதிர்பார்த்திருக்கிறேன்' என்றேன். அவள் ஏதோ மறுமொழி சொல்லப் போனாள். அதற்குள் வாயிற்புறத்தில் ஒரு வண்டி வந்து நிற்கும் சப்தம் கேட்டது.

'நாயன்னா வந்துவிட்டார். நான் போகிறேன்' என்று சொல்லி ஒரு முத்தத்துடன் பிரிந்தாள்.

குறட்டை நாயுடு கதவை உடைத்து, உள்ளிருக்கும் குறட்டைகளையெல்லாம் எழுப்பி, மேலேவந்து, படுத்து அரை நாழிகைக்கெல்லாம் தமது தொழிலை

ஆரம்பித்துவிட்டார். இரண்டு ஜீவன்கள் அன்றிரவு முழுதும் விழித்திருந்தன. ஒன்று நான்; அவள் மற்றொன்று.

---

## அத்தியாயம் 2.

மேல் அத்தியாயத்தின் இறுதியில் குறிக்கப் பட்ட செய்தி நிகழ்ந்ததற்கு அப்பால், சில மாதங்கள் கழிந்து போயின. இதற்கிடையே, எங்களுடைய விவகாரத்திற் பல மாறுபாடுகள் உண்டாயிருந்தன. 'வந்தேமாதரம்' மார்க்கத்தில் நான் பற்றுடையவன் என்பதை அறிந்த ராவ் பகதூர் எனக்குத்தமது கன்னிகையை மணஞ்செய்து கொடுப்பது என்ற சிந்தனையை அறவே ஒழித்துவிட்டார். சில மாதங்களாக, அவர் தமது சாச்வத வாஸஸ்தானமாகிய தஞ்சாவூரிலிருந்து புரசைபாக்கத்துக்கு வருவதை முழுவதும் நிறுத்தி விட்டார். இதனிடையே, மீனம்பாளுக்கு வேறு வரன்கள் தேடிக்கொண்டிருந்ததாகவும் பிரஸ்தாபம் ஏற்பட்டது. அவளிடமிருந்தும் யாதொரு கடிதமும் வரவில்லை. ஒரு வேளை முழுதும் மறந்து போய்விட்டாளா? பெண்களே வஞ்சனையின் வடிவம் என்று சொல்லுகிறார்களே, அது மெய்தானா? "பெண்ணெனப்படுவ கேண்மோ.... உள் நிறைவுடைய வல்ல, ஓராயிர மனத்த வாகும்" என்று நான் சீவகசிந்தாமணியிலே படித்தபோது, அதை எழுதியவர் மீனம்பாளைப்போன்ற ஸ்திரீயைக் கண்டு அவளுடைய காத

லுக்குப் பாத்திரமாகும் பாக்கியம் பெறவில்லைபோலும் என்று நினைத்தேனே. இப்போது, அந்த ஆசிரியருடைய கொள்கை தான் மெய்யாகிவிட்டதா? நான் இளமைக்குரிய அறிவின்மையால், அத்தனை பெருமை வாய்ந்த ஆசிரியரது கொள்கையைப் பிழையென்று கருதினேன் போலும்!

'அடா மூடா! உனக்கு ஏன் இதில் இவ்வளவு வருத்தம்? நீயோ பிரம்மசரிய விரதத்திலே ஆயுளைக் கழிக்கவேண்டும் என்ற எண்ணத்தை நாள்தோறும் மேன்மேலும் வளர்த்து வளர்த்து வருகின்றாய்? மீரா மற்றொருவனை மணஞ்செய்து கொண்டால் உனக்கு எளிது தானே? நீயோ வேறொரு பெண் மீது இவ் வாழ்க்கையில் மையல் கொள்ளப்போவதில்லை. இவளொருத்தி தான் உனது விரதத்திற்கு இடையூறாக இருந்தாள். இவளும் வேறொருவனை மணஞ்செய்துகொண்டு அவன் மனைவி யாய்விடுவாளாயின், உனது விரதம் நிர்விக்கினமாக நிறைவேறும். ஈசனன்றோ உனக்கு இங்ஙனம் நன்மையைக் கொண்டு விடுகிறான்? இதில் நீ ஏன் வருத்தமடையவேண்டும்?' என்று சில சமயங்களில் எனதுள்ளம் தனக்குத் தானே நன்மதி புகட்டும்.

மீண்டும், வேறொரு விதமான சிந்தை தோன்றும்:— "அவள் நம்மை மறந்திருக்கவே மாட்டாள். மாமா சொற்படி கேட்டு அவள் வேறொருவனை மணஞ்செய்து கொள்ளவே மாட்டாள். எனது பிராண

ளோடு ஒன்றுபட்டவளாதலால், எனது நெஞ்சத்திலே ஜ்வலிக்கும் தர்மத்தில் தானும் ஈடுபட்டவளாகி, அந்த தர்மத்திற்கு இடையூறு உண்டாகும் என்று அஞ்சி எனக்கு ஒன்றும் எழுதாமலிருக்கிறாள். ஆமடி, மீனா! உன்னை நான் அறியேனா? எது வரினும் நீ என்னை மறப்பாயா? அந்தக் கண்கள் 'உன்னை மறக்கவே மாட்டேன்' என்று எத்தனை முறை என்னிடம் பிரமாணம் செய்து கொடுத்திருக்கின்றன! அந்தக் கண்கள்! அந்தக் கண்கள்? ஐயோ, இப்பொழுது கூட என் முன்னே நிற்கின்றனவே! அவை பொய் சொல்லுமா?''

அப்பால் ஒரு உள்ளம்:— "அடா! நல்ல துறவடா உன் துறவு! நல்ல பக்தியடா உன் பக்தி! நல்ல தர்மம்! நல்ல சிரத்தை! ஆரிய நாட்டை உத்தாரணம் செய்வதற்கு இப்படியன்றோ பிள்ளைகள் வேண்டும்; பீஷ்மர் வாழ்ந்திருந்த தேசமல்லவா? இப்போது அதற்கு உன்னைப் போன்றவர்கள் இருந்து ஒளி கொடுக்கிறார்கள்! சீச்சீ! நாய் மனமே! அமிருத வெள்ளத்தை விட்டு வெறும் எலும்பைத்தேடிப் போகிறாயா? லோகோத்தாரணம் பெரிதா, உனது புலனின்பம் பெரிதா? தர்ம சேவை பெரிதா, ஸ்திரீ சேவை பெரிதா? எதனைக் கைக்கொள்ளப் போகிறாய்? சொல்லடா சொல்!''

பிறகு வேறொரு சிந்தை,—''எப்படியும் அவளிடமிருந்து ஓர் உறுதி கிடைத்தால், அதுவே நமக்குப் பெரியதோர் பலமாயிருக்கும். 'நீ தர்ம பரிபாலனம்

செய்; என் பொருட்டாக தர்மத்தை கைவிடாதே. நான் மரணம்வரை உன்னையே மானஸிகத் தலை வணக்கொண்டு நோன்புகள் இழைத்துக் காலம் கழிப்பேன். ஸ்வர்க்கத்தில் நாம் இருவரும் சேர்ந்து வாழலாம்' என்று அவள் உறுதி தருவாளானால், இந்த ஜன்மத்தில் ஜீவ்யம் வெகுசுலபமாய் இருக்கும்.''

அப்பால்:— "ஒரேயடியாக, அவளுக்கு இன்னொருவனுடன் விவாகம் நடந்து முடிந்து விட்டது என்று செய்தி வருமானால், கவலை விட்டிருக்கும். பிறகு, இகத்தொடர் ஒன்றுமே யில்லாமல், தர்ம சேவையே தொழிலாக நின்று விடலாம்.''

பின் மற்றொரு சிந்தை:—" ஆ! அப்படி ஒரு செய்தி வருமானால், பின்பு உயிர் தரித்திருப்பதே அரிதாய் விடும். அவளுடைய அன்பு மாறிவிட்டது என்று தெரிந்தபின் இவ் வுலக வாழ்க்கையுண்டா?"

அப்பால் பிறிதொரு சிந்தை:—"அவள் அன்பு! மாதர்களுக்கு அன்பு என்பதோர் நிலையும் உண்டா? வஞ்சனை லோபம் இரண்டையும் திரட்டி பிரம்மன் ஸ்திரீகளைப் படைத்தான்."

இப்படி ஆயிரவிதமான சிந்தனைகள் மாறி மாறித் தோன்றி எனது அறிவைக் கலக்கின. ஆன்ம வுறுதி யில்லாதவனுடைய உள்ளம் குழம்பியதோர் கடலுக்கு ஒப்பாகும். இதனைப் படிக்கின்றவர், ஒருகணம் சாக்ஷி போல் நின்று, தமது உள்ளத்தினிடையே நிகழும்

புரட்சிகளையும் கலக்கங்களையும் பார்ப்பாராயின், மிகுந்த வியப்பு உண்டாகும். மனித வாழ்க்கையிலே இத்தனை திகைப்புகள் ஏன் உண்டாகின்றன?

"மறப்பும் நினைப்புமாய் நின்ற வஞ்ச மாயா மனத்தால் வளர்ந்தது தோழி."

* * *

இவ்வாறிருக்கையில் ஒரு நாள் திடீரென்று எனது கையில் மீனம்பாளின் கடிதமொன்று கிடைத்தது. அதனை இங்கு தருகின்றேன். அதைப் படித்துப் பார்த்த பொழுது என்னுள்ளம் என்ன பாடு பட்டிருக்கும் என்பதை நீங்களே யோசித்துக்கொள்ளுங்கள்

ஓம்

தஞ்சாவூர்.

உடையாய்,

இக்கடிதம் எழுதத் தொடங்கும் போதே எனது நெஞ்சு பதறுகிறது. எனக்கு எப்படி எழுதுகிறது என்று தெரியவில்லை, ஐயோ, இது என்னுடைய கடைசிக் கடிதம்! உன் முகத்தை நான் இனி இவ்வுலகத்திலே பார்க்கப் போவதில்லை,

'நாயன்று' வருகிற தை மாதம் என்னை இவ்வூரில் புதிய இன்ஸ்பெக்டராக வந்திருக்கும் மன்னார் என்பவனுக்குப் பலியிட வேண்டுமென்று நிச்சயம் செய்துவிட்டார். கலியாணத்துக்கு வேண்டிய சாமக்கிரியைகளெல்லாம் தயாராகின்றன. உனது பெய

ரைக் கேட்டால், வேட்டை நாய் விழுவதுபோல விழுந்து, காதால் கேட்க முடியாத கெட்ட வார்த்தைகள் சொல்லி நிந்திக்கிறுர். நான் தப்பியோடி விடுவேன் என்று நினைத்து என்னை வெளியேருதபடி காவல் செய்து வைத்திருக்கிறுர். நீ ஒரு வேளை இச்செய்தி கேட்டு இங்கு வருவாய் என்று கருதி, நீ வந்தால் வீட்டுக்கு வரமுடியாமல் செய்ய, இவரும் மன்னுரென்பவனும் சேர்ந்து நீசத்தனமான ஏற்பாடுகளும் செய்து வைத்திருக்கிறுர்கள். அவன் 'நாயன்ஞ'வின் பணத்தின் மீது கண் வைத்து, இந்தவிவாகத்தில் ஆசை மூண்டிருக்கிறுன். என் உள்ளத்திலே அவனிடம் மிகுந்த பகைமையும், அருவருப்பும் உள்ளனவென்றும், இப்படிப்பட்ட பெண்ணை பலவந்தமாகத் தாலிகட்டினுல் அவனுக்கு வாழ்நாள் முழுதும் துக்கமிருக்குமேயல்லாது சுகமிருக்காது என்றும் சொல்லி அனுப்பினேன். அதற்கு, அந்த மிருகம், "எனக்கு அவளுடைய உள்ளத்தைப் பற்றி லக்ஷ்யமில்லை. அதைப் பின்னிட்டு சரிப்படுத்திக் கொள்வேன். முதலாவது பணம் என் கையில் வந்து சேர்ந்தால், பிறகு அவள் ஓடிப்போய் அந்த 'ஜெயிலுக்குப் போகிற பய'லுடன் சேர்ந்து கெட்டுத் திரிந்துவிட்டுப் பிறகு சமுத்திரத்தில் விழுந்து சாகட்டும்" என்று மறுமொழி கொடுத்தனுப்பி விட்டது.

அநேக தினங்களாக எனக்கு இரவில் நித்திரை என்பதே கிடையாது, நேற்றிரவு படுக்கையின் மீது கண் மூடாமல் படுத்துப் புரண்டு கொண்டிருந்தேன்.

அப்போது கனவு போன்ற ஒரு தோற்ற முண்டா யிற்று. தூக்கமில்லாதபோது, கனவு எப்படி வரும்? அஃது கனவுமில்லை, நினைவுமில்லை; ஏதோ ஒரு வகையானகாட்சி. அதில் அதிபயங்கரமானரூபத்துடன் இரத்தம் போன்ற சிவந்த விழிகளும் கரிய மேகம் போன்ற மேனியும், வெட்டுண்ட தலைகளின் மாலையும் கையில் சூலமுமாகக் காளி தேவி வந்து தோன்றினள். நான் நடுங்கிப்போய் 'மாதா, என்னைக் காத்தருள் செய்ய வேண்டும்' என்று கூறி வணங்கினேன். உடனே திடீ ரென்று அவளுடைய உருவம் மிக அழகியதாக மாறு பட்டது. அந்த ஸௌந்தரியத்தை என்னால் வருணிக்க முடியாது; அவளுடைய திருமுடியைச் சூழ்ந்து கோடி சூரியப் பிரகாசம் போன்ற தேஜோமண்டலம் காணப்பட்டது, கண்கள் அருள்மழை பொழிந்தன. அப்பொழுது தேவி எனக்கு அபயப் பிரதானம் புரிந்து பின் வருமாறு சொல்லலாயினள்:—'குழந்தாய், உனது அத்தான் கோவிந்தராஜனை எனது சேவையின் பொருட்டாக எடுத்துக்கொள்ளப் போகிறேன். உனக்கு இம்மையில் அவனைப் பெற முடியாது. நீ பிறனுக்கு மனைவியாகவும் மாட்டாய். உனக்கு இவ் வுலகத்தில் இனி எவ்வித வாழ்வுமில்லை. உங்கள் வீட்டுக் கொல்லை யில், வடமேற்கு மூலையில், தனியாக ஓர் பச்சிலை படர்ந் திருக்கக் காண்பாய். நாளைக் காலை ஸ்நானம் செய்து பூஜை முடிந்தவுடனே அதில் இரண்டு இலைகளை எடுத் துத் தின்றுவிடு, தவறாதே!' மேற்கண்டவாறு கட்டளை கொடுத்துவிட்டுப் பராசக்தி மறைந்து போயினள்.

காலையில் எழுந்து அந்தப் பச்சிலையைப் பார்க்கப் போனேன். வானத்திலிருந்து ஒரு காகம் இறங்கிற்று. அது பச்சிலையைக் கொத்தி உடனே தரையில் மாண்டு விழக் கண்டேன். தேவியின் கருத்தை அறிந்து கொண்டேன். இன்று பகல் பத்து நாழிகைக்கு, அந்த இலைகளை நான் தின்று பரலோகம் சென்றுவிடுவேன். நின் வரவை எதிர்பார்த்து அங்கும் கன்னிகையாகவே யிருப்பேன். நீ உனது தர்மங்களை நேரே நிறைவேற்றி மாதாவுக்கு திருப்தி செய்வித்த பிறகு, அவள் உன்னை நான் இருக்குமிடம் கொண்டு சேர்ப்பாள். போய்வருகிறேன். ராஜா! ராஜா! என்னை மறக்காதே. வந்தே மாதரம்!

* * *

இக்கடிதத்தைப் படித்துப் பார்த்தவுடன் மூர்ச்சைபோட்டு விழுந்துவிட்டேன்.

---

## அத்தியாயம் 3

மீனம்பாளுடைய 'மரண வோலை' கிடைத்ததின் பிறகு இரண்டு வருஷங்கள் கழிந்து விட்டன. இதனிடையே எனக்கு நிகழ்ந்த அனுபவங்களை யெல்லாம் விஸ்தாரப்படுத்திக்கொண்டு போனால் பெரிய புராணமாக வளரும். சுருக்கமாகச் சொல்லுகிறேன். அந்த ஆற்றாமையால் வெளியேறிய நான் அப்படியே காஷாய

யம் தரித்துக்கொண்டு துறவியாக வடநாட்டிலே ஸஞ்சாரம் செய்து வந்தேன். 'வந்தே மாதர' தர்மத்தை மட்டிலும் மறக்கவில்லை. ஆனால், என்னை சர்க்கார் அதிகாரிகள் பிடித்துச் சிறையிடும் படியான முயற்சிகளிலே நான் கலக்க வில்லை; ஜனங்களுக்குள் ஒற்றுமையும் பலமும் ஏற்படுத்தினால், ஸ்வதந்திரம் தானே சித்தியாகும் என்பது என்னுடைய கொள்கை. காரணத்தை விட்டுப் பயனைச் சீறுவதில் என் மனங் குவியவில்லை. அங்கங்கே சில சில பிரசாரங்கள் செய்ததுண்டு. இது பற்றி, சில இடங்களில் என்னை போலீசார் தொடரத் தலைப்பட்டார்கள். இதனால், நான் ஜனங்களிடையே நன்றாகக் கலந்து நன்மைகள் செய்துகொண்டு போக முடியாதபடி பல தடைகள் ஏற்பட்டன. ஆகவே, எனது பிரசங்கங்களிலிருந்து எனது நோக்கத்திற்கு அனுகூலத்தினும் பிரதிகூலமே அதிகமாக விளையலாயிற்று. இதையும் தவிர, எனது பிரசங்கங்களைக் கேட்டு ஜனங்கள் மிகவும் வியப்படைவதையும், மற்றவர்களைக் காட்டிலும் எனக்கு அதிக உபசாரங்கள் செய்வதையும் கண்டு, உள்ளத்திலே கர்வம் உண்டாகத் தலைப்பட்டது.

"இயற்கையின் குணங்களிலிருந்து செய்கைகள் பிறக்கின்றன. மூடன் 'நான் செய்கின்றேன்', என்று கருதுகின்றான்" என்ற பகவத் கீதை வாக்கியத்தை அடிக்கடி மனனஞ் செய்து கொண்டேன். இந்த வீண் கர்வம், நாளுக்குநாள் மிகுதியடைந்து என்னை விழுங்கி,

யாதொரு காரியத்திற்கும் பயன் படாமற் செய்து விடுமோ என்ற அச்சம் உண்டாயிற்று. வெளிக்குத் தெரியாமல் எவருடைய மதிப்பையும் சன்மானத்தையும் எதிர்பார்க்காமல் சாதரணத்தொண்டு இழைப்பதற்கு என்னை மாதா வைத்திருக்கிறாள் என்பதை அறிந்து கொண்டேன். எனவே பிரசங்கக் கூட்டங்களிற் சேரு வதை நிறுத்திவிட்டேன்; சில தினங்களுக்கப்பால், எனக்குப் போலீஸ்சேவகர்கள் செய்யும் உபசாரங்களும் நின்றுபோய்விட்டன. பாதசாரியாகவே பல இடங் களிற் சுற்றிவிட்டு, பலபல தொழில்கள் செய்துகொண்டு லாஹூர் நகரத்துக்கும் போய்ச் சேர்ந்தேன்.

அங்கே லாலா லஜபதிராய் போன்ற பலரைப் பார்க்க வேண்டுமென்ற இச்சை ஜனித்தது. அவரைப் போய்க் கண்டதில்,அவர் என்னிடம் நம்பிக்கைகொண் டவராகி, கோசல நாட்டுப் பிரதேசங்களில் கொடிய பஞ்சம் பரவியிருக்கிறதென்றும், பஞ்சத்தில் கஷ்டப் படும் ஜனங்களுக்குச் சோறு துணி கொடுக்கவேண்டு மென்ற கருத்துடன் தாம் நிதிகள் சேர்த்து வருவதாக வும், பல வாலிபர்கள் தம்மிட மிருந்து திரவியங் கொண்டுபோய்ப் பஞ்சமுள்ள ஸ்தலங்களில் இருந்து உழைத்து வருவதாகவும் தெரிவித்துவிட்டு, 'நீரும் போய் இவ்விஷயத்தில் வேலை செய்யக்கூடாதா?' என்று கேட்டார்.

ஆ! ராமச்சந்திரன் அரசு செலுத்திய நாடு! வால்

மீகி முனிவர் புகழ்ந்து போற்றிய நாடு! அங்கு, ஜனங் கள் துணியும் சோறு மில்லாமல், பதினாயிரக் கணக்கா கத் தவிக்கிறார்கள்! அவர்களுக்கு உதவி செய்யப்போ வாயா என்று என்னைக் கேட்கவும் வேண்டுமா? அவர் களெல்லோரும் எனக்கு தெய்வங்களல்லவா? அவர் களுக்கு வேண்டியன செய்ய முடியாவிட்டால், இந்தச் சதை யுடம்பை எதன் பொருட்டாக சுமக்கிறேன்? லாலாவிடம் அனுமதி பெற்றுக்கொண்டு போய்ச் சிறிது காலம் அந்தக் கடமையை செய்து கொண்டு வந்தேன். அங்கு கண்ட காட்சிகளைப் பற்றி எழுத வேண்டுமா? எழுதுகிறேன், கவனி. தேவலோகத் தைப்பற்றி கேள்வியுற்றிருக்கிறாயா? சரி. நரகத்தைப் பற்றி கேள்வியுற்றிருக்கிறாயா? சரி. தேவலோகம் நரக லோகமாக மாறியிருந்தால் எப்படித் தோன்றுமோ, அப்படித் தோன்றியது பகவான் ராமச்சந்திரன் ஆண்ட பூமி. நான் அங்கிருந்த கோரங்களை யெல்லாம் உங்களிடம் எதற்காக விரித்துச் சொல்ல வேண்டும்? புண்ணிய பூமியைப்பற்றி இழிவுகள் சொல்வதினால் ஒரு வேளை சிறிது பாவம் உண்டாகக் கூடும். அந்தப் பாவத்தைத் தவிர வேறென்ன பயன் கிடைக்கப்போகி றது? உன்னால் எனது தாய் நாட்டிற்கு என்ன பயன் கிடைக்கப்போகிறது? எழுந்திருந்து வா, பார்ப்போம் எத்தனை நாள் உறங்கி இப்படி அழியப்போகிறீர்களோ? அட பாப ஜாதியே, பாப ஜாதியே! இது நிற்க, ஓரிரண்டு மாதங்களுக்கு அப்பால், லாலா லஜபதி

ராய் எங்களுக்குக் கடிதம் எழுதி, இனி அந்தவேலை போதும் என்று கட்டளை பிறப்பித்து விட்டார்.

கோசல நாட்டுப் பிரதேசங்களில் பஞ்சத்தின் சம்பந்தமாக நான் வேலை செய்த சில மாதங்களில், ஏற்கனவே என் மனதில் நெடுங்காலமாக வேரூன்றி யிருந்த ஒரு சிந்தனை பலங்கொண்டு வளரலாயிற்று. தணிந்த வகுப்பினரின் நன்மை தீமைகளிலே, நமது நாட்டின் உயர்ந்த வகுப்பினரென்று கூறப்படுவோர் எவ்வளவு தூரம் அசிரத்தையும், அன்னியத் தன்மை யும் பாராட்டுகிறார்கள் என்பதை நோக்குமிடத்து, எனது உள்ளத்தில் மிகுந்த தளர்ச்சி உண்டாயிற்று. தென்னாட்டைப் போலவே வடநாட்டிலும், கடைசி வகுப்பினர் என்பதாகச் சிலர் கருதப்படுகின்றனர். தென்னாட்டைப் போலவே வடநாட்டிலும், இந்த வகுப்பினர் பெரும்பாலும் விவசாயத் தொழிலையே கைக்கொண்டிருக்கிறார்கள். உழவுத் தொழில் உடைய இவர்கள் சாஸ்திரப்படி வைசியர்கள் ஆக வேண்டும். ஆனால் இவர்களிலே பலர் மாட்டிறைச்சி தின்பது முதலிய அனாசாரங்கள் வைத்துக்கொண்டிருப்பதால் ஹிந்து ஜாதி இவர்களைத் தாழ்வாகக் கருதுகின்றது. ஹிந்து நாகரிகத்திலே, பசுமாடு மிகப் பிரதானமான வஸ்துக்களிலே ஒன்று. ஹிந்துக்களின் நாகரிகம் விவசாயத் தொழிலைப் பொருத்து நிற்கின்றது. விவசாயத் தொழிலுக்குப் பசுவே ஜீவன். ஆதலால்,

ஹிந்துக்கள் புராதன கால முதலாகவே கோ மாம்ஸத்தை வர்ஜனம் செய்துவிட்டார்கள். இது ஒரு சிறு பகுதி வர்ஜனம் செய்யாதிருப்பது கண்டு, ஜாதிப் பொதுமை அப் பகுதியைத் தாழ்வாகக் கருதுகின்றது. இது முற்றிலும் நியாயம். ஆனால், பஞ்சம் நோய் முதலிய பொதுப் பகைவருக்கு முன்பு, நமது உயர்வுதாழ்வுகளை விரித்துக்கொண்டு நிற்பது மடமை. தாழ்ந்த ஜாதியாரை நாம் மித மிஞ்சி தாழ்த்திவிட்டோம். அதன் பயன்களை நாம் அனுபவிக்கிறோம். "ஹிருதய மறிந்திடச் செய்திடுங் கர்மங்கள் இகழ்ந்து பிரிந்து போமோ?"

'முற்பகல் செய்யிற் பிற்பகல் விளையும்'. நாம் பள்ளர் பறையருக்குச் செய்ததை யெல்லாம், நமக்கு அன்னிய நாடுகளில் பிறர் செய்கிறார்கள். நமது சிருங்ககிரி சங்கராச்சாரியாரும், வானமாமலை ஜீயர் ஸ்வாமிகளும் நெட்டால் திரான்ஸ்வால் தேசங்களுக்குப் போவார்களானால், ஊருக்கு வெளியே சேரிகளில் வாசம் செய்ய வேண்டும். சாதாரண மனிதர்கள் நடக்கும் ரஸ்தாக்களில் நடக்கக்கூடாது. பிரத்தியேகமாக விலகி நடக்கவேண்டும். பல்லக்குகள், வண்டிகள், இவற்றைப்பற்றி யோசனையே வேண்டியதில்லை. சுருக்கம்: நாம நமக்குள்ளேயே ஒரு பகுதியாரை நீசர்களென்று பாவித்தோம்; இப்போது, நம்மெல்லோரையுமே உலகத்தார் மற்றெல்லா நாட்டினரைக் காட்டிலும் இழிந்த நீசர்களாகக் கருதுகின்றார்கள்.

நம்முள் ஒரு வகுப்பினரை நாம் தீண்டாத வகுப்பினர் என்று விலக்கினோம்; இப்போது, வேத மார்க்கஸ்தர் மகம்மதியர் என்ற இருபகுதி கொண்ட நமது ஹிந்து ஜாதி முழுதையுமே உலகம் தீண்டாத ஜாதி என்று கருதுகிறது. உலகத்தில் எல்லா ஜாதியாரிலும் வகுப்புகள் உண்டு. ஆனால் தீராத பிரிவுகள் ஏற்பட்டு ஜாதியை துர்பலப்படுத்தி விடுமானால், அதிலிருந்து நம்மைக் குறைவாக நடத்துதல் அன்னியர்களுக்கு எளிதாகிறது. ஊர் இரண்டுபட்டால் கூத்தாடிக்கு கொண்டாட்டம்.

1200 வருஷங்களுக்கு முன்பு, வடநாட்டிலிருந்து மகம்மதியர்கள் பஞ்சாப் நாட்டில் பிரவேசித்த போது நம்மவர்களின் இமிசை பொறுக்கமுடியாமல் வருந்திக் கொண்டிருந்த ப்ள்ளர் பறையர் பேரிகை கொட்டி, மணிகள் அடித்துக்கொண்டுபோய் எதிரிகளுக்கு நல்வரவு கூறி அவர்களுடன் கலந்து கொண்டதாக இதிகாசம் சொல்லுகின்றது. அப்போது நமது ஜாதியைப் பிடித்த நோய் இன்னும் தீராமலிருக்கிறது. பஞ்சத்தில் பெரும்பாலும் பள் பறை வகுப்பினரே மடிந்து போகிறார்கள். இதைப்பற்றி மேற்குலத்தார்கள் வேண்டிய அளவு சிரத்தை செலுத்தாமலிருக்கின்றனர். எங்கிருந்தோ வந்த ஆங்கிலேயப் பாதிரிகள் பஞ்சம் பற்றிய ஜனங்களுக்குப் பலவித உதவிகள் செய்து, நூற்றுக்கணக்கான மனிதர்களையும், முக்கிய

மாக திக்கற்ற குழந்தைகளேயும், கிறிஸ்து மதத்திலே சேர்த்துக்கொள்ளுகிருர்கள். ஹிந்து ஜனங்களின் தொகை வருஷந்தோறும் அதிபயங்கரமாகக் குறைந்துக்கொண்டு வருகிறது. மடாதிபதிகளும், ஸந்நிதானங்களும் தமது தொந்தி வளர்வதை ஞானம் வளர்வதாகக் கொண்டு ஆனந்த மடைந்து வருகின்றனர். ஹிந்து ஜனங்கள்! ஹிந்து ஜனங்கள்! நமது இரத்தம், நமது சதை, நமது எலும்பு, நமது உயிர்—ஹிந்துஸ்தானத்து ஜனங்கள்—ஏனென்று கேட்பாரில்லாமல் பசிப்பிணியால் மாய்ந்து போகின்றனர்.

கோ மாமிசம் உண்ணுதபடி அவர்களேப் பரிசுத்தப்படுத்தி, அவர்களே நமது ஸமூகத்திலே சேர்த்து அவர்களுக்குக் கல்வியுந் தர்மமுந் தெய்வமும் கொடுத்து நாமே ஆதரிக்க வேண்டும். இல்லாவிட்டால், அவர்களெல்லோரும் நமக்குப் பரிபூர்ண விரோதிகளாக மாறி விடுவார்கள். இந்த விஷயத்திலே எனது சிறிய சக்திக்கு இயன்றவரை முயற்சிகள் செய்யவேண்டும் என்ற அவா எனது உள்ளத்தில் வளரலாயிற்று. வங்க நாட்டில் அசுவினி குமார தத்தர் என்ற தேச பக்தர் ஒருவர் இருப்பதாகவும், அவர் அந்த பிரதேசங்களில் 'நாம சூத்திரர்' (பெயர் மட்டில் சூத்திரர்) என்று கூறப்படும் பள்ளர்களே ஸமூக வரம்பினுள்ளே சேர்த்து உயர்வுபடுத்த முயற்சிகள் செய்வதாகவும் கேள்விப்பட்டேன். அவரைப் பார்க்க ஆசை உண்டாயிற்று.

## அத்தியாயம் 4.

கல்கத்தாவுக்கு வந்து சில தினங்கள் இருந்து விட்டு பாரிஸாலுக்குப் போய்ச் சேர்ந்தேன். அங்கு போய், வழி விசாரணை செய்துகொண்டு அசுவினிகுமார தத்தருடைய வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தேன். வீட்டு வாயிலில் ஒரு வங்காளி பாபு நின்றுகொண் டிருந்தார். அவரிடம் "அசுவினி பாபு இருக்கிறாரா?" என்று கேட்டேன். "இல்லை, நேற்றுத் தான் புறப்பட் டுக் காசிக்குப் போயிருக்கிறார்" என்றார். "அடா?" என்று சொல்லி திகைத்து நின்றேன். காஷாய உடை யைக் கண்ட அந்த பாபு உபசார மொழிகள் கூறி உள்ளே அழைத்துப்போய், தாகசாந்தி செய்வித்து விட்டு, 'யார்' 'எவ்விடம்' என்பதையெல்லாம் விசா ரணை செய்தார். நான் எனது விருத்தாந்தமெல்லாம் தெரிவித்துவிட்டு, என் மனதிலிருந்த நோக்கத்தையும் சொன்னேன். "பாரும், பாபு, நம்மில் ஆறில் ஒரு பங்கு ஜனங்களை நாம் தீண்டாத ஜாதியாக வைத்தி ருப்போமானால், நமக்கு ஈசன் நல்ல கதி கொடுப் பாரா?" என்று என் வாயிலிருந்து வாக்கியம் கேட்ட வுடனே அவர் முகத்தில் மிகுந்த வருத்தம் புலப் பட்டது. முகத்தைப் பார்த்தால் கண்ணீர் ததும்பி விடும்போலிருந்தது. தீண்டாத வகுப்பினரின் நிலையைக் கருதித்தான் இவ்வளவு பரிதாப மடைகிறார் போலும் என்று நான் நினைத்து, "ஐயா, உம்முடைய நெஞ்சு போல் இன்னும் நூறு பேருடைய நெஞ்சு இருக்குமா னால் நமது நாடு செம்மைப்பட்டுவிடும்" என்றேன்.

"ஸ்வாமி, தாங்கள் நினைக்கிறபடி அத்தனை கருணையுடைய நெஞ்சம் எனக்கு இன்னும் மாதா அருள் புரியவில்லை. ஹீன ஜாதியாரைக் காக்கவேண்டும் என்ற விஷயத்தில் எனக்கு கொஞ்சம் சிரத்தை யுண்டு என்பது மெய்யே. அசுவினி பாபுவுடன் நானும் மேற்படி வகுப்பினருக்கு நன்மை செய்வதில் சிறிது உழைத்திருக்கிறேன். ஆயினும், என் முகத்தில் தாங்கள் கவனித்த துக்கக் குறி நம்மில் ஆறிலொரு பங்கு ஜனங்கள் இப்படி அவலமாய் விட்டார்களே என்பதைக் கருதி ஏற்பட்டதன்று. தாங்கள் சொன்ன வாக்கியம் சில தினங்களுக்கு முன்பு இங்கு வந்திருந்த ஒரு மந்த்ராஜி* யம்மாளின் வாயிலிருந்து அடிக்கடி வெளிவரக் கேட்டிருக்கிறேன். தாம் அது சொன்னவுடனே எனக்கு அந்த அம்மாளின் நிலை ஞாபகம் வந்தது. அவளுடைய தற்கால ஸ்திதியை நினைத்து வருத்தமுண்டாயிற்று. அடடா! என்ன குணம்! என்ன வடிவம்! இவ்வளவு பாலியத்திலே நமது தேசத்தினிடம் என்ன அபரிமிதமான பக்தி!" என்று சொல்லி திடுக்கென்று பேச்சை நிறுத்திவிட்டார். அப்பால் என் முகத்தை ஓரிரண்டு தடவை நன்றாக உற்று நோக்கினார். அவருடைய பெயர் ஸதீச சந்திர பாபு என்பதாக ஏற்கனவே சொல்லி யிருக்கிறார்.

* 'மந்த்ராஜியம்மாள்' என்பது 'மதராஸ் பிரதேசத்து ஸ்திரீ' என்று பொருள்படும். 'மதராஸ்' என்பதற்கு வடநாட்டார் 'மந்த்ராஜ்' என்பார்கள்.

"ஸதீச பாபு, ஏன் இப்படிப் பார்க்கிறீர்?" என்று கேட்டேன்.

"ஸ்வாமீஜீ, க்ஷமித்துக்கொள்ளவேண்டும். நீங்கள் ஸந்யாஸி. எந்த தேசத்தில் பிறந்தவரென்பதைக் கூட நான் இன்னும் தெரிந்துகொள்ளவில்லை. ஆயினும், உங்கள் முகத்தைப் பார்க்கும்பொழுது, அதில் எனக்கு அந்த யுவதியின் உருவம் கலந்திருப்பது போலத் தோன்றுகிறது. உங்களிருவருடைய முகமும் ஒன்று போலிருப்பதாக நான் சொல்லவில்லை. உங்கள் முகத்தில் எப்படியோ அவளுடைய சாயல் ஏறியிருப்பது போலத் தோன்றுகிறது" என்றார்.

மதராஸ் பக்கத்து யுவதி என்று அவர் சொன்னவுடனேயே என் மனதில் ஏதோ ஒருவிதமான பதை பதைப்பு உண்டாயிற்று. அதன் பின்னிட்டு, அவர் சொல்லிய வார்த்தைகளைக் கேட்டவுடன், அந்த பதை பதைப்பு மிகுதியுற்றது. ஸந்யாஸி உடை தரித்து இருந்தேன். நெடுநாளாகத் துறவையே ஆதரித்து வந்திருக்கிறேன். வேஷத்தி லென்னடா இருக்கிறது, கோவிந்தா, வேஷத்திலென்ன இருக்கிறது?

"மீனம்பா?—அட, போ! மீனம்பாள் இறந்து போய் இரண்டு வருஷங்களுக்கு மேலாகிறதே?........ ஐயோ, எனது கண்மணி என்ன கஷ்டத்துடன் இறந்தாள்?......" என்பதாக, ஒரு க்ஷணத்திலே மனப் பேய் ஆயிரம் விதமாகக் கூத்தாடிற்று.

"ஸதீச பாபு! நானும் மதராஸ் பக்கத்திலே ஜனித்தவன் தான். நீர் சொல்லிய யுவதியைப்பற்றிக் கேட்கும்போது, எனக்குத் தெரிந்த மற்றொரு பந்துவைப் பற்றி ஞாபகம் வருகிறது. நீர் சொல்லிய பெண் யார்? அவள் பெயரென்ன? அவள் இப்போது எங்கே இருக்கிறாள்? அவள் இங்கே என்ன நோக்கத்துடன் வந்திருந்தாள்? அவளுடைய தற்கால ஸ்திதியைக் குறித்து உமக்கு வருத்தமுண்டாவதேன்? அவளுக்கு இப்போது என்ன கஷ்டம் நேரிட்டிருக்கிறது? எனக்கு எல்லாவற்றையும் விவரமாகத் தெரிவிக்க வேண்டும்" என்றேன்.

கதையை விரிக்கத் தொடங்கினார் ஸதீச சந்திர பாபு. ஒவ்வொரு வாக்கியமும் என் உள்ளத்திலே செந்தீ கனலும் இரும்புத் துண்டுகளை எறிவதுபோல விழுந்தது. அவர் சொல்லிய கதையினிடையே என்னுள்ளத்தில் நிகழ்ந்தனவற்றையெல்லாம் இடையிட்டுக் கொண்டு போனால் படிப்பவர்களுக்கு விரஸமாயிருக்கும் என்று அஞ்சி, இங்கு அவர் சொல்லிய விஷயங்களை மட்டிலும் குறிப்பிடுகிறேன். என் மனத் ததும்புதல்களை படிப்பவர்கள் தாமே ஊகத்தாற் கண்டு கொள்ள வேண்டும். ஸதீச பாபு சொல்லலாயினர்:—

"அந்த யுவதிக்குத் 'தாஞ்சோர்'. அவள் பெயர் எனக்குத் தெரியாது. நாங்கள் எல்லோரும் அவளை 'தீன மாதா' என்ற பெயர் சொல்லி யழைப்போம். அவளுடைய உண்மைப் பெயர் அசுவினி பாபுவுக்கு.

மாத்திரந் தான் தெரியும். ஆனால், அந்த தேவியின் சரித்திரத்தை எங்களுக்கு அசுவினி பாபு அடிக்கடி சொல்லியிருக்கிறார். அதை உம்மிடம் சொல்லுகிறேன், கேளும். அவள் ஒரு போலீஸ் பென்ஷன் உத்தியோகஸ்தருடைய குமாரியாம். அவளது அத்தை மகனாகிய ஒரு மந்த்ராஜ் நகரத்து வாலிபனுக்கு அவளை விவாகம் செய்து கொடுக்கவேண்டுமென்று தீர்மானம் செய்யப்பட்டிருந்ததாம். அவ் வாலிபன் 'வந்தே மாதரம்' கூட்டத்திலே சேர்ந்துவிட்டான். அதிலிருந்து, அவள் தகப்பன் அவளை வேறொரு போலீஸ் உத்தியோகஸ்தனுக்கு மணம் புரிவிக்க ஏற்பாடு செய்தான். கடைசித் தருணத்தில், அவள் கனவில் ஏதோ தெய்வத்தின் கட்டளைபெற்று ஒரு பச்சிலையைத் தின்றுவிடவே, அவளுக்கு பயங்கரமான ஜ்வர நோய் கண்டு விவாகம் தடைப்பட்டுப் போய்விட்டது. அப்பால், தகப்பனாரும் இறந்து போய்விட்டார். இதனிடையே அவளுடைய காதலனாகிய மந்த்ராஜ் வாலிபன், என்ன காரணத்தாலோ, அவள் இறந்துவிட்டதாக எண்ணி, ஸந்யாஸம் வாங்கிக்கொண்டு வெளியேறி விட்டானாம்—"

"ஏழை மனமே, வெடித்துப்போய் விடாதே. சற்றுப் பொறு" என்று என்னால் கூடியவரை அடக்கிப் பார்த்தேன். பொறுக்க முடியவில்லை. "ஐயோ, மீனா! மீனா!" என்று கூவினேன். பிறகு "ஸதீச பாபு, அவளுக்கு இப்போது என்ன கஷ்டம் நேரிட்டிருக்கிறது? சொல்லும், சொல்லும்" என்று நெரித்தேன்.

ஸதீச சந்திரருக்கு உளவு ஒருவாறு துலங்கிவிட்டது, "இப்போது ஒன்றுமில்லை. ஸௌக்கியமாகத் தானிருக்கிறாள்" என்றார்.

"இல்லை யில்லை. என்னிடம் நீர் உண்மை பேசத் தயங்குகிறீர். உண்மை தெரிந்தால் நான் மிகத் துன்பப்படுவேன் என்று எண்ணி நீர் மறைக்கிறீர். இதுவே என்னை நரகவேதனைக்கு உட்படுத்துகிறது. சொல்லி விடும். சொல்லிவிடும்" என்று வற்புறுத்தினேன்.

மறுபடியும் ஸதீச பாபு ஏதோ பொருளற்ற வார்த்தைகளைப் போட்டுக் குழப்பி எனக்கு சமாதான வசனம் சொல்லத் தலைப்பட்டார்.

"பாரத தேவியின் ஹிருதயத்தின் மீதும், பகவத் கீதையின் மீதும் ஆணையிட்டிருக்கிறேன். என்னிடம் உண்மையை ஒளியாமற் சொல்லும்" என்றேன். இந்த சத்தியம் நவீன வங்காளத்தினரை எவ்வளவு தூரம் கட்டுப்படுத்தும் என்பது எனக்குத் தெரியும். இங்ஙனம் நான் ஆணையிட்டதிலிருந்து, அவருக்குக் கொஞ்சம் கோபம் உண்டாயிற்று.

"போமையா, மூட ஸந்யாஸி. என்ன வார்த்தை சொல்லிவிட்டீர்! இதோ உண்மை தெரிவிக்கிறேன்; கேட்டுக்கொளும். அந்தப் பெண், இங்கு நாம சூத்திரர்களைப் பஞ்சத்திலிருந்து மீட்கப் பாடுபட்டதில், தீராத குளிர் ஜ்வரங் கண்டு, வைத்தியர்கள் சமீபத்தில்

இறந்துவிடுவாள் என்று சொல்லி விட்டனர். அதற்கு மேல், அவள் காசியில் போய் இறக்க விரும்பியது பற்றி, அசுவினி பாபு அவளைக் காசிக்கு அழைத்துச் சென்றிருக்கிறார். உண்மை சொல்லிவிட்டேன், போம்'' என்றார்.

''காசிக்கா?''

''ஆம்.''

''காசியில் எங்கே?''

''அஸீ கட்டத்தில்.''

''அஸீ கட்டத்தில் எந்த இடம்?''

''அஸீக்கு தெற்கே 'நர்வா' என்ற இடமிருக்கிறது. அதில் பல தோட்டங்களும் பங்களாக்களும் உண்டு. அதில் தைப்பூர் மஹாராஜா பங்களாவில் அசுவினி பாபு இறங்கியிருக்கிறார்.''

''ரயில் செலவுக்கு பணம் கொடும்'' என்றேன். ஒரு பத்து ரூபாய் நோட்டை எடுத்து வீசியெறிந்தார். மானத்தைக் கண்டதார், மரியாதையைக் கண்டதார்? அங்கிருந்து அந்த க்ஷணமே வெளியேறிவிட்டேன். வழியெல்லாம் தின்பதற்கு நெஞ்சத்தையும் அருந்துவதற்குக் கண்ணீரையுமே கொண்டவனாய்க் காசிக்குப் போய்ச் சேர்ந்தேன்.

---

## அத்தியாயம் 5.

காசியில் ஹனுமந்த கட்டத்திலே எனக்குத் தெரிந்தவர்கள் இருக்கிறார்கள். எனது நண்பர் ஒருவருடைய பந்துக்கள் அங்கு வாசஞ் செய்கின்றனர். இதைப் படிக்கும் தமிழர்கள் காசிக்குப் போயிருப்ப

துண்டானால், நான் சொல்லப் போகிற இடம் அவர்களுக்குத் தெளிவாகத் தெரியும். தமிழர்களெல்லோரும் பெரும்பாலும் ஹனுமந்த கட்டத்திற்கே போய் இறங்குவதுண்டு. அங்கு கீழ்மேற் சந்து ஒன்றிருக்கிறதல்லவா? அதில் கிழ மேற்கு மூலையிலிருந்து மூன்றும் வீடு. அந்த வீட்டிற்கு சிவமடம் என்று பெயர். யாத்திரைக்காரர்கள் போய் இறங்கக் கூடிய வீடுகளை காசியிலே மடங்கள் என்கிறார்கள். சிவமடத்தில் போய் இறங்கி ஸ்நானம் செய்துவிட்டு, மடத்தார் கொடுத்த ஆகாரத்தை உண்டபிறகு, அப்பொழுதே அந்த மடத்துப் பிள்ளைகளில் ஒருவரைத் துணைக்கு அழைத்துக்கொண்டு நர்வா கட்டத்திற்கு போனேன். அங்கே தாய்ப்பூர் ராஜா பங்களா எது என்று விசாரித்து, பங்களாவிற்குப் போய்ச் சேரும்போது இரவு ஏழு மணி யாகிவிட்டது. வாயிலில் ஒரு குதிரை வண்டி வந்து நின்றது. அந்த வண்டி புறப்படுந் தருவாயில் இருந்தது. வண்டியின் மேல் ஆங்கிலேய உடை தரித்த ஒரு வங்காளி உட்கார்ந்து கொண்டிருந்தார் வண்டிப் பக்கத்திலே ஒரு கிழவரும் வேறு சிலரும் நின்றுகொண்டிருந்தார்கள். அசுவினி குமார தத்தரின் படத்தை நான் பல இடங்களில் பார்த்திருக்கிறபடியால், அந்தக் கிழவர்தான் அசுவினி பாபு என்று தெரிந்து கொண்டேன். நான் போனவுடனே, அசுவினி பாபு பக்கத்திலிருந்த மனிதனை நோக்கி, "யாரோ ஒரு ஸந்யாசி வந்திருக்கிறார். அவரைத் தாழ்வாரத்தில்

வரச்சொல். நான் இதோ வருகிறேன்'' என்றார். தாழ்வாரத்தில் போட்டிருந்த இரண்டு நாற்காலிகளில் நானும் என்னுடன் வந்திருந்த வாலிபனும் போய் உட்கார்ந்தோம். அசுவினி பாபுவும் வண்டிக்குள்ளிருந் தவரும் பேசியது என் செவியில் நன்றாக விழுந்தது.

அசுவினிபாபு:—"டாக்டர் ஸாஹப்! நேற்றைக் காட்டிலும் இன்று சிறிது குணப்பட்டிருப்பதாகவே எனக்குத் தோன்றுகிறது. தமது கருத்தென்ன?''

டாக்டர்:— "மிகவும் துர்ப்பல நிலையிலேதான் இருக்கிறாள். இன்னும் இருபத்திநான்கு மணி நேரம் இருப்பது கஷ்டம். அந்த நேரம் தப்பினால், பிறகு விபத்தில்லை'' என்றார்.

காதில் விஷந்தடவிய தீயம்பு போல இந்த வார்த்தை கேட்டது; "மீனா! மீனா! மீனா!'' என்று அலறினேன். வண்டி புறப்பட்டுவிட்டது. அதற்குள், நான் என்னை மீறி அலறிய சத்தம் கேட்டு, அசுவினி பாபுவும் அவரைச் சேர்ந்தவர்களும் நான் இருந்த பாரிசமாக விரைந்து வந்தார்கள். அவர் வருதல் கண்டு, நான் மனதை ஒருவாறு தேற்றிக்கொண்டு எழுந்து நின்று வணங்கினேன். அவர், "ஸ்வாமிக்கு எவ்விடம்? இங்கு வந்த கருத்தென்ன? ஏன் சத்தம் போட்டீர்கள்?'' என்று ஹிந்துஸ்தானி பாஷையிலே கேட்டார்.

"பாபு, நான் ஸந்யாஸியல்ல. நான் திருடன்,

நான் மஹாநிர்பாக்கியமுடைய பாவி. மீனம்பாள் தம்மிடம் கோவிந்தராஜன் என்ற பெயர் சொல்லியிருப்பாளல்லவா? அந்தப் பாவி நான்தான்" என்றேன்.

உடனே அவர் என்னை மேன்மாடத்திலுள்ள ஒரு அறைக்குத் தனியாக அழைத்துச் சென்றார். அங்கு என்னை நோக்கி, "நேற்றெல்லாம் நான் உம்மை அடிக்கடி நினைத்துக்கொண்டிருந்தேன். நீர் இங்கு வரக்கூடும் என்ற சிந்தனை எனக்கு அடிக்கடி தோன்றிக்கொண்டிருந்தது" என்றார்.

பிறகு என்னிடம் "கிழக்கு முகமாகத் திரும்பி உட்காரும்" என்றார். அப்படியே உட்கார்ந்தேன். "கண்ணை மூடிக்கொள்ளும்" என்றார். இரண்டு கண்களையும் மூடிக்கொண்டேன். பிறகு எனது நெற்றியைக் கையாலே தடவி ஏதோ முணுமுணுத்துக் கொண்டிருந்தார். எனக்கு உறக்கம் வருவது போலிருந்தது. 'அடடா! இன்னும் மீனம்பாளைப் பார்க்கவில்லை. எனது உயிரினுமினியாள் மரணாவஸ்தையிலிருக்கிறாள். அவளைப் பார்க்கும் முன்பாக உறக்கம் வருகிறதே. இவர் என்னை ஏதோ மாயமந்திரத்துக்கு உட்படுத்துகிறார். எனது பிராணரத்தினத்தைப் பார்க்காதபடி கெடுத்துவிட முயலுகிறார். இந்த மாயைக்கு உட்படலாகாது. கண் விழித்து எழுந்து நின்று விடவேண்டும் என்று சங்கற்பம் செய்து கொண்டு, எழுந்து நிற்க முயன்றேன். "ஹூம்" என்றொரு சத்தம் கேட்

டது; விழித்து விழித்துப் பார்க்கிறேன்; கண்ணைத் திறக்க முடியவில்லை. மயக்கம் மென்மேலும் அதிகப் பட்டது. அப்படியே உறங்கி விழுந்துவிட்டேன்.

விழித்த பிறகு, நான் இரண்டு நாள் உறங்கிக் கிடந்ததாகத் தெரிந்தது; பக்கத்திலிருந்த சேவகன் சொன்னான். "மீனா எங்கே? மீனா சௌக்கியமாயிருக் கிறாளா?" என்று அந்தச் சேவகனிடம் கேட்டேன். "எனக்கு ஒன்றுமே தெரியாது" என்று மறுமொழி கூறினான். சாதாரணமாக எப்போதும் போல இருந் தேனாயின். அந்தச் சேவகனை உதைத்துத் தள்ளி, இடையில் வந்தவர்களை யெல்லாம் வீழ்த்திவிட்டு, மீனா ளிருக்குமிடம் ஓடிப்போய் பார்த்திருப்பேன். ஆனால் இந்த நேரம் என்னுடலில் மிகுந்த அயர்வும், உள்ளத் தில் மிகுந்த தெளிவும், அமைதியும் ஏற்பட்டிருந்தன. மனதிலிருந்த ஜ்வரமும் நீங்கிப்போயிருந்தது. 'பாரி ஸால் கிழவன்' செய்த சூது என்று தெரிந்துகொண் டேன். அரை நாழிகைக் கெல்லாம், அசுவினி பாபு தாமே நானிருந்த அறைக்குள் வந்து, என் எதிரே ஒரு நாற்காலியின் மீது வீற்றிருந்தார். என்னை அறியா மல், எனது இரண்டு கைகளும் அவருக்கு அஞ்சலி புரிந்தன.

"ஓம்" என்று கூறி ஆசீர்வாதஞ் செய்தார். "பால ஸந்யாஸி, கபடஸந்யாஸி, அர்ஜுன ஸந்யாஸி, உன் பக்கம் சீட்டு விழுந்தது" என்றார். மீனா பிழைத்து ட்டாள் என்று தெரிந்து கொண்டேன்.

"முற்றிலும் சௌக்கியமாய் விட்டதா?" என்று கேட்டேன்.

"பூரணமாக சௌக்கியமாய் விட்டது. இன்னும் ஓரைம்பது வருஷத்திற்கு சமுத்திரத்திலே தள்ளினாலும் அவளுக்கு எவ்விதமான தீங்கும் வரமாட்டாது" என்றார்.

"அப்படியானால் நான் போகிறேன், அவள் இறந்து போகப்போகிறாள் என்ற எண்ணத்தினாலே தான் என் விரதத்தைக் கூட மறந்து, அவளைப் பார்ப்பதற்காகப் பறந்தோடி வந்தேன். இனி, அவளைப்பார்த்து அவளுடனிருக்க வேண்டும் என்ற எண்ணம் எனக்கில்லை. நான் போய் வருகிறேன்" என்று சொன்னேன்.

அசுவினி பாபு கடகட வென்று சிரித்துவிட்டு, பக்கத்திலிருந்த சேவகனை நோக்கி, "இவருக்குக் கொஞ்சம் பால் கொணர்ந்து கொடு" என்று ஏவினார். அவன் முகம் கழுவ நீரும் அருந்துவதற்குப் பாலும் கொணர்ந்து கொடுத்தான். அசுவினி குமாரர் அந்தப் பாலை விரலால் தீண்டி என்னிடம் கொடுத்தார். அந்தப் பாலை உட்கொண்டவுடனே, திருக்குற்றாலத்து அருவியில் ஸ்நானம் செய்து முடித்ததுபோல், எனது உடலிலிருந்த அயர்வெல்லாம் நீங்கிப்போய் மிகுந்த தெளிவும் சௌக்கியமும் அமைந்திருக்கக் கண்டேன்.

"இப்பொழுது என்ன சொல்லுகிறாய்? புறப்பட்டுப்போகிறாயா?" என்று அசுவினி பாபு புன்னகையுடன் கேட்டார்.

"அவளை ஒரு முறை பார்த்துவிட்டு, அவளிடம் விடை பெற்றுக்கொண்டு செல்லுகிறேன்" என்றேன்.

திடீரென்று அசுவினிபாபுவின் முகத்தில் இருந்த புன்னகை மாறி சிரத்தா ரூபம் தோன்றியது. அப்பால் என்னிடம், "மகனே, நீ மீனம்பாளை மணஞ் செய்துகொள்வாய். நீங்களிருவரும் சேர்ந்துவாழ்ந்து, முற்காலத்தில் ரிஷியும் ரிஷிபத்தினியுமாக வேத யக்ஞம் செய்ததுபோல, உங்கள் வாழ்நாள் முழுதும் மாதாவின் ப்ரீத்யர்த்தமாக ஜீவயக்ஞம் புரியக்கடவீர்கள்" என்றார்.

"காளி தேவியின் கட்டளை என்னுகிறது?" என்று கேட்டேன். இந்த ஜன்மத்தில் 'நீ கோவிந்தராஜனை மணஞ்செய்துகொள்ளலாகாது' என்று காளி தேவி மீனளுக்கு கூறி, அவளை விஷம் தின்னும்படியாகக் கட்டளையிட்ட செய்தியை அவருக்கு நினைப்புறுத்தினேன்.

அதற்கு அவர், 'அந்தச் செய்தியை யெல்லாம் நான் அறிவேன். மஹாசக்தியின் கட்டளையை மீனம்பாள் நன்கு தெரிந்து கொள்ளாமல் உனக்குக் கடிதம் எழுதிவிட்டாள். மீனம்பாளுடைய ஜன்மம் மாறுபட வேண்டுமென்று அம்மை சொல்லியதன் பொருள் வேறு. அவள் பச்சிலே தின்னும்படி கட்டளை யிட்டது மீனம்பாளுக்கு ஜ்வரமுண்டாய் தந்தை எண்ணிய விவாகம் தடைப்படும்பொருட்டாகவே. அதற்கு

முன்பு அவளுடைய ஜன்மம் வேறு; அதற்கப்பால் அவளுடைய ஜன்மம் வேறு; மாதா தெளிவாகத் தான் சொல்லினள். ஆனால், மீனம்பாள் தனக்கு வேண்டாத ஒருவனுடன் விவாகம் நடக்கப்போகிறது என்ற தாபத்தால் படபடப்புண்டாகி, உனக்கு ஏதெல்லாமோ எழுதிவிட்டாள். நீயும் அவசரப்பட்டுக் காஷாயம் தரித்துக்கொண்டுவிட்டாய். உனக்கு ஸந்யாஸம் குருவினால் கொடுக்கப்படவில்லை. ஆயினும், இதுவெல்லாம் உங்களிருவருடைய நலத்தின் பொருட்டாகவே ஏற்பட்டது. உங்களிருவருக்கும், பரிபூரணமான ஹிருதய சுத்தி உண்டாவதற்கு இப்பிரிவு அவசியமாயிருந்தது. இப்பொழுது நான் போகிறேன். இன்று மாலை நான்கு மணிக்கு, பூஞ்சோலையிலுள்ள லதா மண்டபத்தில், மீனம்பாள் இருப்பாள். உன் வரவிற்குக் காத்திருப்பாள்'' என்று சொல்லிப் போய்விட்டார்.

மாலைப் பொழுதாயிற்று. நான் ஸந்யாஸி வேஷத்தை மாற்றி, எனது தகுதிக்கு உரிய ஆடை தரித்துக் கொண்டிருந்தேன். பூஞ்சோலையிலே லதா மண்டபத்தில் தனியாக நானும் எனது உயிர் ஸ்திரீ ரூபங்கொண்டு பக்கத்தில் வந்து வீற்றிருப்பது போலத் தோன்றியவளுமாக இருந்தோம். நான்கு இதழ்கள் கூடின. இரண்டு ஜீவன்கள் மாதாவின் ஸேவைக்காக லயப்பட்டன. பிரகிருதி வடிவமாகத் தோன்றிய மாதாவின் முகத்திலே புன்னகை காணப்பட்டது.

வந்தே மாதரம்.

---

## குணமது கைவிடேல்

சுதேசிய முயற்சி நாட்டிலே தோன்றிய பிறகு பல விஷயங்களில் குணங் கண்டிருக்கிறோம். கைத்தொழில் அபிவிருத்தி, தேசீய வர்த்தகம், ஜனஐக்கியம், சுய பாஷைகளின் வளர்ச்சி முதலிய பல அம்சங்களிலே கைகண்ட பலன் பார்த்திருக்கிறோம். இதை நாம் இன்னும் எத்தனைக் கெத்தனை ஆவலுடன் பரிபாலித்து வருகிறோமோ அத்தனைக் கத்தனை நாடு பல விதங்களிலேயும் க்ஷேமப்பட்டு வரும்.

ஆனால், சென்ற சில வருடங்களாக ஆங்கிலேய அதிகாரிகளிலே சில சில்லரை உத்தியோகஸ்தர்கள் தம்மவர்களாகிய ஆங்கிலேய வர்த்தகர்களுக்கு இதனால் நஷ்டமும் தமக்கே சில அசௌகரியங்களும் உண்டாவது கருதி, இதைச் சில தப்பான வியாஜங்களைச் சொல்லி அடக்கிவிடப் பார்க்கிறார்கள். ஆட்டுக் குட்டியைத் தின்ன விரும்பிய ஓநாய், "ஏ ஆட்டுக்குட்டியே, நீ என்னைத் திட்டினாயாமே" என்று கேட்ட கதை போல, இந்த ஆங்கிலேய உத்தியோகஸ்தர்கள், நம்மை இராஜ துராகிகளென்று பொய்க்குற்றஞ் சார்த்தித் தண்டனைகள் செய்து நமது காரியத்தைக் கெடுத்து விடப் பார்க்கிறார்கள். இங்ஙனம் ஆங்கிலேய அதிகாரிகளிலே பலர் பொய்யான கோப நடிப்பு நடித்துக் கொண்டு நம்மவர்களிலே சில முதல்வர்களுக்கு மிருகத்தனமான தண்டனைகள் விதித்து விட்டதினின்றும், கிராமாந்தரங்களிலே சாமான்ய ஜனங்கள் சிலர்

சுதேசியம் என்று சொன்னாலே ராஜாங்கத்தாருக்கு விரோதமாகலாம் என்றெண்ணி நடுநடுங்கி, தமது மனத்திற்குள்ளே நமது தர்மத்தில் அபிமானங் கொண்டவர்களாயிருந்தாலும் அச்சத்தினால் வெளிக்கு அசிரத்தை காண்பிக்கிறார்கள்.

இது நிஷ்காரணமான பயம், அவசியமற்ற மூடத் தனம். "வந்தேமாதரம்" (தாயை வணங்குகிறேன்) என்பது எந்தச் சட்டத்திற்கு விரோதம்? உள்நாட்டு சாமான்களையே கிரயத்துக்கு வாங்குவேன் என்ற விரதம் செய்துகொண்டால் எவனுடைய சட்டத்திற்கு விரோதம்? என் பணம், அதைக் கொடுத்து எனக்கு இஷ்டமான சாமான் வாங்கிக் கொள்ளுகிறேன். இதில் ராஜாங்கத்தார் ஏன் தலையிட வேண்டும்? கள் சாராயம் நாட்டிலே பரவாமல் தடுப்பதற்கு, ஆங்கிலேய ராஜாங்கத்தார் யாதொரு உதவியுஞ் செய்யாமல் தீர்வை லாபத்தைக் கருதி மதுபானத்தைப் பரவச் செய்துகொண்டு வருகிறார்கள். எத்தனையோ சீர்திருத்தச் சங்கத்தார்கள் (சுதேசிகள் மட்டுமல்ல, மாக்னிக்கல், சாமுவேல், ஸ்மித் முதலிய பல ஆங்கிலேயர்களுங்கூட) இது கூடாதென்று முட்டி முட்டிப் பார்த்தும், ஆங்கிலேய கவர்ன்மெண்டார் சிறிதேனும் கவனிக்காமலிருக்கிறார்கள்.

இப்படியிருக்க, என் தேசத்துக் கைக்கோளர்கள் செய்த துணிகளை நான் எனது நாட்டிலே பரவச் செய்வேன் என்றால், இது ராஜாங்கத்தாருக்குப் பெரிய

விரோதமாகவா போய்விடும்? எனது குழந்தைகள் எனது மூதாதைகளைப்பற்றியும் எனது தேசச் சரித்திரத்தைப் பற்றியும் ஒன்றுமே தெரியாமல், நான் நம்பும் வேதங்கள் சாஸ்திரங்கள் முதலியவற்றின் பெருமையை அறியாமல், ஜீவனத்திற்கு வேண்டிய கைத்தொழில்களைப் பற்றி ஏதுமே கற்றுக் கொள்ளாமல், மனிதர்களைப் "போனகிராப்" பெட்டிகளாகச் செய்யும் நாசகரமான கல்வி கற்கும்படி செய்து அவர்களைக் கெடுக்கமாட்டேன். ஜாதீயப் பாடசாலைகளுக்கு அனுப்பி ஐரோப்பியக் கல்வியிலே பிரயோஜனகரமான அம்சத்தை மட்டும் கற்றுக்கொள்ளும்படி செய்து எனது தேசத்து ஞானமும் என் குழந்தைகளுக்கு ஏற்படும்படி செய்வேன். இதில் சட்டத்திற்கு என்ன கஷ்டம் சம்பவித்து விட்டது?

இனிப் பணச்செலவு மிகுதியாவதை உத்தேசித்து எங்கள் வியாஜ்ஜியங்களைப் பஞ்சாயத்துக்கள் மூலமாகத் தீர்த்துக் கொண்டால் எந்தச் சட்டத்திற்கு விரோதம்?

எனது தகப்பன் காலத்தில் எங்களவர்களுக்கு இருந்த தேக பலமும், சௌகரியமும், தீர்க்காயுளும் இந்தத் தலைமுறையிலே ஏன் இல்லை? நாளுக்கு நாள் எனது தேசத்தார்கள் குறுகி, மெலிந்து, துர்பலமடைந்து, க்ஷீணித்து அற்பாயுஸாக ஏன் மடிகிறார்கள்? இதை நீக்கும் பொருட்டு ஊருக்கு ஊர் சரீரபலத்திற்

குரிய கர்லா, சிலம்பு, கசரத் இவை பழக்கும் பயிற்சிக் கூடங்கள் ஏற்படுத்துவேன்.

நான் இப்படிச் செய்வதினால் எந்தச் சட்டம் மூறிந்துபோகிறது? இங்கிலீஷ் பாடசாலைகளிலேகூட நமது பிள்ளைகளுக்கு ஒருவிதமான சரீரப் பயிற்சி கொடுக்கவில்லையா? இங்கிலீஷ் பள்ளிக்கூடத்தில் போய்ப் படிக்கத்தகுந்த சொத்தில்லாத பிள்ளைகள் எங்கள் தேசத்திலே கோடிக்கணக்காக இருக்கிறார்கள். அவர்களுடைய சரீரம் பலமடையக் கூடாதென்று எங்கேனும் சாஸ்திரமேனும், சட்டமேனும் உண்டா? அதற்குரிய முயற்சிகளை நான் செய்தால் அதினின்று சட்டத்திற்குத் தலைநோவு கண்டுவிடுமா? சீச்சீ! சுதேசியம் சட்ட விரோதம் என்று சொல்லுகிறவர்கள் பொய் சொல்லுகிறார்கள். அவர்கள் நம்மைக் கெடுக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் பேசுகிறார்கள். அவர்கள் பேச்சைக்கேட்டு மயங்குபவர்கள் தேசநலம் அறியாத களிமண்-அறிவு கொண்ட மூடர்கள்.

அந்நிய-வஸ்து-வர்ஜனம், ஜாதீயக் கல்வி, பஞ்சாயத்து, சரீரப் பயிற்சி—இந்த நான்குமே சுதேசியம் என்ற புண்ணிய பலத்தைத் தாங்குகின்ற நான்கு தூண்களாகும்.

இவற்றை ஆதரிப்பது நமது கடமை. இதில் சட்டத்திற்கு எவ்விதமான விரோதமும் கிடையாது. இவற்றை ஆதரிக்காமலிருப்பவர்கள் தேசத் துரோகிகள் ஆவார்கள்.

# தேசியக் கல்வி

தேசமென்பது குடிகளின் தொகுதி. இது கொண்டே நமது முன்னோர் குடிக்கட்டுகளினின்று விலகி நிற்போரைப் பரதேசிகள் என்றனர் போலும்.

## குடும்பக் கல்வி

தேசக் கல்விக்குக் குடும்பக் கல்வியே வேர்.

வீட்டுப் பழக்கந் தான் நாட்டிலும் தோன்றும். வீட்டில் யோக்கியன் நாட்டிலும் யோக்கியன்; வீட்டில் பொறுமையுடையவன் நாட்டிலும் பொறுமையுடையவன். மனைவியின் பொருளைத் திருட மனந் துணிந்தோன் கோயிற் பணத்தைக் கையாடக் கூச மாட்டான். தான் பெற்ற குழந்தைகளுக்கிடையே பக்ஷபாதஞ் செய்பவன் ஊரில் நியாயாதிபதியாக நியமனம் பெறத்தக்கவன் ஆகமாட்டான். குடும்பம் நாகரிக மடையாவிட்டால், தேசம் நாகரிகமடையாது. குடும்பத்தில் விடுதலை இராவிடில், தேசத்தில் விடுதலை இராது.

ஒரு குடும்பத்தார் கூடித் துன்பமில்லாமல் வாழ்வதைக் காட்டுமிருகங்களும் பிற மனிதரும் தடுக்காத வண்ணமாக, ஆதியில் மனிதர் காட்டை அழித்து வீடு கட்டினார்கள். பல வீடுகள் கூடி, ஊர் ஆயிற்று.

வீடு என்ற சொல்லுக்கு விடுதலை என்பது பொருள். வெளியில் எத்தனையோ அச்சங்களுக்கு ஹேதுக்கள் உள. அவ்விதமான அச்சங்கள் இல்லாமல் வீடு

தலைப்பட்டு வாழத் தகுந்த இடத்துக்கு வீடு என்ற பெயர் கொடுத்தனர் போலும். விடத்தக்கது வீடு என்ற பிற்கால உரை ஒப்பத் தக்கதென்று. 'விடத் தக்கது வீடு' என்பது கற்றோர் துணிபாயின், அக் கற்றோர் வீட்டில் குடியிருப்பது யோக்யதை யன்று; அவர்கள் காட்டில் சென்று வாழ்தல் தகும். குழந் தைகள் வீட்டையே அரணாகக் கருதுகிறார்கள். ஸ்திரீ களும் அப்படியே செய்கிறார்கள். இடைவயதிலுள்ள ஆண் மக்கள் பெரும்பாலும் வீட்டைக்காட்டிலும் வெளி இடங்களில் அதிக இன்பம் காண்கிறார்கள். இந்த விஷயத்தில், குழந்தைகள், ஸ்திரீகள் முதலி யோர்களின் கொள்கையை ஆண்மக்கள் பின்பற்றுதல் தகும் என்று நம்புகிறேன். 'வீட்டிலிருந்து வெளியே ஓடிப்போய், வீட்டாருடன் கலகம் பண்ணிக்கொண்டு வாழ்வதே மேல்' என்று கருதும் மக்களின் கூட்டங் களே பெரிய படைகளாய், உலகத்தைப் பெரிய போர் களை நிகழ்த்தி, எண்ணற்ற துன்பங்களுக்கு இடமாகச் செய்கின்றன. வீடு துயரிடம் ஆவதற்குக் காரணம் விடுதலையும் அன்பும் இல்லாமையே. வீட்டில் அண் ணன் தம்பிகளையும் தாய் தந்தையரையும் அக்கா தங் கைகளையும் பெண்டுபிள்ளைகளையும் அடிமைப்படுத்தி ஆளச் சதிசெய்யும் ஜனங்களின் கூட்டங்களே தேசங் களையும் அடக்கி அடிமையாக்கி ஆளச் சதிசெய் கின்றன.

வீடு துன்பமாக இருப்பதின் மூல காரணம் கணவனுக்கும் மனைவிக்கும் மனப்பொருத்தம் இல்லாமை. ஸ்திரீ புருஷ விரோதத்தால் உண்டாகும் துன்பங்களே வீட்டுத் துன்பங்களுக்கெல்லாம் ஆதாரம்.

கொடுங்கோன்மை தவறு என்றும், கொடுங்கோன்மை இழைத்தால் அதற்குமேல் கொடுங்கோன்மை அவசியம் விளையும் என்றும், அவனவன் வீட்டிலிருப்போரைக் கொல்லாமல் ஒற்றுமையுடனும் அன்புடனும் வாழ்வானாயின், உலகத்தில் கொடுங்கோன்மையும் போரும் விளையக் காரணமில்லையென்றும் நான் கருதுகிறேன். குடும்ப வாழ்க்கையே மற்றெல்லா வாழ்கைகளிலும் சிறந்தது. இதனால் அன்றோ திருவள்ளுவரும்,

இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை

என்றார்.

காதல்-விடுதலை வேண்டுமென்று கூறும் கக்ஷியொன்று ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் சிற்சில பண்டித பண்டிதைகளால் ஆதரிக்கப்படுகிறது. அது நியாயம் என்பதற்கு அந்தக் கக்ஷியார் காட்டும் ஆதாரங்கள் பல. முதலாவது, பூமண்டல முழுதில் சென்ற கால நிகழ்கால அனுபவங்களை ப்ரமாணமாகக் காட்டுகிறார்கள். அதாவது, பூமண்டலத்தின் சரித்திரத்தில் வ்யபிசாரம் ஜன வழக்கத்தில் தள்ளப் படாமலும் ஏக பத்நீவ்ரதம் பாதிவ்ரத்யம் என்ற இரண்டுவித தர்மங்

களும் பெரும்பாலும் ஆதர்சங்களாகவும் நடைபெற்று வருகின்றனவென்றும் அக்னி சாக்ஷிவைத்து 'உனக்கு நான் உண்மை, எனக்கு நீ உண்மை' என்று ஸத்யம் பண்ணிக் கொடுப்பதும் மோதிரங்கள் மாற்றுவதும், அம்மி மிதிப்பதும், அருந்ததி காட்டுவதும் முதலிய சடங்குகளெல்லாம் அனுபவத்தில் ஸஹிக்கத்தக்க அல்லது ஸஹிக்கத்தகாத பந்தங்களாகவே முடிகின்றன வென்றும், ஆதலால் அவற்றை இஷ்டப்படி அப்போதப்போது மாற்றிக்கொள்ளுதலே நியாயமென்றும், இல்லாவிட்டால் மனுஷ்ய ஸ்வதந்திரமாகிய மூலாதாரக் கொள்கைக்கே ஹானி உண்டாகிறதென்றும், அதலால், 'விவாகம் சாச்வத பந்தம்' என்று வைத்தல் பிழையென்றும் மேற்படி கக்ஷியார் சொல்லுகிறார்கள். மேலும், ஐரோப்பாச் சட்டத்திலும் மகம்மதியச் சட்டத்திலும் ஸ்திரீ புருஷர் தனது விவாகத்தை ரத்து செய்துகொள்ளலாம் என்ற நியாயம் ஏற்பட்டிருத்தல் தமது கொள்கையை மனுஷ்ய நீதி ஏற்கனவே அங்கீகாரஞ் செய்துகொண்டுவிட்டது என்பதற்கு ஒரு பலமான திருஷ்டாந்தம் என்று மேற்படி விடுதலைக் காதல் (Free Love) கக்ஷியார் சொல்லுகிறார்கள்.

ஆனால், தேசீயக் கல்வியைக் குறித்து ஆராய்ச்சி செய்கிற நாம் மேற்படி விடுதலைக் காதற்கொள்கையை அங்கீகாரம் செய்தல் ஸாத்யமில்லை. ஏனென்றால், தேசமாவது குடும்பங்களின் தொகுதியென முன்னரே காட்டியுள்ளோம். குடும்பங்களில்லாவிட்டால்

தேசம் இல்லை. தேசம் இல்லாவிடிலோ, தேசீயக்கல்வியைப் பற்றிப் பேச இடமில்லை. விடுதலைக் காதலாகிய கொள்கைக்கும் மனை வாழ்க்கைக்கும் பொருந்தாது. மனை வாழ்க்கை ஒருவனும் ஒருத்தியும் நீடித்து ஒன்றாக வாழாவிட்டால் தகர்ந்துபோய்விடும். 'இன்று வேறு மனைவி; நாளை வேறு மனைவி' என்றால் குழந்தைகளின் நிலைமை என்ன ஆகும்? குழந்தைகளை நாம் எப்படி ஸம்ரக்ஷணை பண்ணமுடியும்? ஆதலால், குழந்தைகளுடைய ஸம்ரக்ஷணையை நாடி ஏகபத்நீவ்ரதம் சரியான அனுஷ்டானம் என்று முன்னோரால் ஸ்தாபிக்கப்பட்டது.

தமிழ் நாட்டில் தேசீயக் கல்வி யென்பதாக ஒன்று தொடங்கி, அதில் தமிழ் பாஷையை ப்ரதானமாக நாட்டாமல், பெரும்பான்மைக் கல்வி இங்கிலீஷ் மூலமாகவும் தமிழ் ஒருவித உப பாஷையாகவும் ஏற்படுத்தினால், அது 'தேசீயம்' என்ற பதத்தின் பொருளுக்கு முழுதும் விரோதமாக முடியுமென்பதில் ஐயமில்லை. தேச பாஷையே ப்ரதானம் என்பது தேசீயக் கல்வியின் ஆதாரக் கொள்கை; இதை மறந்துவிடக்கூடாது. தேச பாஷையை விருத்தி செய்யும் நோக்கத்துடன் தொடங்கப்படுகிற இந்த முயற்சிக்கு நாம் தமிழ் நாட்டிலிருந்து பரிபூரண ஸஹாயத்தை எதிர்பார்க்கவேண்டுமானால், இந்த முயற்சிக்குத் தமிழ் பாஷையே முதற் கருவியாக ஏற்படுத்தப்படும் என்பதைத் தம்பட்டம் அறைவிக்க வேண்டும்.

இங்ஙனம் தமிழ் ப்ரதானம் என்று நான் சொல்லுவ தால், டாக்டர் நாயரைத் தலைமையாகக் கொண்ட திராவிடக்கக்ஷியார் என்ற போலிப்பெயர் புனைந்த தேச விரோதிகளுக்கு நான் சார்பாகி ஆர்யபாஷா விரோதம் பூண்டு பேசுகிறேன் என்று நினைத்துவிடலாகாது. தமிழ் நாட்டிலே தமிழ் சிறந்திடுக. பாரத தேச முழுதி லும் எப்போதும் போலவே வடமொழி வாழ்க. இன் னும் நாம் பாரத தேசத்தின் ஐக்கியத்தைப் பரிபூர்ண மாகச்செய்யுமாறு நாடு முழுதிலும் வடமொழிப் பயிற்சி மேன் மேலும் ஓங்குக. எனினும், தமிழ் நாட் டில் தமிழ்மொழி தலைமைபெற்றுத் தழைத்திடுக.

ஆரம்பப் பள்ளிக்கூடம்.

உங்களுடைய கிராமத்தில் ஒரு பாடசாலை ஏற் படுத்துங்கள். அல்லது பெரிய கிராமமாக இருந்தால் இரண்டு மூன்று வீதிகளுக்கு ஒரு பள்ளிக்கூடம் வீத மாக எத்தனை பள்ளிக்கூடங்கள் ஸாத்யமோ அத்தனை ஸ்தாபனம் செய்யுங்கள். ஆரம்பத்தில், மூன்று உபாத் தியாயர்கள்வைத்துக்கொண்டு ஆரம்பித்தால் போதும். இவர்களுக்குச் சம்பளம் தலைக்கு மாசம் ஒன்றுக்கு 30 ரூபாய்க்குக் குறையாமல் ஏற்படுத்தவேண்டும். இந்த உபாத்தியாயர்கள் பி. ஏ., எம். ஏ., பட்டதாரிக ளாக இருக்க வேண்டிய அவசியமில்லை. மெட்றிகுலே ஷன் பரீக்ஷை தேறினவர்களாக இருந்தால் போதும். மெட்றிகுலேஷன் பரீக்ஷைக்குப் போய்த் தவறினவர் கள் கிடைத்தால் மிகவும் நல்லது. இந்த உபாத்தியா

யர்களுக்கு தேச பாஷையில் நல்ல ஞானம் இருக்க வேண்டும். திருஷ்டாந்தமாக, இங்ஙனம் தமிழ் நாட்டில் ஏற்படும் தேசியப்பாடசாலைகளில் உபாத்தியாயராக வருவோர் திருக்குறள், நாலடியார் முதலிய நூல்களிலாவது தகுந்த பழக்கம் உடையவர்களாக இருக்க வேண்டும். சிறந்த ஸ்வதேசாபிமானமும், ஸ்வதர்மாபிமானமும், எல்லா ஜீவர்களிடத்திலும் கருணையும் உடைய உபாத்தியாயர்களைத் தெரிந்தெடுத்தல் நன்று. அங்ஙனம் தேசபக்தி முதலிய உயர்ந்த குணங்கள் ஏற்கெனவே அமைந்திராத உபாத்தியாயர்கள் கிடைத்த போதிலும், பாடசாலை ஏற்படுத்தும் தலைவர்கள் அந்த உபாத்தியாயர்களுக்கு அந்தக் குணங்களைப் புகட்டுவதற்குரிய ஏற்பாடுகள் செய்ய வேண்டும். ஆரோக்யமும் திடசரீரமுமுடைய உபாத்தியாயர்களைத் தெரிந்தெடுப்பது நன்று.

### பாடங்கள்

(அ) எழுத்து, படிப்பு, கணக்கு.

(ஆ) இலேசான சரித்திரப் பாடங்கள்.

வேதகால சரித்திரம், புராண கால சரித்திரங்கள், பௌத்த காலத்துச் சரித்திரம், ராஜபுதானத்தின் சரித்திரம் இவை மிகவும் சிரத்தையுடன் கற்பிக்கப்படவேண்டும். பள்ளிக்கூடம் ஏற்படுத்தப்போகிற கிராமம் அல்லது பட்டணம் எந்த மாகாணத்தில் அல்லது எந்த ராஷ்டரத்தில் இருக்கிறதோ, அந்த மாகாணத்தின் சரித்திரம் விசேஷமாகப் பயிற்றுவிக்கப் பட

வேண்டும். [இங்கு நான் மாகாணம் அல்லது ராஷ்ட்ரம் என வகுத்திருப்பது சென்னை மாகாணம் பம்பாய் மாகாணம் முதலிய தற்காலப்பகுதிகளைக் குறிப்பதன்று; பாஷைப் பிரிவுகளுக்கு இசைந்தவாறு வகுக்கப்படும் தமிழ் நாடு தெலுங்கு நாடு, மலையாள நாடு முதலிய இயற்கைப் பகுதிகளைக்குறிப்பது.] இந்தச் சாத்திரங்களில் மஹா கீர்த்தி பெற்று விளங்கும் பருவங்களை உபாத்தியாயர்கள் மிகவும் உத்ஸாகத்துடனும், ஆவேசத்துடனும், பக்தி சிரத்தைகளுடனும் கற்பிக்கும்படி ஏற்பாடு செய்ய வேண்டும். அதிபால்யப் பிராயத்தில் மனதில் பதிக்கப்படும் சித்திரங்களே எக்காலமும் நீடித்து நிற்கும் இயல்புடையன. ஆதலால், பள்ளிப் பிள்ளைகளுக்கு ஆரம்ப வகுப்பிலேயே நம்முடைய புராதன சரித்திரத்தின் அற்புதமான பகுதிகளை யூட்டி, அசோகன், விக்கிரமாதித்யன், ராமன், லக்ஷ்மணன், தர்மபுத்திரன், அர்ஜுனன் இவர்களிடமிருந்த சிறந்த குணங்களையும் அவற்றால் அவர்களுக்கும் அவர்களுடைய குடிகளுக்கும் ஏற்பட்ட மஹிமைகளையும் பிள்ளைகளின் மனதில் பதியும்படி செய்வது அந்தப் பிள்ளைகளின் இயல்பைச் சீர்திருத்தி மேன்மைப் படுத்துவதற்கு நல்ல ஸாதனமாகும்.

தேச பாஷையின் மூலமாகவே இந்தச் சரித்திரப் படிப்பு மட்டுமேயன்றி மற்றெல்லாப் பாடங்களும் கற்பிக்கப்பட வேண்டுமென்பது சொல்லாமலே விளங்கும். தேச பாஷையின் மூலமாகப் பயிற்றப்படாத

கல்விக்கு தேசீயக் கல்வி என்ற பெயர் சொல்லுதல் சிறிதளவும் பொருந்தாது போய்விடுமன்றோ? இது நிற்க.

ஹிந்து தேச சரித்திரம் மாத்திரமே யல்லாது, ஸௌகர்யப்பட்டால், இயன்றவரை அராபிய, பாரஸீக, ஐரிஷ், போலிஷ், ருஷிய, எகிப்திய, இங்கிலீஷ், ப்ரெஞ்சு, அமெரிக்க, இத்தாலிய, கிரேக்க, ஜப்பானிய, துருக்க தேசங்கள் முதலியவற்றின் சரித்திரங்களிலும் சில முக்கியமான கதைகளும் திருஷ்டாந்தங்களும் பயிற்சி கொடுக்க ஏற்பாடு செய்தால் நல்லது.

(இ) பூமி சாஸ்த்ரம்

ஆரம்ப பூகோளமும், அண்ட சாஸ்திரமும், ஜகத்தைப் பற்றியும், ஸூர்ய மண்டலத்தைப் பற்றியும், அதைச் சூழ்ந்தோடும் கிரகங்களைப் பற்றியும், நக்ஷத்திரங்களைப் பற்றியும், இவற்றின் சலனங்களைப் பற்றியும் பிள்ளைகளுக்கு இயன்றவரை தக்க ஞானம் ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும். பூமிப் படங்கள், கோளங்கள், வர்ணப் படங்கள் முதலிய கருவிகளை ஏராளமாக உபயோகப்படுத்த வேண்டும். ஐந்து கண்டங்கள், அவற்றிலுள்ள முக்கிய தேசங்கள், அந்த தேசங்களின் ஜனத்தொகை, மதம், ராஜ்ய நிலை, வியாபாரப் பயிற்சி, முக்கியமான விளைபொருள்கள், முக்கியமான கைத்தொழில்கள் இவற்றைக்குறித்து பிள்ளைகளுக்குத் தெளிந்த ஞானம் ஏற்படுத்த வேண்டும். முக்கியமான துறைமுகப் பட்டினங்களைப் பற்றியும்,

அவற்றில் நடைபெறும் வியாபாரங்களைக் குறித்தும் தெளிந்த விவரங்கள் தெரியவேண்டும். மேலும், இந்தியர்களாகிய நம்மவர் வெளித்தேசங்களில் எங்கெங்கே அதிகமாகச் சென்று குடியேறி யிருக்கிறார்கள் என்ற விஷயம் பிள்ளைகளுக்குத் தெரிவதுடன் அங்கு நம்மவர் படிப்பு, தொழில், அந்தஸ்து முதலிய அம்சங்களில் எந்த நிலையிலே இருக்கிறார்கள் என்பதும் தெளிவாகத் தெரியவேண்டும். மேலும் உலகத்திலுள்ள பல தேசங்களின் நாகரிக வளர்ச்சியைக்குறித்துப் பிள்ளைகள் தக்க ஞானம் பெறவேண்டும்.

பாரத பூமி சாஸ்த்ரம், இந்தியாவிலுள்ள மாகாணங்கள், அவற்றுள் அங்குள்ள தேச பாஷைகளின் வேற்றுமைக்குத் தகுந்தபடி இயற்கையைத் தழுவி ஏற்படுத்தக் கூடிய பகுதிகள்—இவை விசேஷ சிரத்தையுடன் கற்பிக்கப்பட வேண்டும். வெளி மாகாணங்களைக் குறித்துப் பின்வரும் அம்சங்களில் இயன்றவரை விஸ்தாரமான ஞானமுண்டாக்க வேண்டும்; அதாவது, பாரத பூமி சாஸ்த்ரத்தில், மற்ற மாகாணங்களில் வசிக்கும் ஜனங்கள், அங்கு வழங்கும் முக்கிய பாஷைகள், முக்கியமான ஜாதிப்பிரிவுகள், தேச முழுமையும் வகுப்புக்கள் ஒன்றுபோலிருக்கும் தன்மை, மத ஒற்றுமை, பாஷைகளின் நெருக்கம், வேத புராண இதிஹாஸங்கள் முதலிய நூல்கள் பொதுமைப்பட வழங்குதல், இவற்றிலுள்ள புராதன ஒழுக்க ஆசாரங்களின் பொதுமை, புண்ணிய க்ஷேத்திரங்கள், அவற்றின் தற்கால நிலை,

இந்தியாவிலுள்ள பெரிய மலைகள், நதிகள், இந்தியாவின் விளைபொருள்கள், அளவற்ற செல்வம், ஆஹார பேதங்கள், தற்காலத்தில் இந்நாட்டில் வந்து குடியேறியிருக்கும் பஞ்சம் தொத்து நோய்கள் இவற்றின் காரணங்கள், ஜல வஸதிக் குறைவு, வெளி நாடுகளுக்கு ஜனங்கள் குடியேறிப் போதல்—இந்த அம்சங்களைக் குறித்து மாணாக்கருக்குத் தெளிவான ஞானம் ஏற்படுத்தப்படவேண்டும்.

பாரத தேசத்தின் அற்புதமான சிற்பத் தொழில்கள், கோயில்கள், இவற்றைப்பற்றி மாணாக்கருக்குத் தெரிவிக்கவேண்டும்.

உங்கள் சொந்த ராஷ்ட்ரம் அல்லது மாகாணத்தின் பூமி சாஸ்திரம்.

இது கற்றுக்கொடுப்பதில், ஜனப்பாகுபாடுகளைப் பற்றிப் பேசுமிடத்து, ஹிந்துக்கள் மகம்மதியர் என்ற இரண்டு பிரிவுகளே பிரதானம் என்பதையும், இவர்களில் மகம்மதியர்களிலே பெரும்பாலார் ஹிந்துக்களின் சந்ததியில் தோன்றியவர்கள் என்பதையும், அங்ஙனமன்றி வெளி நாட்டோரின் சந்ததியாரும் இப்போது முற்றிலும் ஸ்வதேசிகளாக மாறி விட்டனர் என்பதையும் மாணாக்கர்கள் நன்றாக உணரும்படி செய்யவேண்டும். மேலும், பூமி சாஸ்திரப் பயிற்சியில் விளைபொருள் முதலியவற்றை திருஷ்டாந்தங்களின் மூலமாகத் தெளிவுபடுத்துவதுடன், இயன்றவரை

பிள்ளைகளை யாத்திரைக்கு அழைத்துச்சென்று பிற இடங்களை நேருக்கு நேராகக் காண்பித்தல் நன்று. பூமிப் படங்கள், கோளங்கள் முதலியவற்றிலெல்லாம் பெயர்கள் தேச பாஷையிலேயே எழுதப்பட்டிருக்க வேண்டும்.

(ஈ) மதப் படிப்பு

நான்கு வேதங்கள், ஆறு தர்சனங்கள், உபநிஷத்துக்கள், புராணங்கள், இதிஹாஸங்கள், பகவத்கீதை, பக்தர் பாடல்கள், சித்தர் நூல்கள்—இவற்றை ஆதாரமாகக்கொண்டது ஹிந்து மதம். ஹிந்து மதத்தில் கிளைகள் இருந்தபோதிலும், அக்கிளைகள் சில சமயங்களில் அறியாமையால் ஒன்றையொன்று தூஷணை செய்துகொண்டபோதிலும், ஹிந்து மதம் ஒன்றுதான்; பிரிக்கமுடியாதது. வெவ்வேறு வ்யாக்யானங்கள் வெவ்வேறு அதிகாரிகளைக் கருதிச் செய்யப்பட்டன. பிற்காலத்தில் சில குப்பைகள் நம்முடைய ஞான ஊற்றாகிய புராணங்கள் முதலியவற்றிலே கலந்துவிட்டன. மத த்வேஷங்கள், அநாவசிய மூட பக்திகள் முதலியனவே அந்தக் குப்பைகளாம். ஆதலால், தேசீயப் பள்ளிக்கூடத்து மாணாக்கர்களுக்கு உபாத்தியாயர் தத்தம் இஷ்ட தெய்வங்களினிடம் பரம பக்தி செலுத்தி வழிபாடு செய்து வரவேண்டும் என்று கற்பிப்பதுடன், இதர தெய்வங்களைப் பழித்தல், பகைத்தல் என்ற மூடச் செயல்களை கட்டோடு விட்டுவிடும்படி போதிக்கவேண்டும். 'ஏகம்

ஸத் விப்ரா; பஹுதா வதந்தி' (கடவுள் ஒருவரே, அவரை ரிஷிகள் பல பெயர்களால் அழைக்கின்றனர்) என்ற ரிக்வேத உண்மையை மாணுக்கரின் உள்ளத்தில் ஆழப் பதியுமாறு செய்யவேண்டும். மேலும், கண்ண பிரான் 'எல்லா உடம்புகளிலும் நானே உயிராக நிற்கி றேன்' என்று கீதையில் கூறியபடி, ஈ, எறும்பு, புழு, பூச்சி, யானை, புலி, கரடி, தேள், பாம்பு, மனிதர்— எல்லா உயிர்களும் பரமாத்மாவின் அம்சங்களே என் பதை நன்கறிந்து, அவற்றை மன மொழிமெய்களால் எவ்வகையிலும் துன்புறுத்தாமல்; இயன்ற வழிகளி லெல்லாம் அவற்றிற்கு நன்மையே செய்து வர வேண்டும். என்பது ஹிந்துமதத்தின் மூல தர்மம் என் பதை மாணுக்கர்கள் நன்ருக உணர்ந்துகொள்ளும்படி செய்யவேண்டும். மாம்ஸ போஜனம் மனிதன் உடல் இறைச்சியைத் தின்பதுபோலாகும் என்றும், மற்றவர் களைப் பகைத்தலும் அவர்களைக் கொல்வதுபோலே யாகும் என்றும் ஹிந்து மதம் கற்பிக்கிறது. 'எல்லாம் பிரம்மமயம்', 'ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்' என்ற வச னங்களால் உலக முழுதும் கடவுளின் வடிவமே என்று ஹிந்து மதம் போதிக்கிறது. 'இங்ஙனம் எல்லாம் கடவுள்மயம் என்றுணர்ந்தவன் உலகத்தில் எதற்கும் பயப்படமாட்டான், எங்கும் பயப்படமாட்டான்; எக் காலத்திலும் மாருத ஆனந்தத்துடன் தேவர்களைப் போல் இவ்வுலகில் நீடூழி வாழ்வான்' என்பது ஹிந்து மதத்தின் கொள்கை. இந்த விஷயங்களெல்லாம்

மாணுக்கருக்குத் தெளிவாக விளங்கும்படி செய்வது உபாத்தியாயர்களின் கடமை. மத விஷயமான போராட்டங்கள் எல்லாம் சாஸ்த்ர விரோதம்; ஆதலால், பரம மூடத்தனத்துக்கு லக்ஷணம். ஆசாரங்களை எல்லாம் அறிவுடன் அனுஷ்டிக்கவேண்டும். ஆனால், ஸமயக் கொள்கைக்கும் ஆசார நடைக்கும் தீராத ஸம்பந்தம் கிடையாது. ஸமயக்கொள்கை எக்காலத்திலும் மாருதது. ஆசாரங்கள் காலத்துக்குக் காலம் மாறுபடும் இயல்புடையன.

ஸ்ரீராமாயண மஹாபாரதங்களைப்பற்றிப்பிரஸ்தாபம் நடத்துகையிலே, நான் ஏற்கனவே சரித்திரப் பகுதியிற் கூறியபடி, இதிஹாஸ புராணங்களில் உள்ள வீரர், ஞானிகள் முதலியோரின் குணங்களை நாம் பின்பற்றி நடக்க முயலவேண்டும். உண்மை, நேர்மை, வீர்யம், பக்தி முதலிய வேதரிஷிகளின் குணங்களையும் ஸ்வதேச பக்தி, ஸ்வஜனுபிமானம், ஸர்வ ஜீவ தயை முதலிய புராதன வீரர்களின் குணங்களையும் பிள்ளைகளுக்கு நன்ருக உணர்த்தவேண்டும். சிபி சக்கரவர்த்தி புருவைக் காப்பாற்றும் பொருட்டாகத் தன் சதையை அறுத்துக்கொடுத்த கதை முதலியவற்றின் உண்மைப் பொருளை விளக்கிக் காட்டி மாணுக்கர்களுக்கு ஜீவ காருண்ணியமே எல்லா தர்மங்களிலும் மேலானது என்பதை விளக்கவேண்டும். ஏழைகளுக்கு உதவி புரிதல், கீழ் ஜாதியாரை உயர்த்தி விடுதல் முதலி

யனவே ஜன ஸமூகக் கடமைகளில் மேம்பட்டன என்பதைக் கற்பிக்கவேண்டும்.

(உ) ராஜ்ய சாஸ்திரம்

ஜனங்களுக்குள்ளே ஸமாதானத்தைப் பாதுகாப்பதும், வெளி நாடுகளிலிருந்து படை எடுத்து வருவோரைத் தடுப்பதும் மாத்திரமே ராஜாங்கத்தின் காரியங்கள் என்று நினைத்துவிடக்கூடாது. ஜனங்களுக்குள்ளே செல்வமும், உணவு, வாஸம் முதலிய ஸௌகர்யங்களும், கல்வியும், தெய்வ பக்தியும், ஆரோக்யமும், நல்லொழுக்கமும், பொது சந்தோஷமும் மேன்மேலும் விருத்தியடைவதற்குரிய உபாயங்களை இடைவிடாமல் அனுஷ்டித்துக் கொண்டிருப்பதே ராஜாங்கத்தின் கடமையாவது.

குடிகள் ராஜாங்கத்தைத் தம்முடைய நன்மைக்காகவே சமைக்கப்பட்ட கருவியென்று நன்றாகத் தெரிந்துகொள்ளவேண்டும். குடிகளுடைய இஷ்டப்படியே ராஜ்யம் நடத்தப்படவேண்டும். தீர்வை விதித்தல், தீர்வைப் பணத்தை பல துறைகளிலே விநியோகித்தல், புதுச் சட்டங்கள் சமைத்தல், பழைய சட்டங்களை அழித்தல் முதலிய ராஜாங்கக் காரியங்களெல்லாம் குடிகளால் நியமிக்கப்பட்ட பிரதிநிதிகளின் இஷ்டப்படியே நடக்கவேண்டும்.

குடிகளின் நன்மைக்காகவே அரசு ஏற்பட்டிருப்பதால், அந்த அரசியலைச் சீர்திருத்தும் விஷயத்தில்

குடிகளெல்லோரும் தத்தமக்கு இஷ்டமான அபிப்பிரா யங்களை வெளியிடும் உரிமை இவர்களுக்கு உண்டு. இந்த விஷயங்களையெல்லாம் உபாத்தியாயர்கள் மாணுக்கர் களுக்குக் கற்பிக்குமிடத்தே, இப்போது பூமண்டலத் தில் இயல்பெறும் முக்கியமான ராஜாங்கங்கள் எவ் வளவுதூரம் மேற்கண்ட கடமைகளைச் செலுத்தி வரு கின்றன என்பதையும் எடுத்துரைக்கவேண்டும்.

மேலும், உலகத்து ராஜாங்கங்களில் சுவேச்சா ராஜ்யம், ஜனப்பிரதிநிதியாட்சி, குடியரசு முதலியன எவையென்பதையும், எந்த நாடுகளில் மேற்படி முறை கள் எங்ஙனம் மிசிரமாகி நடைபெறுகின்றன என்பதை யும் எடுத்துக்காட்டவேண்டும்.

கிராம பரிபாலனம், கிராம சுத்தி, வைத்தியம் முதலியவற்றில் குடிகளனைவரும் மிகுந்த சிரத்தை காட்டவேண்டுமாதலால், மாணுக்கர்களுக்கு இவற்றின் விவரங்கள் நன்ருகப் போதிக்கப்படவேண்டும்.

கோயிற் பரிபாலனமும், அங்ஙனமே ஏழைகளுக்கு வீடு கட்டிக் கொடுப்பதும், தொழில் ஏற்படுத்திக் கொடுத்து உணவு தருவதும், ராஜாங்கத்தாரின் கடமை என்பது மட்டுமன்றி, கிராமத்து ஜனங்கள் அத்தனை பேருக்கும் பொதுக் கடமையாகும்.

(ஊ) பொருள் நூல்

பொருள் நூலைப்பற்றிய ஆரம்பக் கருத்துக்களை மாணுக்கர்களுக்குப் போதிக்குமிடையே, தீர்வை விஷ

யத்தை முக்கியமாகக் கவனிக்கவேண்டும். ஜனங்களிடம் தீர்வை எத்தனைக்கெத்தனை குறைவாக வசூல் செய்யப்படுகிறதோ, அங்ஙனம் குறைவாக வாங்கும் தீர்வையிலிருந்து பொது நன்மைக்குரிய காரியங்கள் எத்தனைக்கெத்தனை மிகுதியாக நடைபெறுகின்றனவோ, அத்தனைக்கத்தனை அந்த ராஜாங்கம் நீடித்து நிற்கும்; அந்த ஜனங்கள் க்ஷேமமாக வாழ்ந்திருப்பார்கள். வியாபார விஷயத்தில், கூட்டு வியாபாரத்தால் விளையும் நன்மைகளை மாணுக்கர்களுக்கு எடுத்துக் காட்டவேண்டும். மிகவும் சரசமான இடத்தில் விலைக்கு வாங்கி, மிகவும் லாபகரமான சந்தையில் கொண்டு போய் விற்க வேண்டும் என்ற பழைய வியாபாரக் கொள்கையை எப்போதும் பிரமாணமாகக் கொள்ளக் கூடாது. விளை பொருளும், செய் பொருளும் மிஞ்சிக் கிடக்கும் தேசத்தில் விலைக்கு வாங்கி அவை வேண்டியிருக்குமிடத்தில் கொண்டுபோய் விற்கவேண்டும் என்பதே வியாபாரத்தில் பிரமாணமான கொள்கையாகும்.

வியாபாரத்தில் கூட்டுவியாபாரம் எங்ஙனம் சிறந்ததோ அதுபோலவே கைத்தொழிலிலும் கூட்டுத் தொழிலே சிறப்பு வாய்ந்ததாம். முதலாளி யொருவன் கீழே பல தொழிலாளிகள் கூடி நடத்தும் தொழிலைக் காட்டிலும் தொழிலாளிகள் பலர் கூடிச் செய்யும் தொழிலே அதிக நன்மையைத் தருவதாகும்.

செல்வம் ஒரு நாட்டில் சிலருக்கு வசப்பட்டதாய் பலர் ஏழைகளாக இருக்கும்படி செய்யும் வியாபார முறைகளைக் காட்டிலும், சாத்தியப்பட்டவரை அநேகரிடம் பொருள் விரவியிருக்கும்படி செய்யும் வியாபார முறைகள் மேன்மையாகப் பாராட்டத்தக்கனவாம்.

(எ) ஸயன்ஸ் அல்லது பௌதிக சாஸ்திரம்

ஐரோப்பிய ஸயன்ஸின் ஆரம்ப உண்மைகளைத் தக்க கருவிகள் மூலமாகவும் பரீக்ஷைகள் மூலமாகவும் பிள்ளைகளுக்குக் கற்பித்துக் கொடுத்தல் மிகவும் அவசியமாகும். பிள்ளைகளுக்குத்தாங்களே 'ஸயன்ஸ்' சோதனைகள் செய்து பார்க்கும் வழக்கத்தை ஏற்படுத்திக் கொடுக்கவேண்டும். வியாபார விஷயங்களுக்கு ரஸாயன சாஸ்திரம் மிகவும் பிரதான மாகையால், ரஸாயனப் பயிற்சியிலே அதிக சிரத்தை காண்பிக்க வேண்டும், கண்ணுக்குத் தெரியாத நுட்பமான பூச்சிகள் தண்ணீர் மூலமாகவும், காற்று மூலமாகவும், மண் மூலமாகவும் பரவி நோய்களைப் பரப்புகின்றன என்ற விஷயம் ஐரோப்பிய 'ஸயன்ஸ்' மூலமாகக் கண்டு பிடிக்கப் பட்டிருப்பதில் ஒரு சிறிது உண்மை இருப்பது மெய்யேயாயினும், மனம் சந்தோஷமாகவும் ரத்தம் சுத்தமாகவும் இருப்பவனை அந்தப் பூச்சிகள் ஒன்றும் செய்யமாட்டா என்பதை ஐரோப்பியப் பாடசாலைகளில் அழுத்திச் சொல்லவில்லை. அதனால். மேற்படி சாஸ்திரத்தை நம்புவோர் வாழ்நாள் முழுதும் (ஸங்-

தோஷமாய் இராமல் தீராத நரக வாழ்க்கை) வாழ்கிறார்கள். ஆதலால், நமது தேசீய ஆரம்பப்பாடசாலையில் மேற்படி பூச்சிகளைப்பற்றின பயம் மாணாக்கருக்குச் சிறிதேனும் இல்லாமல் செய்துவிடவேண்டும்.

உலகமே காற்றாலும், மண்ணாலும், நீராலும் சமைந்திருக்கிறது. இந்த மூன்று பூதங்களை விட்டு விலகி வாழ யாராலும் இயலாது. இந்த மூன்றின் வழியாகவும் எந்த நேரமும் ஒருவனுக்கு பயங்கரமான நோய்கள் வந்துவிடக்கூடும் என்ற மஹா நாஸ்திகக் கொள்கையை நவீன ஐரோப்ய சாஸ்திரிகள் தாம் நம்பி ஓயாமல் பயந்து பயந்து மடிவது போதாதென்று அந்த மூடக்கொள்கையை நமது தேசத்திலும் இளஞ் சிறுவர் மனதில் அழுத்தமாகப் பதியும்படி செய்துவிட்டார்கள். சிறு பிராயத்தில் ஏற்படும் அபிப்பிராயங்கள் மிகவும் வலிமை உடையன, அசைக்கமுடியாதன, மறக்கமுடியாதன; எனவே நமது நாட்டிலும் இங்கிலீஷ் பள்ளிக்கூடங்களில் படித்த பிள்ளைகள் சாகுமட்டும் இந்தப்பெரும் பயத்துக்கு ஆளாய் தீராத கவலைகொண்டு மடிகிறார்கள்: பூச்சிகளால் மனிதர் சாவதில்லை; நோய்களாலும் சாவதில்லை; கவலையாலும் பயத்தாலும் சாகிறார்கள். இந்த உண்மை நமது தேசீயப் பள்ளிக்கூடத்துப் பிள்ளைகளின் மனதில் நன்றாக அழுந்தும்படி செய்ய வேண்டும்.

பௌதிக சாஸ்திரங்கள் கற்றுக் கொடுப்பதில், மிகவும் தெளிவான எளிய தமிழ் நடையில் பிள்ளைக்கு மிகவும் சுலபமாக விளங்கும்படி சொல்லிக்கொடுக்க வேண்டும். இயன்ற இடத்திலெல்லாம் பதார்த்தங்களுக்குத் தமிழ்ப் பெயர்களையே உபயோகம்படுத்த வேண்டும். திருஷ்டாந்தமாக, "ஆக்ஸிஜன்', "ஹைட்ரஜன்", முதலிய பதார்த்தங்களுக்கு ஏற்கெனவே தமிழ் நாட்டில் வழங்கப்பட்டிருக்கும் பிராண வாயு, ஜலவாயு என்ற நாமங்களையே வழங்கவேண்டும். தமிழ்ச் சொற்கள் அகப்படாவிட்டால் சம்ஸ்கிருத பதங்களை வழங்கலாம். பதார்த்தங்களுக்கு மட்டுமேயன்றிக் கிரியைகளுக்கும் அவஸ்தைகளுக்கும் (நிலைமைகளுக்கும்) தமிழ் சம்ஸ்கிருத மொழிகளையே வழங்குதல் பொருந்தும். இந்த இரண்டு பாஷைகளிலும் பெயர்கள் அகப்படாத இடத்தில் இங்கிலீஷ் பதங்களையே உபயோகப்படுத்தலாம். ஆனால், குணங்கள், செயல்கள், நிலைமைகள்—இவற்றுக்கு இங்கிலீஷ் பதங்களை ஒருபோதும் வழங்கக்கூடாது. பதார்த்தங்களின் பெயர்களை மாத்திரமே இங்கிலீஷில் சொல்லலாம், வேறு வகையால் உணர்த்த இயலாவிடின்.

நுட்பமான விவரங்கள் கற்றுக்கொடுப்பதற்குத் தகுந்த பாட புஸ்தகங்கள் தமிழில் இன்னும் ஏற்படவில்லையாதலால், ஆரம்பப் பள்ளிக்கூடத்தில், உபாத்தியாயர்கள் இங்கிலீஷ் புஸ்தகங்களைத் துணையாக வைத்

துக்கொண்டு, அவற்றிலுள்ள பொதுப்படையான அம்சங்களை மாத்திரம் இயன்றவரை தேச பாஷையில் மொழிபெயர்த்துப் பிள்ளைகளுக்குச் சிறிது சிறிது கற்பித்தால் போதும்.

திருஷ்டாந்தமாக, ரஸாயன சாஸ்திரம் கற்பிக்குமிடத்தே:—

(அ) உலகத்தில் காணப்படும் வஸ்துக்களெல்லாம் எழுபதே சொச்சம் மூலப் பொருள்களாலும், அவற்றின் பலவகைப்பட்ட சேர்க்கைகளாலும் சமைந்திருக்கின்றன. (திருஷ்டாந்தங்களும், சோதனைகளும் காட்டுக.)

(ஆ) அந்த மூல பதார்த்தங்களில், பொன், வெள்ளி, செம்பு, கந்தகம் இவைபோல வழக்கத்திலுள்ள பொருள்கள் இவை; க்ரோமியம், தித்தானியம், யூரோனியம் இவைபோல சாதாரண பழக்கத்திலகப்படாதன இவை; கனரூபமுடையன இவை, திரவரூபமுடையன இவை, வாயு ரூபமுடையன இவை, இவற்றுள் முக்கியமான மூல பதார்த்தங்களின் குணங்கள் முதலியவற்றை எடுத்துக்காட்டுக.

(இ) ரஸாயனச் சேர்க்கை, பிரிவு; இவற்றின் இயல்புகள் (பரீக்ஷைகளின் மூலமாக விளக்குக); இவற்றின் விதிகள்.

(ஈ) ரேடியம், ஹெலியம் முதலிய புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட மூல பதார்த்தங்களின் அற்புத குணங்கள்.

(உ) பரமாணுக்கள், அணுக்கள், அணுகணங்கள்—இவற்றின் இயல்பு, குணங்கள், செய்கைகள் முதலியன.

இவைபோன்ற பொது அம்சங்களைப்பற்றிய முக்கியமான செய்திகளை, சாதாரண ஸம்பாஷணை நடையில் உபாத்தியாயர்கள் வீட்டில் எழுதிக்கொண்டு வந்து பிள்ளைகளுக்கு வாசித்துக்காட்டி அவர்களை எழுதி வைத்துக்கொள்ளும்படி செய்யவேண்டும்.

இயற்கை நூல் (பிஸிக்ஸ்), ரஸாயனம் (கெமிஸ்ட்ரி), சரீர சாஸ்த்ரம், ஜந்து சாஸ்த்ரம், செடிநூல் ஸ்தாவர சாஸ்திரம்)-இவையே முக்கியமாகப் போதிக்க வேண்டியனவாம்.

(ஏ) கைத்தொழில். விவஸாயம். தோட்டப்பயிற்சி, வியாபாரம்

இயன்றவரை மாணாக்கர்கள் எல்லாருக்கும், விசேஷமாகத் தொழிலாளிகளின் பிள்ளைகளுக்கு நெசவு முதலிய முக்கியமான கைத்தொழில்களிலும், நன்செய்ப் புன்செய்ப் பயிர்த் தொழில்களிலும், பூ, கனி, காய், கிழங்குகள் விளைவிக்கும் தோட்டத் தொழில்களிலும், சிறு வியாபாரங்களிலும் தகுந்த ஞானமும் அனுபவமும் ஏற்படும்படி செய்தல் நன்று. இதற்கு, மேற்கூறிய மூன்று உபாத்தியாயர்களைத் தவிர, தொழிலாளிகள் வியாபாரிகள் விவசாயிகளிலே

சற்றுப் படிப்புத் தெரிந்தவர்களும் தக்க லெளகிகப் பயிற்சி யுடையவர்களுமான அனுபவஸ்தர்களைக் கொண்டு ஆரம்பப் பயிற்சி எற்படுத்திக் கொடுத்தல் மிகவும் நன்மை தரக்கூடிய விஷயமாகும்.

(ஐ) சரீரப் பயிற்சி

தோட்டத்தொழில்கள், கிணறுகளில் ஜலமிறைத்தல் முதலியவற்றால் ஏற்படும் சரீரப் பயிற்சியே மிகவும் விசேஷமாகும். பிள்ளைகளுக்குக் காலையில் தாமே ஜலமிறைத்து ஸ்நானம் செய்தல், தத்தம் வேஷ்டி துணிகளைத் தோய்த்தல் முதலிய அவசியமான கார்யங்களில் எற்படும் சரீரப்பயிற்சியும் நன்றேயாம். இவற்றைத் தவிர, ஓட்டம், கிளித்தட்டு, சடுகுடு முதலிய நாட்டு விளையாட்டுகளும், காற்பந்து (Foot-ball) முதலிய ஐரோப்பிய விளையாட்டுகளும், பிள்ளைகளுடைய படிப்பில் பிரதான அம்சங்களாகக் கருதப் பட வேண்டும். குஸ்தி, கஸரத், கரேலா முதலிய தேசீயப் பயிற்சிகளும் இயன்றவரை அனுஷ்டிக்கப் படலாம். ஐரோப்பிய முறைப்படி பிள்ளைகளைக் கூட்டமாகக் கூட்டி, கபாத்து (ட்ரில்) பழக்குவித்தல் இன்றியமையாத அம்சமாகும். செளகர்யப்பட்டால் இங்கிலீஷ் பள்ளிக்கூடங்களில் பயிற்றுவிக்கும் மரக் குதிரை, ஸமக் கட்டைகள் (parallel bars), ஒற்றைக் கட்டை (horizontal bar) முதலிய பழக்கங்களும் செய்விக்கலாம். படிப்பைக்காட்டிலும் விளையாட்டுக் களில் பிள்ளைகள் அதிக சிரத்தை எடுக்கும்படி செய்ய

வேண்டும். சுவரில்லாமல் சித்திரமெழுத முடியாது. பிள்ளைகளுக்கு சரீரபலம் ஏற்படுத்தாமல் வெறுமே படிப்பு மாத்திரம் கொடுப்பதால், அவர்களுக்கு நாளுக்குநாள் ஆரோக்யம் குறைந்து அவர்கள் படித்த படிப்பெல்லாம் விழலாகி, அவர்கள் தீராத துக்கத்துக்கும் அற்பாயுசுக்கும் இரையாகும்படி நேரிடும்.

(ஏ) யாத்திரை (எக்ஸ்கர்ஷன்)

பிள்ளைகளை உபாத்தியாயர்கள் பக்கத்தூர்களிலும் தமதூரிலும் நடக்கும் உற்சவங்கள் திருவிழாக்கள் முதலியவற்றுக்கு அழைத்துச் சென்று மேற்படி விழாக்களின் உட்பொருளைக் கற்பித்துக்கொடுத்தல் நன்று. திருவிழாவுக்கு வந்திருக்கும் பலவகை ஜனங்களின் நடையுடைபாவனைகளைப் பற்றிய ஞானம் உண்டாகும்படி செய்யவேண்டும். வனபோஜனத்துக்கு அழைத்துச் செல்லவேண்டும். அங்குப் பிள்ளைகள் தமக்குள் நட்பும், அன்பும். பரஸ்பர ஸம்பாஷணையில் மகிழ்ச்சியும் எய்தும்படி ஏற்பாடு செய்யவேண்டும். மலைகள் கடலோரங்களுக்கு அழைத்துச் சென்று இயற்கையின் அழகுகளையும் அற்புதங்களையும் பிள்ளைகள் உணர்ந்து மகிழும்படி செய்ய வேண்டும். பலவிதமான செடி, கொடிகள், மரங்கள், லோஹங்கள், கல் வகைகள் முதலியவற்றின் இயல்பைத் தெரிவிக்கவேண்டும்.

பொதுக் குறிப்புகள்

மேலே காட்டிய முறைப்படி தேசீயப் பள்ளிக்கூடம் நடத்துவதற்கு அதிகப் பணம் செலவா

காது. மாசம் நூறு ரூபாய் இருந்தால் போதும். இந்தத் தொகையை ஒவ்வொரு கிராமத்திலுள்ள ஜனங்களும் தமக்குள்ளே சந்தா வசூலித்துச் சேர்க்கவேண்டும். செல்வர்கள் அதிகத் தொகையும் மற்றவர்கள் தத்தமக்கு இயன்றவளவு சிறு தொகைகளும் கொடுக்கும்படி செய்யலாம். 100 ரூபாய்கூட வசூல் செய்ய முடியாத கிராமங்களில் 50 ரூபாய் வசூலித்து, உபாத்தியாயர் மூவருக்கும் தலைக்கு மாசச் சம்பளம் 12 ரூபாய் கொடுத்து, மிச்சத் தொகையை பூகோளக் கருவிகள், "ஸயன்ஸ்" கருவிகள், விவசாயக் கருவிகள் முதலியன வாங்குவதில் உபயோகப்படுத்தலாம். 100 ரூபாய் வசூலிக்கக்கூடிய கிராமங்களில் உபாத்தியாயர் மூவருக்கும், தலைக்கு ரூபாய் 20 வீதம் சம்பளம் ரூபாய் அறுபது போக, மிச்சத் தொகையை மேற்படி கருவிகள் முதலியன வாங்குவதில் உபயோகப்படுத்லாம். மேற்படி கருவிகள் எப்போதும் வாங்கும்படி நேரிடாது. முதல் இரண்டு வருஷங்களுக்கு மாத்திரம் மாசந்தோறும் மிஞ்சுந் தொகையை இங்ஙனம கருவிகள் வாங்குவதிலும் புஸ்தகங்கள் வாங்குவதிலும் செலவிட்டால் போதும். அப்பால் மாசந்தோறும் மிஞ்சுகிற பணத்தைப் பள்ளிக்கூடத்துக்கு க்ஷேம நிதியாக ஒரு யோக்கியமான ஸ்ரீமானிடம் வட்டிக்குப் போட்டுவர ஏற்பாடு செய்யவேண்டும். இவ்வாறன்றி ஆரம்பத்திலேயே கருவிகள் முதலியன வாங்குவதற்குப் பிரத்யேகமான நிதி சேகரித்து அவற்றை வாங்கிக்கொண்டுவிட்டால், பிறகு தொடக்க முதலாகவே மிச்சப் பணங்களை வட்டிக்குக் கொடுத்துவிடலாம்.

மாசம் நாற்பது ரூபாய் வீதம் மிச்சப் பணங்களை க்ஷேமநிதியாகக் சேர்த்துவந்தால் பதினைந்து வருஷங்களுக்குள்ளே தகுந்த தொகையாய்விடும். பிறகு மாச வசூலை நிறுத்திவிட்டுப் பள்ளிக்கூடத்தை அதன் சொந்த நிதியைக்கொண்டே நடத்தி வரலாம். தவிரவும், அப்போதப்போது அரிசித் தண்டல், கலியாண காலங்களில் ஸம்பாவனை, விசேஷ நன்கொடைகள் முதலியவற்றாலும் பள்ளிக்கூடத்து நிதியைப் போஷணை செய்து வரலாம்.

எல்லாவிதமான தானங்களைக் காட்டிலும் வித்யா தானமே மிகவும் உயர்ந்தது என்று ஹிந்து சாஸ்த்ரங்கள் சொல்லுகின்றன. மற்ற மத நூல்களும் இதனையே வற்புறுத்துகின்றன. ஆதலால் ஈகையிலும் பரோபகாரத்திலும் கீர்த்திபெற்றதாகிய நமது நாட்டில், இத்தகைய பள்ளிக்கூடமொன்றை மாஸ வசூல்களாலும், நூற்றுக் கணக்காகவும், ஆயிரக் கணக்காகவும் அல்லது சிறு சிறு தொகைகளாகவும் சேகரிக்கப்படும் விசேஷ நன்கொடைகளாலும் போஷித்தல் சிரமமான காரியம் அன்று. இது மிகவும் எளிதான காரியம்.

இந்தப் பள்ளிக்கூடங்களை ஒரு சில மனிதரின் ப்ரத்யேக உடைமையாகக் கருதாமல், கோயில், மடம், ஊருணி முதலியன போல் கிராமத்தாரனைவருக்கும் பொது உடைமையாகக் கருதி நடத்தவேண்டும். பொது ஜனங்களால் சீட்டுப் போட்டுத் தெரிந்தெடுக்கப் படுவோரும் ஐந்து வருஷங்களுக்கு ஒருமுறை

மாற்றப்படவேண்டியவருமாகிய பத்து கனவான்களை ஒரு நிர்வாக ஸபையாகச் சமைத்து, அந்த ஸபையின் மூலமாகப் பாடசாலையின் விவகாரங்கள் நடத்தப்பட வேண்டும். இந்த நிர்வாக ஸபையாரைத் தெரிந்தெடுப்பதில் கிராமத்து ஜனங்களில் ஒருவர் தவிராமல் அத்தனைபேருக்கும் சீட்டுப்போடும் அதிகாரம் ஏற்படுத்தவேண்டும்.

இத்தகைய கல்வி கற்பதில் பிள்ளைகளிடம் அரையணுக்கூடச் சம்பளம் வசூலிக்கக்கூடாது. தம்முடைய பிள்ளைகளுக்குச் சம்பளங்கொடுக்கக்கூடிய நிலைமையிலிருந்து, அங்ஙனம் சம்பளங்கொடுக்க விரும்புவோரிடம் அத்தொகைகளை நன்கொடைகளாகப் பெற்றுக்கொள்ளலாம். மேலும், மிகவும் ஏழைகளான பிள்ளைகளுக்குப் பள்ளிக்கூடத்திலிருந்தே இயன்றவரை புஸ்தகங்களும், வஸ்த்ரங்களும், இயன்றவிடத்தே ஆஹாரச் செலவும் கொடுக்க ஏற்பாடு செய்ய வேண்டும்.

ஆண்மக்களுக்குமட்டுமன்றி, இயன்றவரை பத்து வயதுமட்டுமேனும் பெண்குழந்தைகளும் வந்து கல்வி கற்க ஏற்பாடு செய்யலாம். அங்ஙனம் செய்தல் மிகவும் அவசியமாகவே கருதத் தகும். ஆனால், ஜனங்கள் அறியாமையால் இங்ஙனம் பெண்குழந்தைகளும் ஆண்குழந்தைகளும் சேர்ந்து படிக்கும் விஷயத்தில்

ஆக்ஷேபம் சொல்லக்கூடிய கிராமங்களில், இதை வற்புறுத்தாமல் முதலில் ஆண்பிள்ளைகளுக்கு மாத்திரமாவது தேசீயக் கல்வி பயிற்ற ஏற்பாடு செய்யலாம். பெண்குழந்தைகளுக்கு இதே மாதிரியாக உபாத்திச்சிமார் மூலமாகக் கல்வி பயிற்றக்கூடிய இடங்களில் அதனையும் செய்யலாம்.

பாடசாலை வைப்பதற்குத்தக்க இடங்கள் செல்வர்களால் ஏற்படுத்திக் கொடுக்கப்படவேண்டும். இது ஸௌகர்யப்படாத இடங்களில் கோயில்கள், மடங்கள் முதலிய பொதுஸ்தலங்களிலே பாடசாலை நடத்தலாம். அதிகப் பணச்செலவின்றி ஸௌகர்யமும், நல்ல காற்றோட்டமும் ஒளிப்பெருக்கமு முடைய கூறைக் கட்டிடங்கள் கட்டி அவற்றில் பாடசாலை நடத்தினால் போதும். இடம் பெரிதாக இருக்கவேண்டிய அவசியமில்லை. ஏராளமான பணஞ் செலவு செய்து கட்டிடங்கள் கட்டவேண்டிய அவசியமுமில்லை. சாதாரண சௌகர்யங்கள் பொருந்திய இடங்களில் கல்வி நன்றாகக் கற்பித்தால் அதுவே போதும்.

இங்ஙனம் ஆரம்பப் பாடசாலைகளில் படித்துத் தேறும் பிள்ளைகள் அந்த அளவிலே ஏதேனும் தொழில் அல்லது வியாபாரத்துறையில் புகுந்து தக்க சம்பாத்யம் செய்யத் தகுதியுடையோராய் விடுவார்கள். அங்ஙனமின்றி, நாட்டிலுள்ள பல உயர்தரப் பாடசாலைகளில் அவர்கள் சேர்ந்து மேற்படிப்புப் படிக்க விரும்பினாலும் அதற்கு இப் பள்ளிக்கூடங்கள் தக்க

சாதனங்களேயாகும். மேலும் இவ்விதமான ஆரம்பப் பாடசாலைகள் நன்கு நடந்து வெற்றி பெற்றுவிடுமாயின், அப்பால் இதே கொள்கைகளை ஆதாரமாகக் கொண்ட மேல்தர தேசீயப் பாடசாலைகள் ஏற்படுத்தக் கூடிய இடங்களில் அங்ஙனம் செய்யலாம்.

முக்கியமான குறிப்பு:— ஹிந்துக்களல்லாத பிள்ளைகள் இப்பாடசாலைகளில் சேர்ந்தால் அவரவர் மதக் கொள்கைகளை அன்னியமத தூஷணையின்றி பெருந் தன்மையாகக் கற்றுக்கொடுப்பதற்குரிய வழிகள் செய்ய வேண்டும்.

## முடிவுரை

தேசத்தின் வாழ்வுக்கும் மேன்மைக்கும் தேசீயக் கல்வி இன்றியமையாதது. தேசீயக் கல்வி கற்றுக் கொடுக்காத தேசத்தை தேசமென்று சொல்லுதல் தகாது. அது மனிதப்பிசாசுகள் கூடி வாழும் விஸ்தாரமான சுடுகாடேயாம். இந்த விஷயத்தை ரவீந்த்ர நாத் தாகூர், ஆனி பெஸண்ட், நீதிபதி மணி அய்யர் முதலிய ஞானிகள் அங்கீகரித்து, நம் நாட்டில் தேசீயக் கல்வியைப் பரப்புதற்குரிய தீவிரமான முயற்சிகள் செய்கின்றனர். ஆதலால், இதில் சிறிதேனும் அசிரத்தை பாராட்டாமல், நமது தேச முழுதும், ஒவ்வொரு கிராமத்திலும் மேற்கூறியபடி பாடசாலைகள் வைக்க முயலுதல் நம்முடைய ஜனங்களின் முதற் கடமையாம்.

# தேசியக் கல்வி (2)

## ஸ்ரீமான் ஜினராஜதாஸரின் கருத்து

"கல்வியைப் பற்றிய மூலக் கொள்கைகள் எல்லா நாடுகளுக்கும் பொது. ஆனால், அந்தக் கொள்கைகளை வெவ்வேறு தேசங்களில் பிரயோகப் படுத்தும்போது இடத்தின் குணங்களுக்கும் ஜனங்களின் குணங்களுக்கும் தக்கபடி கல்வி வழியும் வெவ்வேறாய்ப் பிரிந்து தேசியமாகி விடுகிறது. இங்கிலாந்தின் கல்வி முறையில் பலவகை விளையாட்டுகளும் சரீரப் பயிற்சி முறைகளும் கட்டாயமாக ஏற்பட்டிருக்கின்றன, இத்தாலியில் அவை புறக்கணிக்கப் படுகின்றன. அங்கு கற்பனா சக்தியும், சிற்பம் முதலிய கலைகளும் தலைமையாகக் கொண்ட கல்வியே பயிற்றப்படுகிறது. இதன் காரணம்: இங்கிலாந்தில் பயிர் விளைவு குறைவு; ஆதலால், அநேக ஜனங்கள் வெளித் தேசங்களில் குடியேறி ஜீவனம் செய்தல் அவசியமாகிறது; அதற்குரிய குணங்களை ஆங்கிலக் கல்வி முக்கியமாகக் கருதுகிறது. அமெரிக்காவில், ஜனாதிகாரமே மேலான ராஜ்ய தர்மமென்றும், எத்தனை பெரிய ஏழையும் எத்தனை பெரிய செல்வனும் தம்முள் சமமேயன்றி அவர்களில் ஏற்றத் தாழ்வு கிடையாதென்றும், பிறரைச் சார்ந்து நிற்காமல் தன்மதிப்புடன் பிழைக்கத் தகுந்த கூலி தரும் எவ்விதமான கைத்தொழிலிலும் அவமானத்துக்கு இடமில்லையென்றும் பாடசாலைகளில் முக்கிய போதனையாகக் கற்பிக்கிறார்கள். இந்தியாவில் மாத்திரம் சுதே

சீயக் கல்வி இல்லை. இந் நாட்டுக் கல்வி முழுதும் பிரிட்டிஷ் குணமுடையதாக இருக்கிறது. ஒரு வாரத்தில் இரண்டு மூன்று மணிநேரம் ஹிந்து தேச சரித்திரமும் தேசபாஷைகளும் கற்றுக்கொடுத்தால் போதாது. அதினின்றும் சுதேசிய ஞானம் ஏற்படாது. சென்னையில் 'பிரெஸிடென்ஸி காலேஜ்' என்று சொல்லப்படும் மாகாணக் கலாசாலையின் கட்டடம் நமது தேச முறையைத் தழுவியதன்று. பழைய இத்தாலி வழியொன்றை அனுசரித்தது. இங்கிலாந்தில் ஆக்ஸ்போர்ட் கேம்பிரிட்ஜ் சர்வகலா சங்கங்களின் கட்டிடம் இத்தாலிய முறையிலா கட்டியிருக்கிறார்கள்? அன்று. ஆங்கில நெறியிலே கட்டியிருக்கிறார்கள். அது போலவே, பாரததேச முறைமைப்படி கட்டிய கட்டிடங்களில் கற்றுக்கொடுக்காத கல்வி இங்கு சுதேசியக் கல்வி என்று சொல்லத் தகுந்த யோக்யதை பெறாது."

இது ஜினராஜதாஸர் சில தினங்களின் முன்பு சென்னைப் பத்திரிகைகளில் பிரசுரம் செய்திருக்கும் ஒரு வ்யாஸத்தின் ஸாரமாம். இதில் கடைசி அம்சம் மிகவும் கவனிக்கத் தகுந்தது. நமது தேசத்து முறைமைப்படி கட்டிய கட்டடத்திலேயன்றிப் பிற நாட்டு முறை பற்றிக் கட்டிய மனைகளிலேகூட தேசியக்கல்வி பயிற்றுதல் ஸாத்ய மில்லையானால், ஓஹோ, பாஷை விஷயத்தை என்னென்று சொல்வோம்! தமிழ் நாட்டில் தேசியக் கல்வி கற்பிக்க வேண்டுமானால், அதற்குத் தமிழே தனிக் கருவியாக ஏற்படுத்த வேண்டு மென்பதைச் சொல்லவும் வேண்டுமா?

## தமிழ்நாட்டுப் பெண்கள்

தமிழ் நாட்டு ஸ்த்ரீகளையும் சேர்த்துக்கொண்டு, அவர்களுடைய யோசனைகளையுந் தழுவி, நடத்தாவிடின் அக் கல்வி சுதேசீயம் ஆகமாட்டாது. தமிழ்க் கல்விக்கும் தமிழ்க் கலைகளுக்கும் தொழில்களுக்கும் தமிழ் ஸ்த்ரீகளே விளக்குகளாவர். தமிழ்க் கோயில், தமிழரசு, தமிழ்க் கவிதை, தமிழ்த் தொழில் முதலியவற்றுக்கெல்லாம் துணையாகவும் தூண்டுதலாகவும் நிற்பது தமிழ்மாதரன்றோ? இப்போது ஸ்ரீமதி அனி பெஸண்ட் தம்முடன் திலகர் ரவீந்த்ரநாதர் முதலிய மஹான்கள் பலரையும் சேர்த்துக்கொண்டு மீளவும் எழுப்பியிருக்கும் தேசீயக் கல்வி முயற்சியில் ஏற்கெனவே நீதிபதி ஸதாசிவ அய்யர் பத்தினி ஸ்ரீமதி மங்களாம்பாள் முதலிய ஓரிரண்டு ஹிந்து ஸ்த்ரீகள் சர்வகலாசங்கத்தின் ஆட்சிமண்டலத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள். ஆனால், இது போதாது. தேசியக் கல்வியின் தமிழ் நாட்டுக் கிளையென ஒரு கிளை ஏற்படவேண்டும். அதன் ஆட்சிமண்டலத்தில் பாதி தொகைக்குக் குறையாமல் தமிழ் ஸ்த்ரீகள் கலந்திருக்கவேண்டும். ஒரு பெரிய சர்வ கலா சங்கத்தின் ஆட்சிமண்டலத்தில் கலந்து தொழில் செய்யத்தக்க கல்விப் பயிற்சியும் லௌகிக ஞானமும் உடைய ஸ்த்ரீகள் இப்போது தமிழ் நாட்டில் பலர் இலர் என ஆக்ஷேபங் கூறுதல் பொருந்தாது. தமிழ் நாடு முழுதுந் தேடிப்பார்த்தால் ஸ்ரீமதி மங்களாம்பாளைப்போல இன்னும் பத்து ஸ்த்ரீ

கள் அகப்படமாட்டார்கள் என்று நினைக்க ஹேது வில்லை. எதற்கும் மேற்படி ஆட்சிமண்டலம் சமைத்து, அதில் பத்துப் பெண்களைக் கூட்டி நடத்தவேண்டிய காரியங்களைப் பச்சைத் தமிழில் அவர்களிடம் கூறினால், அதினின்றும் அவர்கள் பயன்படத்தக்க பல உதவி யோசனைகளையும் ஆண்மக்கள் புத்திக்குப் புலப்பட வழியில்லாத புது ஞானங்களையும் சமைத்துக் கொடுப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை. முன்பு தமிழ் நாட்டை மங்கம்மா ஆளவில்லையோ? ஒளவையார் உலக முழுதும் கண்டு வியக்கத்தக்க நீதி நூல்கள் சமைக்கவில்லையோ?

## மீர்ஜா ஸமி உல்லா பேக்

முன்பு முகம்மதிய சர்வ கலா சங்கம் ஸ்தாபிக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் எழுந்த முயற்சியில் தலைவர்களில் ஒருவராக உழைத்த மீர்ஜா ஸமி உல்லா பேக், "ஜாதி மத பேதங்களால் சிதைந்து போயிருப்பதால், பாரத தேசத்தார் மேலே எழமாட்டார்களென்று பிறர் கூறும் அவச்சொல்லை நீங்கள் கேட்காதிருக்க வேண்டினால், மேலும் ஸ்வராஜ்யத்துக்குத் தகுதியுடையோராக உங்களைக் காட்டிக்கொள்ள விரும்பினால், தேசீயக் கல்விக்குத் துணை செய்யுங்கள். இந்தத் தருணம் தவறினால், இனி வேறு தருணம் இப்படி வாய்க்காது" என்கிறார். தேசீயக்கல்வியும் ஸ்வராஜ்யமும் தம்முள்ளே பிரிவு செய்யத் தகாதன என்றும், இவ்விரண்டினுள் ஒன்றன் அவசியத்தை அங்கீகாரம்

செய்துகொள்ள வேண்டும் என்றும் அரவிந்த கோஷ் சொல்லியதும் மேற்படி ஸமி உல்லா சொல்வதும் பொருத்தமாகவே காணப்படுகின்றன. எந்த வினைக்கும் காலம் ஒத்து நின்றாலொழிய அதனை நிறைவேற்றுதல் மனிதனுக்கு சாத்யமில்லை. விதியின் வலிமை சாலவும் பெரிது. ஆனால் விதி இப்போது தேசீயக்கல்வி முயற்சிக்கு அநுகூலமான காலத்தை ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறது என்ற செய்தியை மீர்ஜா ஸமி உல்லா நம்நாட்டாருக்கு நினைப்பூட்டுகிறார்.

'காளயுக்தி' என்பது காலயுக்தி; அதாவது காலப் பொருத்தம். காலம் இந்த வர்ஷத் தொடக்கத்தில் எந்தப் பெருஞ் செலயலுக்கும் மிகவும் பொருத்தமாகத் தோன்றுகிறது.

பகவத் கீதையில் துர்க்காஸ்துதி முதலிய சில அம்சங்கள் சேர்த்தும், ஹம்ஸ யோகி என்பவரின் 'கீதா ரகஸ்யம்' என்னும் உரைநூலில் கூறப்பட்டதைத் தழுவி 18 அத்யாயக்கணக்கை 24 அத்யாயமாக மாற்றியும், சென்னை சுத்த தர்ம மண்டலத்தார் ஒரு புதிய பதிப்புப் போட்டிருக்கிறார்கள்.

இதற்கு நீதி நிபுண மணி அய்யர் ஒரு முகவுரை எழுதியிருக்கிறார். அந்த முகவுரையில் சக்தி தர்மத்தை மிகவும் உயர்த்திக் கொண்டாடுகிறார்.

இப்படிப்பட்ட மணி அய்யரும் அனி பெசண்ட் அம்மையும் கலந்து நடத்தும் தேசீயக்கல்வி முயற்சி

யில் பெண்களின் ஆதிக்யம் மேன் மேலும் ஓங்கி வளரும் என்பது சொல்லாமலே விளங்கும்.

மேற்பதிப்பின் முதல் ஏட்டின் முதுகுப் புறத்தின் தலைப்பில் 'ஓம் நம: ஸ்ரீ பரமர்ஷிப்யோ யோகிப்ய:' (யோகிகளாகிய தலைமை முனிவரைப் போற்றுகிறோம் ஓம்) என்று அச்சிட்டு, அடியில்

"ஸ்ரீம்; ஸ்ரைம்; ஸ்ரைம்: ஓம்—தாஸ;"

என்ற மந்திரங்கள் பொறிக்கப்பட்டிருக்கின்றன.

இம் மந்திரங்களின் பொருள் யாதெனில்—

ஸ்ரீம்—லக்ஷ்மியை

ஸ்ரீ. திரு என்றவை ஒரு மொழியின் வடிவங்கள்.

ஸ்ரைம்—ஆச்ரயிருக்கிறேன்; சார்ந்து நிற்கிறேன்;

ஆதலால்,

ஸ்ரைம்—அசைகிறேன்,

ஓம்—ப்ரணவம் = ப்ர + நவம் = மேன்மேலும் புதிய நிலை.

எப்போதும் க்ஷணந்தோறும் புதிய புதிய உயிருடன் என்றும் அழியாத அமிர்தநிலை பெற்று விளங்குவேன்.

தாஸ: = அடியேன்.

இப்பொருளுடைய மந்திரங்களை துர்க்காஸ்துதி சேர்ந்த கீதைப் பதிப்புடன் ஆரம்பத்தில் போட்டது மிகவும் பொருத்தமுடைய செய்கையேயாம்.

மஹா சக்தியே தாய் அல்லது மனைவி வடிவத்தில் மனிதன் உயிருக்குத் துணை புரிகிறாள். ஆதலால், பெண்ணை ஆச்ரயித்த வாழ்க்கையே தேவவாழ்க்கை. "வந்தே மாதரம்" என்பதும் "ஓம் ஸ்ரீம்" என்பனவும் நம்முடைய தேசக் கல்விச் சாலைகளின் வாயிற் கதவுகளிலும் கொடிகளிலும் பொறிக்கத்தக்க மந்திரங்களாம்.

மேலும் அந்தப் பதிப்பின் மூன்றும் எட்டின் முதுகுப் புறத்தை திருப்பினால், அதில் நான்கு குதிரைகள் பூட்டிய தேரைக் கண்ணன் நடத்த, அதில் அர்ஜுனன் வீற்றிருப்பதைப்போல் சித்திரம் வரையப்பட்டிருக்கிறது; இஃது ஆண்மக்கள் ஒருவருக்கொருவர் நட்புச் செலுத்த வேண்டிய நெறியைக் காட்டுவது.

ஆண்மக்கள் இருவர் பரஸ்பரம் எங்ஙனம் பாவனை செய்ய வேண்டும்? நர நாராயணரைப் போல. நீ உனது மித்திரனைக் கண்ணனாகவும், தன்னைப் பார்த்தனாகவும், அவன் உன்னைக் கண்ணனாகவும், தன்னைப் பார்த்தனாகவும் உணர்ந்து கொள்ள வேண்டிய நெறி மேற்படி மந்திரங்களாலும் சித்திரத்தாலும் குறிக்கப் படுவது.

இந்த நெறி தேசியக் கல்விச்சாலைகளில் கற்பிக்கும் விஷயங்களுள் ஒன்றாகக் கற்பிக்கப்பட வேண்டும்.

### ஹிந்து முஹம்மதிய ஸமரஸம்

தேசீயக்கல்வியில் முகம்மதியர் எத்தனைக்கெத்தனை சேர்ந்துழைக்கிறார்களோ, அத்தனைக் கத்தனை

அம்முயற்சி அதிகப் பயன் அடையும். மத பேதங்களை வ்யாஜமாகக் காட்டி ஹிந்து முகம்மதியர் ராஜரீக முதலிய பொது விஷயங்களிலும் கூடியுழைக்காமல் தடுக்கவேண்டும் என்று ஆங்கிலோ-இந்தியப் பத்திராதிபர் முதலிய பொதுச் சத்துருக்கள் செய்த தீய முயற்சிகளெல்லாம் விழலாய் விட்டன. மஹான் முஹம்மது அலி, அவர் அண்ணன் ஷௌகத் அலி ஸேட் யாகுப் ஹுஸேன், பெரிய ஜின்னா, மஹமதாபாத் ராஜா முதலிய மேலோர்களின் ப்ரயத்னத்தால் ஹிந்து முகம்மதியர் அண்ணன் தம்பிகளென்பது தென் அமெரிக்காக்க கண்டத்தாருக்குக் கூட ஸம்சயம் ஏற்பட இடமில்லாமல் பசுமரத்தில் அடிக்கப்பட்ட ஆணிபோல் நிலை நிறுத்தப்பட்டுவிட்டது.

மேலும் இந்தியாவிலுள்ள முசல்மான்களில் பலர் ஹிந்து சந்ததியார். அவர்களுடைய நெஞ்சில் ஹிந்து ரத்தம் புடைக்கிறது. இங்ஙனமில்லாமல் வெறும் பட்டாணிய அராபிய பாரஸீக மொஹாலய சந்ததியாக இருப்போரும் இந்த தேசத்தில் ஆயிர வருஷங்களுக்கு மேலாக வாழ்வதால், ஹிந்து ஜாதியாராகவே கருதத்தக்கவர் ஆவர். எங்ஙனமெனில், ஜப்பானில் பிறந்தவன் ஜப்பானியன்; சீனத்தில் பிறந்தவன் சீனன்; ஹிந்து தேசத்தில் பிறந்தவன் ஹிந்து; இதர தேசங்களில் தேச எல்லையே ஜாதி எல்லையாகக் காணப்படுகிறது. இந்த நாட்டிலும் அதே மாதிரி ஏன் செய்யக்கூடாது?

இந்தியா, இந்து, ஹிந்து மூன்றும் ஒரே சொல்லின் திரிபுகள். இந்தியாவில் பிறந்தவன் இந்திய ஜாதி அல்லது ஹிந்து ஜாதி.

(2) கிறிஸ்தவர்.

தேசீயக் கல்வி முயற்சிகளில் சேரக்கூடாதென்று ஒரு சில மூடப் பாதிரிகள் சொல்லக்கூடும். அதை ஹிந்துக் கிறிஸ்தவர் கவனிக்கக்கூடாது. தேசீயக் கல்வியில், ரிக்வேதமும், குரானும், பைபிலும் ஸமானம். கிறிஸ்து, கிருஷ்ணன் என்பன பர்யாய நாமங்கள். வங்காளத்தில் ஹிந்துக்கள் கிருஷ்ணதாஸ பாலன் என்று சொல்வதற்குக் கிறிஸ்தோதாஸ் பால் என்று சொல்கிறார்கள்.

(3) மனுஷ்யத்தன்மை.

'ஆங்கிலேயர், பிராமணர், ஆஸ்திரேலியாவில் முந்தி வேட்டைகளில் அழிக்கப்பட்ட புதர்ச்சாதியார் (Bushmen)—எல்லாரும் பொதுவில் 'மனிதர், ஆதாம் ஏவாவழியில் பிறந்தவர்கள்' என்று கூறி, முஹம்மதியக் கிறிஸ்தவ வேதங்கள் 'மனிதர் எல்லோரும் ஒன்று' என்பதை உணர்த்துகின்றன. மஹாபாரதத்தில், மனிதர், தேவர், புட்கள், பாம்புகள் எல்லோருமே காச்யப ப்ரஜாபதியின் மக்களாதலால் ஒரே குலத்தார் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

வேதாந்த சாஸ்த்ரமோ, பிராமணர், நாயர், முதலே, கரடி, வெங்காயப்பூண்டு முதலிய சகல ஜீவங்

களும் பரமாத்மாவின் அம்சங்களே யன்றி வேறல்ல என்று பல நூற்றாண்டுகளாகப் பறையறைந்து கொண்டு வருகிறது.

ஆதலால், தேசியக்கல்வி முயற்சியில் ஜாதிமத வர்ண பேதங்களை கவனிக்கக் கூடாதென்று அரவிந்த கோஷ், திலக், அனிபெஸண்ட் முதலியவர்கள் சொல்லுவதை இந்த நாட்டில் எந்த ஜாதியாரும், எந்த மதஸ்தரும், எந்த நிறத்தையுடையவரும் மறுக்க மாட்டார்களென்று நம்புகிறேன்.

### கிராமப் பள்ளிக்கூடங்கள்

அனாவசியமான தண்டத்திற்கெல்லாம் தமிழர் பணத்தை வாரி இறைக்கிறார்கள். 'கான்பரென்ஸ்' என்றும் 'மீட்டிங்' என்றும் கூட்டங்கள் கூடி விடிய விடிய வார்த்தை சொல்லுகிறார்கள். கிராமங்கள் தோறும் தமிழ்ப் பள்ளிக்கூடங்கள் போடுவதற்கு யாதொரு வழியும் செய்யாமல் இருக்கிறார்களே! படிப்பில்லாத ஜனங்கள் மிருகங்களுக்குச் சமானமென்று திருவள்ளுவர் பச்சைத் தமிழிலே சொல்லுகிறார். நமக்குள் எத்தனையோ புத்திமான்கள் இருந்தும், நம்மிலே முக்காற் பங்குக்கு மேலே மிருகங்களாக இருக்கும் அவமானத்தைத் தீர்க்க ஒரு வழி பிறக்கவில்லையே! ஏன்? எதனாலே? காரணந்தான் என்ன?

ஜாதி என்ற சொல் இரண்டு அர்த்தமுடையது. முதலாவது, ஒரு தேசத்தார் தமக்குள் ஏற்படுத்தி

வைத்துக்கொள்ளும் பிரிவு; வேளாள ஜாதி, பிராமண ஜாதி, கைக்கோள ஜாதி என்பது போல. இரண்டாவது, தேசப் பிரிவுகளைத் தழுவிய வேற்றுமை. ஜப்பானிய ஜாதி, சீன ஜாதி, பாரஸிக ஜாதி, ஆங்கிலேய ஜாதி, ஜர்மானிய ஜாதி, ருமானிய ஜாதி என்பதுபோல. இவ்விரண்டிலும் அதிக அநுகூலமில்லையென்பது ஸ்ரீமான் ரவீந்திரநாத தாகூருடைய கக்ஷி.

அமெரிக்காவிலே பிறந்தவன் தான் அமெரிக்க ஜாதியென்றும் ஆங்கில ஜாதி இல்லையென்றும் நினைத்துக் கொள்கிறான். இங்கிலாந்திலுள்ள ஆங்கிலேயனுக்கும் குடியரசுத் தலைவன் வில்ஸனுக்கும் நடை உடை ஆசாரம் மதம் பாஷை எதிலும் வேற்றுமை கிடையாது. ஆனால், தேசத்தை யொட்டி வேறு ஜாதி 'நேஷன்'. இந்த தேச ஜாதிப் பிரிவு மேற்குப் பக்கத்தாரால் ஒரு தெய்வம்போல் ஆதரிக்கப்படுகிறது. அங்கு, யுத்தங்களுக்கு இக்கொள்கை ஒரு முக்கியகாரணம். எல்லா தேசத்தாரும் சகோதரர் என்றும், மனுஷ்யஜாதி முழுதும் ஒன்றே யென்றும், ஆதலால் தேச வேற்றுமை காரணமாக ஒருவரை ஒருவர் அவமதிப்பதும் அழிக்க முயல்வதும் பிழையென்றும் ஸ்ரீ. தாகூர் சொல்கிறார்.

அமெரிக்காவிலே ஒரு சபையிலே மேற்படி கொள்கையை எடுத்துக் காட்டுகையில், அந்த தேசத்தான் ஒருவன் இவரை நோக்கி "இவ்விதமான கொள்கையிலிருந்ததுபற்றியே உங்கள் தேசத்தை அன்னியர்

வென்று கைப்பற்றிக்கொள்ள நீங்கள் தோற்றுக் கிடக்கிறீர்கள்'' என்றான். "நாங்கள் இப்போது புழுதியோடு புழுதியாக விழுந்து கிடந்தாலும், எங்கள் பூமி புண்யபூமி. உங்களுடைய செல்வத்தின் மேலே தெய்வ சாபம் இருக்கிறது'' என்று ரவீந்திர தாகூர் அவனுக்கு மறுமொழி சொன்னாராம். அதாவது, இந்த நிமிஷத்தில் செல்வத்திலும் பெருமையிலும் நம்மைக் காட்டிலும் அமெரிக்க தேசத்தார் உயர்வு பெற்றிருந்த போதிலும், இந்த நிலைமை எப்போதும் மாறாமலிருக்கும் என்று அமெரிக்கா நினைப்பது பிழை. நாங்கள் தெய்வத்தையும் தர்மத்தையும் நம்பி யிருக்கிறோம். கீழே விழுந்தாலும் மறுபடி எழுந்து விடுவோம். அமெரிக்கா விழுந்தால் அதோகதி. ஆதலால், 'இனிமேலேனும் ஹிந்து தர்மத்தை அனுசரித்து, உலகமுழுதிலும் எல்லா தேசத்தாரும் உடன்பிறப்பென்றும் ஸமான மென்றும் தெரிந்துகொண்டு, பரஸ்பரம் அன்பு செலுத்தினால் பிழைக்கலாம்' என்று ரவீந்திரர் அவர்களுக்கு தர்மோபதேசம செய்கிறார்.

வெளி தேசத்தாருக்கு தர்மோபதேசம் செய்கையில், நமது நாட்டில் குற்றங்கள் நடப்பதைப்பார்த்துக் கொண்டிருக்கலாமா? இங்கே, அனாவசியமான ஜாதி விரோதங்களும் அன்புக் குறைவுகளும் அவமதிப்புகளும் வளரவிடலாமா? அவற்றை அழித்து உடனே அன்பையும் உடன்பிறப்பையும் நிலை நாட்டுவது நம்முடைய கடமையன்றோ?

எது எப்படியானாலும், இந்த தினத்தில் இந்த க்ஷணத்தில் நாமெல்லாரும் பறையர், பார்ப்பார் எல்லோரும், ராஜாங்கவிஷயத்தில் ஒரே ஜாதி. இப்போது எங்களுக்கு அதிகாரிகள் தயவு செய்யவேண்டிய விஷயம் என்னவென்றால்:—எல்லா ஜாதியாரும் சீட்டுப் போட்டு பிரதிநிதிகள் குறிக்கவேண்டும். அந்தப் பிரதிநிதிகள் சேர்ந்ததொரு மகாசபை வேண்டும். ராஜ்யத்தில் வரவுசெலவு உட்பட எல்லா விவகாரங்களும் மேற்படி மகாசபையார் இஷ்டப்படி நடக்க வேண்டும். அவ்வளவுதான். மற்றப்படி ஆங்கிலேய ஸாம்ராஜ்யத்தை விட்டு விலகவேண்டும் என்ற யோஜனை எங்களுக்கில்லை. மேற்படி பிரார்த்தனை பிராமணர் மாத்திரம் செய்வதாக அதிகாரிகள் நினைக்கலாகாது. எல்லா ஜாதியாரும் விண்ணப்பம் செய்கிறோம். விடுதலை விண்ணப்பத்துக்கு நல்ல உத்தரவு கொடுக்க வேண்டும்.

## 'காளயுக்தி'

காளயுக்தி என்பது கால யுக்தி; அதாவது, காலத்தின் பொருத்தம்; காலம் இந்த வருஷத்தின் ஆரம்பத்தில் எந்தப் பெருஞ் செயல்களுக்கும் மிகவும் பொருத்தமாகச் சமைந்திருக்கிறது.

தேசீயக் கல்வி, மனுஷ்ய ஜாதியின் விடுதலை, இவ்விரண்டு பெருங் காரியங்களைத் தொடங்கு

வதற்கும் இப்போது காலம் மிகவும் பொருத்தமாக வாய்த்திருக்கிறது.

இவற்றுள் மனுஷ்ய ஜாதியின் விடுதலை நிறைவேற வேண்டுமாயின் அதற்கு பாரத தேசத்தின் விடுதலை இன்றியமையாத மூலாதாரமாகும்.

இங்ஙனம் பாரத தேசம் விடுதலை பெற வேண்டுமாயின் அதற்கு தேசீயக் கல்வியே ஆதாரம்;

"அ..................ன்"

மேலே காட்டிய குறியின் பொருள்யாது?

தமிழ் நாட்டில் தேசீயக் கல்வி நடைபெற வேண்டுமாயின் அதற்கு அகர முதல் னகரப் புள்ளி இறுதியாக எல்லா வ்யவஹாரங்களும் தமிழ் பாஷையில் நடத்தவேண்டும் என்பது பொருள்.

ஆரம்ப விளம்பரம் தமிழில் ப்ரசுரம் செய்ய வேண்டும். பாடசாலைகள் ஸ்தாபிக்கப் பட்டால், அங்கு நூல்களெல்லாம் தமிழ் மொழி வாயிலாக, கற்பிக்கப் படுவது மன்றிப் பலகை குச்சி எல்லாவற்றுக்கும் தமிழிலே பெயர் சொல்ல வேண்டும்; "ஸ்லேட்," "பென்ஸில்" என்று சொல்லக் கூடாது.

## ஹிந்துக்களின் கூட்டம்

இந்தியா முழுதிலுமுள்ள ஹிந்துக்களின் அநுகூலத்திற்கு பாடுபட்டவரும் "அகண்ட பாரத ஹிந்து

சபை''யின் காரியதரிசியாக ஸ்ரீ ரத்னசாமு என்பவர் தேராதூன் பட்டணத்திலிருந்து "ஹிந்து" பத்திரிகைக்கு எழுதியிருக்கும் லிகிதமொன்றில் பின்வருமாறு சொல்லுகிறார்:—

'இந்த மாதம் முதல் தேதி, சென்னைத் தலைமைப் பாதிரி எல்லூரில் ஆணும் பெண்ணும் குழந்தைகளுமாக ஏறக்குறைய முந்நூறு பேரைக் கிறிஸ்து மதத்தில் சேர்த்துக்கொண்டார் என்று தெரிகிறது. இந்த விஷயம் நமது நாட்டில் பல இடங்களில் அடிக்கடி நடந்து வருகிறது: இது ஹிந்து மதத்தில் அபிமானமுடையவர்களுக்கெல்லாம் மிகுந்த வருத்தத்தை விளைவிக்கத் தக்கது.'

ஆம்; ஹிந்துக்கள் வருத்தப்படத்தக்க செய்திதான் அது. ஹிந்துக்களுடைய ஜனத் தொகை நாளுக்கு நாள் குறைவுபட்டு வருகிறது. கவிதையிலுள்ள மலைப் பாம்புபோல, வாலில் நெருப்புப் பிடித்தெரியும் போது தூங்கும் வழக்கம் இனி ஹிந்துக்களுக்கு வேண்டாம். விழியுங்கள்; ஜனத்தொகை குறையும்போதே பார்த்துக்கொண்டே சும்மா இருப்போர் விழித்திருக்கும்போதே தூங்குகிறார்கள்; அவர்கள் கண்ணிருந்தும் குருடர்.

பஞ்சமர்களின் விஷயமாக அகண்ட பாரத ஹிந்து சபையின் காரியதரிசி ஸ்ரீ ரத்னசாமு என்பவருக்கு ஸ்ரீ காசி ஹிந்து சபையின் தலைவராகிய வைதிக

மணி ஸ்ரீமான் பகவான்தாஸர் எழுதியிருக்கும் கடிதத்தில் ஒரு நல்ல யோசனை சொல்லுகிறார்: "பறையர்களுடைய தீண்டாமையை உடனே நீக்கி விடவேண்டும். காசி, நவத்வீபம், பிருந்தாவனம் என்ற ஸ்தலங்களிலுள்ள பண்டிதர்களும் சங்கர மடத்தார்களும் மற்றுமுள்ள மடாதிபதிகள் முதலியவர்களும் இவ் விஷயமாக உடனே உத்தரவு கொடுக்கவேண்டும்."

பஞ்சமருடன் பந்தி போஜனம் செய்யவேண்டுமென்றாவது, சம்பந்தங்கள் செய்யவேண்டுமென்றாவது, மேல்படி ரத்னசாமு முதலிய தர்மிஷ்டர்கள் விரும்பவில்லை. ஹிந்துக்களுக்குள் இதர வகுப்பினர் பந்தி போஜனம், சம்பந்தங்கள் இல்லாதிருக்கும் வரை பஞ்சமரும் அப்படியே இருக்கலாமென்று ஸ்ரீ ரத்ன சாமு சொல்லுகிறார். ஆனால் பஞ்சமரின் சேரிகளிலே கிறிஸ்துவப் பாதிரிகள் பள்ளிக்கூடங்கள் முதலியன வைப்பதுபோல் நமது குருக்கள் ஏன் செய்யவில்லை? அவர்களுக்கு ஹிந்து மதோபதேசம் செய்யும் கடமை யாரைச் சேர்ந்தது? அதற்கு மேற்படி மடாதிபதிகள் ஏன் ஆளனுப்பவில்லை. ஹிந்து தர்மத்தின் மஹிமையை நன்றாக அறிந்தோர் இஹலோக வாழ்க்கையில் எத்தனை கொடூரமான கஷ்ட நிஷ்டூரங்கள் நேரிட்டாலும் இந்த தர்மத்தை கைவிடமாட்டார்கள். உலகத்தில் நிகாற்றதாகிய வறுமையானது நமது தேசத்தை வந்து பிடித்துக்கொண்ட கால முதலாக நமது நாட்டார் பசியாலும் அதனாலேற்படும் நோய்க

ளாலும் லக்ஷக்கணக்காக அகால மரணத்துக்கிரை யாகி வருகிறார்கள். பசித் துன்பம் எல்லாருக்கும் பொதுவாக இருந்தாலும், கீழ்வகுப்பினருள் அதிக மாக பாதிக்கிறது. நாட்டில் பஞ்சம் நேரிட்டால் பஞ் சமர் முதலிய தாழ்ந்த வகுப்பினர் அதிகமாகச் சாகி றார்கள். பறையரும், புலையரும், பள்ளரும், சக்கிலி யரும், நம்மைப்போல ஹிந்துக்களென்பதையும், விபூதி நாமம் போட்டுக்கொண்டு நமது தெய்வங் களையே வணங்குவோரென்பதையும், மடாதிபதி, புரோஹிதர், குருக்கள் முதலியவர்கள் சற்றே மறந்து போய் விட்டதாகத் தோன்றுகிறது.

"அங்கமேலாங் குறைந்தழுகு தொழு நோயராய்
ஆ வுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராயின்
அவர் கண்டீர் யாம் வணங்குங் கடவுளாரே"

என்ற வாக்கை தமிழ் வேதமாகக் கொண்டாடுவோர் அதன் பொருளைத் தெரிந்து கொள்ளவில்லை.

"ஒக்கத் தொழுகிற்றி ராயின் கலியுகம் ஒன்று மில்லை" என்ற திருவாய்மொழிக் கருத்தை அநேகர் அறியாதிருக்கின்றார்கள். ஹிந்துக்களுக்குள்ளே இன் னும் ஜாதி வகுப்புக்கள் மிகுதிப்பட்டாலும் பெரி தில்லை. அதனால் நாம் தொல்லைப்படுவோமே யன்றி அழிந்து போய்விட மாட்டோம். ஹிந்துக்களுக்குள் இன்னும் வறுமை மிகுதிப் பட்டாலும் பெரிதில்லை. அதனால் தர்ம தேவதையின் கண்கள் புண்படும்; இருந்

தாலும் நமக்கு சர்வ நாசம் ஏற்படாது. ஹிந்து தர்மத்தை கவனியாமல், அசிரத்தையாக இருப்போமானால் நமது கூட்டம் நிச்சயமாக அழிந்துபோகும்; அதில் சந்தேகமில்லை.

ஹிந்து மதம் ஒன்று. சைவம், வைஷ்ணவம் முதலிய ஆறு சமயங்களும் அதன் உட்பிரிவுகள். இதை தேசத்து ஜனங்களில் பெரும்பாலோர் நன்றாக ஞாபகத்தில் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் குருக்கள், மடாதிகாரிகள் முதலிய சிலர் மறந்துபோயிருப்பதாகத் தெரிகிறது.

"திரமென்று தந்தம் மதத்தையேதாமதச்
செய்கை கோடுமுளற அறிவரார்?
ஆறு சமயங்கடோறும் வேறு வேறாகி
விளையாடும் உனையாவரறிவார்?"

என்று தாயுமானவர் சொல்லியது பாரத தேசத்து மகா ஜனங்களுக்கன்று. மஹாஜனங்கள் இவ்வுண்மையை நன்றாகத் தெரிந்து நடக்கிறார்கள். பிரம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்ர—என்ற நான்கு பிரிவிலும் பெரும் பகுதியோர் எல்லா தெய்வங்களையும் ஒன்றுபோலவே வணங்குகிறார்கள், வேத ரிஷிகளைப்போலே.

ஆனால் சைவ வைஷ்ணவ மடங்களிலும் பௌராணிகர் கூட்டத்திலும் பரஸ்பரமாகிய மதகண்டனைகள் கொஞ்சம் நடந்து வருகின்றன. அதை உடனே நிறுத்தவேண்டும்.

### ஹிந்துக்கள் யார்?

வேதத்தை நம்புவோர்.

ருத்ரன், நாராயணன், குமாரன் முதலிய தேவர்கள் வேத ரிஷிகளால் ஒன்றாகக் கருதி வணங்கப் பெற்றோர். ஒரே தெய்வத்தை இங்ஙனம் பல பெயர் கூறி வணங்கியதாக அந்த ரிஷிகளே சொல்லி யிருக்கிறார்கள்.

### நல்ல காலம்

ஹிந்து மதம் ஒன்று. ஆகவே, வைஷ்ணவ சமயாசாரியர், சைவ சமயாசாரியர், சங்கரமடத்தார் முதலிய குருக்களெல்லாரும் தமது பிரதிநிதிகள் மூலமாக ஒன்று கூடி யோசனை செய்து, ஹிந்துக்களுடைய ஜனத்தொகை குறையாமல் பாதுகாப்பதற்கு வழி செய்யவேண்டும். 'பிற மதங்களிலிருந்து ஜனங்களை நமது கூட்டத்தில் சேர்த்துக் கொள்வதற்கு வழிகளென்ன' என்பதைப் பற்றி யோசனை செய்ய வேண்டும், தெய்வம் ஹிந்துக்கள் மீது கடைக்கண் செலுத்தி விட்டது; நாம் கும்பிடும் சிலைகளெல்லாம் வெறும் கல்லும் செம்புமல்ல. மனிதர்களாலே சீர்படுத்த முடியாதபடி அத்தனை கெட்ட நிலைமையில் ஹிந்துக்கள் வீழ்ந்த சமயத்தில், மேற்படி தெய்வங்கள் காப்பாற்றக் கருதி முற்பட்டு நிற்கின்றன. நமக்குள்ளே மஹா ஞானிகளும், சித்த புருஷர்களும் அவதரித்து விளங்குகிறார்கள். ஹிந்துக்களுக்கு நல்ல காலம் பிறந்து விட்டது. இதனை எல்லோரும் தெரிந்து நடக்கவேண்டும்.

## ஜாதிப் பிரிவு

காச்மீர ராஜ்யத்திலே ஹிந்து ராஜா; ஆனால் ஹிந்துக் குடிகளைக் காட்டிலும் முகம்மதியக் குடிகள் அதிகம். அந்த ராஜ்யத்து ஹிந்துக்களிலே ஒரு விசேஷம் என்னவென்றால் அவர்களத்தனை பேரும் பிராம்மணர்; வேறு ஜாதியே கிடையாது. இமயமலைக் கருகேயுள்ள காஸ்கரா ஜில்லாவில் பிராம்மணரைக் காட்டிலும் க்ஷத்திரிய ஜாதியாருக்கு மதிப்பு அதிகம். க்ஷத்திரியன் உயர்ந்த ஜாதி; பிராம்மணன் தணிந்த ஜாதி. திருநெல்வேலி ஜில்லாவில் 'கம்பளத்து நாயகர்' என்ற ஜாதியைச் சேர்ந்த சில ஜமீன்தார்கள் இருந்தார்கள். இவர்கள் கலியாணத்திலே தாலி கட்டும்பொழுது பிராம்மணன் வரக்கூடாது. அவர்கள் ஜாதி புரோகிதர்கள் வந்து கலியாணத்திலே முக்கியச் சடங்கு நடத்த வேண்டும். அப்போது அரண்மனைக்கு சமீபத்திலே ஒரு பிராம்மணன் வந்தால் அதுவே அபசகுனம். அடித்து துரத்தி விடுவார்கள். 'ஜாதி பேதவினோதங்கள்' என்று யாரேனும் புஸ்தகம் எழுதினால் நிறைய விலையாகும். சர்க்கார் அச்சிடும் (ஜனசங்கியை) புஸ்தகத்திலும் வட இந்தியா ஜாதிகளைப்பற்றி நெஸ்பீல்டு (Nesfield) என்ற ஆசிரியர் எழுதியிருக்கும் புத்தகத்திலும், பத்திரிகைகளிலும் அனுபவத்திலும் தெரியக்கூடிய செய்திகளையெல்லாம் ஒன்று சேர்த்து நல்ல தமிழ்ப் புஸ்தகம் போடலாம்; நிறைய லாபம் கிடைக்கும். இந்தமாதிரியான புஸ்தகம் எழுதுவதற்கு வேண்டிய சௌகரியங்கள் எனக்கு இல்லை. தமிழ் நாட்

டில் வேறு யாரேனும் இந்தத் தொழில் செய்தால் நான் பத்துப் புஸ்தகம் விலைக்கு வாங்கிக்கொள்வேன்.

### ஆசாரச் சீர்திருத்தம்

இன்று காலையில் நான் நம்முடைய ஸ்நேகிதராகிய இடிப் பள்ளிக்கூடம் பிரமராய வாத்தியாரைக் கண்டு, புரோகிதர் வந்தால் என் வீட்டுக்கு ஆவணியவிட்டம் பண்ணுவிக்கும் பொருட்டு அனுப்பும்படி சொன்னேன். பிரமராயர் சொன்னார்:— "பெரிய வாத்தியாருடைய தங்கைக்கு உடம்பு சரியில்லை. மிகவும் ஆபத்தான நிலைமையில் இருப்பதாகக் கேள்விப்பட்டேன். என்ன செய்யலாம்? ஐயோ பாவம் கிழவி; அந்த அனிபெஸன்ட் வயது இவளுக்குமிருக்கும். அதனாலே அந்த வாத்தியார் இன்றைக்கு உபாகர்மம் பண்ணி வைக்கக் கோவிலுக்கு வருவதே சந்தேகம். அவருடைய மருமகன் குமார சாஸ்திரி வருவான். நான் கோவிலுக்குத்தான் போவேன். ராமராயர் உங்களைப் போலே உபாகர்ம உபநயன விஷயங்களை வீட்டுக்குள்ளேயே ரஹஸ்யமாக நடத்தி வருகிறாராகையால், அந்தக் குமார சாஸ்திரி என் வீட்டுப் பக்கமாக வருவான். நான் உங்கள் வீட்டுக்கு உடனே அனுப்புகிறேன்'' என்று சொன்னார்.

நான் அவரிடம்:— "அதென்ன ஸ்வாமி? இந்த ப்ராம்மண ஸமூஹத்தில் வருஷந் தவறாமல் இன்றைக்கு ஆவணியவிட்டமா நாளை ஆவணியவிட்டமா என்ற

சண்டை நியதமாகவே நடந்துகொண்டு வருகிறதே, காரணமென்ன?'' என்று கேட்டேன். அவர் சொன்னார்:— இந்துக்களிலே பத்தாயிரத்தில் ஒன்பதினாயிரத்துத் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பது பேர் அபண்டிதர்கள். பஞ்சாங்கமே முழுதும் தப்பிதம், உத்தராயண தக்ஷிணாயனக் கணக்கில் 22 நாள் தப்பிதம் போட்டிருக்கிறான்; இருபத்திரண்டுக்கும் இருபத்துமூன்றுக்கும் நடுவிலே. அதாவது, பஞ்சாங்கம் பிரயோஜனமில்லை. நம்முடைய வருஷ மாஸங் தேதியெல்லாம் தப்பிதம். இதைக் கவனிக்க நாதனைக் காணோம். ஆவணியவிட்டச் சண்டை நிர்த்தூளிப் படுகிறது. அஹோ! அபண்டிதா.'' என்றார். "பத்திரிகைகளிலே நடக்கிறதே அதைத் தவிர இந்த உள்ளூர்ப் பண்டிதர்களுக்குள்ளே வேறே 'லடாயி'கள் உண்டோ?'' என்று கேட்டேன்.

"அதை என்ன சொல்வேன், போம்! அத்வைத சமாஜமே மிகவும் த்வைத ஸ்திதியில் இருக்கிறது. உச்சி குமாஸ்தா முத்துஸாமி அய்யர் வியாழக்கிழமை தான் பூணூல் போட்டுக் கொள்ள வேண்டுமென்ற கக்ஷி. மணிலாக்கொட்டை மஹாதேவ அய்யர் வெள்ளிக்கிழமை கக்ஷி. வெங்காயக் கடை வெங்கு அய்யர் தெரியுமோ உமக்கு? அவருக்கு முத்துஸாமி அய்யரே திதி, நக்ஷத்திரம் எல்லாம். யாராவது நம்மிடம் வந்து இன்றைக்குத் திதி என்னவென்று கேட்டால் நாம் பஞ்சாங்கத்தை பார்த்துசொல்லு

கிறேன் என்று சொல்வோமா, மாட்டோமா? அந்த இடத்தில், அவர் முத்துஸாமியைப் பார்த்து வந்து சொல்லுகிறேன் என்பார். அவர் கூட இந்த தடவை ஸர்க்கார் ரஜா ஆவணியவிட்டத்துக்காக வெள்ளிக் கிழமை தான் விடுகிறார்கள் என்பதையும் அவருடைய மாப்பிள்ளை ஸர்க்கார் உத்தியோகத்தில் இருப்பதாலும், அவருக்கு வியாழக்கிழமை ரஜா கிடையாதாகையாலும் வெள்ளிக்கிழமை யன்று உபாகர்மம் நடத்தினால் தான் மாப்பிள்ளையும் தானும் சேர்ந்து நடத்த முடியும் என்பதையும் உத்தேசித்து, இந்த நிலைமையில் முத்துஸாமி அய்யரைக் காட்டிலும் கும்பகோணமே ப்ரமாணம் என்பதாக தீர்மானஞ் செய்துவிட்டார். ருஷ்யாவிலே குழப்பம் எப்படி இருக்கிறது ஸ்வாமி?" என்று பிரமராயர் முடித்தார். "அது எக்கேடும் கெட்டுப் போகிறது. மேலே உபாகர்ம விஷயத்தைச் சொல்லும்" என்றேன்.

இந்த சமயத்தில் கோயில் தர்மகர்த்தா வீரப்ப முதலியாரும் அங்கே வந்து சேர்ந்தார். வந்தவர், என்னை நோக்கி "இன்று கோயிலில் பிராமண அட்டஹாசம் அதிகமாக நடக்கும். நீங்கள் கோயிலிலே பூணூல் போட்டுக் கொள்ளுகிறீர்களா? வீட்டிலே தானா?" என்று கேட்டார். "வீட்டில்" என்றேன். "கோயிலும் வீடும் ஒன்று தானே?" என்று பிரமராயர் ஸூக்ஷ்மார்த்தமாகக் கேட்டார். "ஆம்"

என்றேன். வீரப்ப முதலியார் பேசத்தொடங்கினார்: "பூணூலை எடுத்துப் போடுங்கள்; இந்தியா முழுதும் ஒரே ஜாதி, ஒரே உடுப்பு, ஒரே ஆசாரம் என்று செய்து விடவேண்டும். அதுவரை பிராம்மண சபை, அப்ராம்மண சபை, ரெட்டி சபை, வன்னியர் சபை, முதலியார் சபை—இந்த இழவெல்லாம் தீராது. ஒரே கூட்டம் என்று பேசு. பூணூலென்ன கீணூலென்ன, வீண் கதை!" என்றார். பிரமராயர் சமாதானப்படுத்தப் போனார். வீரப்ப முதலியார் சொல்லுகிறார்: "எல்லாம் தெரியும், தெரியும். யாரோ ஒரு ராஜாவாம்; அவன் பூணூலை ஒரு தட்டிலும் பொன்னை ஒரு தட்டிலும் வைத்து நிறுத்துப் பார்த்தானும்; பூணூல் கீழே இழுத்ததாம்; பொன் மேலே போய் விட்டதாம். இதெல்லாம் மூட்டை. சரி சமானமாக ஐரோப்பியர்களைப்போலே நடப்போம். ஜப்பானிலே அப்படித் தான். ஜாதி வித்யாசத்தை முதலாவது நீக்கிவிட்டுத் தான் மறுவேலை பார்க்கத்தொடங்கினார்கள். ஜப்பானியரைப் போல இருப்போம்" என்றார்.

"ஹிந்துக்களைப் போலவே இருப்போம்" என்று நான் சொன்னேன்.

"எப்போதும் பிரிவும் சண்டையும் இருக்க வேண்டுமென்பது உம்முடைய கக்ஷியோ?" என்று வீரப்ப முதலியார் கேட்டார். "வேண்டியவர்கள் எல்லாம் பூணூல் போட்டுக்கொள்ளலாம். அது யாகத்

துக்கு வெளியடையாளமாக அந்தக் காலத்தில் ஏற்பட்டது. இஷ்டமான ஹிந்துக்கள் எல்லாரும் பூணூல் போட்டுக் கொள்ளலாம். மற்றவர்கள் சரி சமானமாக இருக்கலாம். பூணூல் இருந்தாலும் ஒன்று போலே, இல்லாவிட்டாலும் ஒன்று போலே. ஹிந்துக்களெல்லாம் ஒரே குடும்பம். அன்பு காப்பாற்றும். அன்பே தாரகம்'' என்றேன். "அன்பே சிவம்'' என்று பிரமராயர் சொன்னார். இவ்வளவுடன் காலை சபை கலைந்தது.

---

## ஆசாரத் திருத்த மஹாசபை

இப்போது நடைபெறும் 1920-ம் வருஷம் ஜூன் மாஸம் 22-ம் தேதியன்று தொடங்கி, அன்றைக்கும், அடுத்த இரண்டு மூன்று தினங்களும் திருநெல்வேலியில் "மாகாண ஆசாரத் திருத்த மஹாஸபை'' நடைபெறும் என்று தெரிகிறது. 21-ந் தேதியன்று மாகாணத்து ராஜரீக மஹா ஸபை திருநெல்வேலியில் கூடுகிறது. அதை அனுசரித்து, அதே பந்தரில் ஆசார ஸபையும் நடக்கும்.

22-ந் தேதி முதல், இரண்டு மூன்று நாள் கூடி, அங்கு, நம் மாகாணத்து ஆசாரத் திருத்தக்காரர் வழக்கப்படி விவாதங்கள் நடத்தி மாமூலைத் தழுவிச் சில தீர்மானங்கள் செய்து முடித்துப் பின்பு கலைந்து விடுவார்கள்.

எனக்குக் கிடைத்திருக்கும் அழைப்புக் கடிதத்தைப் பார்க்குமிடத்தே இந்த வருஷம் நடப்பது இருபத்திரண்டாவது வருஷக் கூட்டமென்று விளங்குகிறது. சென்ற இருபத்திரண்டு வருடங்களாக இம் மாகாணத்திலுள்ள ஆசாரத் திருத்தக் கூட்டத்தார் வெறுமே ஸபைகள் கூடித் தீர்மானங்கள் செய்திருப்பதே யன்றி உறுதியான வேலை என்ன செய்திருக்கிறார்கள் என்பதை அறிய வழியில்லை.

ராஜரீக மஹா ஸபையில் செய்யப்படும் தீர்மானங்கள் கார்யத்துக்கு வராவிட்டால், "அதற்கு நாம் என்ன செய்யலாம்? அதிகாரிகள் பார்த்து வரங் கொடுத்தால்தானே யுண்டு. நாம் கேட்க மாத்திரமே தகுதியுடையோர். நம்முடைய விருப்பங்கள் நிறைவேற வேண்டுமாயின், அதற்கு அதிகாரிகளின் தயவு வேண்டும்; அல்லது, இங்கிலீஷ் பார்லிமெண்டின் தயவு வேண்டும். அவை நிறைவேறாமலிருப்பது பற்றி நம்மீது குறை கூறுதல் பொருந்தாது" என்று சாக்குப்போக்குச் சொல்ல இடமிருக்கிறது.

ஆசாரத் திருத்த மஹாஸபையின் விஷயமோ அப்படியில்லை. இதில் நம்மவர்கள் செய்யும் தீர்மானங்களை நிறைவேற்ற வேண்டியவர்களும் நம்மவரே யன்றி பிறரில்லை. அதிகாரிகளின் தயவு வேண்டியதில்லை. இங்கிலீஷ் பார்லிமெண்டின் கருணையும் அவசியமில்லை. இதில் நாமே வரங்கேட்டு, நாமே வரங் கொடுக்க வேண்டும். அப்படி யிருந்தும், இந்த ஆசாரத்

திருத்தக் கூட்டத்தாரின் முயற்சிகள் ராஜ்யத் திருத்தக் கூட்டத்தாரின் பிரயத்தனங்களைக் காட்டிலுங் கூடக் குறைவான பயன் எய்தியிருப்பதை நோக்கும்போது மிகவும் வருத்தமுண்டாகிறது.

இந்த தேசத்து ஜனத் தலைவர்கள் மனிதர்களா? அல்லது வெறும் தோல் பொம்மைகள் தானா? இவர்கள் மனித ஹ்ருதயத்தின் ஆவலையும், மனித அறிவின் நிச்சயத்தையும் அவற்றின் பெருமைக்குத் தக்கபடி மதிப்பிடுகிறார்களா? அல்லது வெறும் புகையொத்த பதார்த்தங்களாகக் கணிக்கிறார்களா?

மேற்படி ஆசாரத் திருத்த ஸபைகளிலே அறிவுடைய மனிதர் பலர், ஜனத் தலைவர்களும், உத்யோக பதவிகளில் உயர்ந்தோரும், பிரபுக்களும், கீர்த்தி பெற்ற பண்டிதர்களும், சாஸ்திரிகளும், நீதிநிபுணர்களும் கூடி அறிவுடன் வாதங்கள் நடத்தி, அறிவுடன் சில தீர்மானங்கள் செய்து முடிக்கிறார்கள். அப்பால், அத் தீர்மானங்களை தமது சொந்த ஒழுக்கத்திலும் தேச ஜனங்களின் நடையிலும் செய்கைகளாக மாற்றுவதற்குரிய முயற்சிகள் ஒன்றுமே நடப்பதில்லை. எனவே, மனித அறிவை இவர்கள் களைந்து போடும் குப்பைக்கு நிகராகவே மதிக்கிறார்கள் என்று தோன்றுகிறது. மேலும், அந்தத் தீர்மானங்கள் நிறைவேறுவதனின்றும் தேசத்து ஜனங்களுக்கு நன்மை விளையும் என்ற உண்மையான நம்பிக்கையுடனேயே அவை பிரேரபணை செய்யப் படுகின்றன. இந்த விஷயத்தில்

ஏராளமான கால விரயமும் பொருட் செலவும் ஏற்படு கின்றன. இவ்வளவுக்கும் முடிவாக யாதொரு பயனும் விளையக் காணோமென்றால், இந்த ஆசாரத் திருத்தக் காரரின் சக்தியைக் குறித்து நாம் என்ன சொல்ல லாம்! இவ் வருஷமேனும், இவ்விஷயத்தில் தகுந்த சீர்திருத்தம் ஏற்படுமென்று நம்புகிறேன். முதலாவது விஷயம், ஆசாரத் திருத்த மஹா ஸபையில் பேசுவோ ராவது, 'உண்மையிலேயே தாம் பேசும் கொள்கையின் படி நடப்பவரா' என்பதை நிச்சயித்து அறிந்து கொள்ளவேண்டும். மஹா ஸபைக்குப் பிரதிநிதிகளாக வந்திருப்போர் அத்தனைபேரிலும் பெரும் பகுதியார் 'இப்போது உடனே தத் தம் குடும்ப வாழ்க்கையில் என்னென்ன சீர்திருத்தங்களை நிறைவேற்றத் தயாராக இருக்கிறார்கள்' என்பதைக் கண்டு பிடித்துப் பத்திரி கைகளில் வெளியிட வேண்டும்.

நமது மாகாண முழுமையிலும் ஆசாரத் திருத்த விஷயத்தில் சிரத்தை யுடையோர் எல்லோரும் இந்த மாஸம் திருநெல்வேலிக் கூட்டத்துக்கு அவசியம் வந்து சேர முயற்சி செய்யவேண்டும். இந்தக் கூட்டத்தை யொட்டி மாதர்களின் ஸபையொன்று நடக்கப்போகிற தாகையால், கல்வி கற்ற மாதர்களெல்லோரும் அவசி யம் வந்திருந்து தமக்கு வேண்டிய சீர்திருத்தங்களை உறுதிப்படுத்த ஏற்பாடு செய்ய வேண்டும். 'தாயும் பிள்ளையுமானாலும் வாயும் வயிறும் வேறு.' அவரவ ருக்கு வேண்டிய விஷயங்களைக் குறித்து அவரவர்

பாடுபட்டாலொழியக் காரியம் நடக்காது. மேலும், நம் நாட்டு ஆண் மக்கள் தமது நிலைமையை உயர்த்திக் கொள்ளக்கூடிய சுலபமான உபாயங்களைக் கூடக் கையாளத் திறமை யற்றோராகக் காணப்படுகிறார்களா தலால், நம்முடைய ஸ்த்ரீகளை மேன்மைப் படுத்துதற் குரிய காரியங்களை முற்றிலும் இந்த ஆண்மக்கள் வசத் திலே விட்டுவிடாமல், மாதர்கள் தாமே முற்பட்டுத் தமக்கு வேண்டிய சீர்திருத்தங்களைத் தேடிக் கொள் வதே நன்றாகும். அன்னிய தேசங்களில் விடுதலைக்காக உழைக்கும் ஸ்த்ரீகள் பெரும்பாலும் ஆண்மக்களின் உதவியை அதிகமாக நாடாமல் தமது மேம்பாட்டுக் குரிய வேலைகளைத் தாங்களே செய்து வருவதை நம் தேசத்து ஸ்திரீகள் நன்கு கவனிக்க வேண்டும்.

தமிழ் நாட்டு மக்களே! ஆரம்ப முதல் சமீப காலம் வரை ஆசாரத்திருத்தத் தலைவர்கள் பெரும்பா லும் தேசாபிமானம், ஸ்வபாஷாபிமானம், ஆர்ய நாகரீ கத்தில் அனுதாபம் இம் மூன்றும் இல்லாதவர்களாக இருந்துவந்தபடியால் பொது ஜனங்கள் இவர்களுடைய வார்த்தையைக் கவனிக்க இடமில்லாமல் போய் விட் டது. எனிலும் அவர்களுடைய கொள்கைகளிற் பல மிகவும் உத்தமமான கொள்கைகள் என்பதில் ஐயமில்லை.

"எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும்
அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு"

தேசாபிமானம் முதலிய உத்தம குணங்கள் இல்லாவிடினும், இந்த முயற்சி தொடங்கியவர்கள் உலகப் பொது நீதிகளை நன்குணர்ந்தோர். யாவராலே தொடங்கப்பட்ட தாயினும், இப்போது இம் முயற்சி தேசஜனங்களின் பொதுக் கார்யமாக பரிணமித்து விட்டது. எனவே, இவ்வருஷத்து மஹா சபையில் தமிழ் மக்கள் பெருந்திரளாக எய்தி நின்று, ஸபையின் விவகாரங்கள் பெரும்பாலும் தமிழிலேயே நடக்கும்படியாகவும், தீர்மானங்கள் பின்பு தேச ஒழுக்கத்தில் காரியப்படும் வண்ணமாகவும் வேண்டிய ஏற்பாடுகள் செய்யக்கடவர். எதற்கும் பிரதிநிதிகள் நல்ல பெருங் கூட்டமாக வந்தால்தான் நல்ல பயன் ஏற்படும். ஜெர்மன் பாஷையில் "கூட்டம்" என்பதற்கும் "உத்ஸாகம்" என்பதற்கும் ஒரே பதம் வழங்கப்படுகிறது பெருங்கூட்டம் சேர்ந்தால், அங்கு உத்ஸாகம் இயல்பாகவே பெருகும் என்பது குறிப்பு.

பொது ஜன உத்ஸாகமே சகல கார்யங்களுக்கும் உறுதியான பலமாகும். எனவே, நமது தேச முன்னேற்றத்தின் பரம ஸாதனங்களில் ஒன்றாகிய இந்த ஆசாரத் திருத்த மஹா சபையின் விஷயத்தில் நம்மவர், ஆண் பெண் அனைவரும், தம்மால் இயன்ற வகைகளிலெல்லாம் உதவி புரிந்து மிகவும் அதிகமான உத்ஸாகம் காட்டுவார்கள் என்று நம்புகிறேன்.

---

# நாற்குலம்

## சாதுர்வர்ண்யம்

சென்ற 'காங்கிரஸ்' ஜனசபை 'லக்னௌ' நகரத்தில் கூடிக் கலைந்த பிறகு, ஸ்ரீமான் லோகமான்ய பால கங்காதர திலகர் தமது இஷ்டர்களுடன் கான்பூருக்கு வந்தார். அங்கு ராமலீலை நாடக வெளியில் பதினையாயிரம் ஜனங்கள் சேர்ந்த பொதுக்கூட்டம் ஒன்று கூடி அவரை ஸ்வராஜ்ய போதனை செய்யும்படி வேண்டினார்கள். ஸ்வராஜ்ப பேச்சுக்கிடையே அவர் ஜாதிக் கட்டை முறித்துச் சொல்லிய சில வார்த்தைகளை இங்கு மொழிபெயர்த்துக் காட்டுகிறேன்.

திலகர் சொன்னார்:—"பழைய காலத்து நான்கு வர்ணப்பிரிவுக்கும் இப்போதுள்ள ஜாதிவேற்றுமைக்கும் பேத மிருக்கிறது. திருஷ்டாந்தமாக, இப்போது ஒரே பந்தியில் இருந்துண்ண விரும்பாதிருத்தல் சாதிப் பிரிவுக்கு லக்ஷணம் என்று பலர் நினைக்கிறார்கள். பழைய காலத்து விஷயம் இப்படியில்லை.

"நான்கு வர்ணங்கள் பிறப்பினாலேயல்ல, குலத்தாலும் தொழிலாலும் உண்டாயின' என்று கீதை சொல்லுகிறது. அதன்படி பார்த்தால் இப்போது நமக்குள் க்ஷத்திரியர் எங்கே யிருக்கிறார்கள்? நம்மைக் காப்போர் ஆங்கிலேயர்கள்; ஹிந்துக்களுள் க்ஷத்திரியரைக் காணோம். இந்தக் கான்பூர் பெரிய வியாபார ஸ்தலம். ஆனால் இங்குள்ள வைசியர் பிறதேசத்து

வியாபாரிகளின் வசத்தில் நிற்கிறார்கள். செல்வத் தலைமை நமக்கில்லை; இப்போதுள்ள பிராமணர் தாமே தேசத்தின் மூளையென்று சொல்லுகிறார்கள். ஆனால், இந்த மூளை மண்ணடைந்து போய், நாம் வெளியிலிருந்து அதிக மூளை இறக்குமதி செய்யும்படி நேரிட்டிருக்கிறது.

"நான்கு வர்ணத்தாருக்குரிய நால்வகைத் தொழில்களும் ஹிந்துக்களல்லாத பிறர் நியமனப்படி நடக்கின்றன. நாமெல்லோரும் தொண்டர் நிலையிலே இருக்கிறோம். தேசம் கெட்ட ஸ்திதியிலே இருக்கிறது. உங்களுடம்பில் பிராமண ரத்தம் ஓடுவதாகவும் க்ஷத்திரிய ரத்தம் ஓடுவதாகவும் நீங்கள் வாயினால் சொல்லலாம். ஆனால், உங்களுடைய வாழ்க்கை அப்படியில்லை."

இவ்வாறு திலகர் சொல்லியதிலிருந்து நமது தேசத்திற்கு மிகுந்த நன்மை யுண்டாகக் கூடும். ஏனென்றால், இவர் தேச முழுவதிலும் சுதேசியக் கட்சியாருக்கு தலைவராக இருப்பது மாத்திரமேயன்றி மஹாராஷ்டிரத்து வைதிகப் பிராமணர்களின் தலைவராகவும் விளங்குகிறார். வேத சாஸ்திர ஆராய்ச்சியில் உயர்ந்த கீர்த்தி பெற்றவர். நெடுங்காலமாக இடைவிடாது செய்து வரும் ஆராய்ச்சியினாலும், உயர்ந்த மேதையினாலும் நமது பூர்வீகமான ஜாதி தர்மத்தின் உட்கருத்தை நன்றாகத் தெரிந்து கொண்டு நமது தற்காலப் பிரிவுகளைக் கண்டிக்கிறார். புராதன தர்மமே

பின்பற்றத் தக்கது. ஹிந்துக்களாகிய நாமெல்லோரும் இவருடைய உபதேசப்படி நடந்தால் நன்மையுண்டாகும். இப்போதுள்ள ஜாதி விரோதங்களும் தாழ்வுகளும் நீங்கி எல்லோருக்கும் மேன்மை யுண்டாகும்.

ஏனென்றால், எல்லாச் செய்கையும் ஈசனுடைய செய்கை, சோம்பர் ஒன்றுதான் இழிவு; அதுதான் சண்டாளத்தனம். எந்தத் தொழிலையும் நேரே செய்வோர் மேன்மக்கள்.

ஒருவன் தான் பிராமணனாக வேண்டும் என்று கருதினால், அவன் உண்மை ஆராய்ச்சியே முதற்காரியமாகக் கொண்டு வாழக்கடவான். க்ஷத்திரிய பதவி வேண்டுமானால், தன்னுயிர்க்கிரங்காமல் மன்னுயிரைக் காப்பதே விரதமாகக் கொண்டு வாழக்கடவான். இங்ஙனமே மற்றவையும் கொள்ளுக. குணத்தாலும் தொழிலாலும் ஏற்படுகிற மேன்மையைக் கண்டு யாரும் பழிகூற இடமில்லை. குணத்திலும் தொழிலிலும் கடைப்பட்ட ஒருவன் பிறப்பைக் காரணமாக வைத்துக்கொண்டு "நான் மற்றவரைக் காட்டிலும் உயர்ந்தவன்" என்று சொல்லும்போது, மற்றவருக்குக் கோபம் உண்டாகிறது.

"செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலாதார்"

என்று, தாம் வள்ளுவர் மரபில் பிறந்தாலும் நமது முன்னோரால் பிரமதேவனுடைய அவதாரமென்று போற்றப்பட்ட திருவள்ளுவ நாயனார் சொல்லுகிறார். ஒருவன் குணகர்மங்களால் பிராமணனாக இருப்பானாகில், அவனுக்கு நாட்டில் முதலாவது மதிப்புண்டாதல் பொதுவாக எல்லாத் தேசங்களிலும் இயற்கையாக நடந்து வரும் நெறி. ஏனென்றால் எல்லா தொழில்களுக்கும் சாஸ்திரமே நேத்திரம். சரீர இன்பங்களைத் தேடுவதே முதற்காரியமாகக் கொண்ட மனிதர் மிகுந்து போயிருக்கும் இவ்வுலகத்தில், சிலர் அந்தப் படியைக் கடந்து மேல் ஏறிப் போய் உண்மை தேடுவதே முதற் காரியமென்றும், மற்றதெல்லாம் அதற்குப் பிறகு தான் என்றும் உணர்ந்து நடப்பாராயின், அவரே தலை மக்கள். மற்ற வருணத்து நெறிகளையும் இப்படியே வகுத்தறிந்து கொள்ளுதல் எளிது'

---

## பறையர்

'பறையர் என்பது மரியாதை உள்ள பதம் இல்லை' என்று கருதி இக்காலத்தில் சிலர் பஞ்சமர் என்ற சொல்லை அதிகமாக வழங்குகிறார்கள். நானும் சில சமயங்களில் பஞ்சமர் என்ற சொல்லை வழங்குவது உண்டு. ஆனால் பறையர் என்பதே மேற்படி ஜாதியாருக்குத் தமிழ் நாட்டில் இயற்கையாக ஏற்பட்ட பெயர். பறை என்பது பேரிகை. பூர்வகாலத்தில்

நமது ராஜாக்கள் போர் செய்யப் போகும்போது ஜய பேரிகை கொட்டிச் செல்லும் உத்தமமான தொழில் இந்த ஜாதியார் செய்துவந்தபடியால் இவர்களுக்கு இப்பெயர் வழங்குவதாயிற்று. 'இது குற்றமுள்ள பதமில்லை, யென்பதற்கு ருஜு வேண்டுமானால், மேற்படி கூட்டத்தாரால் சென்னையில் நடத்தப்படும் சபைக்கு "பறையர் மஹாசபை" என்று பெயர் வைத்திருப்பதைக் காண்க. அவர்களை மிருகங்களைப் போல் நடத்துவது குற்றமேயொழிய பறையர் என்று சொல்லுவது குற்றமில்லை.

என்னடா இது! ஹிந்து தர்மத்தின் பஹிரங்க விரோதிகள் பறையரைக்கொண்டு பிராமணரை அடிக்கும்படி செய்யும்வரை சென்னைப்பட்டணத்து ஹிந்துக்கள் பார்த்துக் கொண்டிருந்தார்கள்! அடே! பார்ப்பானைத் தவிர மற்ற ஜாதியாரெல்லாம் பறையனை அவமதிப்பாகத் தான் நடத்துகிறார்கள். எல்லாரையும் அடிக்க பறையரால் முடியுமா? பறையருக்கு அனுகூலம் மற்ற ஜாதியார் செய்யத் தொடங்கவில்லையா? எதற்கும் ஹிந்து மத விரோதிகளின் பேச்சைக் கேட்கலாமா? நந்தனாரையும், திருப்பாணாழ்வாரையும் மற்ற ஹிந்துக்கள் கும்பிடவில்லையா? பறையருக்கு நியாயம் செலுத்த வேண்டியது நம்முடைய முதற் கடமை. அவர்களுக்கு முதலாவது வேண்டியது சோறு. சென்னைப்பட்டணத்து 'பட்லர்'களைப் பற்றிப் பேச்சில்லை. கிராமங்களிலுள்ள பண்ணைப்

பறையர்களைப் பற்றிப் பேச்சு. அவர்களையெல்லாம் ஒன்று திரட்டு. உடனே விபூதி நாமத்தைப் பூசு. பள்ளிக்கூடம் வைத்துக்கொடு. கிணறு வெட்டிக்கொடு. இரண்டு வேளை ஸ்நானம் பண்ணச்சொல்லு. அவர்களோடு ஸமத்துவம் கொண்டாடு. நான் நெடுங்கால மாகச் சொல்லி வருகிறேன். அவர்களை எல்லாம் உடனே ஒன்று சேர்த்து ஹிந்து தர்மத்தை நிலைக்கச் செய்யுங்கள். நம்முடைய பலத்தை சிதற விடாதே யுங்கள். மடாதிபதிகளே! நாட்டுக் கோட்டைச் செட்டிகளே! இந்த விஷயத்தில் பணத்தை வாரிச் செலவிடுங்கள். இது நல்லபயன் தரக்கூடிய கைங் கர்யம். தெய்வத்தின் கருணைக்குப் பாத்திரமாக்கும் கைங்கர்யம்.

'பறையரை', 'பரை' (அதாவது ஆதிசக்தி முத்துமாரி) யின் மக்களென்றும் பொருள் சொல்வதுண்டு. நமக்கு மண்ணுழுது நெல்லறுத்துக் கொடுக்கிற ஜாதியாரை நாம் நேரே நடத்த வேண்டாமா? அது சரிதான். இனிமேல் பறையன் கை நீட்டாமல் இருப்பதற்கு வழி தேடிக் கொள்ளுங்கள். சென்னைப் பட்டணத்திலே நாலு பட்லர்கள் ஹிந்து மதத்தை உல்லங்கனம் செய்த போதிலும், நாட்டிலுள்ள பறையர் எல்லாரும் உண்மையான ஹிந்துக்கள் என்பதை மறந்து விடக்கூடாது. எனக்கும் ஒரு வள்ளுவப் பையனுக்கும் ஸ்நேஹம். அவனுடைய கோயில் அம்மன்மீது நான் பாட்டுக் கட்டிக் கொடுத்தேன்.

அவன் அடிக்கடி எங்கள் வீட்டுக்கு வருவதுண்டு. அவன் காத்தவராயசாமி விஷயமாகச் சில பாட்டுக்கள் சொன்னான். காத்தவராயன் வேதத்திலேயே சொல்லிய காற்று (வாயு)க் கடவுளே யன்றி வேறில்லை யென்று அந்தப் பாட்டுகளினாலேயே தெரிந்து கொண்டேன். முத்துமாரி என்ற பராசக்தியுடைய பிள்ளை தான் காத்தவராயன். பறையர்களும் நம்மைப் போலவே வைதிக தேவர்களைப் பூஜிக்கிறார்கள். மற்றொன்று சொல்லுகிறேன்.

"அங்க மெலாங் குறைந்தழுகு தொழு நோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராயின்
அவர் கண்டீர் யாம் வணங்கும் கடவுளாரே"

பறையர் ஹிந்துக்கள். அவர்களைக் கை தூக்கி விட்டு மேல் நிலைக்குக் கொண்டு வருதல் நம்முடைய தொழில்.

---

## பஞ்சமர்

லண்டனிலிருந்து மந்திரி மாண்டேகு வருவதற்கு முந்தி நமது தேசத்து பஞ்சமரை யெல்லாம் ஒன்று சேர்த்து விடுதலைக் கக்ஷியில் சேர்க்கவேண்டும் என்று சில சீர்திருத்தக்காரர் சொல்லுகிறார்கள். மிஸ்டர் மாண்டேகு வந்தாலும் சரி, வராவிட்டாலும் சரி,

நமது நாட்டுப் பறையரை உயர்ந்த நிலைமைக்குக் கொண்டுவருவது நம்முடைய கடமை.

பறையருக்கெல்லாம் நல்ல சோறு, நல்ல படிப்பு முதலிய சௌக்கியங்களும் மற்ற மனுஷ்ய உரிமைகளும் ஏற்பாடு செய்துகொடுத்தல் நம்முடைய கடமை. சென்னைப்பட்டினத்தில் நாயர் கக்ஷிக்கூட்டமொன்றில் பறையரைவிட்டு இரண்டு மூன்று பார்ப்பனரை அடிக்கும்படி தூண்டியதாக பத்திரிகைகளில் வாசித்தோம். ராஜாங்க விஷயமான கொள்கைகளில் அபிப்பிராய பேதமிருந்தால், இதை ஜாதி பேதச் சண்டையுடன் முடிச்சுப்போட்டு அடிபிடிவரை கொண்டு வருவோர் இந்த தேசத்தில் ஹிந்து தர்மத்தின் சக்தியை அறியாதவர்கள். இது நிற்க. அடுத்த நவம்பர் மாதம் பட்டினத்தில் 'பறையரை உயர்த்தவேண்டு மென்கிற நோக்கத்துடன் மகா சங்கம் நடத்தப் போவதாகக் கேள்விப்பட்டு மிகவும் சந்தோஷமடைந்தேன். முற்காலத்தில் நந்தனார் தோன்றியதுபோலவே, இப்போது மேற்படியார் குலத்தில் ஸஹஜாநந்தர் என்ற ஸந்யாஸி ஒருவர் நல்ல பக்தராயும் ஸ்வஜனாபிமானம் உடையவராகவும் தோன்றியிருக்கிறார். அவருடைய முயற்சிகளை முன்னுக்குக் கொண்டுவரும்படி உதவி செய்ய விரும்புவோர் குத்தியில் ஸ்ரீ கேசவப் பிள்ளை திவான் பகதூருக்கு எழுதி விவரங்கள் தெரிந்துக்கொள்ளலாம். மேற்படி ஸஹஜாநந்தர் சிதம்பரத்திற்கு அருகே ஒரு கிராமத்தில் பறைப் பிள்ளைகளுக்காக ஒரு பள்ளிக்கூடம் போட்டிருக்கிறார். அந்தப் பள்ளிக்கூடம்

மே மாதம் திறக்கப்பட்டது. இப்போதைக்கு மண் கட்டிடம்; கூரை வேய்ந்திருக்கிறார்கள். அதில் நானூறு பிள்ளைகள் வரை ஏற்கெனவே சென்று படிக்கிறார்கள்.

தியஸாபிகல் சங்கத்தார் சில பஞ்சம பாடசாலைகளை ஏற்படுத்தி அந்த ஜாதியாரை மேன்மைப் படுத்தும் பொருட்டு மிகுந்த சிரத்தையுடன் உழைத்து வருகிறார்கள். ஸ்ரீமதி அனிபெஸண்டுக்கு இந்த விஷயத்தில் ஏற்பட்டிருக்கும் அன்பும் உத்ஸாஹமும் மெச்சத் தகுந்தன.

பகவன் என்ற பிராமணனுக்கும் ஆதி என்ற பறைச்சிக்கும் ஔவை, திருவள்ளுவர், கபிலர், பாணர், உப்பை, உறுவை, வள்ளி என்ற குழந்தைகள் பிறந்து உபய குலத்துக்கும் நீங்காத கீர்த்தி ஏற்படுத்தியதை இக்காலத்திலும் பறையர் மறந்துபோகவில்லை. சிறிது காலத்துக்கு முன்பு ஒரு கிழச் சாம்பான் என்னிடம் வந்து "முப்போதும் நீரில் முழுகிக் குளித்தால் முனிவர்களாவாரோ? எப்போதும் இன்பத்திலிருப்பவரன்றோ இரு பிறப்பாளராவார்?" என்ற தத்துவராயர் வாக்கைச் சொல்லிப் பறையென்பது ஹிந்து தர்மத்தில் கோயிற் பேரிகையென்றும் அதைக் கொட்டுவோன் பறையன் என்றும், பறையென்பது சக்தியின் பெயரென்றும், அவளே ஆதியென்றும், சிவனே பகவன் என்று பிராமண ரூபங்கொண்டு அவளுடன் வாழ்ந்தானென்றும், பறையர் மேன்மைப் பட்டால் பார்ப்

பார், வேளாளர், முதலியார், செட்டியார் முதலிய இதர ஜாதியாரும் மேன்மை யடைவார்கள் என்றும் பலவித நீதிகளைச் சொன்னான். அதே கருத்துடைய வராய் ஹிந்துக்களுடைய விடுதலையிலும் மேம்பாட்டிலும் மிகுந்த நாட்டத்துடன் உழைத்துவரும் ஸ்ரீ நீதிபதி மணி அய்யரும், வைத்தியர் நஞ்சுண்டராயரும், சுதேசமித்திரன் ரங்கசாமி அய்யங்காரும் பறையர் குலத்தைக் கைதூக்கி விடுவதில் தம்மால் இயன்றவரை உதவி செய்வதைக் கண்டு நான் மிகவும் மகிழ்ச்சி யடைகிறேன்.

'ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன் பிள்ளை தானே வளரும்.'

வந்தேமாதரம்.

---

## ஜாதிக் குழப்பம்

இந்தியாவில் விசேஷக் கஷ்டங்கள் இரண்டு. பணமில்லாதது ஒன்று, ஜாதிக்குழப்பம் இரண்டாவது. பணக்கஷ்டமாவது வயிற்றுக்குப் போதிய ஆஹாரமில்லாத கொடுமை. இந்தத் துன்பத்துக்கு முக்கியமான நிவர்த்தி யாதென்றால் நமது தேசத்தில் விளைந்து, உணவுக்குப் பயன்படக்கூடிய தான்யங்கள் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி யாகாமல் தடுத்து விடவேண்டும். இங்கிலாந்து முதலிய சில தேசங்களில் காலையில் எழுந்-

தால் ஆஹாரத்துக்கு மீன் தென் அமெரிக்காவிலிருந்து வரும்படியாக இருக்கும்; வெண்ணெய் ஆஸ்டிரேலியாவிலிருந்து வரும்படியாக இருக்கும். இந்நாட்டினரின் நிலைமை அப்படியில்லை. இங்கு பூமி நம்முடைய ஜனங்களுக்கெல்லாம் போதிய ஆஹாரம் கொடுக்கிறது; ஆதலால், ஏற்கெனவே போதிய அளவு பணம்குவித்து வைத்திருந்தாலன்றி உணவுக்கு வழி கிடையாது என்ற நிலைமை நம்முடைய தேசத்திற்கில்லை. உணவுத் தான்யங்களின் ஏற்றுமதியை எந்த நிமிஷத்தில் நிறுத்தி விடுகிறோமோ, அந்த நிமிஷம் முதல் நம்முடைய ஜனங்களுக்குத் தட்டில்லாமல் யதேஷ்டமான ஆஹாரம் கிடைத்துக்கொண்டு வரும். இந்த விஷயத்தில் ஜயமடையவேண்டினால், நம்முடைய வியாபாரிகள் வெறுமே தம்முடைய வயிறு நிரப்புவது மாத்திரம் குறியாகக் கொள்ளாமல் தமக்கும் லாபம் வரும்படியாகவும் பொது ஜனங்களுக்கும் கஷ்டம் ஏற்படாமலும் செய்தற்குரிய வியாபாரமுறைகளைக் கைக்கொள்ளும்படி அவர்களை வற்புறுத்த வேண்டும். இங்ஙனம் நம்முடைய நாட்டிலேயே தான்யங்களை நிறுத்திக்கொண்டு, அந்தந்த ஊரில் மிக எளியோராக இருப்போரிடம் தக்க வேலைகள் வாங்கிக்கொண்டு அவர்களுக்கு உணவு வேண்டியமட்டும் கொடுத்து வர ஏற்பாடு செய்தல் மிகவும் எளிது.

பூரி (ஜகந்நாதம்) பிரதேசங்களில் மிகவும் கொடிய பஞ்சம் இந்த க்ஷணத்தில் நடைபெற்று வருகிறது. நம் நாட்டில் ராஜாக்களும், சாஸ்திரிகளும், பெரிய

மிராசுதார்களும், ஸாஹுகார்களும், வியாபாரிகளும், வக்கீல்களும், பெரிய பெரிய உத்யோகஸ்தர்களும் வயிறு கொழுக்க, விலாப்புடைக்க, அஜீரணமுண்டாகும்படி ஆஹாரங்களைத் தம்முள் திணித்துக்கொண்டிருக்கையிலே, உலகத்தில் வேறெந்த நாட்டிலும் இல்லாதபடி இந்தியாவில் மட்டும், தீராத மாறாத பஞ்சம் தோன்றி ஜனங்களை அழிக்கிற கொடுமையைத் தீர்க்க வழி தேடவேண்டிய யோசனை அவர்களுடைய புத்திக்குச் சற்றேனும் புலப்படாதிருப்பதை எண்ணுந்தோறும் எண்ணுந்தோறும் எனக்கு மிகுந்த வருத்தமுண்டாகிறது. இத்தனை கஷ்டத்துக்கிடையே ஜாதிக் கொடுமை ஒரு புறத்தே தொல்லைப்படுத்துகிறது.

பெரும்பாலும் தாழ்ந்த ஜாதியார்களே அதிக ஏழைகளாக இருக்கிறார்களென்பது மறுக்க முடியாத விஷயம். உழைப்பும் அவர்களுக்குத்தான் அதிகம். அதிக உழைப்பு நடத்திவரும் வகுப்பினருக்குள்ளே அதிக வலுவு ஏற்படும். அநீதி உலக முழுதிலுமிருக்கிறது. எனினும், நம்முடைய தேசத்தைப் போல் இத்தனை மோசமான நிலைமை வேறெங்குமில்லை.

இந்த ஊரில் (கடையத்தில்) ஒரு செல்வர் வீட்டு விசேஷமொன்றுக்காக சங்கரநயினார் கோயிலிலிருந்து கோவில் யானையை இங்கு கொண்டுவந்திருக்கிறார்கள், அது ஆண் யானை; 18 வயதுள்ள குட்டி. அது மிகவும் துஷ்ட யானை யென்று பெயர் கேட்டிருப்பதால் அதை இவ்வூரில் அனேக ஜனங்கள் திரள்திரளாகச் சென்று பார்க்கிறார்கள். இன்று காலை நானும் என்

நண்பரொருவருமாக இந்த யானையைப் பார்க்கச்சென்றோம். அந்த யானையைப் பற்றிய முக்கிய விசேஷம் யாதெனில், இதற்கு மாவுத்தர்களாக இரண்டு பிராமணப் பிள்ளைகளும், சைவ ஓதுவார் (குருக்கள்) வம்சத்தைச் சேர்ந்த ஒருவரும் வேலை பார்க்கிறார்கள். சாதாரணமாக, மாவுத்தர் வேலை செய்ய மஹம்மதியர்களும் ஹிந்துக்களில் தணிந்த ஜாதியாருமே ஏற்படுவது வழக்கம். இந்த யானைக்கு பிராமண மாவுத்தர் கிடைத்திருக்கிறார்கள்.

மேற்படி பிராமண மாவுத்தரில் ஒருவனிடம்நான் இந்த யானையின் குணங்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தேன். நான் நதிக்குப் போய்க் கொண்டிருக்கையில் அவன் அந்த யானையை நிஷ்கருணையாக அடித்துக்கொண்டிருக்க நான் பார்த்தேனாதலால், அதை அவனுக்கு நினைப்பூட்டி "மிருகங்களை அன்பினால் பழக்க வேண்டும். கருணையில்லாமல் அடித்துப் பழக்குவது சரியில்லை" என்றேன். நான் இந்த வார்த்தை சொன்னது தான் தாமதம், அவன் மிகவும் நீளமாகத் தன் சாஸ்திரக் கட்டுகளை யெல்லாம் அவிழ்த்து விரிக்கத் தொடங்கிவிட்டான். அந்த மாவுத்தன் சொல்லுகிறான்:—"இந்த யானை கீழ் ஜாதி யானை; யானைகளில் ப்ரம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர் என நான்கு முக்கிய ஜாதிகளுண்டு. ஒவ்வொரு ஜாதியிலும் கிளை வகுப்புக்களிருக்கின்றன. அவற்றுள் இது சூத்திர ஜாதியைச் சேர்ந்த யானை. மனிதர்களில் சூத்திரர்களுக்குள்ளே ஈழுவர் என்ற ஜாதியர் இருக்கிறார்களே, அதேமாதிரி இந்த யானை 'வீரன்' வகுப்பைச்சேர்ந்தது."

இங்ஙனம் அந்த மாவுத்தன் நீண்ட கதை சொன்னான்.

நான் இந்த விஷயத்தை இங்கு எடுத்துச் சொல்லியதின் நோக்கம் யாதெனில், நம்மவர்கள் மனதில் இந்த ஜாதிக்கொள்கை எத்தனை ஆழமாகப் பதிந்திருக்கிறது என்பதை உணர்த்தும் பொருட்டேயாம். யானையை எடுத்தால், அதில் ப்ரம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர்! குதிரையிலும் அப்படியே! வானத்திலுள்ள கிரஹங்களிலும் அதே மாதிரி ப்ரம்ம க்ஷத்திரிய முதலிய ஜாதி பேதங்கள். இரத்தினங்களிலும் அப்படியே!

இங்ஙனம் ஜாதிக்கொள்கை வேரூன்றிக்கிடக்கும் நாட்டில், மனுஷ்ய ஸ்வதந்திரம், ஸமத்வம், சகோதரத்வம் என்னுங் கொள்கைகளை நிலை நிறுத்துவதென்றால் அது சாதாரண வேலையா? கொஞ்ச ஜாதியா? அவற்றில் உட்பிரிவுகள் கொஞ்சமா? பறை பதினெட்டாம்! நுளை நூற்றெட்டாம்! அதாவது பறையர்களுக்குள்ளே 18 பகுதிகளும், நுளையர்களில் 108 பகுதிகளும் இருக்கின்றனவாம். மேலும், பறையன், பள்ளன், சக்கிலியன் எல்லோரும் வெவ்வேறு ஜாதிகள்; ஒன்றுக்கொன்று பந்தி போஜனம் கிடையாது. பெண் கொடுக்கல் வாங்கல் கிடையது. கேலி; கேலி; பெருங்கேலி. இங்ஙனம் ஏற்கனவே மலிந்து கிடக்கும் பிரிவுகள் போதாவென்று புதிய புதிய பிரிவுகள் நாள்தோறும் ஏற்பட்டு வருகின்றன. சீர்திருத்தம்

வேண்டுமென்ற நல்ல நோக்க முடையவர்களிலே சிலர் செய்கை நெறி யுணராமல் புதிய வகுப்புக்கள் ஏற்படுத்திக் கொள்கிறார்கள். கடையத்து வேளாளரில் இங்கிலீஷ் படித்த சிலர் தாங்கள் "திராவிடப் பிராமணர்" என்று பெயர் வைத்துக்கொண்டு பரம்பரையாக வந்த "பிள்ளை"ப் பட்டத்தை நீக்கி "ராயர்" பட்டம் சூட்டிக் கொண்டிருக்கிறார்கள். திருஷ்டாந்தமாக ஒருவருக்கு "ஆண்டியாப் பிள்ளை" என்ற பெயர் இருந்தால், அவர் அதை சர்க்கார் மூலமாக "ஆண்டியப்ப ராயர்" என்று மாற்றி அப்படியே சகல விவகாரங்களும் நடத்துகிறார். இந்தத் திராவிடப் பிராமணரின் பட்டம் எப்படி நேரிட்டது என்பதைக் கண்டு பிடிக்க வழியில்லை.

இங்ஙனமே சில தினங்களின் முன்பு வள்ளுவர்கள் தஞ்சாவூர் ஜில்லாவில் ஒரு கூட்டங் கூடித் தாங்கள் உயர்ந்த ஜாதியாரென்றும் மற்றப் பறையர்களைத் தொடக்கூடாதென்றும் அவர்களுக்குப் பஞ்சாங்கம் முதலியன சொல்லக் கூடாதென்றும் அவ்வாறு செய்யும் வள்ளுவர்களைக் கட்டுப்படுத்த வேண்டுமென்றும் துண்டுப் பத்திரிகைகள் போட்டிருந்தார்களாம். இதைக் கண்டு மனம் பொறுக்காமல் வள்ளுவக் குலத்தைச் சேர்ந்த ஸ்ரீமான் வி. எல். பெருமாள் நாயனார் என்பவர் "வள்ளுவர் பறையரே, பஞ்சமரே" என்பதை மிகவும் தெளிவாக ருஜுப்படுத்தி சென்ற வியாழக் கிழமை (ஜூன் மீ 3-ஆம் தேதி) சுதேசமித்திரனில் ரஸ

மான வியாஸமொன்று எழுதியிருப்பதைக் கண்டு என் மனம் சால மகிழ்ச்சி யெய்திற்று.

ஆனால், அதே வியாஸத்தில், நாயனார் நான்காம் வகுப்பாகிய வேளாளர் குலத்திலிருந்து பறையர் பிரிந்தாரென்று சொல்லுவது பொருந்தமில்லாத வார்த்தை. இவர் எந்த ஆதாரத்தில் இங்ஙனம் சொல்லுகிறார் என்பது விளங்கவில்லை. வெறும் ஜாதி விரோதத்தாலேதான் இங்ஙனம் சொல்லுகிறாரென்று தோன்றுகிறது. வீண் பகைமைகளால் நன்மை ஏற்படாது.

எல்லா வகுப்பு மக்களுக்கும் சரியானபடி படிப்புச் சொல்லிக் கொடுத்தால், எல்லோரும் ஸமான அறிவுடையோராய் விடுவார்கள். மாம்ஸ போஜனம் செய்யும் வகுப்பினர் அதை நிறுத்தி விடவேண்டும். பிறகு, ஸ்வாமி விவேகாநந்தர் சொல்லியபடி, எல்லாரையும் ஒரேயடியாக பிராமணராக்கிவிடலாம். கீழ் ஜாதியரை நல்ல ஸம்ஸ்காரங்களால் பிராமணர்களாக்கிவிட முடியுமென்பதற்கு நம்முடைய வேத சாஸ்திரங்களில் தக்க ஆதாரங்களிருக்கின்றன. அந்தப்படி இந்தியா முழுதையும் பிராமண தேசமாகச் செய்து விட்டால் நல்லதென்பது என்னுடைய அபிப்பிராயம். எந்த ஜாதியாகயிருந்தாலும் சரி. அவன் மாம்ஸபக்ஷணத்தை நிறுத்தும்படி செய்து, அவனுக்கு ஒரு பூணூல் போட்டு, காயத்திரி மந்திரம் கற்பித்துக் கொடுத்து விடவேண்டும். பிறகு, அவன் பிராமணனாகவே கருதப்பட வேண்டும். இதுதான் விவேகாநந்தர் சொல்

விய உபாயம். கூடிய வரை நல்ல உபாயமும் கூட. ஆனால், மேல்வகுப்பினர் தம்முடைய உயர்வை மறந்து கீழ்வகுப்பினருடன் கலத்தல் இதனிலும் சிறந்த உபாயமாகும்.

---

## ஜாதிபேத விநோதங்கள்

இந்தியாவின் மற்றப் பகுதிகளைக் காட்டிலும் நமது சென்னை மாகாணத்தில் தான் ஜாதிபேதத்தைப் பற்றிய மனஸ்தாபங்கள் இப்போது அதிகமாக முளைத்திருக்கின்றனவென்பது அந்த மனஸ்தாபங்கள் ராஜரீக விவகாரங்களிலுங்கூடப் புகுந்து தேச விடுதலையாகிய பரம தர்மத்துக்கே ஓர் இடுக்கணாகக் கூடிய நிலைமை இம்மாகாணத்தில் மாத்திரமே காணப்படுவதினின்றும் நன்கு விளங்கும். ஆயினும், இது பற்றி சுதேசாபிமானிகள் அதிகமாகப் பயப்பட வேண்டியதில்லை. ஏனென்றால், முதலாவது உலக முழுதிலும் புதிதாகத் தோன்றிச் சென்ற சில வருஷங்களாகப் புயற்காற்றைப் போல் தொழில் செய்துவரும் தெய்விகமான விடுதலைக் கிளர்ச்சியின் சக்தியால் இந்தியாவின் மக்கள் முப்பது கோடிப் பேரும் எங்களுக்கு ஸ்வராஜ்யம் வேண்டியதில்லை யென்று ஹடம் பண்ணிய போதிலும் இந்தியாவுக்குக் கட்டாயமாக ஸ்வராஜ்யம் வந்து தீரவே செய்யும். மனிதர் எண்ணத்தை மீறியும் கால சக்தி வேலை செய்வதுண்டு. அப்படிப்பட்ட காலம் இப்போது உலகமெங்கும் தோன்றி யிருக்கிறது. மேலும் இந்தச் சமயத்தில்

இந்தியாவிலும் ஜனங்களின் பெரும்பகுதி ஸ்வராஜ்ய தாகத்தில் ஈடுபட்டுத்தான் கிடக்கிறார்கள். எனவே, எந்த வகையாய் யோசித்த போதிலும், இந்தச் சென்னை மாகாணத்து ஜாதிபேதக் கிளர்ச்சியினால் இந்தியாவின் விடுதலைக்குத் தாமஸம் ஏற்படுமென்று நினைக்க ஹேது இல்லை.

தவிரவும், இந்த 'பிராமணரல்லாதார் கிளர்ச்சி' கால கதியில் தானே மங்கி அழிந்து விடுமென்று நிச்சயிப்பதற்கும் போதிய காரணங்களிருக்கின்றன. முதலாவது, இதில் உண்மையில்லை. உண்மையாகவே இந்தியாவில் ஜாதி பேதங்கள் இல்லாமல் செய்துவிட வேண்டுமென்ற ஐக்கிய புத்தியுடையோரில் மிக மிகச் சிலரே இந்தக் கிளர்ச்சியில் சேர்ந்திருக்கிறார்கள். பெரும்பாலும், சர்க்கார் அதிகாரங்களையும் ஜில்லா போர்டு தாலூகா போர்டு முனிசிபாலிட்டி சட்டசபை முதலியவற்றில் கௌரவ ஸ்தானங்களையும் தாமே அடையவேண்டுமென்ற ஆவலுடையவர்களே இக் கிளர்ச்சியின் தலைவராக வேலைசெய்து வருகிறார்கள். திருஷ்டாந்தமாக, பிராமணருக்கு அநேகமாக அடுத்த படி தென் இந்தியாவில் பல இடங்களிலே சைவ வேளாளர் என்ற வகுப்பினருக்கு ஏற்பட்டிருக்கிறது. இந்த வகுப்புக்குக் கீழே பஞ்சமர் வரை சுமார் இரண்டாயிரம் சாதி வகுப்புக்களிருக்கின்றன. அவர்களுக்கு மேலே பிராமணராகிய ஒரு வகுப்பினரே யிருக்கிறார்கள். இந்த நிலையில் நம்முடைய சைவ வேளாளருள்ளே 'அல்லாதார்' கிளர்ச்சியைச் சேர்ந்திருப்பவருங்கூடத்

தமக்கு மேற்படியிலுள்ள பிராமணர் பிரிவுக்குண முடையோ ரென்றும், மற்ற வகுப்பினருடன் சேர்ந்துண்டு மணம் புரிந்து வாழ மறுக்கிறாரென்றும் நிந்திக்கிறார்களே யல்லாது, தமக்குக் கீழேயுள்ள இரண்டாயிரத்துச் சில்லரை ஜாதியர்களுடனும் தாம் சேர்ந்துண்டு மணம் புரிந்து வாழுமாறு யாதொரு பிரயத்தனமும் செய்யாதிருக்கிறார்கள். 'பிராமண ரல்லாதார்' என்றொரு வகுப்பு இந்தியாவில் கிடையவே கிடையாது. ஒன்றோடொன்று சம்பந்தம், பந்தி போஜனம் செய்துகொள்ள வழக்கப்படுத்தாத ஆயிரக் கணக்கான வகுப்புகள் இந்துக்களுக்குள்ளே நெடுங் காலமாக இருந்து வருகின்றன. இவற்றுள் பிராமணர் ஒரு வகுப்பினர். இங்ஙனம் வகுப்புகளாகப் பிரிந்திருத்தல் குற்றமாயின் அக்குற்றம் பிராமணரை மாத்திரமே சார்ந்ததாகாது. எல்லா வகுப்பினரையும் சாரும். பிராமணரும் மற்ற வகுப்பினரைப் போலவே இந்த முறைமையால் பந்தப்பட்டிருக்கிறார்கள். பிராமணருக் குள்ளேயே பரஸ்பரம் சம்பந்தம், சமபந்திபோஜனம் செய்து கொள்ளாத பல பிரிவுகள் இருக்கின்றன.

'பிராமண ரல்லாதார்' என்ற வகுப்பே கிடையாது. அதுவே பொய். எனவே, இந்தக் கிளர்ச்சியின் மூலமே பொய்யாக இருப்பது கொண்டு இதனை உண்மையில்லாத கிளர்ச்சி என்கிறேன். உண்மையாகவே, இந்தியாவில் ஜாதி பேதங்களில்லாமல் சமத்துவக் கொள்கை வெற்றியடைய வேண்டுமென்றால், அதற்கு ஸ்வராஜ்ய ஸ்தாபனமே சரியான உபாயம்.

ஸ்வராஜ்யம் கிடைத்தால் சட்ட சபைகளில் எல்லா ஜாதி மேதாவிகளும் கலந்திருப்பார்களாதலால் அந்த சபைகளின் மூலமாக இந்தியாவில் முதலாவது ராஜரீக வாழ்வில் சமத்துவக் கொள்கையை நிறுத்திவிடலாம். பிறகு சமூக வாழ்விலும் அக்கொள்கை தானே பரவி விடும். இதை விட்டுப் பொய்யும் புலையுமாக, திராவிடர்களென்றும் ஆரியரென்றுமுள்ள பழைய சொற்களுக்குப் புதிய அபாண்டமான அர்த்தங்கள் கற்பித்துக் கொண்டு வீண் சண்டைகள் வளர்ப்பதனால் ஹிந்து சமூகத்துக்கே கெடுதி விளையக்கூடும். எந்த வகுப்புக்கும் அனுகூலம் ஏற்படாது.

---

## பிராமணன் யார்?

### ஓர் உபநிஷத்தின் கருத்து

அஷ்டாதச உபநிஷத்துக்களிலே வஜ்ரஸூசிகை என்பதொன்று. "வஜ்ர ஸூசீ" என்றால் வயிர ஊசி என்பது பொருள். இவ்வுபநிஷதம் 'பிராமணன் யார்?' என்பதைக் குறித்து மிகவும் நேர்த்தியாக விவரித்திருக்கின்றது.

"நான் பிராமணன், நீ சூத்திரன்" என்று சண்டைபோடும் குணமுடையவர்களுக்கெல்லாம் இவ் வேதநூல் தக்க மருந்தாகும். அன்னிய ராஜாங்கத்தாரிடம் ஒருவன் போலீஸ் வேவு தொழில் பார்க்கி

றான். அவன் ஒரு பூணூலைப் போட்டுக்கொண்டு ஏதே னும் ஒரு நேரத்தில், கிராமபோன் பெட்டி தியாகைய கீர்த்தனைகள் சொல்லுவது போல, பொருள் தெரியாத சில மந்திரங்களைச் சொல்லிவிட்டு, ஐயர் ஐயங்கார் அல் லது ராயர் என்று பெயர் வைத்துக்கொண்டு, "நான் பிராமணன், நான் தண்ணீர் குடிப்பதைக்கூட மற்ற வர் ணத்தவன் பார்க்கலாகாது" என்று கதை பேசுகிறான். மற்றொருவன் தாசில்தார் வேலை பார்க்கிறான். பஞ்சத் தினால் ஜனங்கள் சோறின்றி மடியும்போது, அந்தத் தாசில்தார் தனது சம்பளம் அதிகப்படும் பொருட்டுப் "பஞ்சமே கிடையாது, சரியானபடி தீர்வை வசூல் செய்யலாம்" என்று 'ரிப்போர்ட்டு' எழுதி விடுகிறான். ஆறிலொரு கடமைக்கு மேல் ராஜாங்கத்தார் தீர்வை கேட்பதே குற்றம். பஞ்சநாளில் அதுகூடக் கேட்பது பெருங் குற்றம். அங்ஙனம் தீர்வை வாங்கிக்கொடுக் கும் தொழிலிலே இருப்பவன் ஹிந்து தர்மத்துக்கு விரோதி. அதற்குமப்பால், உள்ள பஞ்சத்தை இல்லை யென்றெழுதி ஜனத்துரோகம் செய்யும் தாசில்தாருக்கு என்ன பெயர் சொல்வதென்று நமக்குத் தெரியவில்லை. இப்படிப்பட்ட தாசில்தார் தனக்கு 'சாஸ்திரியார்' என்று பெயர் வைத்துக்கொண்டு "நான் கௌதம ரிஷி யின் சந்ததியிலே பிறந்தேன்" என்பதாகப் பெருமை பாராட்டிக் கொள்ளுகிறான். இப்படியே, வைசியத் தொழில் சூத்திரத் தொழில் என்ற கௌரவத் தொழில்கள் செய்வோரும் இவற்றிற்குப் புறம்பான புலைத் தொழில்கள் செய்வோருமாகிய பல போலிப் பார்ப்பார் தங்களுக்கு இயற்கையாகவுள்ள பெருமையை

மறந்துவிட்டுப் பொய்ப் பெருமையைக் கொண்டாடி வருகிறார்கள்.

நாட்டிலே இவ்விஷயமான விவாதங்களும் போராட்டங்களும் அதிகரிக்கின்றன. இத்தருணத்தில் நமது வேதம் இவ் விவகாரத்தைப் பற்றி என்ன அபிப்பிராயம் கொடுக்கிறது என்பது ஆராயத் தக்க பொருளாகும்.

வஜ்ரஸூசி உபநிஷத்து பின்வருமாறு:—

ஞானமற்றவர்களுக்குத் தூஷணமாகவும், ஞானக் கண்ணுடையவருக்குப் பூஷணமாகவும் விளங்குவதும் அஞ்ஞானத்தை உடைப்பதுமாகிய "வஜ்ர ஸூசி" என்ற சாஸ்திரத்தைக் கூறுகிறேன்:—

"பிரம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர் என்று நான்கு வர்ணங்கள் உண்டு. அவற்றிலே, பிராமணன் பிரதானமானவன் என்று வேத வசனத்தைத் தழுவி ஸ்மிருதிகளாலும் சொல்லப்படுகிறது. அதில் பிராமணன் யாரென்பது பரிசோதிக்கத்தக்கதாகும். ஒருவன் தன்னைப்பிராமணன் என்று சொல்லிக்கொள்ளுகிறான். அங்ஙனம் பிராமணன் என்பது அவனுடைய ஜீவனையா? தேகத்தையா? பிறப்பையா? அறிவையா? செய்கையையா? தர்ம குணத்தையா? அவனுடையஜீவனே பிராமணனென்றால் அஃதன்று. முன் இறந்தனவும், இனி வருவனவும் இப்போதுள்ளனவும் ஆகிய உடல்களிலெல்லாம் ஜீவன் ஒரே ரூபமுடையதாயிருக்

கின்றது. ஒருவனுக்கே செய்கை வசத்தால் பலவித உடல்கள் உண்டாகும்போது, எல்லா உடல்களிலும் ஜீவன் ஒரே ரூபமுடையதாகத் தான் இருக்கின்றது. ஆகையால், (அவனுடைய) ஜீவன் பிராமணனாக மாட்டாது. ஆயின், (அவனது) தேஹம் பிராமணனெனில் அதுவுமன்று. சண்டாளன் வரையுள்ள எல்லா மனிதர்களுக்கும் பஞ்ச பூதங்களால் ஆக்கப்பட்ட உடலும் ஒரே அமைப்புடையதாகத் தானிருக்கின்றனது. மூப்பு, மரணம், இயல்கள், இயலின்மைகள்—இவையனைத்தும் எல்லா உடல்களிலும் சமமாகக் காணப்படுகின்றன. மேலும், பிராமணன் வெள்ளை நிறமுடையவன், க்ஷத்திரியன் செந்நிற முடையவன், வைசியன் மஞ்சள் நிற முடையவன், சூத்திரன் கருமை நிறமுடையவன் என்பதாக ஓர் நியமத்தையும் காணவில்லை. இன்னும், உடல் பார்ப்பானாயின், தகப்பன் முதலியவர்களை இறந்த பின் கொளுத்தும் மகன் முதலியவர்களுக்குப் பிரமஹத்தி தோஷம் உண்டாகும். ஆதலால், (அவனுடைய) தேஹம் பிராமணனாகமாட்டாது. ஆயின், பிறப்புப் பற்றி பிராமணன் என்று கொள்வோமென்றால், அதுவுமன்று. மனிதப் பிறவியற்ற ஜந்துக்களிட மிருந்து கூடப் பல ரிஷிகள் பிறந்ததாகக் கதைகளுண்டு. ரிஷ்யசிருங்கர் மானிலிருந்தும், ஜாம்பூகர் நரியிலிருந்தும், வால்மீகர் புற்றிலிருந்தும், கௌதமர் முயல் முதுகிலிருந்தும் பிறந்ததாகக் கதை கேட்டிருக்கிறோம். அதுபோக வஷிஷ்டர் ஊர்வசி வயிற்றில்பிறந்தவர்; வியாஸர் மீன் வலைச்சி வயிற்றில் பிறந்தவர்; அகஸ்தியர் கலசத்திலே பிறந்ததாகச் சொல்லுவார்கள் முன்னாளில் ஞானத்தில் பெருமை அடைந்தவர்

களாகிய பல ரிஷிகளின் பிறவிவகை தெரியா மலேயே இருக்கிறது. ஆகையால் பிராமணத் துவம் பிறப்புப் பற்றியதன்று. ஆயின், அறிவினுல் பிராமணன் எனக்கொள்வோமென்ருல், அதுவுமன்று. க்ஷத்திரியர் முதலிய மற்ற வர்ணத்தவர்களிற்கூட அநேகர் உண்மை தெரிந்த அறிவாளிகளா யிருக்கிருர் கள். ஆதலால், அறிவுபற்றி ஒருவன் பிராமணன் ஆக மாட்டான். ஆயின் செய்கைபற்றி ஒருவனைப் பிராம ணுகக் கொள்வோமெனில் அதுவுமன்று. பிராரப்தம் சஞ்சிதம், ஆகாமி என்ற மூவகைச் செயல்களும், ஒரே விதமான இயற்கை யுடையனவாகவே காணப்படுகின் றன. முன் செயல்களால் தூண்டப்பட்டு, ஜனங்களெல்லோரும் பின் செயல்கள் செய்கிருர்கள். ஆதலால், செய்கைபற்றி ஒருவன் பிராமணுய் விடமாட்டான். பின், தர்மஞ்செய் வோனைப் பிராமணுகக் கொள்வோமென்ருல். க்ஷத்திரியன் முதலிய நான்கு வருணத்தவரும் தர்மஞ் செய்கிருர்கள். ஆதலால். ஒருவன் தருமச் செய்கையைப் பற்றியே பிராமணுகி விடமாட்டான். அப்படியானுல் யார்தான் பிராமணன் ? எவனெருவன் இரண்டற்றதும், பிறவி, குணம், தொழில் என்பவை இல்லாததும், உள்ளும் புறமும் ஆகாசம் போல கலந் திருப்பதும், அளவிடக் கூடாததும், அனுபவத்தால் உணரத்தக்கதுமாகிய இறுதிப்பொருளை, நேருக்கு நேராகத் தெரிந்து காமம்,ராகம் முதலிய குற்றங்களில் லாதவனுய், பாபம், மாற்சரியம், விருப்பம், ஆசை

மோகம் முதலியவை நீங்கினவனாய், இடம்பம் அகங்காரம் முதலியவை பொருந்தாத நெஞ்சமுடையவனாய் இருக்கின்றானோ, இங்ஙனம் கூறப்பட்ட இலக்கணமுடையவனே பிராமணனென்பது சுருதி, ஸ்மிருதி, புராண, இதிகாச மென்பவற்றின் அபிப்பிராயமாகும். மற்றபடி, ஒருவனுக்கு பிராமணத்துவம் ஸித்தியாகாது என்பது உபநிஷத்து.

பிராமணராக வேண்டுவோர் மேற் கூறப்பட்ட நிலைமையைப் பெற முயற்சி செய்யக் கடவர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் முதலிய மற்ற லௌகிக வர்ணங்களுக்கும் இதுபோலவே தக்கவாறு லக்ஷணங்கள் அமைத்துக் கொள்க. அவ்வவ் விலக்கணங்கள் பொருந்தியவர்களே அவ்வவ் வருணத்தின ரென்று மதிக்கத் தக்கவர்கள். அந்த இலக்கணங்கள் இல்லாதவர்கள் அவற்றை யடைய முயற்சி செய்ய வேண்டும். போலீஸ் வேவுத் தொழில் செய்பவன் பிராமணன் ஆகமாட்டான். குமஸ்தா வேலை செய்பவன் க்ஷத்திரியன் ஆகமாட்டான், சோம்பேறியாக முன்னோர் வைத்துவிட்டுப்போன பொருளை யழித்துத்தின்பவன் வைசியன் ஆகமாட்டான். கைத்தொழில்களை யெல்லாம் இறக்கக் கொடுத்துவிட்டுச் சோற்றுக்குக் கஷ்டமடைவோர் சூத்திரர் ஆகமாட்டார்கள். இவர்களெல்லாம் மேம்பாடுடைய ஆரிய வர்ணங்கள் நான்கிற்கும் புறம்பாகிய நீசக்கூட்டத்தார். நமது தேசம் முன்போலக் கீர்த்திக்கு வரவேண்டுமானால், உண்மையான வகுப்புகள் ஏற்பட வேண்டும். பொய் வகுப்புகளும் போலிப்

பெருமைகளும் நசிக்க வேண்டும். இது நம்முடைய வேத சாஸ்திரங்களின் கருத்து.

---

## எதிர் ஜாமீன்
அல்லது
## மாப்பிள்ளை விலை

நமது தேசத்தில் வறுமை அதிகம்.

முன்னே யிருந்தவர்களின் கோழைத் தன்மை, ஒற்றுமைக் குறைவு, சாஸ்திர ஞானமில்லாமை, பல தேச விவகாரங்கள் தெரியாமை, மூட கர்வங்கள் முதலியவற்றால் லக்ஷ்மியை இழந்தோம். மேற்படி குணங்கள் இன்னும் நம்மைவிட்டு நன்றாக நீங்கவில்லை. நாளொன்றுக்கு சராசரியாக நமது நாட்டில் ஒரு மனிதனுக்கு முக்காலணா வரும்படி யென்று கணக்காளிகள் சொல்லுகின்றார்கள்; அதாவது, நரகத்துன்பம். உலகத்தில் வேறெந்த நாட்டிலும் இப்படி இல்லை.

இந்த நிலையில் நமக்குள்ளே பலர் பலவிதமான இகழ்ந்த காரியங்கள் செய்வது வியப்பில்லை. மிகுந்த செல்வமுடைய நாடுகளிலே கூட மனிதர் பணத்துக்காக எத்தனையோ மானங்கெட்ட காரியங்கள் செய்கிறார்கள். ஏழைத் தேசத்தாராகிய நாம் இவ்வளவு மானத்துடன் பிழைப்பதே பெரிய காரியம்.

பணம், பொதுக் கல்வி, விடுதலை மூன்றும் இல்லாவிட்டால் அந்த நாட்டில் மானமேது?

பிராமணருக்குள் விவாஹ காலங்களிலே எதிர் ஜாமீன் கேட்கும் வழக்கத்தை நிறுத்திவிட வேண்டும் என்று சில வருஷங்களாகப் பலர் பேசிவருகிறார்கள். மானமுடைய தேசங்களிலே சீதனம் கொடுத்தல் பெண்களின் பெற்றோர் செய்வது சாதாரணமே யாம். ஆனால் மாப்பிள்ளைகளுக்கு விலைத்தரங்கள் போட்டு, இன்ன பரீக்ஷை தேறினவனுக்கு இத்தனை ரூபாய் கிரயம் என்று முடிவு செய்து வைத்து, அதன் படி விவாஹங்கள் நடத்தும் வழக்கமில்லை.

சீனா, ஜப்பான், நவீன பாரசீகம், முதலிய எல்லா மனுஷ்ய தேசங்களிலேயும் விவாஹம் அன்பையே ஆதாரமாகக் கொண்டு செய்யப்படுகிறது. இங்கே, பணத்துக்காக விவாஹங்கள் செய்து கொள்ளுகிறார் கள். சாதாரணமாகப் பெண்களுக்கு விலைகூறி விற்பது வழக்கமாக இருந்தது. இப்போது "பூசுரர்" (பூமண்டலத்திலே தேவர்) ஆகிய பிராமணக் கூட்டத்தார் மாப்பிள்ளைக்கு விலைபோட்டு விற்கத் தொடங்கி இருக்கிறார்கள். புண்ய பூமி! பணம் கொடுக்கச் சொல்லி ஏழைக் குடும்பத்தாரை வதை செய்யும்போது தான் துன்பம் அதிகப் படுகிறது. பெண்கள் ருதுவாகு முன்பு விவாகம் நடந்து தீரவேண்டும். ஒரு ஜாதியிலே, ஒரு பிரிவிலே, ஒரு சாகையிலே, ஒரு கிளையிலே, ஒரு பகுதியிலே, ஒரு வகுப்பிலே, ஒரு கோணத்திலே, ஓரோரத்துக்குள்ளே தான் ஸம்பந்தங்கள் செய்து கொள்ளலாம். இல்லாவிட்டால் "ஸநாதன அதர்மம்" முட்ட வருகிறது. மாப்பிள்ளைகளை

உயர்ந்த கிரயங்கள் கொடுத்தா லொழிய அகப்படுவதில்லை. முக்கால்வாசிக் குடும்பத்தார் நித்திய ஜீவனத்துக்கு வழி யில்லாத ஏழைகள். நாலைந்து பெண்களைப் பெற்றுவிட்டால், இந்த ஏழைகள் என்ன செய்வார்கள்? திருநெல்வேலி ஜில்லாவில் எனக்குத் தெரிந்த ஒரு கிராமத்திலே ஒரு பெண்ணுக்கு விவாஹம் நடந்தபோது, அவளுடைய பெற்றோர் மாப்பிள்ளைக்குப் பணங் கொடுத்தார்கள். பிறகு ருது சாந்தியின்போது, அந்த மாப்பிள்ளை, "ஐந்நூறு ரூபாய் கொடுத்தால்தான் ருது சாந்தி செய்து கொள்வேன். இல்லாவிட்டால் பெண் உங்கள் வீட்டோடே இருக்கட்டும்" என்று சொல்லி ஐந்நூறு ரூபாய் தண்டம் வாங்கிக் கொண்டான்.

---

## மதிப்பு

நூறு மனிதர் சேர்ந்து ஒருவனை நாயகன் என்று தீர்மானம் செய்தால் அவனுக்கு மிகுந்த வலிமை ஏற்படுகிறது. அங்ஙனம் தீர்மானிக்கப்பட்ட நாயகர்கள் பத்துப்பேர் சேர்ந்து தமக்குள்ளே ஒரு தலைவனை நியமித்துக் கொண்டால், அந்தத் தலைவனுடைய சொல்லை தேசத்தார் அனைவரும் மதிக்கும்படி நேரிடும்.

கூட்டத்திற்கு வலிமையுண்டு. இது ஹிந்துக்களுக்குக் கூடத் தெரிந்த விஷயம். ஒரு பெரிய கூட்டத்தின் தலைவனுக்கு மதிப்புண்டு என்பதை ஹிந்துக்

கள் நன்ருக அறிந்திருக்கிருர்கள். என்ருலும், புதிது புதிதாகக் கூட்டம் சேர்க்கும் யுக்தி ஹிந்துக்களுக்கு இன்னும் நன்ருகத் தெரியவில்லை. ஒரு பெரிய கூட்டத்தில் சேர்ந்திருக்கும் ஒவ்வொரு மனிதனும் புதிய வலிமையும் அதனல் புதிய அனுகூலங்களும் பெறுகின்ருன். பிச்சைக்காரர் கூடத் தனித்தனியே பிச்சையெடுப்பதைக் காட்டிலும், நூறுபேர் கூட்டம் கூடிப் பிச்சைக்குப் போனல் அதற்கு மதிப்பு மிகுதியுண்டு.

ஹிந்துக்களை உலகத்தார் பாமர அநாகரிக முக்கால் காட்டுஜனங்கள் என்று நினைக்கும்படி நாம் இது வரை இடங் கொடுத்துவிட்டோம்.

இந்தியாவை வெளி யுலகத்தார் பாமர தேசம் என்று நினைக்கும்படி செய்த முதற் குற்றம் நம்முடையது. புறக்கருவிகள் பல.

முதலாவது, கிறிஸ்துவப் பாதிரி. அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும் சில கிறிஸ்துவப் பாதிரிகள் தங்கள் மத விஷயமான பிரசாரத்தை உத்தேசித்து நம்மைக் குறித்துப் பெரிய பெரிய பொய்கள் சொல்லி, இப்படித் தாழ்ந்துபோய் மஹத்தான அநாகரிக நிலையிலிருக்கும் ஜனங்களைக் கிறிஸ்து மதத்திலே சேர்த்து மேன்மைப் படுத்தும் புண்ணியத்தைச் செய்வதாகச் சொல்லுகிருர்கள். ஹிந்துக்கள் குழந்தைகளை நதியிலே போடுகிருர்கள் என்றும் ஸ்திரீகளை (முக்கியமாக, அநாதைகளாய்ப் புருஷரை இழந்து கதியில்லா

மல் இருக்கும் கைம்பெண்களை) நாய்களைப் போல நடத்துகிறார்கள் என்றும் பலவிதமான அபவாதங்கள் சொல்லுகிறார்கள். நம்முடைய ஜாதிப் பிரிவுகளிலே இருக்கும் குற்றங்களை யெல்லாம் பூதக்கண்ணாடி வைத்துக் காட்டுகிறார்கள். இந்தக் கிறிஸ்துவப் பாதிரிகளாலே நமக்கு நேர்ந்த அவமானம் அளவில்லை.

இரண்டாவது, அன்னியதேசப் பண்டிதர் சரித்திரக்காரர் முதலானவர்கள். ஹிந்துக்களை அன்னிய தேசத்தார் போர் செய்தும் தந்திரத்தாலும் வென்று ஹிந்துக்களின் மீது அன்னிய ராஜ்யம் நடைபெற்று வருவதை யொட்டி, வெளிதேசத்து சரித்திரக்காரர் நமது நாட்டு வீரம் ஒற்றுமை முதலிய குணங்களையும் நமது பொது அறிவையும் மிகவும் இழிந்த நிலைமையிலே இருப்பதாகக் காட்டுதல் வழக்கமாக நடைபெற்று வந்திருக்கிறது.

நம்மை உலகத்தார் முன்னே சிறுமைப் படுத்தி மதிப்பில்லாமல் செய்துவிட்ட புறக்கருவிகள் பல. அவற்றை விரிவாக எழுதவேண்டுமானால் தனிப் புஸ்தகம் போடவேண்டும்.

"போனது போகட்டும், இனிமேலாயினும் புத்தியாய்ப் பிழை மனமே" என்று ஒரு பண்டாரப் பாட்டு உண்டு. அதுபோல, நடந்ததெல்லாம் நடந்து போய் விட்டது; சிறுமைப்படுவதெல்லாம் பட்டாய் விட்டது. இனிமேலாயினும், ஹிந்துக்கள் தம்மை மதிப்புடை

யோராகச் செய்துகொள்ள வழி தேடவேண்டும். வெளி தேசங்களில் நமக்கு மதிப்பு உண்டாக்கவேண்டுமாஞல், அதற்கு மூலம் இங்கே வலிமை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். இங்ஙனம் வலிமை சேகரிப்பதற்குக் கூட்டம் ஒன்றே உபாயமென்பதை இந்த வியாஸத்தின் தொடக்கத்திலே சொன்னோம். நம்முடைய ராஜரீக நிலைமையைச் சீர்திருத்துவதற்குப் பல முயற்சிகள் நடந்துவருகின்றன. அந்த முயற்சிகள் மேன்மேலும் வளர்ந்து வெற்றிபெற வேண்டுமாஞல், அதற்குக் கூட்டங்களை அதிகப்படுத்துவதே வழி. கூட்டங்கள் கூடி யோசனை பண்ணுகிற விஷயம் கைகூடும். ஓயாமல் கூட்டங்கள் சேர்ந்து திரும்பத்திரும்ப உறுதி செய்யப்படும் தீர்மானம் நிச்சயமாகக் கைகூடும். நமது ராஜாங்கக் கூட்டங்களில் இதுவரை சரியானபடி சக்தி ஏற்படாத காரணம் யாதெனில், இந்தக் கூட்டங்களில் உண்மையாகவே தேசத்துக்கு அனுகூலம் செய்ய வேண்டும் என்ற கருத்துடையவர்கள் மிகச் சிலராகவே இருந்தனர். தேஷ பாஷைகளிலே பேசுவதுகிடையாது. அதாவது, பொய் அதிகப்பட்டுத் தலைதூக்கி நின்றது. இப்போது நாட்டில் உண்மையான தேசாபிமானிகள் தொகை அதிகப்பட்டிருக்கின்றது. தேச பாஷைப் பேச்சு வழக்கப்பட்டு வருகிறது. ராஜ்ய விஷயங்களுக்கு மாத்திரம் நான் பேசவில்லை. நான் பொதுப்படையாகச் சொல்லுகிறேன். எவ்விதமான வலிமைக்கும் கூட்டம் ஆதாரம். கூடிப் சேர்ந்து பேசிஞல் மாத்திரம் போதாது. எப்போதுமே ஒன்றும்

நம்மில் ஒவ்வொருவரும் நாம் இன்ன பெருங்கூட்டத்தைச் சேர்ந்திருக்கிறோம் என்பதையும் நமது வாழ்க்கையில் நோக்கம் இன்ன தென்பதையும் மறவாதிருக்க வழி தேடவேண்டும்.

இங்கிலாந்து, பிரான்ஸ் முதலிய ஐரோப்பிய தேசங்களில், கோடானுகோடியாக மனிதரைத் திரட்டிச் சண்டைக்கு உபயோகப் படுத்துகிறார்கள். ஒரு தேசம் முழுதுமே ஒரு ஸைன்யம்போல் ஆகும்படி செய்ய வேண்டும் என்று அங்குள்ள சில தலைவர்கள் நினைக்கிறார்கள். நான் சண்டைக்காரனில்லை, சமாதானக்காரன். இருபதுகோடி ஹிந்துக்களையும் ஓரே கூட்டமாகச் செய்து, சண்டைக்கன்று, சமாதானமாக மனிதன் சாதனை செய்யக்கூடிய நல்ல பயன்களை நிறைவேற்றும் பொருட்டாக, உபயோகப் படுத்த வேண்டுமென்பது என்னுடைய நோக்கம்.

இந்த நோக்கத்தை நிறைவேற்றுவதற்கு மற்ற ஹிந்துக்களின் உதவி வேண்டும். தெய்வ பலம் வேண்டும். இவ்விரண்டும் கைகூடும்.

இருபது கோடி ஹிந்துக்களையும் ஓரே குடும்பம் போலே செய்துவிட வேண்டும் என்பது என்னுடைய ஆசை. இந்த ஆசையிலே ஒருவன் கைக்கொள்ளப் பட்டால், அவன் ராஜாங்கம் முதலிய சகல காரியங்களைக் காட்டிலும் இதனை மேலாகக் கருதுவான் என்பது என்னுடைய நம்பிக்கை.

எல்லா தர்மங்களைக்காட்டிலும், வேதத்தை நிலை நிறுத்தும் தர்மம் சிறந்ததென்று நான் நினைக்கிறேன். ஹிந்துக்களைத் திரட்டி ஒற்றைக் கருவியாகச் செய்து விடவேண்டும். இதற்குரிய உபாயங்களைச் சரியான காலத்தில் தெரிவிக்கிறேன்.

---

## வருங்காலம்

உலகம் எவ்வளவு தீவிரமாக மாறிக்கொண்டு வருகிறதென்பதைத் தமிழ் நாட்டார் ஆழ்ந்து கவனிக்க வேண்டும். ஒவ்வொருவரும் சிற்சில விவகாரங்களில் மனத்தைப் பதியவைத்துக் கொண்டு வெளியுலகத்தின் மாறுதல்களிலே புத்தி செலுத்தாமல் அற்ப விருப்பங்களிலும், அற்பச் செய்கைகளிலும் நாளையெல்லாம் கழியவிட்டுக் கிணற்றுத் தவளைகளைப்போல் வாழ்வதிலே பயனில்லை.

வர்த்தகஞ் செய்வோர் கோடிக்கணக்கான பணப் பழக்கம் ஏற்படும்படி பெரிய வர்த்தகங்கள் செய்ய வழி தேட வேண்டும். படிப்பவர் அபாரமான சாஸ்திரங்களையும் பல தேசத்துக் கல்விகளையும் கற்றுத்தரவேண்டும். ராஜ்ய விவகாரங்களில் புத்தி செலுத்துவோர் உலக சரித்திரத்தை நன்றாக தெரிந்துகொண்டு, மற்ற ராஜ தந்திரிகளும் மந்திரிகளும் கண்டு வியக்கும்படியான பெரிய பெரிய யோசனைகள் செய்து நிறைவேற்றிப் புகழ் பெறவேண்டும். கைத்தொழில்களின்

விஷயத்திலே நாம் இப்போது காட்டிவரும் சோர்வும் அசிரத்தையும் மிகவும் அருவருப்புக்கு இடந் தருகின்றன.

திருஷ்டாந்தமாக, நேர்த்தியான சித்திரங்களும் வர்ணங்களும் சேர்த்துப் பட்டிலும் பஞ்சிலும் அழகான ஆடைகள் செய்யவல்ல தொழிலாளிகள் நமது நாட்டில் இருக்கிறார்கள். இவர்களுக்குப் படிப்பில்லை; வெளியுலகநிலை தெரியாது. கையிலே முதற் பணமுமில்லை. நம்முள்ளே கல்வியும் செல்வமும் உடையோர் கூடி ஆராய்ச்சிகள் செய்து வெளிநாடுகளில் ஆவலுடன் வாங்கக் கூடிய மாதிரிகள் எவை என்பதைக் கண்டுபிடித்து அவற்றை நமது தொழிலாளிகளைக் கொண்டு செய்வித்தால் மிகுந்த லாபமுண்டாகும்.

இரும்புத் தொழில் உலகத்திலே வலிமையும் செல்வமுங் கொடுப்பது. எல்லா விதமான கைத்தொழில்களும் தற்காலத்தில் இரும்பு யந்திரங்களாலே செய்யப்படுகின்றன. ஆதலால் நமது தேசத்துக் கொல்லருக்கு நாம் பலவிதங்களிலே அறிவுறுத்தியும் ஜீவன் சௌகர்யங்களும் ஏற்பாடு செய்து கொடுத்து இடத்துக்கிடம் இயன்றவரை இரும்புத் தொழில்களை வளர்க்க வேண்டும்.

இனி, வர்ணப்படம், தையல் வேலை......மைத் தொழில் முதலிய சித்திர வேலைகளில் நமது ஜனங்களின் அறிவு மிகவும் சிறந்தது. கொஞ்சம் சிரமப்பட்

டால், இந்தத் தொழில்களை மறுபடி உயர்ந்த நிலைமைக்குக் கொண்டு வந்துவிடலாம். சிறிது காலத்துக்கு முன்பு சீனத்திலிருந்தும் ஜப்பானிலிருந்தும் பல சித்திர வேலைகளைக் கொண்டுபோய் அமெரிக்காவில் காட்டியபோது, அங்கே அவற்றிற்கு மிகுந்த புகழ்ச்சியும் பிரியமும் ஏற்பட்டதாகத் தெரிகிறது.

இதை நாமேன் செய்யக்கூடாது?

வெளி நாட்டுக்குக் கப்பலேறிப் போங்கள், புறப்படுங்கள், புறப்படுங்கள். தொழிலாளிகளே, வியாபாரிகளே, வித்வான்களே, புத்திமான்களே, எப்படியேனும் யாத்திரைச் செலவுக்குப் பணம் தயார் செய்து கொண்டு அன்னிய தேசங்களைப் பார்த்துவிட்டு வாருங்கள். நமது தொழில்களுக்கும், கலைகளுக்கும், யோசனைகளுக்கும் வெளி நாடுகளில் ஏராளமான உதவி கிடைக்கும். சந்தேகப்பட வேண்டாம்.

பரோடாவிலிருந்து இநாயத்கான் என்ற சங்கீத வித்வான் சில வருஷங்களுக்கு முன்பு தென் ஜில்லாக்களில் யாத்திரை செய்து வந்தது நம்மிலே சிலருக்கு ஞாபகமிருக்கலாம். இங்கே அவர் சாதாரணமாக இருந்தார். பின்னிட்டு அவர் பல தேசங்களிலே சஞ்சாரம் செய்து, பிரான்ஸ் தேசத்திலே போய் நல்ல கீர்த்தியடைந்திருக்கிறார். அங்கே பல பெரிய விதவான்களும் பிரபுக்களும் அவருடைய தொழிலை அற்புதத்திலும் அற்புதம் என்று கொண்டாடுகிறார்கள். சங்கீத ஞான

முடைய தமிழ்ப் பிள்ளைகள், முதலாவது கொஞ்சம் இங்கிலீஷ் கற்றுக்கொண்டு பிறகு ஐரோப்பிய சங்கீதத்தின் மூலாதாரங்களைத் தெரிந்து கொள்ளவேண்டும். இது மிகவும் சுலபமான காரியம். தமிழருடைய அறிவுக்கு எந்த வித்தையும் சுலபம். இந்தத் தேர்ச்சி கொஞ்சமிருந்தால், பிறகு நமது சங்கீதத்தை ஐரோப்பியர் அனுபவிக்கும்படி செய்தல் எளிதாகும். அப்பால், ஐரோப்பாவுக்கும் அமெரிக்காவுக்கும் போய் நமது சங்கீதத்தின் உயர்வை அவர்களுக்குக் காட்டினால் மிகுந்த கீர்த்தியும் செல்வமும் பெறலாம்.

எவ்விதமான யோசனை, எவ்விதமான தொழில் எவ்விதமான ஆசை, எதையும் கொண்டு பிறதேசங்களுக்குப் போகவேண்டும். ஐரோப்பாவுக்கும் அமெரிக்காவுக்கும் யாத்திரை செய்யப் போதுமான திரவியமில்லாதவர்கள் ஜப்பானுக்குப் போகலாம். வெளியுலகம் நம்மை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது. நமது வரவுக்குக் காத்திருக்கிறது. நமது மேன்மைக்கு வசப்பட ஆவல் கொண்டிருக்கிறது. வெளியுலகத்தில் நாம் சென்று மேம்பாடு பெற்றாலொழிய, இங்கே நமக்கு மேன்மை பிறக்க வழியில்லை. ஆதலால், தமிழ்ப் பிள்ளைகளே, வெளி நாடுகளுக்குப் போய் உங்களுடைய அறிவுச் சிறப்பினாலும், மன வுறுதியினாலும், பலவிதமான உயர்வுகள் பெற்றுப் புகழுடனும், செல்வத்துடனும், வீர்யத்துடனும், ஒளியுடனும் திரும்பி வாருங்கள் உங்களுக்கு மஹாசக்தி துணை செய்க.

# தொழிலாளர்

## தொழிலுக்கும் செல்வத்துக்குமுள்ள சம்பந்தம்

கைத்தொழிலாலே செல்வம் விளைகிறது. அறிவுத் தொழிலால் அது சேகரிக்கப்படுகிறது. கைத் தொழில் செல்வத்தை ஏற்படுத்துகிறது. அறிவுத் தொழில் கைத்தொழிலை நடத்துகிறது. 'புத்தியில்லாத மூடர்கள் சக்ரவர்த்திகளாகவும், ராஜாக்களாகவும், பெரிய நிலஸ்வான்களாகவும். முதலாளிகளாகவும் இருந்து பெருஞ்செல்வங்களைக் கையாளுதல் காண்கிறோமே! எனவே, அறிவுத்திறமையாலும், அறிவு முயற்சியாலும் பெருஞ்செல்வந் திரட்டப்படுகிறதென்று சொல்லுதல் எங்ஙனம் பொருந்தும்?' என்று கேட்பீர்களாயின், அதற்கு உத்தரம் சொல்லுகிறேன்;

பல இடங்களில் இப்போது மூடர்களிடம் செல்வமிருப்பது காண்கிறோமாயினும், இவர்களுக்கு இந்தச் செல்வம் எற்படுத்திக் கொடுத்த இவர்களுடைய முன்னோர்களில் அநேகர் அல்லது ஒருவனாயினும் மிகுந்த புத்திசாலியும். அந்த புத்தியைக்கொண்டு சோம்பலின்றி விடா முயற்சியுடன் உழைப்பனாகவும் இருந்திருக்க வேண்டும். புத்தி மாத்திரம் இருந்தால் போதாது. அதைக்கொண்டு சோம்பலில்லாமல் விடா முயற்சியுடன் உழைக்கவும் வேண்டும். அப்போது தான் செல்வம் சேர இடமுண்டாகும். "வெறுமே மிருக பலத்தால் ராஜாக்கள் ஸைந்யங்களின் மிகுதி

காரணமாகப் பிறநாடுகளைக் கொள்ளையிட்டு அளவிறந்த பூமியும் செல்வங்களும் சேர்த்ததாகச் சரித்திரங்களில் படித்திருக்கிறோமே, அப்படியிருக்கையில், புத்தி நுட்பத்தால் செல்வம் சேர்வதாகச் சொல்லுதல் தகுமோ?" என்று கேட்பீர்களானால், அதற்கு விடை கூறுகிறேன். யுத்தம் மிருகத்தொழிலாக இருந்த போதிலும், நல்லோர்களால் எவ்வகையாலும் வெறுக்கத்தக்க இழிதொழிலாக, அதற்கு மிருகபலம் மாத்திரம் இருந்தால் போதும் என்று நினைப்பது தவறு. யுத்த சாஸ்திரம் என்பது ஒரு பெரிய சாஸ்திரம். அதில் மிருகபலம் கருவி; அறிவு கர்த்தா. சாதாரணக் கொள்ளைக் கூட்டங்களிலே கூடத் தலைவனாக இருப்பவன் சிறந்த புத்தி நுட்பமுடையவனாக இருத்தல் இன்றியமையாதது! எத்தனையோ விதமான அறிவுப் பயிற்சிகள் ஆதிகால முதலாகவே யுத்தத்துக்கு அவசியமாக ஏற்பட்டிருக்கின்றன. அதிலும் தற்கால யுத்தங்களோ பல பல துறைகளில் மிகச் சிறந்த அறிவுத் தேர்ச்சி கொண்ட பண்டிதர்களாலே நடத்தப்படுகின்றன.

வியாபாரம், கைத்தொழில் முதலிய சமாதான நெறிகளில் செல்வம் சேர்ப்பதற்கு மிக உயர்ந்த புத்தி நுட்பம் எக்காலத்திலும் இன்றியமையாததாக நிகழ்ந்து வந்திருக்கிறது. இக்காலத்தில் இவை புத்தித் திறமையில்லாமல் போனால் ஒரு க்ஷணங்கூடத் தரித்து நிற்க மாட்டா.

இந்தச் செய்தியை உணர்ந்தே ஆதிகால முதல் அறிவுப் பயிற்சியுடைய வகுப்பினர் கைத்தொழிலாளி களுக்கு கல்வி ஏற்படாதபடியாக வேலை செய்து கொண்டு வந்திருக்கிறார்கள். "எழுத்துத் தெரிந்த சூத் திரனை மிகவும் தொலையில் விலக்கிவிட வேண்டும்" என்ற விநோத விதியொன்று மனுஸ்ம்ருதியிலே காணப்படுகிறது. நம்முடைய தேசத்தில் மட்டுமே யன்று, உலக முழுமையிலும் எல்லா நாடுகளிலும் கைத்தொழிலாளருக்கு கல்விப் பயிற்சி உண்டாகாத வண்ணமாகவே ஜனக்கட்டுகள் நடைபெற்று வந்திருக் கின்றன.

ஆனால், இந்தச் சூழ்ச்சியை மீறி, எல்லா நாடுகளி லும், முக்கியமாக, நமது பாரத தேசத்தில், கைத் தொழில் புரியும் கூட்டங்களைச் சேர்ந்தோரில் பற்பலர் கல்வித் தேர்ச்சி யடைந்து வந்திருக்கிறார்கள். ஆனால், இங்ஙனம் கல்விப்பயிற்சி வாய்ந்தோர் பெரும்பாலும் தம்முடைய பரம்பரைத் தொழில்களில் இறங்காமல், சுத்த இலக்கியப் பயிற்சியிலேயே வாழ்நாள் கழிப்பா ராயினர்.

எனினும், சென்ற ஓரிரண்டு நூற்றாண்டுக்குள்ளே, ஐரோப்பாவில், எல்லா வகுப்பினருக்கும் கல்விபயிற் றும் முறைமை தொடங்கி வந்திருக்கிறது. இந்த ஸர்வ ஜனக்கல்வி யென்னும் கொள்கை ஐரோப்பாவி

லிருந்து உலகத்தின் பிறபகுதிகளிலும் தாவிவிட்டது. இக்கொள்கையை நமது நாட்டில் நிறைவேற்றிவிட வேண்டுமென்று பல புண்ணியவான்கள் பெருமுயற்சி செய்துவருகிறார்கள். இங்ஙனம் எல்லா வகுப்புக்களை யுஞ்சேர்ந்த எல்லா மனிதரிடையேயும் கல்வியும் அதன் விளைவுகளாகிய பலவகைப்பட்ட அறிவுப் பயிற்சிகளும் பரவிவிடுமானால், அதனின்றும், கைத்தொழிலாளிகள் கல்விப் பயனைக் காவியங்கள் இயற்றுவதிலும் படிப்பதி லும் மாத்திரமே செலவிடும் வழக்கம் மாறிப் போய், அவரவர் தத் தமக்கு உரிய தொழில்களிலும் கல்வி யறிவைத் பயன்படுத்தத் தொடங்குவார்கள். இதினின் றும், இதுவரை உலகத்தில் கைத்தொழிலாளர் பரம ஏழைகளாக இருந்துவரும் நிலைமை நீங்கி மேன்மேலும் கைத்தொழிலாளருக்குள்ளே செல்வம் வளர்ச்சிபெற்று வர ஹேதுவுண்டாகும்.

இப்போது நமது நாட்டில் அங்கங்கே பல தொழிற் சங்கங்கள் ஸ்தாபனம் செய்யப்பட்டு வரு கின்றன. இச் சங்கத்தார்கள் சம்பள ஏற்றத்துக்கும் வேலை நேரத்தைக்குறைப்பதற்கும் வேண்டிய யத்தனங் கள் பல செய்துகொண்டு வருகிறார்கள். இந்தப் பிரயத்தனங்களெல்லாம் முற்றிலும் நியாயமே. இதில் ஐயமில்லை.

ஆனால், இச்சங்கத்தார்கள் மேற்கூறிய வழிகளிலே முயற்சி செய்வதுடன் தமது கார்யங்களை நிறுத்தி

விடாமல், அங்கங்கே பள்ளிக்கூடங்கள் ஆயிரக்கணக்காக ஏற்படுத்தி அவற்றில் தம்முடைய மக்களுக்கு நிறைந்த கல்வி யூட்டுவதற்குரிய முயற்சிகள் செய்ய வேண்டும் மேலும், பகற்பள்ளிக்கூடங்கள் மாத்திரமேயன்றி இராப்பள்ளிக்கூடங்களும் ஏற்படுத்தி அவற்றில் தொழிலாளிகள்—எல்லாப் பிராயத்தினரும்—சென்று படிப்பதற்குரிய காரியங்களை நடத்தவேண்டும்.

அறிவே வலிமை. கல்வியே செல்வத்தின் தாய். ஸரஸ்வதியும் லக்ஷ்மியும் மாமியும் மருமகளும்போல் வர் என்றும், கல்வியுள்ள இடத்தில் செல்வமும் செல்வமுள்ள இடத்தில் கல்வியும் ஏற்படுதல் மிகவும் அரிது என்றும் நமது நாட்டில் பரம மூடத்தன்மான கொள்கையொன்று பரவி நிற்கிறது. வெறுமே வர்ணனைகளும், கற்பனைகளும் சமைத்து, யாருக்கும் எளிதில் புலப்படாத வலிய நடையில் காவியங்கள் எழுதுவதிலே படித்த படிப்பையெல்லாம் செலவிடுவோருக்கு அதிகச் செல்வம் சேர மார்க்கமில்லை யென்பது ப்ரத்யக்ஷம். இந்த அனுபவத்தை ஆதாரமாகக் கொண்டே மேற்படி கொள்கை ஆதிகாலத்தில் உற்பத்தியாயிற்று. ஆனால், அது இக்காலத்துக்குப் பொருந்தாது. காவியங்களைக்கூட எளிய நடையில் எழுதினால், அச்சுத் தொழிலும் பொது ஜனக்கல்வியும் பரவிவரும் இக்காலத்தில் ஆசிரியர்களுக்கு ஏராளமான லாபம் கிடைக்கும். காவியங்கள் எழுதுவதற்கு மாத்திரம் படிக்கா

மல், பலவகை வியாபாரங்களுக்கும், தொழில்களுக்கும் வேண்டிய படிப்புகள் படித்து, அவற்றை ஊக்கத்துடன் கையாளுவோருக்கு மேன்மேலும் செல்வம் பெருகும். ஆதலால், தொழிலாளிகளே, கல்விப் பயிற்சி செய்யுங்கள். உங்களுக்கும் உங்கள் மக்களுக்கும் கல்வியறிவு மிகுவதற்குள்ள வழி செய்யுங்கள்.

### தொழிலாளருக்குச் சில வார்த்தை

சென்ற செவ்வாய்க்கிழமையன்று "சுதேசமித்திரன்" தலையங்கத்தில் தொழிலாளர் இயக்கத்தைப் பற்றி மிக நேர்த்தியான வ்யாஸமொன்று எழுதப்பட்டிருந்தது.

அதன் ஆசிரியர் அதே விஷயத்தைக் குறித்து இன்னும் தொடர்ச்சியாகப் பல வ்யாஸங்கள் எழுதுவதாகத் தெரிவித்திருப்பது தொழில் விஷயத்தில் சிரத்தையுடைய என் போன்றருக் கெல்லாம் மிக மகிழ்ச்சி தரத் தக்கதொரு செய்தியாம்.

தொழிலாளிகள் என்போர் சரீரத்தால் உழைத்து வேலை செய்கிறவர்களே என்று சிலருக்கு எண்ணமிருக்கலாம். அது தப்பு. சரீரத்தாலாகட்டும், புத்தியாலாகட்டும், முதலாளிக்குட்பட்டு வேலை செய்கிறவர்கள் எல்லாருமே தொழிலாளிகள் என்று அந்த வ்யாஸம் எழுதியவர் சொல்லுகிறார். இது நம்முடைய தேசத்தார் முக்கியமாகக் கவனிக்கவேண்டிய விஷயம்.

ஏனெனில், நம்மவருடைய மனதில் இந்த விஷயம் பதிவு பெறுதல் மிகவும் சிரமம்.

குமாஸ்தாக்கள், உபாத்தியாயர்கள் முதலியவர்களும் தொழிலாளிகளே என்று அந்த வ்யாஸமெழுதியவர் சொல்லுகிறார். எனவே, என்போன்ற நூலாசிரியர்களும் தொழிலாளிகள். முதலாளி கூட, ஆள் நியமித்தல், வேலையை மேற்பார்த்தல், வியாபார சம்பந்தமான கணக்குகளை கவனித்தல் முதலிய செய்கைகளால் தொழிலாளி ஆகிறான்.

முதலாளி, தொழிலாளி என்னும் இந்தக் கக்ஷி பேதமே நமது நாட்டுக்குப் புதிது. நூலாசிரியரும் வீதி பெருக்குவோரும் ஓரினமாகச் சேர்ந்து வைசியருக்கு விரோதமாகப் போராடுதல் நமது தேசத்தில் நேற்றுவரை நினைக்கொணாததோர் செய்தியாக இருந்தது; இன்று ஸாத்யமாகிவிட்டது. இது ஐரோப்பியத் தொழில் முறைமைகளும் கொள்கைகளும் நம்முடைய தேசத்தில் பரவுவதால் ஏற்படும் இன்றியமையாத விளைவாகும்.

நம்முடைய தேசத்தில் நெடுங்காலமாக நடைபெற்றுவரும் அனுஷ்டானப்படி நூலாசிரியரும் உபாத்தியாயரும் தலைமை வர்ணம். அரசர் அதற்கடுத்தபடி. முதலாளிகள் எனப்படும் வைசியர் மூன்றும் ஜாதி. சரீரபலத்தால் மாத்திரமே செய்தற்குரிய தொழில்களைச் செய்வோர் நான்காம் வர்ணம். மற்ற

தேசங்களில் நமது நாட்டைப்போல் இந்த வகுப்புக் குக் குறிப்பிட்ட நாமங்களும் விதிகளும் இல்லை யெனினும், உலக முழுமையிலும் ஒருவாறு இந்த 'சாதுர் வர்ண்யம்' (அதாவது, நான்கு வர்ணங்களென்ற வகுப்பு) நெடுங்காலமாக நடைபெற்றுக்கொண்டு வந்திருக்கிறது. சில இடங்களில் மாத்திரம் குருக்களைக் காட்டிலும் அரசர் உயர்ந்த வகுப்பினராகக் கருதப்பட்டனர்; சில நாடுகளில் அரசரே குருக்களாகவுமிருந்தனர். மற்றப்படி உலகமுழுமையிலும் குருக்களும், சாஸ்திரிகளும் தலைமைப் பகுதியாகவும் அரசர், வணிகர், கைத்தொழில் செய்வோர் என்பார் முறையே தனித்த பகுதிகளாகவுமே கருதப்பட்டு வந்தனர்.

ஆனால், சென்ற இரண்டு நூற்றாண்டுகளாக ஐரோப்பாவில் சகல ஜனங்களும் சமானமென்றும், ஆதலால் பிறப்புப் பற்றியேனும், உடைமை பற்றியேனும், தொழில் பற்றியேனும் மனிதருக்குள்ளே எவ்வித மேன்மை தாழ்வுகளேனும் உணவு உடை முதலிய அவசியப் பொருள்களின் அனுபவத்தில் வேற்றுமைகளேனும் பாராட்டக் கூடாதென்றும் ஒரு புதிய கொள்கை தலைப்பட்டு நடந்துவருகிறது. சென்ற சில வருஷங்களாக இக்கொள்கை அந்தக் கண்டத்தில் மிகவும் வலிமையுடையதாய்விட்டது. ஆரம்ப முதலாகவே இக்கொள்கை ஐரோப்பாவில் தொழிலாளருக்குள்ளே அதிகம் செல்வாக்குப் பெற்றுவந்தது.

நூலாசிரியர்களும், உபாத்தியாயர்களும், மாசம் 1000 ரூபாய் வாங்கும் குமாஸ்தாக்களும், மாசம் 2000 ரூபாய் சம்பாதிக்கும் பத்திராதிபர்களும், இவர்களைப் போன்ற பிறரும் தொழிலாளிகளுடன் சேர்த்து கணக்கிடுவதற்குரிய ரென்ற கொள்கை ஐரோப்பாவிலேயே ஆரம்ப முதல் கிடையாது. இது சமீப காலத்திலே நேர்ந்ததொரு புதிய கொள்கை. ஆதியில், தொழிலாளரின் கிளர்ச்சி ஐரோப்பாவில் வேரூன்றியது முக்கியமாக யந்திரசாலைகளின் ஸ்தாபனத்தினாலேயாம். அதற்கு முன்னர், அங்குள்ள தொழிலாளர் பெரும்பாலும் ஜமீன்தார்களிடமும் எண்ணற்ற சிறு சிறு தொழிற்கூடங்கள் வைத்து வேலை செய்த தொழிலாளரிடமும், சிறு சிறு முதலாளிகளிடமுமே வேலைசெய்து கொண்டிருந்தனர். தத் தம் வீட்டிலேயே தறி முதலியன வைத்துத் தாமே முதலாளிகளாகவும் தொழிலாளிகளாகவும் வேலை செய்தோர் பலர். இப்படியிருக்கையிலே, துணி நெய்யவும், இரும்பு தறிக்கவும், மரமறுக்கவும், எண்ணெயாட்டவும், பாத்திரங்கள் செய்யவும், முக்கியமான தொழில்களுக்கெல்லாம் யந்திரங்கள் ஏற்பட்டன. அதாவது, மனித சக்தியால் செய்துகொண்டு வந்த காரியங்கள் நீராவியின் சக்தியாலும், மின்சார சக்தியாலும் செய்யப்படலாயின. நீராவியும் மின்சாரமுமோ அபார வலிமைகொண்ட பூத சக்திகள். அவற்றின் திறமைக்கு வரம்பே கிடையாது. ஆயிர மனிதர் சேர்ந்து ஆயிரம் நாட்களிலே செய்தற்குரிய தொழிலை இந்த இயந்திரங்கள் ஒரு தினத்தில் செய்து முடிக்கத்

தொடங்கின. எனவே, பெருஞ் செல்வமுடையோர் தம்முள்ளே கூட்டுகள் கூட்டிக்கொண்டு யந்திரங்களை ஏராளமாகத் தயார்செய்து அவற்றின் மூலமாக நெசவு முதலிய தொழில்களைச் செய்யத் தலைப்பட்டனர். இதனால் ஏக காலத்தில் பதினாயிரம் லக்ஷக்கணக்கான தொழிலாளருக்குத் தொழிலில்லாமற் போய் பட்டினி கிடக்க நேர்ந்தது. இதுதான் ஐரோப்பாவிலே தொழிலாளர் கக்ஷி வேரூன்றி பலப்படத் தொடங்கியதின் காரணம்.

அதற்கு முன்பு தனித்தனி ஜமீன்தார்களிடத்திலும் சிறு சிறு முதலாளிகளிடத்திலும் வேலை செய்த தொழிலாளிகள் தத் தமக்கு நேரும் குறைகளை தத் தம் இடத்துக்கும் ஸ்திதிக்கும் தக்கபடி கெஞ்சியும் முணுமுணுத்தும் சில சமயங்களில் சிறு கலகங்கள் நடத்தியும் தீர்த்துக்கொண்டார்கள். 19-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலேதான் யந்திரங்களின் சக்தியால் தொழில் செய்யும் முறைமை மிகுதியுற்றது. அப்போதுதான் அங்குள்ள தொழிலாளிகள் முதலாளிகளுக்கெதிராகக் கிளர்ச்சி நடத்தும் வழக்கத்தைக் கைக்கொள்ளலாயினர். நாட்பட நாட்பட, யந்திரங்களில் உற்பத்தி செய்யப்பட்ட துணி முதலியன ஐரோப்பாவினின்றும் ஆசியா முதலிய இதர கண்டத்து ஜனங்களினிடையே அதிகமாக விற்கப்படலாயின. இங்கிலாந்து முதலிய தேசத்தார் தம் நாடுகளுக்கு வேண்டிய துணிகள் முதலியனவே யன்றி உலக முழுமையிலும் கொண்டு

விற்கவேண்டுமென்ற நோக்கத்துடன் தாம் புதுமை யாய்க் கண்டுபிடித்த பூதசக்திகளாகிய நீராவியையும் மின்சாரத்தையும் கொண்டு வேலை செய்வாராயினர். இதனால் உலகத்துச் செல்வம் மேன்மேலும் ஐரோப் பாவிற்குச் செல்ல இடமுண்டாயிற்று. அதினின்றும் ஆரம்பத்திலே பல தொழிலாளிகள் வேலையிழந்து அங்கு பட்டினி கிடக்க நேர்ந்த துன்பத்துக்குத் தக்க நிவாரண முண்டாய் அந்த நிவர்த்தி மேன்மேலும் மிகுதிப்பட்டு வந்தது.

அதற்கு முன் இருந்த ஜன சமூக வரம்புகளும் நியதிகளும் சிதறிப் போய்விட்டனவே யெனினும், பெரும்பாலும் தொழிற் கூட்டத்தாருக்கு வேலை கிடைத்து விட்டது. ஆசியாவிலும் பிற கண்டங்களி லும் லக்ஷம் கோடிக்கணக்கான ஜனங்களுக்கு ஐரோப் பியத் துணி முதலியன ஏற்றுமதியாகத் தலைப்பட்ட தினின்றும் ஐரோப்பிய தொழிற் கூட்டத்தாரிடையே தொழிலற்றவராய் வருந்திய ஜனங்களின் தொகை மேன்மேலும் குறையலாயிற்று. எனினும், தொழிலாளி களுக்கும் முதலாளிகளுக்கும் இடையே ஏற்பட்டகக்ஷி பேதங்கள் தீரவில்லை; அவை மிகுதிப்பட்டுக்கொண்டே வந்தன. இதற்குக் காரணம் அங்கு தொழிலாளருக் குள்ளே ஸங்க சக்தி அபாரமாக அதிகப்பட்டுவிட் டது. ஒவ்வொரு ஆலையிலும் பதினாயிரம் லக்ஷக்கணக் கான தொழிலாளிகள் வேலை செய்தனர். இவர்களுக் குள்ளே பலர் கல்வி கற்றோர் ஆயினர்.

இதனிடையே மேற்கூறப்பட்ட சமத்துவக் கொள்கை, அதாவது, குற்றங்களுக்கு தண்டனை விதிப்பதில், செல்வருக்கும் எளியோருக்கும், மேற்குலத்தாருக்கும் கீழ்க்குலத்தாருக்கும், சட்டம் சமானமாக வேலை செய்ய வேண்டுமென்றும், உணவு முதலிய சௌகரியங்களிலும் லௌகிக மரியாதைகளிலும் மானிடருக்குள்ளே எக் காரணம் பற்றியேனும் யாதொரு வேற்றுமையும் நடைபெறக்கூடாதென்றும் உலகத்தில் எல்லா மனிதரும் எல்லா வகைகளிலும் சமான மாவாரென்றும் ப்ரான்ஸ் தேசத்தில் பதினெட்டாம் நூற்றாண்டில் எழுச்சிபெற்று நாட்பட நாட்பட ஐரோப்பா முழுதிலும் வியாபித்துக்கொண்டு வந்ததொரு கொள்கை தொழிலாளரிடையே மிகுதியாகப் பரவலாயிற்று. அதன் மேல் இத்தொழிலாளர் "நாம் பாடுபட்டு உற்பத்தி செய்யும் பொருள்களை விற்று இந்த முதலாளிகள் இத்தனை பணம் சம்பாதிக்கிறார்கள். நாமோ பெரும்பாலும் குடியிருக்கக் குடிசைகளும் சாக்கடைகளும் தின்பதற்குப் பழைய ரொட்டியும் பழைய மீனுமாக வாழ்ந்துவருகிறோம். இவர்கள் மாளிகைகளில் வாழ்ந்து குபேரஸம்பத்தை அனுபவிக்கிறார்கள். இது சமத்துவக் கொள்கைக்கு முற்றிலும் விரோதமானது. இவர்கள் முதல் போட்டார்களேயெனில், நாம் பாடுபட்டோம். எல்லோருக்கும் லாபம் சமானமாகவே இருக்க வேண்டும்" என்று விரும்பலாயினர். எனினும், திடீரென்று, சமபாகம் கேட்கத் துணியாமலும் அதனைப்பெறுதல் சாத்யமில்லை யென்று நிச்ச

யமாகத் தெரிந்தபடியாலும் சிறிதுசிறிதாகக் கூலி உயர்வுக்குக் கலகம் பண்ணிக்கொண்டு வந்தார்கள்.

வாஸத்திற்கு ஸௌகரியமான வீடுகள் கட்டிக் கொடுக்க வேண்டுமென்றார்கள். தொழிலாளிகள் கிழவரான இடத்திலும் நோயாளிகளான இடத்திலும் இனும் சம்பளம் கொடுக்க வேண்டு மென்றார்கள். தங்களுக்கும் தம்முடைய மக்களுக்கும் படிப்புச் சொல்லிவைப்பதற்குரிய சாதனங்கள் செய்ய வேண்டு மென்றார்கள். தொழில் நேரத்தைக் குறைக்க வேண்டு மென்றார்கள். படிப்படியாக இவ் வேண்டுதல்களை முதலாளிகள் தெரிந்துகொண்டே வந்திருக்கிறார்கள். எனினும் இத்தகைய போராட்டங்களில் இன்றுவரை தொழிலாளிகளே வெற்றியடைந்து கொண்டு வருகிறார்கள். இதற்குரிய காரணங்கள் பல. இவற்றைக் குறித்துப் பிந்திய பகுதிகளில் விஸ்தாரமாக எழுதுகிறேன்.

## தொழிலாளர் பெருமை

ஐரோப்பிய நாடுகளில் தொழிலாளிகளுக்கும் முதலாளிகளுக்கும் இடையே ஏற்பட்ட வேற்றுமைகள் இப்போது மிக்வும் முற்றிப் போய்விட்டன. இங்கிலாந்தில் அவ் விரண்டு கக்ஷியாருக்குமுள்ள மனஸ்தாபங்களை யெல்லாம் தீர்த்து அவர்களில் ஒரு திறத்தாரால் மற்றொரு திறத்தாருக்கு விளையும் பரஸ்பரமான கஷ்ட நஷ்டங்களைப் போக்கி அவர்களுக்குள்ளே சமாதானமும் ஒற்றுமை யுணர்வும் ஏற்படுத்துதல் மிகவும்

சிரமமான காரியம். இஃது வெறுமே சாதாரண மனித யத்தனத்தால் நிறைவேறக்கூடியதாகத் தோன்றவில்லை. உலகத்தில் இதுவரையில்லாத புதிய தெய்வீக சக்திகள் கொண்ட அவதார புருஷர்கள் தோன்றினால் அவர்களே ஐரோப்பாவில் மூண்டிருக்கும் இந்தப் பெரிய விபத்துக்கு ஸமாதான வழிகளிலே நிவர்த்தி செய்யக்கூடும். "சென்ற இரண்டு நூற்றாண்டுகளில் ஐரோப்பியத் தொழிலாளர் சிறிது சிறிதாக சம்பாதித்துக்கொண்டு வந்திருக்கும் உரிமைகளுடனே அவர்கள் திருப்தி கொண்டு இருக்க வேண்டும். இதுவரை அவர்களுக்குக் கிடைத்திருக்கும் உரிமைகளே மிகவும் அதிகம். இவற்றைக்கூட இன்னும் குறைத்தால் நல்லது. இப்படியிருக்க, தொழிலாளர் இன்னும் அதிகமான உரிமைகள் கேட்பதற்கு நாம் கொஞ்சமேனும் செவி சாய்க்கக்கூடாது" என்று பெரும்பான்மையான முதலாளிகள் நினைக்கிறார்கள். தொழிலாளரோ, அங்கு ராஜாங்க அதிகாரத்தை தமது வசமாகச் செய்து கொண்டாலன்றி, அதாவது, தங்கள் இஷ்டப்படி சட்டம் போட்டு, முதலாளிகளினுடைய பணத்தை தங்கள் இஷ்டப்படி விநியோகிக்கக்கூடிய நிலைமை ஏற்பட்டாலன்றி, தங்களுக்கு முதலாளிகளிடமிருந்து நியாயம் கிடைக்க இடமில்லை என்று நினைக்கிறார்கள்.

எனவே, இங்கிலாந்து முதலிய தேசங்களிலுள்ள தொழிலாளிகள் பார்லிமெண்ட் சபையில் தாம் ஆதிக்யம் பெற்று, அதன் மூலமாகத் தம்முடைய கட்சியாரே

மந்திரிகளாகும்படியான நிலைமையை ஏற்பாடு செய்து கொண்டு, இவ்வழியாலே ராஜ்யாதிகாரத்தையும் தம் முடையதாகச் செய்து கொள்ளும்படி மும்முரமான முயற்சிகள் செய்து வருகின்றனர். ஆனால், மேற்படி தேசங்களில் ராஜ்யாதிகாரம் இப்போது பெரும்பாலும் முதலாளிகளுக்குச் சார்பாக இருப்பதால். அந்த முத லாளிகள் தம்மால் இயன்ற வழிகளெல்லாம் தொழிலா ளிகளைத் தலைதூக்க ஒட்டாமல் அழுத்திவிட முயற்சி செய்து வருகிறார்கள். இதனால் அவ்விரு திறத்தாருக் குள்ளே சமாதானமும் சினேகத்தன்மையும் ஏற்படுவ தற்கு வழியில்லாமல் நாளுக்கு நாள் மனஸ்தாபங்களும் அவநம்பிக்கையும் வயிற்றெரிச்சல்களும் மிகுதிப்பட்டுக் கொண்டுதான் வருகின்றன.

இந்தியாவில் இந்த விபரீதமான நிலைமை ஏற்பட வேண்டுமென்பது நம்முடைய விருப்பமன்று. ஐரோப் பாவில் ஆரம்பமுதலாகவே தொழிலாளரும் முதலாளி களும் தொழிலின் பெருமையையும் அவசியத்தன்மை யையும் நன்கு கருதியிருப்பார்களாயின், இப்போது அங்கே இவ்வளவு பயங்கரமான நிலைமை ஏற்பட்டி ராது. எனவே, இந்தியாவில் முதல் முதலாகத் தொழி லாளர் கிளர்ச்சி தோன்றியிருக்கும் இந்தச் சமயத் திலே, நம்முடைய ஜனத் தலைவர்கள் முதலாளிகள் தொழிலாளிகள் என்று இரு திறத்தாரையும் ஆதர வுடன் கலந்து புத்திசொல்லி மனஸ்தாபங்களை ஏற வொட்டாதபடி முளையிலேயே கிள்ளிவிட முயற்சி

செய்ய வேண்டும். தொழிலாளரை முதலாளிகள் இகழ்ச்சியுடன் கருதி நடத்துவதை உடனே நிறுத்து வதற்குரிய உபாயங்கள் செய்ய வேண்டும். தொழிலின் மஹிமையையும் இன்றியமையாத் தன்மையையும் எல்லா ஜனங்களும் அறியுமாறு செய்ய வேண்டும்.

ஆரம்பத்திலேயே நாம் இதற்குத் தகுந்த ஏற்பா டுகள் செய்யாவிடின், நாளடைவில் ருஷ்யாவிலுள்ள குழப்பங்களெல்லாம் இங்கு வந்து சேர ஹேது உண் டாய்விடும்.

ருஷ்யாவில் சமீபத்திலே அடுக்கடுக்காக நிகழ்ந்து வரும் பல புரட்சிகளின் காரணத்தால் அவ்விடத்து சைனியங்களில் பெரும் பகுதியார் தொழிற் கட்சியை யும் அபேதக் கொள்கைகளையும் சார்ந்தோ ராய்விட்ட னர். இதினின்றும் அங்கு ராஜ்யாதிகாரம் தொழிற் கட்சிக்கு கிடைத்து விட்டது. தேசத்து நிதி யனைத் தையும் சகல ஜனங்களுக்கும் பொதுவாகச் செய்து, எல்லாரும் தொழில் செய்து ஜீவிக்கும்படி விதித்திருக் கிறார்கள். தேசத்துப் பிறந்த ஸர்வ ஜனங்களுக்கும் தேசத்துச் செல்வம் பொது என்பது உண்மையாய் விடின், ஏழைகள் செல்வர் என்ற வேற்றுமையினால் உண்டாகும் தீமைகள் இல்லாமற் போகும்படி சகலரும் தொழில் செய்துதான் ஜீவிக்க வேண்டும் என்ற விதி வழங்குமானால், தேசத்துத் தொழில் மிகவும் அபி விருத்தியடைந்து ஜனங்களின் க்ஷேமமும் சுகங்களும் மேன்மேலும் மிகுதியுறும்.

எனவே, ருஷ்யாவிலுள்ள அபேதவாதிகளுடைய கொள்கைகள் அவ்வளவு தீங்குடையவனல்ல. ஆனால், அவற்றை வழக்கப்படுத்தும் பொருட்டு அவர்கள் நாட்டில் ஏற்படுத்தியிருக்கும் தீராச் சண்டையும் அல்லலுமே தீங்கு தருவனவாம். ருஷ்யக் கொள்கைகள், இப்போது அனுஷ்டிக்கப்படும் ருஷ்யமுறைகளின்படி, உலகத்தில் ஸ்தாபனம் பெற்று வெற்றி பெறவேண்டுமானால், அதற்குள்ளே முக்காற் பங்கு ஜனம் கொலையுண்டு மடிந்து போவார்கள். வெளிநாட்டுப் போர் அத்தனை பெரிய விபத்து அன்று. நாட்டுக்குள்ளேயே செல்வர்களும், ஏழைகளும், ஒருவரை ஒருவர் வெடிகுண்டுகளாலும், துப்பாக்கிகளாலும், பீரங்கிகளாலும் தூக்குமரங்களாலும் கொல்லத் தொடங்குவார்களாயின் அது தீராத தொல்லையாய் விடுமன்றோ?

இந்தியாவில் இந்த நிலைமை நேரிடாத வண்ணம், ஜனத் தலைவர்கள் இப்போதே தீவிரமாகவும் பலமாகவும் வேலைசெய்யத் தொடங்கவேண்டும். தொழிலாளரிடம் பொது ஜனங்களும் முதலாளிகளும் மிகுந்த மதிப்புச் செலுத்தும்படி ஏற்பாடு செய்வதே இந்த வேலையில் முதற்படியாம். 'தம்முடைய கார்யத்தைச் செய்யவேண்டியதே தொழிலாளியின் ஆத்மாவுக்கு ஈசனால் விதிக்கப்பட்ட புருஷார்த்தம்' என்று முதலாளிகளில் பலர் நினைக்கிறார்கள். யந்திரங்களைப் போலவே இவர்கள் மனிதர்களையும் மதிக்கிறார்கள். பொதுவாக, ஏழைகளிடம் செல்வருக்கு உள்ள அவ

மதிப்பு அளவிடும் தரம் அன்று. இவ்விதமான எண்ணம் நம்முடைய தேசத்திலும் செல்வர்களிடத்து மிகுதியாகக் காணப்படுகின்றது. இவ் வெண்ணத்தை உடனே மாற்றித் தொழிலாளிகளையும் மற்ற எழைகளையும் நாம் சாதாரண மனிதராக நடத்தவேண்டும், அதிலும், தொழிலாளிகளின் விஷயத்தில் நாம் உயர்ந்த மதிப்புச் செலுத்த வேண்டும். இவ்வித மதிப்பினால் நாம் தொழிலாளிகளின் விஷயத்தில் என்னென்ன கடமைகள் செலுத்த நேரும் என்பதைப் பின்னொரு வியாசத்திற் பேசுகிறேன்.

---

## பருந்துப் பார்வை

1. ஒரு தேசத்தார் ராஜ்யமஹிமை பெறவேண்டுமானால் அவர்கள் ஏகதேவ பக்தி யுடையவர்களாக இருக்க வேண்டும் என்று "மாடர்ன் ரிவ்யூ" பத்திரிகை சொல்லுகிறது. அதாவது, 'முஹம்மதியர், கிறிஸ்துவர், யூதர் முதலியவர்களைப்போல் ஒரே கடவுளை நம்பித் தொழவேண்டும். கிறிஸ்துவர்களிலே ரோமன் கதோலிக் கிறிஸ்துவர்கள் பல ஞானிகளையும் தாயையும் வணங்குகிறார்கள். அப்படியில்லாமல் ப்ரோதஸ்தாந்துக் கூட்டத்தாரைப்போல் ஒற்றைக் கடவுளைத் தொழவேண்டும். இல்லாவிட்டால், இராஜ்ய வலிமை உண்டாகாது' என்று அந்தப் பத்ராதிபர் நினைக்கிறார். இது பிழை. இதற்கு மனுஷ்ய சரித்திரத்திலே எவ்வித

மான ஆதாரமும் கிடையாது. ஹிந்து மதம் உண்மை. எல்லாம் மதமும் உண்மைதான். ஹிந்து மதம் ஆழ்ந்த உண்மை. உண்மையாலேதான் எல்லா நன்மையும் உண்டாகும்.

2. வைஸ்ராய் ஸபையிலே ஜனப்பக்கத்துப் பிரதிநிதிகள் 22 பேரிலே 19 பேர் சர்க்காருக்கு ஒரு அறிக்கையிட்டிருப்பதாகத் தங்கள் பத்திரிகையிலே பார்த்தேன். சண்டை முடிந்த பிறகு, பொருளாட்சியும் மாகாண ஆட்சியும் ஜனங்கள் ஆயுதம் தரிக்க இடங் கொடுக்க வேண்டும் என்பது மேற்படி அறிக்கையின் ஸாரம் என்று தோன்றுகிறது. போதும்; பிரதிநிதிகள் சரியாகக் கேட்கவில்லை; ஏதோ தங்கள் புத்திக்குத் தோன்றியவரை செய்தார்கள். இருந்தாலும் பொதுவாக, அவர்கள் கேட்கிற அளவேனும் நிச்சயமாகக் கிடைத்துவிட வேண்டும், அப்போதுதான் தேசத்து ஜனங்களுக்குச் சிறிது சந்தோஷம் ஏற்படும்.

3. தக்ஷிணத்துப் பாஷைகளிலே—அதாவது, தமிழிலும் தெலுங்கிலும் கன்னடத்திலும் மலையாளத்திலும்—சாஸ்திர (சயின்ஸ்) பாடம் கற்றுக் கொடுப்பதற்கு மேற்படி பாஷைகள் தகுதியில்லை யென்று பச்சையப்பன் காலேஜ் தலைமை வாத்தியார் மிஸ்டர் ரோலோ என்பவர் சொல்லுகிறார். அவருக்கு இவ்விடத்துப் பாஷைகள் தெரியாது. சங்கதி தெரியாமல் விரிக்கிறார். சாஸ்திர பரிபாஷை நமது பாஷைகளில் மிகவும் எளிதாகச் சேர்த்துவிடலாம். மேலும்,

இயற்கை நடையிலே இங்கிலீஷைக் காட்டிலும் தமிழ் அதிக நேர்மையுடையது. ஆதலால், சாஸ்திரப்ரவசனத்துக்கு மிகுந்த சீருடையது. இந்தச்சங்கதி நம்மவர்களிலே கூடச் சில இங்கிலீஷ்ப் பண்டிதருக்குத் தெரியாது. ஆதலால் மிஸ்டர் ரோலோவை நாம் குற்றஞ் சொல்வது பயனில்லை.

4. காசியிலே ஹிந்து ஸர்வகலா சங்கம் கட்டும் போது, பல மாளிகைகள் ஹிந்து சிற்பத்தைத் தழுவியிருக்கவேண்டும். நவீன பாடசாலைக்குரிய லக்ஷணங்கள் குறையக்கூடாது. ஆனால், சிற்பத்தின் மேனி சுதேசிய விஷயமாக இருக்கவேண்டும். பாரத தேசத்துச் சிற்பிகளிலே தமிழ் நாட்டு ஸ்தபதிகள் ஒரு முக்கியமான அங்கமாவர். வங்கத்திலே ஏற்பட்டு மஹாகீர்த்தியுடன் சோபிக்கும் நவீன சாஸ்திரிகளில் நாயகராகிய அவனீந்த்ரதாகூர்கூட இக்காலத்திலும் தமிழ் நாட்டில் வாழும் ஸ்தபதிகளிடம் உயர்ந்த தொழில் இருப்பதாக மிகவும் புகழ்ந்து பேசியிருக்கிறார். ஆதலால், மேற்படி ஸர்வகலா ஸங்கத்தின் கூட்டங்களிலே கூடியவரை நமது தமிழ் ஸ்தபதிகளின் உதவியை நாடிக்கொள்ளும்படி தமிழ் நாட்டிலுள்ள பண்டிதர்களும் ஜனத்தலைவர்களும் மேற்படி ஸங்கத்திற்குப் பொருள் கொடுத்து உதவுந்தோறும் முயற்சி செய்யவேண்டும்.

5. ஜப்பானில் ஸம்ஸ்கிருதப் படிப்பு வளருகிறது. அங்கே ஸம்ஸ்கிருதப்படிப்பு எந்தக்காலத்தில் தொடங்கியது என்று இன்னும் நிச்சயமாய்ச் சொல்ல இட

யில்லை. ஆறும் நூற்றாண்டில் அந்த நாட்டுக்குள் பௌத்தமதம் நுழைந்த போதே ஸம்ஸ்கிருதமுங்கூட நுழைந்திருக்கலாம் என்று சிலர் சொல்லுகிறார்கள். ஏழாவது நூற்றாண்டின் மத்தியிலே சீன தேசத்தில் மொழி பெயர்ப்புச் சங்கம் நடத்திய ஹயலுக்த்ஸவ் என்ற பண்டிதரிடம் ஜப்பானிலிருந்து பல குருக்கள் வந்து ஸம்ஸ்கிருதம் படித்ததாகச் சரித்திர ஆதாரத்தினால் தெரிகிறது. 735 (கி. பி.)-ஆம் வருஷத்தில் பாரத தேசத்திலிருந்து போதிஸேனன், யத்ரியத் என்ற இரண்டு பேர் ஜப்பானில் போயிறங்கினார்கள். சிறிது காலம் சீனராஜதானியிலிருந்துவிட்டு ஜப்பானிலிருந்து அங்கு வந்த மந்திரிகளுடனே அங்கிருந்து புறப்பட்டு ஜப்பானுக்குப் போய்ச் சேர்ந்தார்கள். இதற்கப்பால் ஸம்ஸ்கிருதப் படிப்பு மிகுதிப்பட்டது. ஜப்பானிலிருந்து ஸம்ஸ்கிருத பண்டிதர் சீனத்திலே போய் மஹா கீர்த்தி யடைந்தனர். திருஷ்டாந்தமாக 805 (கி. பி.)-ஆம் வருஷத்தில் ரெய்ஸோன் என்ற ஜப்பானிய குரு சீனத்துக்குப் போய் அங்கே பௌத்த மொழியெர்ப்புச் சங்கத்தின் தலைமையை நடத்தினார். அப்போது நராஸ்ஞ நன்னென்ற ஹிந்து பண்டிதர் அங்கிருந்தார். இவருஞ்சேர்ந்து ஒரு பெரிய சாஸ்திரம் ஸம்மஸ்கிருதத்திலிருந்து மொழிபெயர்த்து வந்தார்கள். இப்போதும் அங்கே பௌத்த தர்மத்துக்கு அந்நூல் பெரிய ப்ரமாணமாக நிற்கின்றது. மேலும், அக்காலத்திலிருந்து ஜப்பானிலிருந்து பலர் பாரத தேசத்துக்கு வந்து போனதாகவும் தெரிகிறது. இப்போது ஜப்பானிலே

பௌத்த மடங்களில் நூற்றுக் கணக்கான மனிதர் ஸம்ஸ்கிருதம் படிக்கிறார்கள்; ஒவ்வொரு ராஜாங்கத்து சர்வ கலாசாலையிலேயும் சங்கத்திலேயும் பெரிய தேர்ச்சி கொண்ட ஜப்பானிய ஸம்ஸ்கிருத பண்டிதர் நியமிக்கப் பட்டிருக்கிறார். இங்குள்ள ஸம்ஸ்கிருத பண்டிதர்கள் ஜப்பானிலுள்ள ஸம்ஸ்கிருத பண்டிதர்களுடன் ஓலை எழுதிப் பழக்கமேற்படுத்திக் கொள்ளலாம். டோக்யோ சாம்ராஜ்ய சர்வ கலா சங்கத்தில் பண்டித அநேஸாரி (Anesari) என்பவர் இருக்கிறார். அங்கிருந்து பழைய சுவடிகள் தருவித்துப் பார்க்க ஏற்பாடு செய்யவேண்டும். ஹிந்து சர்வகலா சங்கத்தார் இவ் விஷயத்தைக் கவனிப்பது நலமாகும்.

---

## மாலை

நமக்கு முடியாத காரியத்தைக் கைவிடலாகாது. நம்மைக்காட்டிலும் திறமையுள்ள ஒருவன் கையிலே கொடுத்து அவன் கீழே சிற்றாளா யிருந்து தொழில் பழகிக்கொண்டு, பிறகு நாமாகச் செய்யவேண்டும். இதை நாட்டுக்கோட்டைச் செட்டிகளும் கவனிக்கலாம். காங்கிரஸ் சபையாரும் கவனிக்கலாம்.

* * *

ஒரு தரம் ஒரு வழக்கம் ஏற்பட்டுப் போனால் பிறகு அதை மாற்ற முடியாது. ஆதலால் புதிய வழக்

கத்தைத் தொடங்குவோர் பின் வரக்கூடிய பலாபலன் களைத் தீர யோசனை செய்தபிறகு தொடங்க வேண்டும்.

இது அநேகமாக எல்லா மனிதருக்கும் நினைப் பூட்டவேண்டிய விஷயம். மாறுதல் இயற்கை. நல்ல படியாக மாறிக்கொண்டு போதல் புத்திமான்களுக்கு லக்ஷணம்.

* * *

முஹம்மதிய புஸ்தகசாலைகள், வாசக சாலைகள், கல்விச் சங்கங்கள் முதலியவற்றிலே ஹிந்து பண்டிதர் களும், ஹிந்துக்களின் கல்விக் கூடங்களிலே முஹம் மதிய வித்வான்களும் வந்து உபந்யாஸங்கள் செய்யும் காட்சி சில நாளாக நமது தேசத்தில் அதிகப்பட்டு வருகிறது. நமது ஜனங்களுக்குக் கொஞ்சம் கொஞ்சம் கண் திறக்கிறது. எல்லா வித்தைகளும் கலந்தால் தான் தேசத்தினுடைய ஞானம் பரிமளிக்கும். "ஒரு குழம்புக்குள்ளே இரண்டு "தான்" போட்டாளாம்; 'தான்' தெரியாதா, குழம்புத்தான்; ஒன்று கத்திரிக் காய், ஒன்று உருளைக்கிழங்கு! இதிலே கத்திரிக்காய் உருளைக்கிழங்கைத் தின்றுவிட்டதாம்" என்றொரு பச் சைக்குழந்தைக் கதையுண்டு. கலந்தால் பொது இன் பம். ஒன்றை ஒன்று கடித்தால் இரண்டுக்கும் நாசம்.

முஹம்மதிய சாஸ்திரங்களைக் கற்றுகொண்டால் ஹிந்துக்களுக்கு அறிவு விசாலப்படும்.

* * *

ஒரு விரதமெடுத்தால் என்ன வந்தாலும் அதைக் கலைக்கக்கூடாது. ஆரம்பத்தில் கலைந்து கலைந்துதான் போகும். திரும்பத் திரும்ப நோக்கிக்கொள்ளவேண்டும். நமது தேசத்திலே (சயின்ஸ்) சாஸ்திரப் படிப்பு வளரும்படி செய்யவேண்டும் என்று சில பண்டிதர்கள் அபேக்ஷிக்கிறார்கள். இதற்கு மற்ற ஜனங்களிடமிருந்து தக்க உபபலம் கிடைக்கவில்லை. இருந்தாலும் இந்த நோக்கத்தை மறந்து விடலாகாது. ஊதுகிறபோது ஊதினால் விடிகிறபோது விடியும். சாஸ்திரப் படிப்பு முக்கியம். அதிலே தான் நன்மையெல்லாம் உண்டாகிறது. சயின்ஸ் மனித ஜாதியை உயர்த்திவிடும். அது இஹத்துக்கு மாத்திரமேயன்றி பரத்துக்கும் சாதனம் ஆகும். காசிக்கு வழி தெற்கே காட்டுகிற மனிதன் கைலாயத்திற்கு நேர்வழி காட்டுவானோ?

* * *

நமது பூர்வீகர் சயின்ஸ் தேர்ச்சியிலே நிகரில்லாகி விளங்கினார்கள். அந்தக்காலத்து லௌகிக சாஸ்திரம் நமக்குத் தெரிந்த மாதிரி வேறு யாருக்குந் தெரியாது. இந்தக் காலத்து சங்கதிதான் நமக்கு கொஞ்சம் இழுப்பு.

* * *

பசி வந்தால் கோபம் வருகிறது. பசி யடங்கினால் கோபம் அடங்குகிறது. இதைக் கருதி அறிவுடைய தகப்பன் தன் பிள்ளைகளுக்கு வயிறு நிறைய சோறு சேர்த்துக் கொடுத்த பிறகு தான் பக்ஷணம், பழம், மிட்டாய் அல்லாவிட்டால் ஊதுகுழாய் வாங்

க் கொடுக்கவேண்டும். ஒருவன் ஊருடன் கூடி வாழ விரும்பினால் ஊருக்கு வயிறு நிறைய அன்னம் போட வேண்டும். சிற்சிலர் புதிய புதிதான தர்மங்கள் கண்டுபிடிக்கிறார்கள். ஏழைக்கு அன்னம் போடுவது தான் உத்தம தர்மம். இது முற்பாட்டனாருடைய தீர்மானம். என்னுடைய தீர்மானமும் அப்படியே. ஜனங்களுடைய வயிற்றுக்குக் கஞ்சிகாட்ட முடியா விட்டால், அந்த தேசத்தில் எவ்வளவு பெரிய வித்வானிருந்து பிரயோஜனமென்ன? நாகரிகம் உயர்வதினாலே போஜனம் குறைவாக இருந்தால் அந்த நாகரிகம் அவசியமில்லை. சில நாட்டுக்கோட்டைச் செட்டிகள் நாகரிகமாகி இந்தக் காலத்தில் பணம் செலவு பண்ணும் மாதிரியைப் பார்க்கும்போது பழைய காலத்து அநாகரிகமே விசேஷமென்று தோன்றுகிறது. முன்பெல்லாம் நாட்டுக்கோட்டைச் செட்டியார் கோயில் கட்டுவார், சத்திரங்கள் வைப்பார், பள்ளிக்கூடம் வைப்பார். இதெல்லாம் அநாகரிகமென்று தள்ளிவிட்டுச் சில புது நாகரிகச் செட்டிகள் காட்டு நெருப்பிலே பசு நெய்யைக்கொண்டு கொடுக்கிறார்கள். வேசைக்கும், கூத்துக்கும், வீண் விருந்துக்கும் செலவிடுகிறார்கள். நாகரிகம் வேண்டியதில்லை; முதலாவது சகல ஜனங்களுக்கும் சோறு கண்டுபிடி. நாட்டுக்கோட்டையார் மாத்திரமில்லை. எல்லாச் செட்டியாரும் கவனிக்க வேண்டிய விஷயம் இது.

ஒரு விரதமெடுத்தால் அது கலையவிடக் கூடாது. இன்னொருதரம் எதற்காகச் சொல்ல வந்தேன் தெரி

யுமா? ஒருவன் யோக சாஸ்திரம் பழகப்போய் மௌன விரதம் எடுத்தான். அப்போது அவனுக்கு வயிற்றுக் கடுப்பு வந்தது. பல கடன்காரர்கள் வந்தார்கள். ஒரு புது சிஷ்யன் வந்தான். இராத்திரியில் இரண்டு திருடர்கள் வந்தார்கள். இரண்டு விருந்துகள் வந்தன. ஒரு கல்யாணம் வந்தது, அவசியமாய்ப் போய்த்தீரவேண்டியது. இன்னும் பல விஷயங்கள் வந்தன, ஒரே நாளில்! அவன் மௌன விரதத்தைக் கலைத்துவிட்டான். உடனே வயிற்றுக்கடுப்பு தீர்ந்துபோய்விட்டது. கடன், சிஷ்யன், திருடன், கல்யாணம் தீர்ந்துபோய் விட்டன. மறுநாள் ஒரு தொல்லையுமில்லை.

பிறகு "ஹா! இந்த சங்கடங்களெல்லாம் இத்தனை விரைவாகத் தொலைந்துபோமென்று தெரிந்தால் நான் மௌன விரதத்தைக் கலைத்திருக்க மாட்டேனே" என்று சொல்லி அந்த மனிதன் வருத்தப்பட்டான். எல்லா விரதங்களுக்கும் இது தான் விதி. நாம் விரதம் எடுத்தவுடனே, அதை நிறைவேற்றத் தக்க மன உறுதி நமக்குண்டா என்று பார்ப்பதற்காக, இயற்கைத் தெய்வம் எதிர்பாராத பல சங்கடங்களைக் கொண்டு சேர்க்கும். அந்தச் சங்கடங்களை யெல்லாம் உதறி யெறிந்துவிட்டு நாம் எடுத்த விரதத்தை நிறைவேற்ற வேண்டும். விரதம் இழந்தார்க்கு மானமில்லை. விரதத்தை நேரே பரிபாலனம் பண்ணினால் சக்தி நிச்சயம்.

---

# உடம்பு

உடம்பை வலிமை செய்வதற்கு மன வலிமை வேண்டும்.

ஸலரத் முதலிய பழக்கங்களில் உடம்பு பலமேறுவதற்கு மனவுறுதியும் ஆசையுமே முக்கிய காரணங்களாக வேலை செய்கின்றன.

ராமமூர்த்தி முதலிய நமது நாட்டு பலவான்களும் ஸாண்டோ முதலிய அன்னிய நாட்டு பலவான்களும் இவ்விஷயத்தை மிகவும் வற்புறுத்திப் பேசியிருக்கிறார்கள். கையிலே தண்டு முதலியவற்றை எடுத்துச் சுழற்றும்போது, வீமசேனனை நினைத்துக் கொள்ள வேண்டுமென்று எங்களூரிலே ஒரு பஹல்வான் சொல்லுவார். பிராணயாமத்தை மாத்திரமேயன்றி 'தியானம்' முதலிய யோகமுறைகளையும் ராமமூர்த்தி பெருந்துணை யென்று சொல்லுகிறார்.

ஸாண்டோ தமது 'டம்பெல்ஸ்' என்று சொல்லப்படும் இரும்புக்குண்டுகளை வைத்துப் பழகுவோர் வெறுமே கைகளில் குண்டுகளைத் தூக்கி அசைத்தால் பிரயோஜனமில்லை என்பதை மிகவும் தெளிவாக எழுதியிருக்கிறார்.

குண்டைப் பிடித்து உறுதியுடன் முன்னே நீட்டிய கையை மடக்கும்போது, உனது மனோபலம் முழுதையும் கைத்தசைகளிலே செலுத்தி மெதுவாக மடக்க

வேண்டும். கவனத்தை மற்றொரு பொருளிலே செலுத்தினால் தசைகளுக்கு சரியான வலிமை யேறுமென்று சொல்லுகிறார்.

உடம்பு நாடிகளுக்கு வசப்பட்டது. நாடிகள் மனதின் வசமாகும். ஆகையால், உடம்பினுள்ள நோய்களைத் தீர்த்து வலிமை யேற்றுவதற்கு, மனவுறுதி, நம்பிக்கை, உத்ஸாகம் முதலிய குணங்கள் பிரதானமாகக் கொள்ளத் தகும்.

உணவு

இந்திரப்ரஸ்த நகரத்தின் கடைசி க்ஷத்திரிய அரசனான ப்ருதிவிராஜனுடைய சேனாதிபதிகளிலே சாமிண்டராய் என்று ஒருவன் இருந்தான். வடபக்கத்து முஹம்மதிய அரசர்க்கெல்லாம் அவன் பெயரைக் கேட்ட மாத்திரத்தில் நடுக்கமுண்டாகும்படி அவன் அத்தனை வீரமும் யுத்தத் திறமையும் கொண்டு விளங்கினான். அவனுடைய சரீர வலிமையை அக்காலத்தில் பாரத தேச முழுதிலும் நிகரற்றதாகக் கொண்டாடினார்கள். அவனுக்குச் சாமுண்டி உபாஸனையுண்டு. விரதங்கள், கண்விழிப்புக்கள், தியானங்கள், வ்யாயாமங்கள் இவற்றிலேயே தனது காலமுழுதும் கழித்தான். அவன் உணவு கொள்ளும்போது வீமனைப்போல் அளவில்லாத பசியுடன் உண்பான் என்று சந்தகவி 'ப்ருதிவிராஜ் ராஸோ' என்னும் தமது காவியத்திலே எழுதியிருக்கிறார். வீமனுடைய பெயர்களில் 'வ்ருகோதரன்' என்பதொன்று. அதாவது

ஓநாய் வயிறுடையவன் என்றர்த்தம். இது அவனுக்கிருந்த நேர்த்தியான பசியைக் கருதிச் சொல்லியது. இக்காலத்திலே குறைவாக உண்ணுதல் நாகரிகமென்று நம்மவர்களிலே சிலர் நினைக்கிறார்கள்.

பெருந்தீனிக்காரன் என்றால் அவமதிப்புண்டாகிறது. சிராத்தத்திலே சோறு தின்று முடிந்தவுடன் எழுந்திருக்கமுடியாமல் கஷ்டப்படும் சில பிராமணார்த்தக்காரர்களைப் போல் சரியான பலமில்லாமல் உடம்பைக் கொழகொழவென்று வைத்துக்கொண்டு நாக்குருசியை மாத்திரம் கருதிப் பெருந்தீனி தின்பவனைக் கண்டால் அவமதிப்புண்டாவது இயற்கையேயாம். சிங்கம் புலிகளைப்போல உடல் வலிமையும் அதற்குத் தகுந்த தீனியும் உடையவனை கண்டால் யாருக்கும் அவமதிப்பு உண்டாகாது; சாதாரணமாகப் பயம் உண்டாகும். நானாவிதமான விலையுயர்ந்த உணவுப் பொருள்களைத் தின்றால் தான் உடம்பிலே பலம் வருமென்று சிலர் நினைக்கிறார்கள். இது தவறு. கார சாரங்களும் வாஸனைகளும் உண்டாக்கி ருசியை அதிகப்படுத்தும் வஸ்துக்கள் தேகபலத்திற்கு அவசியமில்லை. கேப்பைக்களி கம்பஞ்சோறு இவற்றால் பலமுண்டாவதுபோல் பதிர்ப்பேணியினும், லட்டுவிலும், வெங்காய சாம்பாரிலும் உண்டாகாது.

## பசி

சரீரத்தை வியர்க்க வியர்க்க உழைத்தால் நல்ல பசியுண்டாகும். நல்ல பசியாயிருக்கும்போது கேப்

யைக் களியை வேண்டுமளவு தின்று சுத்த ஜலத்தைக் குடித்தால் போதும். விரைவிலே பலம் சேர்ந்துவிடும். பிள்ளைகள் இஷ்டப்படி நீஞ்சுதல், மரமேறுதல், பந்தாட்டம் முதலிய விளையாட்டுக்களிலே போகவொட்டாதபடி தடுக்கும் பெற்றோர் தாமறியாமலே மக்களுக்குத் தீங்கு செய்கிறார்கள்.

### வயது

மேலும் சரீர வுழைப்பும் விளையாட்டுக்களும் மிகவும் வாலிபப் பருவத்திலே யிருக்கும் பிள்ளைகளுக்கு மாத்திரந்தான் பொருந்துமென்று ஒரு தப்பெண்ணம் சிலரிடம் ஏற்பட்டிருக்கிறது. மனிதனுக்கு இயற்கை வயது நூறு. ஆகையால் ஐம்பது வயதாகும் வரை ஒருவன் இளமை தீர்ந்தவனாகமாட்டான். பிஞ்சிலேயே உடம்பை நாசப் படுத்தினால் சீர்கெட்டுக் குலைந்துபோய் இருபது வயதாகுமுன் கிழத் தன்மை வந்துவிடும். எனினும், இயற்கை விதிப்படி ஐம்பது வயதுவரை இளமை நிற்குமாகையால், அதற்குள்ளே 'செயற்கைக் கிழத்தன்மை' பெற்றோர் தமதுடம்பைத் திருத்தி நல்லநிலைமைக்குக் கொண்டுவர முயற்சி செய்யலாம். ஐரோப்பாவிலே ஐம்பது வயதுக்காரர் ஆடியோடி விளையாடுவதும், பந்தடிப்பதும், கூட்டங் கூடிக் குதிப்பதும் சாதாரணமாகப் பார்க்கலாம். நமது நாட்டுக் கல்வியாளர் சிலர் முப்பது வயதிற்கு முன்னமே தம்மைக் கிழவர்களாக பாவனை செய்துகொண்டு ஜீவகளையில்லாமல் சஞ்சரிக்கிறார்கள்.

உண்மையாக, அவற்றை நாகரிகப்படுத்தி அவற்றால் வாழ்வைப் பல துறைகளிலும் அதிகப் பயன்படச் செய்ய விரும்புவீர்களேயானால், அதற்கு ஓர் மார்க்கம் தான் இருக்கிறது. அதாவது அன்பு.

---

## மிருகங்களைச் சீர்திருத்தல்

மனிதனைச் சீர்திருத்த லக்ஷத்தொன்று உபாயங்கள் ஏற்பட்டிருக்கின்றன. மிருகங்களைச் சீர்திருத்த நாம் முயற்சி செய்யவில்லை.

கோயில், குளம், அரண்மனை, நீதிஸ்தலம், வீடு, மன்று முதலிய எண்ணற்ற விதங்களால் மனிதர் தம்மைத் தாமே சீர்திருத்திக்கொள்ள முயல்கின்றார்கள். பள்ளிக்கூடமே உபாயம் என்றும் சகல மனுஷ்யருக்கும், எழுத்துப்படிப்புச் சொல்லித் தீரவேண்டும் என்றும் ஐரோப்பியக் கல்வி நிபுணர்கள் ஸித்தாந்தம் பண்ணுகிறார்கள். இது நிற்க. மிருகங்களையோ, முதலாவது தின்கிறோம். ஆடு, மாடு, கோழி, காடை, கவுதாரி, புறா, குயில், குருவி, வாத்து, பன்றி, மான் முதலிய பல ஜந்துக்களை உயிரோடு வெட்டித் தின்கிறோம்; வேட்டையாடுகிறோம். யானை முதல் முயல்வரை பல ஜந்துக்களை புலி, கரடி, சிங்கங்களை துஷ்டமிருகங்கள் என்றும், ஊரும் பாம்பு தேள் முதலியவைகளை துஷ்ட ஜந்துக்கள் என்றும் நாம் சொல்லுகிறோம். ஏன்? அவை நம்மைக் கொல்வதனாலே.

எத்தனையோ ஜந்துக்களை நாம் கொல்லுகிறோம். நமசகு மிருகபாஷைகளில் என்ன பெயரோ? துஷ்ட மனிதன் என்ற பெயரிருக்கலாம். பசுக்களையும் மாடு களையும் நாம் வதைக்கிறோம். நமக்கு வதைப்பதில் எத்தனை ஸ்வதந்திரமோ அவ்வளவு ஸ்வதந்திரம் அவற்றிற்கும் உண்டு. நீ மிருகத்தைவிட அதிக புத்தி சாலி யென்று நினைத்தால் அதைச் சீர்திருத்து. அப் படியே, சீமையில் சில குரங்குகளைச் சில ஸர்க்கஸ் கம்பெனியார் கால் சட்டை, கோட், தொப்பி, கண் ணாடி, பூட்ஸ் வகையறா மாட்டி, சாராயம் கொடுத்து, ஸிகரெட்டுப் பிடிக்கச் சொல்லி, உடுப்பு மாட்டி, உடுப் புக் கழற்றி, மேஜையிற் தீனி தின்று, அமளிப்படுத் தும்படி கற்றுக்கொடுத்திருக்கிறார்கள். ஆனால், அதைக் காட்டி காசு வாங்கி மனிதன் பிழைத்திருக்கிறான்.

இரக்கத்தைக் காணோம். அவை பரஸ்பரம் ஹிம்ஸை இல்லாமல் எல்லாம் எல்லாவற்றின் ஹிதார்த் தமாக வாழ்விக்க உபாயம் உண்டாக்கலாம். நமது முன்னோர் பசுவை மாதா என்று சொல்லி வணங்கினார் கள். நாம் அவர்களை (ஈக்வாலிடி) ஸமத்வம், (லிபர்டி) விடுதலை, (ப்ரெடெர்னிடி) உடன்பிறப்பு தெரியாத மூடர்கள் என்று சொல்லி மேற்படி பசுக் களைக் கறிசமைத்துத் தின்ன இச்சிக்கிறோம். அதன் பாலை ஊட்டி நம்முடைய குழந்தைகளை வளர்த்தோம். ஏன்? நினைப்பில்லாமல்.

போடா!

வெள்ளைக்காரன் சொன்னான்; "யோக்கியதை உத்தம மார்க்கம்"; நியாயமான வார்த்தை.

மாட்டை நாம் தாய் போலே நினைப்பது யோக்யதையா? கறி சமைத்துத் தின்பது யோக்யதையா? குயில் பாடுகிறது. கந்தருவர் கேட்டுத் தலை அசைக்கிறார்கள். நீ ஏன் அம்பு போட்டு அதைக் கொல்லுகிறாய்?

மிருகங்களுக்குப் பள்ளிக்கூடம் போட்டு அவற்றிற்கு நல்ல வழி காண்பித்து அவற்றைச் சீர்திருத்துதல் மிகவும் அவசியம். ஆனால், 'ஹிந்துக்கள் அத்தனை பேருக்குமே இன்னும் பள்ளிக்கூடம் போடவில்லையே? ஹிந்துக்களில் நூற்றுக்குப் பதினொருவர் மாத்திரமே எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள் என்று கேள்விப்பட்ட ஞாபக மிருக்கிறதே. அப்படி யிருக்க, அதற்குமுன்பு, மிருகங்களுக்குப் பள்ளிக்கூடம் போடமுற்படலாமோ' என்று சிலர் ஆக்ஷேபிக்கலாம். அங்ஙனம் கூறலாகாது.

ஏனென்றால், நம்முடைய கடமையை நாம் செய்ய வேண்டும். நாம் கூடுமானால், ஹிந்துக்களுக்கும் பள்ளிக்கூடம் போடுவோம். அவர்கள் சரிப்பட்டு வரவில்லையானால், மிருகங்களுக்குப் பள்ளிக்கூடம் போட்டு அவைகளைச் சீர்திருத்தும்போது, அதை ஹிந்துக்களும் மற்ற ஜாதியாரும் கண்டு பயனடையக் கூடும்.

தன்னைத்தானே திருத்திக்கொள்ளாதவன் பிற ஜந்துக்களைத் திருத்த அதிகாரம் பெற மாட்டான். தன்னைத்தானே திருத்திக் கொள்வதே பிரதானம். தன்னைத் திருத்தி அமரனாகச் செய்துகொள்க. அதுவே ஒருவன் செய்ய வேண்டிய தலைமைத் தொழில்.

---

## மிருகங்களும் பக்ஷிகளும்

"கொல்லா விரதம் குவலயமெல் லாமோங்கி
எல்லார்க்கும் சொல்வதென் இச்சை பராபரமே"
—தாயுமானவர்.

லௌகிக விஷயங்களில் மஹா நிபுணரும், சிறந்த வேதாந்தப் பயிற்சியுடையவருமாகிய என் நண்பரொருவர் (அவருக்கு "கோபாலப் பிள்ளை" என்ற புனை பெயர் சூட்டுகிறேன்) இன்று பகல் நேரத்தில் என்னிடம் வந்து சம்பாஷணை செய்துகொண்டிருந்தார்.

அவர் என்னிடம் சொன்னார்:— "நீங்கள் பத்திரிகைக்கு விஷயங்கள் எழுதுவதில், எந்த வகுப்பினருக்கும் மனவருத்தம் நேரிடாதபடியாக எழுதுவதே நன்று. "இன் சொலால் அன்றி இரு நீர் வியனுலகம் வன்சொலால் என்றும் மகிழாதே." பிறருக்குக் கோபம் ஏற்படாத வகையில் எவ்வளவோ எழுத இட மிருக்கிறது. உலகத்தைச் சீர்திருத்தவேண்டுமென்பதும், உலகத்தாருக்கு உங்களால் இயன்றவரை நன்மை செய்ய வேண்டுமென்பதுமே, நீங்கள் பத்திரி

கைக்கு வியாசங்கள் எழுதுவதின் நோக்கம். அந்த நோக்கம் விரைவில் நிறைவேற வேண்டுமானால், நம்முடைய கொள்கைகளைச் சிறிதேனும் கோபமில்லாமலும், ஆத்திரப்படாமலும், பிறர் யாவரேயாயினும் அவர் மனம் சிறிதேனும் நோவாமலும், முற்றிலும் இன் சொற்களால் எழுதுவதே சிறந்த வழியாகும்'' என்றார்.

இது கேட்டு நான்,— ''மிகவும் நன்றாகச் சொன்னீர்கள். இதுவே என் சொந்த அபிப்பிராயமும். ஆனாலும், ஸ்திரீகளின் நிலைமை, கீழ்ச் சாதியாரின் நிலைமை, ஏழைகளின் நிலைமை, மிருக பக்ஷிகளின் நிலைமை—இவற்றைக் குறித்து எழுதும்போது, மேற்படி மாதர் முதலான எளிய வகுப்பினருக்குச் சிறிதேனும் ஈரம்இரக்கமின்றிக் கொடுமைகள் செய்யும் மக்களின்மீது சில சமயங்களில் என்னையும் மீறி எனக்குக் கோபம் பிறந்துவிடுகிறது. ஆனால், இந்தக் கோபத்தையும் கூடிய சீக்கிரத்தில் முயற்சிபண்ணி அடக்கி விடுகிறேன். நீங்கள் சொன்ன விதியையே எப்போதும் பரிபூரணமாக அனுஷ்டிக்க முயலுகின்றேன். ஏனென்றால், கோபச் சொற்கள் நமது நோக்கத்தின் நிறைவேறுதலுக்கே, நீங்கள் குறிப்பிட்டவாறு, தடையாகி முடிகின்றன. ஆடு மாடு தின்போரை நாம் வாய்க்கு வந்தபடி வைதால், அதினின்றும் அவர்களுக்கு நம்மீது கோபம் அதிகப்படுமே யொழிய, அவர்கள் மாம்ஸ பக்ஷணத்தை நிறுத்த வழி யுண்டா

காது. தக்க நியாயங்கள் காட்டுவதும் அவர்களுடைய காருண்யத்தை நாம் கெஞ்சுவதுமே மனிதர் நாம் சொல்லும் கக்ஷியை அங்கீகரிக்கும்படி செய்யும் உபாயங்களாம்'' என்றேன்.

அப்போது என் நண்பர்:— "மிருகங்களைக் கொன்று தின்னும் அநியாயத்தை நினைக்கும்போது, எனக்கும் அடக்கமுடியாத வயிற்றெரிச்சல் உண்டாகத் தான் செய்கிறது. அவற்றை வெட்டும்போது, நீங்கள் நேரில் பார்த்திருக்கிறீர்களா? ஆட்டை வெட்டப்போகும் ஸமயத்தில், அது தலையை அங்குமிங்கும் அசைத்துவிட்டால் வெட்டு சரியாக விழாதென்பதை உத்தேசித்து, அதன் வாய்க்கெதிரே பச்சைக் குழையைக் காட்டுகின்றார்கள். அது குழையைத் தின்பதற்காக முகத்தை நேரே நீட்டும் சமயத்தில் திடீரென்று ஒரே வெட்டு வெட்டி அதன் தலையைத் துண்டித்துவிடுகிறார்கள். அங்ஙனம் வெட்டும்போது பார்த்தால், வெட்டுவோனிடம் நமக்கு மிகுந்த குரோதம் உண்டாகத்தான் செய்கிறது. அவனை க்ஷமிப்பது கஷ்டமாகத் தான் இருக்கிறது. இத்தனை சுலபமாக ஒரு ஆட்டை வெட்டிக் கொன்று தீர்த்துவிடுகிறார்கள். ஒரு ஆட்டிற்கு உயிர் அளிக்க இவர்களால் முடியுமா?

"சில தினங்களுக்கு முன்பு, சங்கரநயினார் கோயிலுக் கருகே ஒரு கிராமத்திற்குப் போயிருந்தேன். அங்கே ஒரு மாடன் கோயிலில் பெரிய ஜனத்திரள் கூடி பூசைபோட்டுக்கொண்டிருந்தார்கள். அந்த

மாடசாமி யார் தெரியுமோ? அந்த கிராமத்தில் பல வருஷங்களின் முன்னே ஒரு மறவன் இருந்தானும். அவன் கொலை களவு முதலிய செயல்களில் மிகுந்த வீரனாகவும் ஏழை எளியோர் மீது மாத்திரம் கிருபை யுடையவனாகவும் இருந்தானும். அவன் செத்த பின், அவனை அந்த இடத்தில் ஸமாதிவைத்து, அந்த ஸமாதி யில் ஓர் கோயில் கட்டி, அந்த மறவனையே மாடசாமி யாகச் செய்து, அந்தப் பக்கத்துக் கிராமத்தார் கும் பிட்டு வருகிறார்கள். அந்தக் கோயிலில் வேடிக்கை பார்க்கும் பொருட்டாக நான் சில சிநேகிதர்களுடன் போயிருந்தேன். அங்கே இருநூறு, முந்நூறு கழு மரங்கள் நாட்டி அவற்றில் ஆடுகளைக் கோத்து வைத் திருக்கிறார்கள். அந்த ஆடுகள் கழுமரங்களில் குற்றுயி ராகத் துடித்துக் கொண்டிருக்கையிலே நான் பார்க்க வில்லை. அப்போது பார்த்தால் என் மனம் என்ன பாடுபட்டிருக்குமோ, அறியேன். அவை செத்துப் போய் இரத்தமும் நிணமும் ஒழுகிக்கொண்டிருக்கை யிலே நான் பார்த்தேன். அந்தக் காட்சியை நினைக் கும் போது, இப்போதும் என் உடம்பெல்லாம் புல் லரிக்கிறது. ஆஹா! என்ன கொடும்பாவம்! என்ன மஹாபாதகம்!" என்று கூறி, என் நண்பராகிய கோபாலபிள்ளை மிகவும் பரிதாபப்பட்டார்.

அப்போது நான் சொன்னேன்:— "சில தினங் களின் முன்பு பாரஸீகத்தின் பொம்மை ராஜாவாகிய ஷா சக்கரவர்த்தி பாக்தாது நகரத்திற்குத் திரும்பி வந்

தாராம். அதாவது, அவர் ஐரோப்பாவில் சுற்றுப் பிரயாணம் பண்ணிவிட்டுத் தம் தேசத்திற்கு வருகையிலே பாக்தாது நகரத்திற்கு விஜயம் பண்ணினாராம். அப்போது, அவருடைய வரவை அலங்கரிக்கும் பொருட்டாக பாக்தாது நகரத்தில் 80 ஆடோ 100 ஆடோ வெட்டப்பட்டதாக சுதேசமித்திரன் பத்திரிகையில் தந்தி சமாசாரம் வந்திருந்தது. அதைப் படித்தபோது என் வயிற்றில் நெருப்புப் பந்தம் விழுந்தது போலிருந்தது. ஆனால், நமது தேசத்து சில்லரைத் தெய்வங்களின் கோயில்களிலே பூஜை தோறும், சில இடங்களில் 1000 ஆடு 10,000 ஆடு வீதம்கூட வெட்டுப்படுவதை நினைக்கும்போது எனக்கு அடக்க முடியாத கோபமுண்டாகிறது.

"திருநெல்வேலிக்கருகே குரங்கிணியம்மன் கோயில் என்று ஒரு கோயில் இருக்கிறது. அங்கு வருஷோத்ஸவ காலங்களில் கணக்கில்லாத ஆடுகள் வெட்டுப்படும் என்று கேள்விப்படுகிறேன்.

"இதேமாதிரி சென்னைப் பட்டணத்திற்கருகே ஒரு கிராமத்தில் ஒரு அம்மன் கோயில் இருக்கிறது. இன்னும் நாடு முழுமையிலும் இம் மாதிரியான கோயில்கள் எத்தனையோ இருக்கின்றன. இவற்றில் நடக்கும் கொலைகளைத் தடுக்கும்படி அந்தக் கோயில் தர்மகர்த்தாக்களையும் பொதுஜனத் தலைவர்களையும் காலில் விழுந்து கேட்டுக்கொள்வதாகப் பத்திரிகைக்கு எழுதப்போகிறேன். 'கோபச்சொற்கள் சொல்வதிலும்

வைவதிலும் கார்யம் இல்லை' என்று நீங்கள் சொல்லு கிறீர்களே? நாம் என்ன செய்வோம்?" என்றேன்.

இங்ஙனம் நெடுநேரம் ஜீவநாசத்தின் அநியாயத்தையும் அதனால் மனிதருக்குண்டாகும் எண்ணற்ற பாவங்களையும் அவற்றால் உண்டாகும் நோய் சாவுகளையும் குறித்துப் பேசிக்கொண்டிருந்தோம். அந்த சம்பாஷணை முழுவதையும் இங்கு எழுத இடமில்லை. எனினும், நான் கோபாலபிள்ளையிடம் வாக்குக் கொடுத்தபடியே இங்கு வேண்டுதல் செய்கிறேன்: "தமிழ் நாட்டு ஜனத் தலைவர்களே, உங்கள் காலில் வீழ்ந்து கோடி தரம் நமஸ்காரம் செய்கிறேன். மாம்ஸ பக்ஷணத்தை நிறுத்துவதற்கு வழி செய்யுங்கள்."

---

## ஏன்?

### குழு

'குழு' என்ற பழைய தமிழ்ச் சொல்லுக்குக் 'கூட்டம்' என்று அர்த்தம். இப்போது மஹாஸபை என்று சொல்வதைப் பழைய தமிழர் குழு என்றனர். தமிழரசர் காலத்தில் ஐந்து குழுக்கள் உண்டு:—(1) குடிகள் குழு, (2) குருக்கள் குழு, (3) ஜோதிடர் குழு, (4) வைத்தியர் குழு, (5) மந்திரிகள் குழு.

ராஜா செய்யும் விதிகள் இந்த ஐந்து குழுக்களின் அனுமதிபெற்ற பிறகுதான் உறுதிப்படும். குடிகளின் குழுவிலே ஜனங்களின் பிரதிநிதிகள் இருந்தனர்.

குருக்கள் ஸபையிலே மதத்தலைவரும், சோதிடர் ஸபையிலே கணிதக்காரரும் இருந்து அரசியலானது சாஸ்த்ரக் கருத்தையும், ஜனசாரங்களையும் தழுவி நடக்கும்படி ஆலோசனை சொல்லினர். வைத்தியர்குழு நாட்டிலே நோய்கள் பரவாதபடி அரசன் செய்ய வேண்டிய சுத்தி முறைகளைக் கவனிப்பது. மந்திரிகளின் குழு அரசியலின் மூலதர்மங்களிலே தவறு நேரிடாமல் அரசனை நியாயவழியில் நடத்துவது. இந்த விஷயமெல்லாம் நமது நாட்டுப் பழைய சாஸனங்களை ஆராய்ச்சி செய்யும் புராதன பரிசோதனைப் பண்டிதர்கள் கண்டுபிடித்துச் சொல்லியிருக்கிறார்கள். மணிமேகலை முதலிய பழைய நூல்களிலும் காணலாம். இது நிற்க, 'ஜனங்களுடைய ஸம்மதப்படி ஆட்சி செய்யவேண்டும்' என்ற கருத்துடன் ஏற்படும் ஸபைகள் இங்கிலாந்து முதலிய தேசங்களில் நாளுக்குநாள் நாகரிகமும் சீர்திருத்தமும் பெற்று மேன்மேலும் அதிக வலிமையுடன் ஏறி வந்திருப்பதாகச் சரித்திரங்களிலே தெரிகிறது. நமது நாட்டில் இவை விருத்தியடையவில்லை. ஏன்? எதனாலே?

---

## நகரம்

வால்ட் விட்மான் என்பவர் சமீபகாலத்தில் வாழ்ந்த அமெரிக்கா (யுனைட்டெட் ஸ்டேட்ஸ்) தேசத்துக் கவி. இவருடைய பாட்டில் ஒரு புதுமை என்னவென்றால், அது வசன நடைபோலே தான் இருக்

கும். எதுகை, மோனை, தளை ஒன்றுமே கிடையாது. எதுகை மோனை யில்லாத கவிதை தான் உலகத்திலே பெரிய பாஷைகளில் பெரும் பகுதியாகும். ஆனால், தளையும் சந்தமும் இல்லாத கவிதை வழக்க மில்லை. வால்ட் விட்மான், 'கவிதையைப் பொருளில் காட்ட வேண்டுமே யல்லாது சொல்லடுக்கில் காட்டுவது பிரயோஜனமில்லை' யென்று கருதி ஆழ்ந்த ஓசை மாத்திரம் உடையதாய் மற்றப்படி வசனமாகவே எழுதி விட்டார். இவரை ஐரோப்பியர் காளிதாஸன், கம்பன், ஷேக்ஸ்பியர், மில்டன், தாந்தே, கெத்தே முதலிய மகாகவிகளுக்கு ஸமான பதவி யுடையவராக மதிக்கிறார்கள்.

குடியாட்சி, ஜனாதிகாரம் என்ற கொள்கைக்கு மந்திர ரிஷிகளில் ஒருவராக இந்த வால்ட் விட்மானை ஐரோப்பிய ஜாதியார் நினைக்கிறார்கள்.

எல்லா மனிதரும், ஆணும் பெண்ணும் குழந்தைகளும், எல்லாரும் ஸமானம் என்ற ஸத்யத்தை பறையடித்த மஹான்களில் இவர் தலைமையானவர்.

ஸர்வ ஜகத்தும் ஒரே சக்தியை உயிராக உடையது. ஆதலால், எல்லாம் ஒன்று. ஆதலால் பயத்தை விடு. பிறருக்குத் தீங்கு செய்யாதே. மற்றப்படி யெல்லாம், உன் சொந்த இஷ்டப்படி நடந்துகொள். எல்லாரும் ஸமானம். யாருக்கும் பயப்படாதே. கடவுள் ஒருவருக்கே பயப்படவேண்டும். மனிதர் கடவுளைத்

தவிர வேறென்றுக்கும் பயப்படக்கூடாது. இது தான் அவருடைய மதத்தின் முக்கியமான கொள்கை. 'எல்லாரும் பரஸ்பரம் அன்பு செய்யுங்கள்' என்ற கிறிஸ்துவின் போதனையை அவர் கவிதையாகப் பல வகைகளில் சொல்லியிருக்கிறார். இந்த மஹான் ஒரு நகரம் கற்பனை பண்ணுகிறார். அந்த நகரத்தில் ஆணும் பெண்ணும் சபதத்தில் துஞ்சார். அங்கே, அடிமையில்லை, ஆண்டையுமில்லை. அங்கே, ஸ்தானிகர் களின் மூடிவற்ற செருக்கைப் பொதுஜனம் உடனே சினந்து எதிர்க்கிறது. அங்கே, நகரத்தான் தலை, நக ரத்தான் பிரமாணம்; அவனுடைய சம்பளக்காரரே பிரஸிடெண்டு, மேயர், கவர்னர் எல்லாரும். அங்கே, குழந்தைகள் தமக்குத் தாமே பதி செய்துகொள்ளவும், தம்மைத் தாமே காத்துக்கொள்ளவும் பயிற்சி பெறு கிறார்கள். அங்கே, பெண்கள் வீதிகளில் ஆண்களைப் போலவே கூட்டங் கூடி ஊர்வலம் வருகிறார்கள். அங்கே, பொதுக் கட்டடங்களில் பெண்கள் ஆண் களுக்கு நிகரான இடம் பெறுகிறார்கள்.

இவ்வாறு வால்ட் விட்மான் கற்பனை பண்ணின நகரத்தை கண் முன்னே பார்க்க வேண்டும் என்ற நோக்கத்துடன் ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் இப்போது கூடப் பல ராஜ்யதந்திரிகளும் மந்திரிகளும் சாஸ்திரிகளும் முயற்சி செய்துகொண்டு வருகிறார்கள்.

பணக்காரன், ஏழை; உத்யோகஸ்தன், கூலிக்கா ரன்; குடி, படை; ஆண், பெண்; மூத்தது, இளையது—

எல்லாரும் ஒருவர்க்கொருவர் வஞ்சனை, துரோகம், அநியாயம், கொள்ளை, கர்வம், ஹிம்சை, அவமதிப்பு, கொலை முதலிய தீமைகள் செய்யாமல், பரஸ்பரம் அன்புடனும் மதிப்புடனும் நடந்து, எல்லாருக்கும் விடுதலையும் ஸமத்வமும் உள்ளதாகிய நகரம் கண் முன்னே தோன்றுவதை விரும்பாத மனிதனும் உண்டோ?

---

## அனந்த சக்தி

எறும்பு இறந்துபோன புழுவை இழுத்துச் செல்லுகிறது; எதனால்? சக்தியினால். தூமகேது அநேக லட்சம் யோசனை தூரமான தனது வாலை இழுத்துக் கொண்டு திசைவெளியில் மஹா வேகத்தோடு சுழலுகின்றது; எதனால்? சக்தியினால். அந்த தூமகேது எழுபத்தைந்து வருஷத்தில் ஒரு மண்டலமாகத் தன்னைச் சுற்றிவரும்படி சூரிய கோளம் நியமிக்கிறது; எதனால்? சக்தியினால்.

ஓர் கன்னிகை பாடுகிறாள். நெப்போலியன் ஐரோப்பாக் கண்டம் முழுமையும் வெல்கிறான். இவை இரண்டிற்கும் சக்தியே ஆதாரம். கண்ணுக்குப் புலப்படுவதும், ஊக்கத்திற்குப் புலப்படுவதுமாகிய வெளியுலகங் கூட எல்லையற்றதென்று பண்டிதர்கள் கண்டிருக்கிறார்கள். இந்த எல்லையற்ற உலகத்தை இயக்கும் சக்தி தானும் எல்லையற்றதாகும்,

ஆநந்தமானது, அதனிலும் பெரிது. இவ்வித சக்தியை மனிதன் பாவனை செய்வதால் பலவிதப் பயன்களுண்டு. "யத்பாவயஸி தத் பவஸி." எதனைப் பாவிக்கிறாயோ நீ அதுவாக ஆகின்றாய்.

ஆனால், இங்ஙனம் பாவனை செய்வது லேசான காரியமென்று நினைத்துவிடலாகாது. உயிர் ததும்பியதும் கனல்வதுமான சிரத்தையுடன் பாவனை செய்ய வேண்டும். பொறி பறக்கும் பக்தியுடன் தியானம் செய்யவேண்டும். இதனை வீண் கதையென்று நினைத்துவிடவேண்டாம். விடாமல் அனுஷ்டானம் செய்து பார்த்தால் இதன் பயன் தெரியும்.

ஞானிகளென்றும் யோகிகளென்றும் சொல்லப்படுவோர், இந்த சக்தியை, மனதறிந்து சில முறைகளை அனுஷ்டித்துப் பெறுகிறார்கள். ஸாமான்ய ஜனங்கள் விஷயம் தெரியாமல் இயற்கை முறையிலே சிறிது பெற்றவர்களாகின்றனர். சக்தி சிறிதும் இல்லாவிட்டால், ஒருவன் க்ஷண நேரங்கூட மூச்சு விட்டுக்கொண்டு இவ் வுலகத்தில் இருக்க முடியாது. வெளிக்காற்றிலே உலவி அத்துடன் யோகப்படுவதால் சக்தியுண்டாகிறது. சரீரத்தை உழைப்புக்கு உட்படுத்துவதால் இடைவெளியெங்கும் ததும்பிக் கிடக்கும் சக்தி அதனுள்ளே குடிகொள்ளுகிறது. அறிவைப் பல விஷயங்களிலே சிரத்தையுடன் செலுத்தி உழைப்பதனால் சக்தி யுண்டாகிறது. இங்ஙனம் சிறிது சிறிது ஏற்படும் சக்தியினாலேயேதான் உலகத்தில் மனிதர்கள் ஜீவித்திருக்கிறார்கள்.

தமிழ் ஜனங்களுக்குள் சக்தி மேன்மேலும் பெருகச் செய்ய வேண்டுமென்பது நமது நோக்கம். இந்த நோக்கத்தை நிறைவேற்றும் பொருட்டாகவே நாம் உயிர் தரிக்கின்றோம். 'மாதா இந்த நாட்டு ஜனங்களுக்குச் சக்தி யதிகரிக்கும்படி செய்க; அக் காரியத்தை நிறைவேற்றுதற்குரிய சக்தியை எனக் கருள் புரிக' என்று நம்மில் ஒவ்வொருவனும் தியானம் புரிய வேண்டும். ஆட்டம் ஆடுதல், கூத்து முதலியவை மற்போர் முதலியவற்றிலே பழகுதல், பாடுதல், தர்க்கம், வாதம், தவம், பிரம்மசரியம், சுத்தம் முதலியவற்றால் ஓர் ஜாதிக்குச் சக்தி அதிகப்படுகிறது. மனம், வாக்கு, செயல் மூன்றும் சுத்தமாக இருக்க வேண்டும். உள்ளும் புறமும் மாசில்லாது செய்யப் பழகவேண்டும். பயம், ஸந்தேஹம், சலனம் மூன்றையும் வெறுக்கவேண்டும். இதனால் சக்தி யேற்படும்.

புராதன ஸம்பிரதாய மென்பதால் மட்டுமே ஒன்று பொய்யாய்விட மாட்டாது; புதிய தென்பதால் மாத்திரமே ஒன்றை மெய்யாகக் கொண்டு விடுதலும் பிழை. ஆராய்ந்து, அனுபவத்தால் பார்க்குமிடத்தே தான், ஒரு விஷயத்தின் மெய்ம்மையும் பொய்ம்மையும் விளங்கும். நமது முன்னோர்கள் "யோகம்" என்றதோர் மார்க்கம் ஏற்படுத்தி யிருக்கிறார்கள். இஃது ஹடயோகம், ராஜயோகம், பக்தியோகம், ஞானயோகம் என நான்கு வகைப்படும். இவற்றில் ஹடயோகந் தான் மிகக் குறைந்த பயன் தரக்கூடியது; மற்ற மூன்றிலும் அனந்த சக்திகள் பெறலாம். விஷயம்

தெரியுமுன்பாக, 'இதில் பயனென்ன விளையப் போகிறது' என்று சந்தேகப்படுதல் தெளிந்தோர் செய்யும் காரியமன்று. அவற்றை ஆராய்ச்சி செய்து பார்க்கவேண்டும். அங்ஙனம்சாதனைசெய்தவர்களுக்குப் பலவித அபூர்வ சக்திகளுண்டாயிருப்பதைக் கண்ணூ ரக் காண்கிறோம். நமக்கும் ஏன் இந்த சக்திகள் ஏற்ப டக்கூடாது? இந்த மூடத் தமோ குணத்தால் என்ன சுகங்கள் கண்டு விட்டோம்? சோம்பராலும் அற்ப விஷயங்களிலே ஆசை கொண்டு மனதைக் கடலில் அகப்பட்ட துரும்புபோலச் சலிக்க விடுவதாலும் என்ன பேறுகள் பெற்று விட்டோம்?

துணிவு, உள்ளத் தூய்மை, ஏதாவதொரு மகத்தான லட்சியத்திலே அறிவை ஆணி கொண்டடித்தது போலப் பற்றுறச் செய்து கொள்ளுதல், லாப நஷ்டங்களிலே சிந்தனை இல்லாமை—இவைதான் யோகத்தின் இரகசியம்.

---

## ஓநாயும் வீட்டுநாயும்

தென் இந்தியாவிலுள்ள மன்னார் கடற்கரையையடுத்த ஒரு பெருங்காடு இருக்கிறது. அக் காட்டிற்கும் அதைச் சுற்றியிருந்த அநேக கிராமங்களுக்கும் அதிபதியாய் ஒரு பாளையக்காரர் இருந்தார். அவர் பெயர் உக்கிரசேனப் பாண்டியன். அவர் யுத்தப் பிரியர். அவர் புலி, கரடி, யானை, சிம்மம் முதலான

காட்டு மிருகங்களை வேட்டையாடுவதில் சமர்த்தர். பலவகையான வேட்டை நாய்கள் அவரிடத்தில் இருந்தன. அதிகாலையில் ஒரு நாள் அவர் வேட்டைக்குப் புறப்பட்டார். தான் மிகுந்த அன்பு பாராட்டி வளர்த்துவந்த 'பகதூர்' என்ற ஒரு நாயைத் தன் கூடக் கூட்டிக்கொண்டு சென்றார். அந்த நாயானது வெகுகாலமாய்க் காட்டிலே இருந்தபடியால் அந்தக் காட்டில் யதேச்சையாய்ச் சுற்றித்திரிய சமயம் வாய்த்தவுடனே ஆனந்தபரவசப் பட்டு கண்கண்ட விடத்திற்கெல்லாம் ஓடியது.

'பகதூர்' பார்வைக்கு அழகாய் இருந்தது. மிகுந்த சதைக் கொழுப்பு அதற்குண்டு. அதன் உடம்பு தினந்தோறும் கழுவப்பட்டு வந்ததால் தளதளப்பாய் இருந்தது. அக் காட்டில் ஓநாய்கள் விசேஷமாய் இருந்தன. ஓநாய் வேட்டை தன் அந்தஸ்துக்குத் தகாதென்பது உக்கிரசேனனுடைய கொள்கை. அக் காரணத்தாலேதான் அந்த ஆரண்யத்தில் ஓநாய்கள் நிர்ப்பயமாய் சஞ்சரித்தன. அன்று ஒரு ஓநாய் தன் வழியில் குறுக்கிட்ட 'பகதூரை'ப் பார்த்து அதிசயப்பட்டு அத்துடன் சம்பாஷிக்க விருப்பங் கொண்டது.

ஓநாய்:— ஹே ஸஹோதரா, நான் உன்னைச் சில கேள்விகள் கேட்க ஆசைப்படுகிறேன். எனக்குத் தயவு செய்து விடைகள் அளிப்பாயா?

வீட்டுநாய்:— அடா ஓநாயே, நாம் நம்முடைய அந்தஸ்துக்குக் குறைவான எந்த நாயோடும் ஸ்நேஹம்

பாராட்டுவதில்லை. ஆயினும், உன்மேல் நம்மை யறியாமலே நமக்குப் பிரீதி ஏற்படுகிறபடியால் நீ கேட்கும் கேள்விகளுக்கு ஜவாப் சொல்ல ஸம்மதித்தோம்.

ஓநாய்:— ஐயா, உம்முடைய அந்தஸ்தென்ன? நீ வசிக்கும் இடம் எங்கே? இக் காட்டிற்கு வந்த காரணமென்ன? உமக்கு இவ்வளவு சுகமான வாழ்க்கை எங்ஙனம் ஏற்பட்டது?

வீட்டுநாய்:— நாம் உக்கிரசேன பாண்டியனிடத்தில் இருக்கிறோம். அவர் நமக்கு ராஜோபசாரஞ் செய்து வருகிறார். நமக்கும் அவரிடத்தில் பக்தியுண்டு. நம்மை அவர் மற்றெந்த நாய்களைக்காட்டிலும் மேலாக மதித்து வருகிறார்.

ஓநாய்:— அண்ணா, என் வாழ்க்கையும் ஒரு வாழ்க்கையா? காற்றிலும், மழையிலும், வெயிலிலும் அலைந்து திரிந்து கஷ்டப்பட்டு இரை தேடவேண்டியிருக்கிறது. பசியின் கொடுமையைச் சகிக்க முடியாததாய் இருக்கிறது.

வீட்டுநாய்:— தம்பி, உன்னுடைய ஊழ்வினைப் பயனை நீயே அனுபவித்துத் தீரவேண்டும். பூர்வ ஜன்மத்தில் செய்த புண்ணியத்தின் பயனாய் நமக்கு இப்போது இந்தப் பதவி கிடைத்தது.

ஓநாய்:— நாயாரே, நானும் உக்கிரசேனனுடைய வீட்டை நாடி வரலாமா? சுகதுக்கங்களை சமரசமாய்

இருந்தால் மாத்திரமே இவ்வுலக வாழ்வு சகிக்கத் தக்கது. என்னுடைய கஷ்ட காலத்திற்கும் ஓர் வரை வேண்டும்.

வீட்டுநாய்:— நல்லதப்பா, என்கூட வா.

இருவரும் சம்பாஷித்துக்கொண்டே வழி நடந்தார்கள். திடீரென்று ஓநாய்க்கு ஒரு சமுசயம் தோன்றிற்று. பகதூரின் கழுத்தைச் சுற்றி ஒரு அகலமான தழும்பு இருந்தது. ஓநாய் அதைப் பார்த்தவுடன் ஒரு கேள்வி கேட்டது.

ஓநாய்:— பகதூர், உமது கழுத்தில் அவ்வளவு பெரிய தடம் படக் காரணமென்ன ?

பகதூர் (வீட்டுநாய்):— ஓ, அது ஒன்றுமில்லை, எனக்குக் கழுத்தில் தங்கப்பட்டை போட்டிருந்தது. அதன் தடம் தெரியலாம்.

ஓநாய்:— அந்தப் பொன் பதக்கம் எங்கே ? நீர் ஏன் அதை போட்டுக்கொண்டு வரவில்லை ?

பகதூர்:— என்னை வெள்ளிச் சங்கிலியால் கட்டும் பொழுது தான் அதை என் கழுத்தில் போடுவார்கள்.

ஓநாய்:- உம்மை ஏன் கட்ட வேண்டும், யார் கட்டுகிறார்கள் ?

பகதூர்:— என்னுடைய எஜமானன் என்னைக் கட்டுவார். அவரைப் பார்க்க வரும் மனிதர்கள் என்னைக் கண்டு அஞ்சாதிருக்கும்படி என்னைக் கட்டி வைப்பார்கள்.

ஓநாய்:— தூ! பிரஷ்டப் பயலே! என்னை நீ ஏமாற்றப் பார்த்தாய், உன் பிழைப்பும் ஒரு பிழைப்பா? நீ ஒரு அடிமையாய் இருந்தும் மெத்த ஜம்பமாய்ப் பேசினாய்; நான் சுதந்திரப் பிரியன். எனக்கு ஏஜமானனும் இல்லை, சங்கிலியும் இல்லை. கஷ்ட வாழ்வாய் இருப்பினும் நான் சர்வ சுதந்திரன். யதேச்சையாய் எங்கும் செல்வேன், எதையும் தின்பேன், எதையும் சொல்வேன், எவரோடும் சேர்வேன். பராதீனம் பிராண சங்கடம்; ஒருவருடைய ஆக்கினைப்படி வரவோ போகவோ, உண்ணவோ உறங்கவோ மலம் ஜலம் கழிக்கவோ சம்மதித்து இருப்பவன் மகா நீசனாய் இருக்க வேண்டும்.

இவ் வார்த்தைகளைக் கேட்ட பகதூர் வெட்கமடைந்து திரும்பிப் பாராமல் ஓடிப்போய்விட்டது.

---

## ஸ்வர்ண குமாரி

### அத்தியாயம் 1.

பெங்காளம் என்று கூறப்படும் வங்க தேசத்திலே, சாந்த்பூர் (சாந்திபுரம்) என்ற கிராமத்தில் மனோரஞ்சன பானர்ஜி என்ற ஒரு பிராமண வாலிபன் உண்டு. இவன் கல்கத்தா போய் பி. ஏ. பரீட்சைக்குப்படித்துக்கொண்டிருக்கையில், 1904-ஆம் வருஷம் டிசம்பர் மாதம் ரஜாவின் பொருட்டாகத் தனது சொந்த ஊராகிய சாந்த்பூருக்கு வந்திருந்தான்.

மனோரஞ்சன் வெகு சுந்தரமான ரூபமுடையவன். பார்ப்பதற்கு மன்மதனைப் போலிருப்பான். மேலும் குழந்தைப் பிராயம் முதலாகவே பள்ளிக்கூடத்துப் பந்தாட்டம் முதலிய விளையாட்டுகளிலேயும், மற்றும் சிலம்பம் கர்லா முதலிய சுதேசிய தேகாப்பியாசங்களிலேயும் இவன் மிகுந்த தேர்ச்சி உடையவனாகி, தன்னோடு ஒத்த வாலிபர்கள் எல்லாராலும் 'அர்ஜுனன்' என்று அழைக்கப்பட்டு வந்தான்.

வயது இருபத்தி மூன்று ஆயிருந்தபோதிலும், என்ன காரணத்தாலோ இன்னும் விவாகம் நடக்காமல் இருந்தது. பெங்காளத்தார் மிகுந்த சொற்ப வயதிலேயே விவாகாதிகள் நடத்திவிடுவது முறைமை. இவன் விஷயத்தில் மட்டும் இவ்வாறு நடக்கவில்லை. இதற்கு வேறு ஒரு உள் முகாந்திரமும் உண்டு. மனோரஞ்சனுடைய தந்தை உயிரோடிருந்திருக்கும் பக்ஷத்தில், இவனை இதற்கு முன் விவாகம் செய்து கொள்ளும்படி வற்புறுத்தியிருப்பார். ஆனால், இவனுக்கு ஏழு வயதாக இருக்கும்பொழுதே, தந்தை இறந்து போய்விட்டார். தாய்க்கு இவன் ஒரே பிள்ளையாதலால், இவன் மீது மிகுந்த அருமை கொண்டவளாகி, வீட்டில் இவன் சொன்னதற்கு மாறு சொல்லாமல் காரியங்கள் நடந்து வந்தன. இந்தக் குடும்பத்திற்கு அதிக ஆஸ்தி இல்லாவிட்டாலும், 'உள்ள நிலத்தை விற்று, பணம் எடுத்துக்கொண்டு தான் கல்கத்தாவுக்குப் போய்ப் பரீட்சைகள் தேறி வரவேண்டும்' என்று இவன் சொன்னவுடனேயே, யாதொரு ஆட்சேபமும்

சொல்லாமல், 'சரி' என்று சம்மதித்துவிட்டாள். இதுபோலவே தான் எல்லா விஷயங்களிலும்.

அடிக்கடி இவனுடைய தாய், இவனைக் கூப்பிட்டு "குழந்தாய் ரஞ்சன்! உனக்கு வயதாய் விட்டதே, விவாகம் எப்போடா செய்துகொள்வாய்?" என்று கேட்டால், இவன் முரட்டுத்தனமாக, "அம்மா, அந்தப் பேச்சை மட்டிலும் என்னிடம் பேசாதே" என்று சொல்லிவிட்டு, வெளியே போய்விடுவான்.

அந்தரங்கத்திலே இவன் வடக்கு வீதி ஸூர்ய காந்த பாபு என்ற பெருஞ் செல்வரின் குமாரத்தியான ஸ்வர்ண குமாரியின் மீது மோகம் வைத்திருக்கிறானென்ற விஷயத்தைத் தாயார் நன்றாக அறிவாள். ஆனால், இவனுக்கும் ஸ்வர்ண குமாரிக்கும் ஒருபோதும் விவாஹம் நடப்பது சாத்தியமில்லையென்பது அவளுக்கு நிச்சயந்தான். அப்படி ஒரு வேளை அந்த விவாகம் நடப்பது ஸாத்தியமாகக் கூடுமானால், அதை இவள் கேட்ட மாத்திரத்திலே இவளுக்குப் பிராணன் போய்விடும். தனது மகன் ஸூர்யகாந்த பாபுவின் பெண்ணை விவாகம் செய்து கொள்வதைக் காட்டிலும் அப்பிள்ளை இறந்து போவது விசேஷமென்று அவளுக்குத் தோன்றும். தனது குலதெய்வமான ஸ்ரீ கிருஷ்ண பகவானை தியானித்து இவள், "ஸர்வஜீவ தயாபரா! எனது பிள்ளைக்கு அந்த மிலேச்சனுடைய பெண்மீது இருக்கும் மோகத்தை நீக்கி, அவனுக்கு நல்ல புத்தி கொடுக்கலாகாதா?" என்று அடிக்கடி கண்ணீர் சொரிந்து பிரார்த்தனை புரிவாள்.

## அத்தியாயம் 2.

ஸ்வர்ண குமாரியை மனோரஞ்சனன் மணம் புரிந்து கொள்வதிலே, மனோரஞ்சனனுடைய தாயாருக்கு இத்தனை விரோதம் ஏன் இருக்கவேண்டுமென்பதை, நமது கதாப் பிரியர்கள் அறிய ஆவலுறலாம். அதன் காரணம் பின்வருமாறு:— ஸ்வர்ண குமாரியின் தந்தையாகிய ஸூர்யகாந்த பாபு பிராமண குலத்திலே பிறந்த போதிலும், பிராமண ஆசாரங்களையும் அனுஷ்டானங்களையும் மார்க்க முறைகளையும் நம்பிக்கைகளையும் திலதர்ப்பணம் செய்துவிட்டு, "பிரம ஸமாஜம்" என்ற புதிய மார்க்கத்தைச் சேர்ந்து கொண்டுவிட்டார். இந்த ஸமாஜத்தார் "ஜாதி பேதம் இல்லை, விக்ரஹாராதனை கூடாது, பெண்களும் ஆண்களும் சமானமாக ஒத்துப் பழகலாம்" என்பது போன்ற நவீனக் கோட்பாடுகளை கொண்டிருப்போர். ஸ்வர்ண குமாரியின் தகப்பனர் எந்த ஜாதிக்காரனுடனும் கலந்து சாப்பிடுவார். அவர்கள் வீட்டு ஸ்திரீகள் பகிரங்கமாக வெளியே உலாவுவதும், கண்ட புருஷர்களுடன் சம்பாஷிப்பதும் பிழையில்லையென்று நடப்பவர்கள். ஸ்வர்ண குமாரிக்கு வயது பதினெட்டாகியும் இன்னும் விவாகமாகவில்லை. இது எல்லாம், மிகுந்த புராதன இயற்கை கொண்ட மனோரஞ்சனின் தாயாருக்குக் காதால் கேட்கக்கூட வெறுப்பாக இருந்தது. இங்ஙனமிருக்க, ஸ்வர்ணகுமாரியின் மீது தனது மகன் அடங்காத மையல் கொண்டிருக்கிறானென்பதையும், அதன் பொருட்டாகவே வேறு விவாகத்தில் விருப்ப

யில்லா திருக்கிறானென்பதையும் இந்த அம்மை பல முகாந்தரங்கள் மூலமாக ஊஹித்தறிந்து கொண்ட நாள் முதலாக, இவள் மனதிலே தோன்றிய வருத்தங்களுக்கு அளவு கிடையாது. நிற்க.

அத்தியாயம் 3.

இங்கே ஸ்வர்ண குமாரியின் நிலை எப்படி யிருக்கிற தென்பதைக் கவனிப்போம். இவள் மனதிலே மனோரஞ்சனனுடைய வடிவம் என்றும் அகலாத சுந்தர விக்கிரகமாகப் பதிந்து போய்விட்டது. வரம்பில்லாத செல்வமுடைய குடும்பத்திலே பிறந்து, ஸங்கீதம், ஸாஹித்யம் முதலிய கலைகளிலே யெல்லாம் சிறந்த பழக்கங்கொண்டவளாகி, தனக்கு இசைவான கணவனைத் தவிர மற்றப்படி சாதாரண மனிதன் எவனையும் மணம் செய்துக்கொள்ளக் கூடாதென்று இவள் ஒரே பிடிவாதமாக யிருந்தாள். இவளுடைய ரூபலாவண்யமோ சொல்லுந் தரமன்று. கருமை நிறங்கொண்ட அமிருதத்தின் கடல்களென்று சொல்லத்தக்க இவளுடைய நேத்திரங்களும், முல்லைபோன்ற புன்சிரிப்பும், மூக்கும், கன்னமும், நெற்றியும், ஸ்வர்ணமயமான சரீரமும்—இவளை என்னென்று சொல்வோம்! சுகப் பிரம்ம ரிஷி பார்த்தபோதினும் மயங்கிப்போய் விடுவார். இவளுக்கு மனோரஞ்சனன் பாலிய சினேகன், பள்ளித் தோழன். தேவரூபனான இவனையே கடைசி வரை பள்ளித் தோழனாகவும் கொள்ளவேண்டுமென்று இவள் ஆசை கொண்டு விட்டாள். இதற்கு முன் எத்

தனையோ முறை இவர்கள் அடிக்கடி சந்திப்பதும், காதற் சுவையிற் கனிந்து நிற்பதுவும், உயிரென நோக்கி உள்ளம் வாடுவதும், பொருளிலாத் தெய்விக மொழி பல புகல்வதும் என இவ்வாறு தமது மோஹ நெருப்புக்கு நெய் ஊற்றிக் கொண்டே வந்திருக்கிறார்கள். இப்போது மனோரஞ்சனன் மறுபடியும் சாந்த் பூருக்கு வந்தவுடனே, வழக்கம் போலவே இவர்களுடைய சந்திப்புகள் தொடங்கிவிட்டன. இதை நமது ஸ்வர்ணத்தின் தந்தையாகிய ஸூர்யகாந்தபாபு அறிந்து ஒருநாள் இவளை அழைத்து,

"மகளே! நீ நான் சொன்னபடி ஹேமசந்திர பாபுவை விவாகம் செய்துகொள்ள சம்மதிக்காமலிருப்பாயானால், இனி என் வீட்டை விட்டு வெளியேறிவிட வேண்டும். கையிலே காசற்றவனும், விக்கிரகாராதனை செய்யும் மூடபக்திக் கூட்டத்தைச் சேர்ந்தவனுமாகிய அந்த மனோரஞ்சன் பயலை நீ அடிக்கடி பார்த்துப் பேசுகிறாயென்ற வார்த்தை என் காதிலே படக் கூடாது.. அடுத்த தைமாதம் உனக்கும் ஹேமசந்திர பாபுவுக்கும் விவாகம். நீ இப்போதே எனக்கு, 'ஆகட்டு'மென்ற வார்த்தை கொடுத்துத் தீரவேண்டும். நான் எத்தனையோ வருஷம் உன்னுடைய மூடத்தன்மையான பிடிவாதத்தை சகித்தாய் விட்டது. இனி ஒரு க்ஷணமும் பொறுக்கமாட்டேன். இன்று மாலை இங்கே ஹேமசந்திரர் வருவார். நீ தோட்டத்திலேயுள்ள பூஞ்

சோலையில் 6 மணிக்குப் போயிரு; அங்கே அவரை வரச் சொல்கிறேன். நீ அப்போது அவரிடம் உன்னுடைய சம்மதம் தெரிவித்தே தீரவேண்டும். இல்லாவிட்டால், உன்னைக் கையும் கப்பரையுமாய் நாளைக் காலையில் வெளியே ஓட்டிவிடுவேன்,"—என்று மஹா கோபத்துடன், பட படவென்று சொல்லி விட்டுப் போய்விட்டார். தனது மகள் கண்ணீர் மாரிக்கிடையே தரைமீது சோர்ந்து விழுந்து விட்டதைக் கூட அவர் கவனிக்கவில்லை.

## அத்தியாயம் 4.

பகல் முழுதும் ஸ்வர்ணகுமாரி தனது தந்தையின் கொடூரத்தை நினைத்து நினைத்து மனம் தயங்கிக் கொண்டிருந்தாள். இவளுக்கு ஒன்றும் தோன்றவில்லை. இதுபோன்ற சமயங்களிலே தாய் இருக்கும் பட்சத்திலே, எவ்வளவோ தைரியம் சொல்வாள். ஆனால் நமது ஸ்வர்ணத்திற்கோ தாயார் அதி பாலியத்திலே இறந்துபோய்விட்டாள். வீட்டிலுள்ள ஸ்திரீகளெல்லாம் தூர பந்துக்களே யல்லாமல், இவள் தன் மனதை யெல்லாம் சொல்லி முறையிடக்கூடியவாறு அத்தனை நெருங்கிய நட்புடையோர் யாரும் கிடையாது. தனியே நெடுநேரம் யோசித்து யோசித்து, இவள் பின் வருமாறு நிச்சயம் செய்து கொண்டாள்:-

"தந்தையோ இரும்பு நெஞ்சுடையவர். மனோரஞ்சனனோ தனது தாயிருக்கும் வரையில் பிரம சமா

ஜத்தில் சேரப்போவது கிடையாது. எனக்கு இந்த ஹேமசந்திரனை விவாகம் செய்துகொள்ள வேண்டு மென்றே விதி யிருக்கிறது போலும். மனோரஞ்சன னுடனே தான் வாழ்வேனென்று நான் தெய்வ சாட்சி யாய் விரதங்கொண்டாய்விட்டது. மனோரஞ்சனன் என்னை விவாகம் செய்துகொள்வதும் சாத்தியமில்லை. இனித் தந்தை வீட்டிலிருந்து பிச்சைக்காரிபோல வெளியே துரத்துண்டு, ஏன் அவமான மடையவேண் டும்? ஹேமசந்திரனையே விவாகம் செய்துகொள்வ தாக இன்று மாலை சம்மதமளித்துவிட்டு, விவாகத்திற் கென்று குறிப்பிட்டிருக்கும் நாளில் விஷத்தைத் தின்று உயிரை மடித்துக்கொள்கிறேன். இதற் கிடையே ஏதேனும் அகஸ்மாத்தாக அனுகூலம் ஏற் பட்டால், பார்த்துக்கொள்வோம். இல்லாவிட்டால் மரணமே கதி" என இவ்வாறு மனவுறுதி செய்து கொண்டு விட்டாள்.

இந்த ஹேமசந்திரன் யார்? இவன் ஒரு பணக் கார ஜமீன்தார். பிரம ஸமாஜத்தைச் சேர்ந்தவன். ஆனால், புராதன ஆசாரங்களைக் கைவிட்ட இவன் மற்ற பிரம ஸமாஜிகளைப் போல அத்துடன் நிறுத்திவிடா மல், மதுபானம், கோ மாமிச போஜனம் முதலிய புது ஆசாரங்களும் புரியப் படித்துக்கொண்டு விட் டான். பார்ப்பதற்கு எருமை போலக் கொழுத்து, வெகு குரூபியாக இருப்பவன். மஹா மூடன். குரூர சிந்தையுடையவன். இவனிடம் ஸ்வர்ண குமாரியின்

தந்தை செல்வம் பற்றி விருப்புக் கொண்டபோதிலும், நமது ஸ்வர்ணத்தின் கோமள நெஞ்சு காதலுறுதல் எங்ஙனம் இயலும்?

## அத்தியாயம் 5.

மாலை 6 மணி ஆயிற்று. பெரிய வனம் போல விஸ்தாரமுடைய சோலையினிடையே ஓர் அழகிய கொடிவீட்டின்கண் ஸ்வர்ணகுமாரி தனியே உட்கார்ந்திருந்தாள். ஹேமசந்திரன் வந்து சேர்ந்தான்.

"பெண்ணே! இப்ப, உன் மனது எப்படி யிருக்கிறது?"

"சரிதான்! சிறிது நாற்காலியைச் சற்றே விலகிப் போட்டுக்கொண்டு பேசவேண்டும்."

"அடடா! இந்த குணம் இன்னும் மாறவில்லை போலிருக்கிறதே! ஸூர்ய பாபு, 'நீ சரிப்பட்டு வந்து விட்டாய்' என்று சொன்னாரே."

"ஆமாம்! அவருடைய கட்டாயத்தின் பேரில் சரிப்பட்டு விட்டேன்."

"ஆனால், என்னை விவாகம் செய்து கொள்வதில் உன் மனதிற்குத் திருப்தி கிடையாதோ?"

"கிடையாது."

"அது எப்படியேனும் போகட்டும். உன் தகப்பனார் பலவந்தத்தின் பேரிலாவது நீ என்னை விவாகம் செய்து கொள்ளப் போவது நிச்சயந்தானே."

"ஆம்."

"சபாஷ்! ஸ்வர்ணு, மெத்த சந்தோஷம். நீ இனி என் மனைவி தானே! அடடா! என்ன ஸௌந்தரியம்! என்ன ஸௌந்தரியம்! உன்னைப் பெறுவதற்குப் பட்ட பாடெல்லாம் தகும், தகும். கண்ணே, ஒரு முத்தம் தரமாட்டாயா?"

"நாற்காலியை விலகப் போட்டுக்கொள்ளும்."

"நீ எனக்கு மனைவி யென்பதோ நிச்சயமாகி விட்டது. மூட பக்தியுள்ள ஹிந்துக்களைப் போல் நாம் விவாகச் சடங்குகளுக்குக் காத்திருப்பது அவசியம் இல்லையல்லவா? விவாஹ பலனை இப்போதே என் அனுபவித்துக் கொள்ளக்கூடாது? இனி உனது திவ்விய சரீரம் என்னுடையது தானே?"

"விவாஹ தினத்திலேயே நான் இறந்து போய் விட்டால் எனது சரீரம் உமதாக மாட்டாதல்லவா?"

"அப்படியா யோசிக்கிறாய்? ஆனால் விவாகப் பயனை இப்பொழுதே துகர்ந்தறிகின்றேன்"—என்று சொல்லி ஹேமசந்திரன் பலவந்தமாகத் தழுவக் கையெடுத்தான்.

ஸ்வர்ணகுமாரி "கோ, கோ" என்றலறத் தொடங்கி விட்டாள். திடீரென்று கொடிமாடத்திற்குப் பின்னே புதரில் பதுங்கி நின்ற மனோரஞ்சனன் கையும் தடியுமாக வந்து, ஹேமசந்திர பாபுவைப் பிடித்து வெளியே தள்ளி நையப் புடைத்தான். இந்

தக் கலவரையிலே தந்தையாகிய ஸூர்யகாந்த பாபுவும் வந்துவிட்டார். மகள் கீழே மூர்ச்சை யுண்டு கிடந்தாள். வரும்போது குடித்து வந்த கள்ளின் வெறியாலும், அடிபட்ட கோபத்தாலும் ஹேமசந்திரன் ஏதோ வாய்க்கு வந்தபடி உளறுகிறான். உடனே ஸூர்யகாந்தர் மனோரஞ்சனனைப் பார்த்து, "ஏதடா! பையலே, நீ இங்கே ஏன் வந்தாய்? இதெலோம் என்ன குழப்பம்?" என்று கேட்டார். மனோரஞ்சனன் "ஐயா, உமது குமாரத்தி மூர்ச்சையுண்டு விழுந்து கிடக்கிறாள். இன்னும் சிறிது நேரம் கவனியாமலிருந்தால் மிகவும் அபாயம் நேர்ந்துவிடும். அதற்கு வேண்டிய ஏற்பாடு செய்யும். மற்ற விஷயங்கள் பிறகு பேசிக்கொள்ளலாம்" என்றான். அதன்படியே ஸூர்யகாந்தர் மகளை வீட்டிற்கு எடுத்துச் சென்று, வேண்டிய சிகிச்சைகள் செய்ததின் பேரில் ஸ்வர்ணகுமாரிக்கு மூர்ச்சை தெளிந்தது. இரண்டு மணி நேரத்திற்கப்பால் ஸூர்ய பாபு வந்து மகளிடம் விசாரணை செய்ததில், அவள் நடந்த விஷயங்களையெல்லாம் உண்மையாகத் தெரிவித்தாள். அவள் சொல்வதெல்லாம் மெய்யென்று அவருக்குப் புலப்பட்டுவிட்டது.

"அடடா! நமது குடும்பத்திற்குப் பெரிய அவமான மிழைக்கத் தெரிந்த பாதகனுக்கா பெண் கொடுக்க எண்ணி யிருந்தேன்?" என்று தம்மைத் தாமே நொந்து கொண்டு ஸூர்யகாந்தர் சென்று விட்

டார். மறுநாட் காலை மகளிடம் வந்து, "பெண்ணே, உனது மனோரஞ்சனனை நான் நேற்றுத் தான் நன்றாக உற்றுப் பார்த்தேன். அவன் செல்வமில்லாதவனாயிருந்தபோதிலும், ரூபத்திலும். அறிவிலும் நமக்கு மருமகனாயிருப்பதற்கு யோக்கியதையுடையவனாகவே காணப்படுகிறான். அவன் ஹிந்து மார்க்கத்தினின்றும் நீங்கி பிரம ஸமாஜத்தில் சேர்ந்துகொள்ளும் பட்சத்தில், உங்களிருவருக்கும் விவாகம் முடித்து வைப்பதில் எனக்கொரு ஆட்சேபமும் கிடையாதென்று அவனிடம் தெரிவித்து விடு" என்று சொல்லிச் சென்று விட்டார். இது முறையே மனோரஞ்சனனுக்குத் தெரிவிக்கப் பட்டது. ஆயினுமென்ன பயன்? மனோரஞ்சனன் தான் பிரம ஸமாஜத்தில் சேர்ந்து கொள்ளுவானாயின் தனது தாய் மனமுடைந்து இறந்து போவாளென்பதை நன்றாக அறிவான். எனவே தாயினிடத்து அன்பு ஒரு புறமும், அவனது ஸ்வர்ண குமாரியின்மீது மையல் மற்றொரு புறமும் அவனது மனதை இழுக்க, இன்ன செய்வதெனத் தெரியாமல் திகைப்பானாயினன். இவ்வாறே ஒன்றரை வருஷ காலம் கழிந்து விட்டது. இவன் கடைசி வரை பிரம சமாஜத்தில் சேராமலேயிருந்துவிடும் பட்சத்தில், தான் விவாகம் செய்து கொள்ளாமலே யிருந்துவிட வேண்டுமென ஸ்வர்ண குமாரி நிச்சயித்துக் கொண்டிருந்தாள்.

இப்படியிருக்க, 1906-ஆம்வருஷம் கல்கத்தாவிலே காளி பூஜை திருவிழா நடந்துகொண்டிருந்த (நவ

ராத்திரி) காலத்திலே, ஸ்வர்ணகுமாரி தனது வீட்டு அடியிலே ஒரு பஞ்சணைமீது சாய்ந்து கொண்டு "ஸந்தியா" என்னும் தினசரிப் பத்திரிகை படித்துக் கொண்டிருந்தாள். அதில் திடீரென அவளது கண் களுக்குப் பின்வரும் குறிப்புத் தென்பட்டது.

"சாந்த்பூர் வாசியாகிய ஸ்ரீயுத மனோரஞ்சன பானர்ஜி நேற்று மாலை பிரம ஸமாஜத்தில் சேர்ந்து விட்டார். இவர் மிகுந்த திறமையும், புகழுமுள்ள அதி வாலிபராதலால், இவர் ஹிந்து மார்க்கத்தினின் றும் பிரிந்து விட்ட விஷயம் எங்கே பார்த்தாலும் பேச்சாய்க் கிடக்கிறது."

மேற்கண்ட வரிகளைப் படித்தவுடனே ஸ்வர்ண குமாரிக்குப் புளகமுண்டாய்விட்டது. ஆனந்த பர வசத்திலே அமிழ்ந்து விட்டாள். உடனே மற்றொ ரிடத்தில் மனோரஞ்சனுடைய பெயர் காணப்பட்டது. அதென்னவென்று பார்த்தாள். அதிலே,

"சென்ற சில தினங்களாக லோகமான்ய பால கங்காதர திலகர் பூனாவிலிருந்து நமது நகரத்திற்கு வந்து சுதேசீயம், ஸ்வராஜ்யம் என்ற பெரு விஷயங் களைப் பற்றிப் பதினாயிரக்கணக்கான ஜனங்களின் முன்பு உபந்நியாசங்கள் புரிந்து வருகின்றார். இவ ருக்கு நடக்கும் உபசாரங்களும், சிறப்புக்களும் முடி யரசர்களுக்குக்கூட நடக்க மாட்டா. அப்படியிருக்க இவருடைய கோட்பாடுகளுக்கு விரோதமாகச் சில

வாலிபர்கள், சாந்த்பூர் ஸ்ரீ மனோரஞ்சன பானர்ஜியின் அக்ராசனத்தின் கீழ் ஒரு எதிர்க்கூட்டங் கூடி இந் நகரத்தின் ஏதோ ஒரு மூலையில் சில நிபந்தனைத் தீர்மானங்கள் செய்து கொண்டார்களென அறிந்து விசனமடைகிறோம்” என இருந்தது.

இதைக் கண்டவுடனே ஸ்வர்ணகுமாரிக்கு மனம் பதைத்துவிட்டது. இவள் குழந்தை முதலாகவே ஸ்ரீ பாலகங்காதர திலகரைத் தெய்வம் போலக் கருதி வந்தாள். இவளுக்கு மனோரஞ்ஜனனிடமிருந்த அன் பைக் காட்டிலும், சுதேசத்தின் மீதுள்ள அன்பு பதி னாயிர மடங்கு வன்மையுடையது. “சுதேச பக்தர் களின் திலகமாகிய பாலகங்காதர திலகருக்கு விரோத மாக உழைக்கின்ற ஸ்வஜன விரோதியினிடமா நாம் இத்தனை நாள் காதல் கொண்டிருந்தோம்? இவனையா மாசற்ற குமரனென்றெண்ணி மதி மயங்கினோம்?” என்று பலவாறு யோசித்து மிகவும் வருந்துபவளாயி னாள். இவள் நிலைமை இங்ஙனமாக.

தன் கண்போல் வளர்த்த ஒரே ஆசைக் குமாரன் ஹிந்து மார்க்கத்தைவிட்டு நீங்கி விட்டானென்று கேள்வியுற்றவுடனே மனோரஞ்சனனுடைய தாய் மூர்ச் சித்து விழுந்து இறந்து போய்விட்டாள்.

இந்தச் செய்தி கேட்டவுடனே அலறிக்கொண்டு சாந்த்பூருக்கு வந்த மனோரஞ்சனன் தனது தாயின் கிரியைகளையெல்லாம், ஹிந்து ஆசாரங்களின்படி, ஒரு

பந்துவின் மூலமாக நடப்பித்து விட்டு ஸ்வர்ண குமாரி யைப் பார்க்கச் சென்றான். அங்கே வீட்டில் ஸ்வர்ண குமாரியில்லை. அவளுடைய தந்தை பின்வரும் கடி தத்தை மனோரஞ்சனனிடம் கொடுத்தார்.

"எனது காதலனாயிருந்த மனோரஞ்சனனுக்கு,

நெடுங் காலமாக உறங்கி நின்ற நமது சுதேச மாதா இப்போது கண் விழித்திருக்கிறாள். நமது நாடு மறுபடியும் பூர்வகால மகிமைக்கு வருவதற் குரிய அரிய முயற்சிகள் செய்து வருகின்றது. இந்த முயற்சிகளுக்கு விரோதமிழைக்கும் ஸ்வஜனத் துரோ கிகளின் கூட்டத்திலே, நீயும் சேர்ந்துவிட்டாயென்று கேள்வியுற்றவுடனே எனது நெஞ்சம் உடைந்து போய்விட்டது. இனி உன்னைப்பற்றி வேறு விதமான பிரஸ்தாபம் கேட்கும்வரை உன் முகத்திலே விழிக்க மாட்டேன். பெற்ற தாய்க்குச் சமானமான தாய்நாட் டின் மீது அன்பு செலுத்தாத நீ, என் மீது என்ன அன்பு செலுத்தப் போகிறாய்? நமது வாலிப எண்ணங் களைப் பற்றி நீ திருந்திய பிறகு யோசனை செய்து கொள்ளலாம். நான் காசியிலே என் அத்தை வீட்டிற் குச் சென்று ஒரு வருஷம் தங்கியிருக்கப் போகிறேன். அங்கே நீ என்னை வந்து பாராதிருக்கும்படி பிரார்த் தனை செய்து கொள்ளுகிறேன்."

இங்ஙனம் இக்கடிதத்தைப் பார்த்தவுடனே மனோ ரஞ்சனன் மனம் தீயிலகப்பட்ட புழுப்போலத் துடிக்க லாயிற்று......

இப்போது மனோரஞ்சனன் புனாவிலே திலகரிடம் தேசபக்திப் பாடங்கள் படித்து வருகிறானென்று கேள்வியுறுகின்றோம்.

---

## வீரத்தாய்மார்கள்*

'தாயைப் போல பிள்ளை'; ஓர் தேசத்தார் ஞானமும், செல்வமும், வீரமும், புகழும் கொண்டு உன்னத நிலையிலே இருக்கும்போது, அவர்களுக்குள் ஆண் மக்களிடம் மட்டுமே யல்லாது பெண் பாலரிடத்திலும் கூடத் தர்மாபிமானமும், வீரத்தன்மையும் சிறந்து விளங்கும். ராஜபுத்திரர்கள் உன்னத நிலையிலே இருந்த காலத்தில் ராஜபுத்திர ஸ்திரீகள் காட்டிய வீர குணங்கள் இன்றுங்கூட உலகத்தாரெல்லாம் கேட்டு மெய்சிலிர்க்கும்படியாக இருக்கின்றன. யுத்த காலங்களிலே ராஜபுத்ர ஸ்திரீகள் தமது உயிரைப் புல்லினும் சிறிதாக மதித்து, மானத்திற்காகவும், தர்மத்திற்காகவும், கற்பிற்காகவும் செய்திருக்கும் வீரச் செயல்கள் எண்ணி முடியாதன. 'டாட்' என்ற ஆசிரியர் எழுதியிருக்கும் ராஜஸ்தான சரித்திரத்தை வாசித்தவர்களுக்கு நமது பாரத நாட்டு க்ஷத்திரிய மாதர்களுக்கு நிகரான 'வீரத் தாய்மார்' உலகத்தில் வேறெங்குமிருந்ததில்லை என்பது நன்கு விளங்கும். நிற்க.

---

* இது 'இந்தியா' பத்திரிகையிலே வெளிவந்த தலையங்கம்.

நமது தமிழ் நாட்டிலேயும் அத்தகைய பெருங்குடி (மூதில்) மாதர்கள் இருந்திருக்கிறார்களென்பதைச் "செந்தமிழ்"ப் பத்திராசிரியர் இம்மாதம் எழுதியிருக்கும் ஓர் திவ்யமான உபந்நியாசத்திலே பல அரிய திருஷ்டாந்தங்களால் விளக்கியிருக்கிறார். அவரது உபந்நியாசத்தைச் சென்ற வாரத்திலே ஒரு பகுதியும் இவ்வாரத்தில் ஒரு பகுதியுமாக நமது பத்திரிகையிலே பிரசுரம் செய்திருக்கின்றோம். இன்னும் சிறிது மிஞ்சியிருக்கின்றது. இதனை அடுத்த வாரத்தில் பிரசுரம் செய்வோம், தமிழ் நாட்டுத் தாய்மாரைப் பற்றிச் "செந்தமிழ்" ஆசிரியர் எழுதியிருக்கும் உபந்நியாசத்தைப் படித்தபோது, எமக்குண்டான பெரு மகிழ்ச்சிக்கும் பெருந் துயரத்திற்கும் அளவில்லை. 1800 வருஷங்களுக்கு முன்பாகவே இத்தனை பெருங்குணங்கள் வாய்க்கப்பெற்றிருந்த நாகரிக நாட்டிலே, இவ்வளவு உயர்வு கொண்டிருந்த பெரியோரின் சந்ததியிலே, இவர்கள் நடையிலும் செய்கைகளிலும் நிகரில்லாது கையாண்டு வந்த தமிழ்ப் பாஷையைப் பேசும் பெருங் குடியில் நாம் பிறந்திருக்கிறோமென்பது அரிய மகிழ்ச்சி யுண்டாக்குகிறது.

ஆனால், பிரம்ம சந்ததியிலே இராவணன் பிறந்தது போல, இத்தனை பெரிய நாகரிகமும் சிறப்பும் அறவலிமையும் பொருந்திய மேலோரின் சந்ததியிலே குலத்தைக் கெடுக்க வந்த கோடாரிக் காம்பாகத் தோன்றி நாம் இக்காலத்திலே இருக்கும் நிலையை

யெல்லாம் பார்க்கும்போது மனம் புண்ணாய் உலைகின்றது.

அந் நாட்களிலே மாதர்கள் காட்டிய வீரத்தன்மையையும், இந்நாளிலே ஆண்மக்கள் காட்டும் பேடித் தன்மையையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, "ஆ! நமது உயர்வு கொண்ட பாரத ஜாதி இத்தனை தாழ்ந்த நிலைக்கு வருவதைக் காட்டிலும் ஓரேயடியாக அழிந்து போயிருந்தாலும் சிறப்பாயிருக்கும்" என்று மனம் குமுறுகின்றது.

நமது பத்திரிகை படிக்கும் நேயர்களனைவரும் நாம் "செந்தமிழ்"ப் பத்திரிகையிலிருந்து பெயர்த்துப் பதிப்பிட்டிருக்கும் உபந்யாசத்தைத் தாம் பலமுறை படிப்பது மட்டுமே யன்றித் தமது சுற்றத்தார்க்கும் மித்திரருக்கும் தமது வீட்டு மாதர்களுக்கும் திரும்பத் திரும்பப் படித்துக் காட்டுதல் நலமென்று கருதுகின்றோம்.

"மகனைப் பெற்று விடுதல் எனது கடமை. அவனைத் தக்கோன் ஆக்குதல் அவன் தந்தையின் கடமை. அவனுக்கு வேல் செய்து கொடுத்தல் இரும்புக் கொல்லனது கடமை. என் மகனது கடமை எனிலோ யுத்தத்திலே சென்று யானையைக் கொன்று மீளுதல் ஆகும்" என்று ஓர் தமிழ்த்தாய் பாடியிருக்கின்றாள்.

இனி மற்றொரு தாய், "எனது மகன் யுத்த களத்திலே போர் வீரர் வாளிலே கழுத்தறுப்புண்டு மடிவா

ஞல், அதுதான் எனக்கு மேலான தர்மம்; அதுவே ஸத்கர்மம்'' என்று பாடினள். பின்னுமொரு பெண் புலவர், தமது சுற்றத்திலுள்ள ஓர் அம்மை தன் மகன் போரிலே யானையை வீழ்த்திக்கொண்டு தானும் இறந்தான் என்று கேள்வியுற்று, தான் அவனைப் பெற்ற போது அடைந்த மகிழ்ச்சியைக் காட்டிலும் அதிக மகிழ்ச்சியடைந்த சிறப்பைக் கண்டு வியந்து பாடல் சொல்லியிருக்கின்ருர்.

அப்பால், ஒரு தமிழ்த்தாய் தனது தந்தையும் கணவனும் போரிலே சிறிது காலத்திற்கு முன்பு இறந்து போயிருக்கவும், யுத்தப் பறையின் ஒலிகேட்டவுடனே சந்தோஷம் மிகுந்து, தன் மகனுக்கு நல்ல ஆடையுடுத்தி, அவன் குடுமிக்கு எண்ணெயிட்டுச் சீவி முடித்து, அவன் கையிலே வேலெடுத்துக் கொடுத்துத் தனது ஒரே பிள்ளையைப் போர்க்களத்திற்குப் போ என்று அனுப்பிய பெருமை ஓர் பெண் புலவர் வியந்திருக்கின்ருர். பின்னுமொரு தாய், தன் மகன் யுத்த களத்திலே வலியழிந்து புறங்கொடுத்து ஓடி வந்து விட்டான் என்று சிலர் சொல்லக் கேட்டு, 'அப்படி அவன் யுத்த களத்திலே புறங்கொடுத்து ஓடியது உண்மையாயின் அவன் பால் உண்டு வளர்ந்ததற்குக் காரணமாயிருந்த என் முலைகளை அறுத்திடுவேன்' என்று வாளைக் கையிலே கொண்டு போர்க்களத்திற்குப் போய், அங்கே வீழ்ந்து கிடக்கும் பிணங்களை வாளினல் புரட்டித் தேடுகையிலே, அப் பிணங்களி

னிடையில் தன் மகன் உடலம் இரண்டு துண்டமாகக் கிடந்ததைப் பார்த்து, அவனைப் பெற்ற பொழுதைக் காட்டிலும் அதிக மகிழ்ச்சி யடைந்தாள் என்று ஓர் பாடல் இருக்கிறது.

இன்னும், அதுபோல எத்தனையோ ஆச்சரிய மான திருஷ்டாந்தங்கள் காட்டப்பட்டிருக்கின்றன. இடம் போதாமைபற்றி அவற்றை இங்கே எடுத்துக் கூறமுடியவில்லை.

இவ்வளவு மேலான வீரப்பயிற்சி இருந்த நாடு இப்போது என்ன நிலைமைக்கு வந்து விட்டது!

ஆனால், நமக்கு ஒரு ஆறுதல் இருக்கின்றது. அதுவும் வீணான ஆறுதலன்று. உண்மைபற்றிய ஆறுதல்.

அந்த ஆறுதல் யாதெனில், நமது ஜாதியை இடையே பற்றிய சிறுமை நோய் விரைவிலே நீங்கி விடும் என்பதற்கு ஆயிரக்கணக்கான அறிகுறிகள் காணப்படுகின்றன. பரிசுத்தமான நெஞ்சமும் தெய்வ பக்தியும் தன்னல மறப்பும் உடைய பல மேலோர்களை இப்போது நாட்டிலே காண்கிறோம். இது வீணாக மாட்டாது. நம்மைப் பற்றி யிருந்த புண்ணை சீக்கி ரத்திலே மாறிப்போய் விடும். வானத்திலே துந்துபி யொலி அதிரக் கேட்கின்றோம். மகாபாரதம் (Great India) பிறந்துவிட்டது. வந்தே மாதரம்.

---

### அமரகவி பாரதியின் நூல்கள்

| | | |
|---|---|---|
| 1. | குயில் | 0—8—0 |
| 1. | தேசிய கீதங்கள் | 1—0—0 |
| 3. | கண்ணன் பாட்டு | 0-12—0 |
| 4. | பாஞ்சாலி சபதம் | 1-12—0 |
| 5. | பகவத் கீதை | 2—0—0 |

### நாவலர் பாரதியார்

| | | |
|---|---|---|
| 6. | மாரி வாயில் | 1—0—0 |
| 7. | தசரதன் குறையும் கைகேயி நிறையும் | 1—4—0 |
| 8. | திருவள்ளுவர் | 1—0—0 |
| 9. | நற்றமிழ் | 2—0—0 |
| 10. | பழந்தமிழ் நாடு | 2—8—0 |

### சுத்தானந்த பாரதியார்

| | | |
|---|---|---|
| 11. | புதுயுக மனிதன் | 0-10—0 |

### வித்தான் ராமையாப் பிள்ளை

| | | |
|---|---|---|
| 12. | கட்டப்பொம்மு | 0—8—0 |
| 13. | காவிரிக் காவலர் | 1—8—0 |
| 14. | பாலைக்கனி | 1-12—0 |

### பகீரதன்

| | | |
|---|---|---|
| 15. | தேன் மொழியாள் | அச்சில் |
| 16. | குயிலினி | அச்சில் |

### பேராசிரியர் அ. சீனிவாச ராகவன்

17. அவன் அமரன்
18. நிழல்கள்

இன்னும் பல வெளிவர விருக்கின்றன

## பாரதி புத்தக நிலையம்

டவுன்ஹால் ரோட், மதுரை.